

# நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு



[illegible] : 1995

உ

ஓம்

# நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு

ஆசிரியர் :

தமிழ்ப் பெரும்புலவர், கணியர்

**டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,**

அமைச்சர்,

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்,

திருநெல்வேலி.



வெளியிடுபவர் :

சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் வழியாக

அறநிலையத் துறை, தமிழ்நாடு அரசாங்கம்

1962.

585/1—B

முதற் பதிப்பு—
ஆயிரம் படிகள்
1962.

தமிழ்நாடு அரசாங்கத்திற்காக, தமிழ்நாடு எழுதுபொருள்
கட்டுப்பாட்டு அதிகாரியால் பதிப்பிக்கப்பெற்று,
தமிழ்நாடு அறநிலையத்துறையினரால்
வெளியிடப்பெற்றது.
1962.

# தமிழ்நாட்டு அரசாங்கத்தின் கல்வி, நிதி, திருக்கோவில் அமைச்சர் உயர்திருவாளர் மீ. பக்தவத்சலம், பி.ஏ., பி.எல். அவர்களின்

## முன்னுரை.

நமது நாட்டிலுள்ள திருக்கோலில்கள் சமையச் சின்னங்கள் மட்டுமல்ல; வழிபாட்டுக்குரிய திருத்தலங்களாக விளங்குவதோடு, இலக்கியம், வரலாறு, கட்டிடக் கலை, சிற்பம் முதலிய பல்வேறு துறைகளுக்கும் தொடர்புடையனவாக அவை விளங்குகின்றன. ஆலயங்களைப் பற்றி நாம் விவரமாக அறியும் போது பழைய வரலாறு, பண்பாடு, நாகரிகம் முதலியவைகளை உணர்ந்து கொள்ள வாய்ப்பு ஏற்படுகின்றது.

கோவில்கள் அமைந்திருக்கும் இடங்களின் இயற்கைச் சூழல், போக்குவரத்து வசதி, தல புராணம், கதை வாயிலான சிறப்புக்கள், ஆலயத்துக்குத் தொடர்பான காரணகாரியக் கதைகள், பெயர் விளக்கம் முதலியவைகளை விரிவாக எடுத்துக் கூறும் நல்ல நூல்கள் சமையத்துக்கும், வரலாற்றுக்கும், மக்களின் அறிவு வளர்ச்சிக்கும், சமைய மெய்யுணர்வுக்கும் களஞ்சியம்போல விளங்கக் கூடியவை. இந்நாள் மக்களுக்கும் இனிவரும் தலைமுறையினருக்கும் அவை பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இத்தகு முயற்சியில் 'நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு' என்னும் இந்த நூல் வெளிவருவது மகிழ்ச்சிக்குரியது. அரசாங்க ஆணைப்படி, சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தினர், தமிழ்ப் பெரும் புலவர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்களைக் கொண்டு இந்த நூலை எழுதுவித்திருக்கிறார்கள். அனுபவத்திலும் மொழி அறிவிலும் சிறந்து விளங்கும் ஆசிரியர் அவர்கள் ஏராளமான தகவல்களைத் தொகுத்து எளிய தூய நடையில் இந்த நூலை எழுதியிருக்கிறார்கள். தமிழ் நாட்டுக்கு இந்த நூல் பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன்.

# அணிந்துரை

தமிழ்ப் பெரும் புலவர், பெருமைக்குரிய

**மா. அனந்த நாராயணன்** அவர்கள், M.A., I.C.S.,

*நீதிபதி, உயர்நீதிமன்றம், சென்னை.*

1. 'ஆலயந் தொழுவது சாலவும் நன்று' என்பது ஔவைப் பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத் தமிழ் மன்னர், அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பித் தத்தம் இயல்பிற்குரியவாறு நிலம் [மான்யம்], பண்டம், வழிபாட்டுப் பொருள், பொன் முதலியன அளவற்று வழங்கி அவைகளைப் பண்புக் களஞ்சியங்களாக விளங்க வைத்தனர். பத்திமையிலும் அடக்கத்திலும் சிறந்த தமிழ் மன்னர் தங்கள் இல்லங்களைக்கூட அவ்வகையில் எழில்பெற்று நிலைக்குமாறு அமைக்கவில்லை. அவ்வில்லங்கள் இன்று இல; ஆயின் தமிழ்நாடு முற்றிலும் ஆலயங்கள் மிளிர்கின்றன. இசை·சிற்பம்·கூத்து·ஓவியம்·கவிதை; அத்தனை கலைகளும் ஆலய நீழலில் வளர்ந்த நற் பூஞ்சோலைகளாம்.

2. 'நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு' என்ற இந் நூலை மிகவும் வரவேற்கிறேன். இந் நூலாசிரியர் தமிழ்ப் பெரும் புலவர், டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் இந் நூலில் பல அரிய செய்திகளை ஆய்ந்து திரட்டி, இனிய, எளிய தமிழ் நடையில் விளக்கியுள்ளார்கள். இவ்வகை நூல் இதுவரை வெளி வந்திலது என்றே கூறலாம். ஆங்கில ஆட்சியில் மாவட்ட விவரச்சுவடி (District Gazetteer) என்ற தலைப்பில் அநுபவமிக்க ஆட்சியாளர் தொகுத்த நூல்களில் இவ் வகைச் செய்திகள் சில வெளிப்போந்தன. ஆயினும், ஒரு மாவட்டத் திருக்கோயில்களைக் குறித்து பிள்ளையார் கோவில், சிவன் கோவில், பெருமாள் கோவில், முருகன் கோவில் என வகுத்து தல புராணம், கல்வெட்டு, சமையாசிரியர் நூல், இலக்கியம் முதலிய பல துறைகளை ஆய்ந்து நற்செய்திகளைத் திரட்டி வழங்கும் இந்நூல் ஓர் வழிகாட்டியாகும்; இதுவரை இவ்வகை நூல் கண்டிலம்,

3. இந் நூலை நன்கு வரவேற்றுப் போற்றி இதன் அறிவுக் களஞ்சியத்தை நுகர்வது தமிழ் மக்கள் கடனாகும். இது நிற்க,

4. சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் பல பெரும் தொண்டுகள் புரிந்துள்ளது. ஆட்சிமொழி தமிழாக நடைபெறுவது இச் சங்கத்தின் அடிப்படைத் தொண்டின் பயனும்; கலைச் சொற்களைத் தொகுத்து வழங்கியது; திருமுருகாற்றுப்படை, திருவாசகம் போன்ற நூல்களின் "சொல்லடைவு" "பொருளடைவு" வடிவங்களை வழங்கிவருகின்றது. வள்ளுவர் இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களின் வரலாறுகளை அவர்களுடைய நூலாராய்ச்சியுடன் ஆய்ந்து வெளியிட்டு வருகின்றது. இச் சங்கத்தின் ஆதரவில் வெளிவருமாறு செய்து இந் நூலை, அரசியலார் வரவேற்று அச்சிட்டு உதவியது மறக்க இயலாத நன்றியாம். அறத்தை வளர்ப்பது அரசியலின் பண்பே.

*"அறத்தினூஉங் காக்கமு மில்லை; அதனை*
*மறத்தலி னூங் கில்லை கேடு."*

(தமிழ்மறை)

உயர் திரு

**அ. உத்தண்டராமபிள்ளை, B.A., B.L., I.A.S., அவர்கள்,**

(முன்னாள் ஆணையர், அறநிலையத் துறை).

## " அணிந்துரை "

> "கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்"
> "திருக்கோவிலில்லாத திருவிலூர் ...........
> ..........ஊரல்ல அடவி காடே"
> "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்,"

தமிழ்நாட்டு நாகரிகம் திருக்கோவில் நாகரிகமே. தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள திருக்கோவில் களின் வரலாறும் மக்களுக்குப் பயன்படும் வகையில் எழுதப் பெற்று வெளியிடப்பெறல் வேண்டுமென்று தமிழ் நாட்டரசாங்கம் திட்டமிட்டு அத்திட்டத்தைச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் மூலம் செயற்படுத்த வேண்டுமென்று ஆணையிட்டுள்ளது. இத் திட்டத்தின்கீழ் முதன் முதலாக நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு மேற்கண்ட சங்க அமைச்சர் தமிழ்ப் பெரும் புலவர், கணியர், டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர் களால் தொகுத்து எழுதப்பெற்று வெளிவருகின்றது. அவர்கள் நேரில் சென்றும் தல ஆராய்ச்சி செய்தும் அரும்பாடுபட்டு இந்நூலை இயற்றியுள்ளார்கள். இந்த வரலாறு சமயப் பற்றுள்ளவர்கட்கு மட்டுமன்றி தமிழைப்படிக்கத் தெரிந்த எல்லா மக்களுக்கும் பெரும் பயனளிக்கும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு திருக்கோவிலின் வரலாற்றையும் படிக்கும்போது அத்தலத்துக்குச் செல்லவேண்டுமென்ற ஆர்வத்தைத் தூண்டும் வகையில் எழுதப் பெற்றிருப்பது இந்நூலின் சிறப்பியல்பாகும்.

நெல்லை மாவட்டத்தில் தேவாரப் பாடல்கள் பெற்ற தலங்கள் திருநெல்வேலியும், திருக்குற்றாலமும். பாண்டி பதினான்கு என வழங்கும் 14 பாண்டி நாட்டுப் பாடல் பெற்ற தலங்களுள்

இவையிரண்டே நெல்லை மாவட்டத்தில் உள்ளன. எனினும் தென்காசி, சங்கரநயினார்கோவில், களக்காடு முதலிய பல பெருங்கோவில்களும், திருச்செந்தூர், பண்பொழி, வள்ளியூர். கழுகுமலை போன்ற முருகன் படை வீடுகளும் இம்மாவட்டத்திற் சிறந்து விளங்குகின்றன. ஆழ்வார்கள் மங்களாசாசனம் பெற்ற வைணவத் தலங்கள் தாம்பிரபரணி ஆற்றின் இரு மருங்கிலும் உள்ள நவ திருப்பதிகளும், தோத்தாத்திரி என வழங்கும் நான்கு நேரியும், திருக்குறுங்குடியுமேயாயினும் அம்பாசமுத்திரம், மன்னார்கோவில், கிருட்டிணபுரம் போன்ற தனிச் சிறப்புடைய பெருமாள் கோவில்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

எளிய இனிய நடையில் எழுதப் பெற்றுள்ள இந்நூல் எல்லா மக்களுக்கும் பயன்படுமென்பதில் ஐயமில்லை. தமிழ் நாட்டு அரசினருக்கும் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்துக்கும் தமிழுலகம் மிகவும் கடமைப்பட்டுள்ளது.

"தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !!"

திருவாசகம்.

# நூன்முகம்

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோவில்களைப்பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது இன்றியமையாதது என்பதை உணர்ந்த சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் அறநிலையங்களின் ஆணையராக இருந்த உயர் திரு அ. உத்தண்டராமபிள்ளை, B.A., B.L., I.A.S., அவர்களுடன் கலந்து பேசி 21-10-1960-ல்விளக்கமான திட்டம் வகுத்து அதனை அவர்களுக்குஅனுப்பியது. அவர்கள் அதனை நன்கு ஆய்ந்து 17-11- 1960 (R.C. எண் 35907/60-A-2)-ல் அரசாங்கத்துக்கு அனுப்பினார்கள். அரசாங்கம் அதனைச் சீர்தூக்கிப் பார்த்துத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு, "ரூபா 24,000-ம் செலவில் மாவட்ட வரிசையாகத் தமிழ்நாட்டுக் கோவில் வரலாற்றினைச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் வழியாக ஆக்கி வெளியிடுக" என்று 6-5-1961 (G.O. Rt. எண் 344—வருவாய்த் துறை)-ல் அறநிலைய ஆணையருக்கு ஆணையனுப்பியது.

அறநிலைய ஆணையர் உயர்திருவாளர் M. S. சாரங்கபாணி முதலியாரவர்கள் அதனை 16-6-1961-ல் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்துக்கு அனுப்பி ஆவன செய்யுமாறு கேட்டுக் கொண்டார்கள். சங்கம் அதனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டு சங்க அமைச்சர் தமிழ்ப் பெரும் புலவர், கணியர், டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை யவர்களுக்கு அப்பணியினைத் தந்து 26-7-1961-ல் (எண் 442/1992) அறநிலைய ஆணையருக்குத் தெரிவித்தது. அவர்கள் அதனை ஒப்புக்கொண்டு தமிழ்நாட்டிலுள்ள துணை ஆணையர், உதவி ஆணையர் அனைவருக்கும் "சங்க அமைச்சர் டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்களுக்கு மாவட்டக் கோவில் வரலாறுகள் எழுதும் பொறுப்பு வழங்கப்பெற்றிருக்கிறது; அவர்களுக்கு வேண்டும் உதவிகளெல்லாம் செய்து தருக" என்று 17-8-1961 (R.C. எண் 35907/60 A-2)-ல் சுற்றோலை அனுப்பினார்கள். அங்ஙனமே துணை, உதவி ஆணையர் தங்கள் தங்கள் ஆளுகையிலுள்ள திருக் கோவில்களுக் கெல்லாம் ஆணையனுப்பி உதவினார்கள். ஆணையர்

உயர் திருவாளர்கள் அ. உத்தண்டராம பிள்ளையவர்களுக்கும், M. S. சாரங்கபாணி முதலியாரவர்களுக்கும், துணை உதவி ஆணையர்களுக்கும் சங்கம் நன்றி கூறுகின்றது.

தமிழ்நாடு அரசாங்கத்தின் அறநிலையத் துறை, கல்வி, நிதி அமைச்சர் மதிப்பிற்குரிய உயர்திரு மீ. பக்தவத்சலம் அவர்கள் தம்செயலாளர் வழி இத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு "சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் வழியாக அதனை நிறைவேற்றுக" என ஆணையருக்கு ஆணையனுப்பியதோடு இத் திட்டத்தின்படி முதன் முதலாக வெளி வருகின்ற "நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு" என்ற இந்நூலுக்கு முன்னுரையும் எழுதியருளி யமைக்கு அவர்களுக்கு நம் சங்கம் நன்றி கூறுகின்றது; மேலும், அறநிலையத் துறை, வருவாய்த் துறைச் செயலாளர் உயர் திரு J. சிவானந்தம், I.A.S., அவர்களுக்கும் நன்றி கூறுகின்றது.

சங்கத்தின் வேண்டுதலின்படி இந் நெல்லை மாவட்டக் கோவில் வரலாற்றைப் பார்த்து உதவியதோடு அணிந்துரையும் வழங்கியிருக்கும் மேன்மைக்குரிய நீதிபதி தமிழ்ப்பெரும் புலவர் மா. அனந்த நாராயணன், M.A., I.C.S., அவர்களுக்கும், முன்நாள் ஆணையர் உயர் திரு அ. உத்தண்டராம பிள்ளை, B.A., B.L., I.A.S. அவர்களுக்கும் நன்றி உரியது. உடனடியாகச் செய்ய வேண்டிய பணி நெருக்கடியிலும் சங்கத்தின் வேண்டுதலுக்கு இசைந்து இந்நூலை அரசாங்க அச்சகத்தில் அச்சிட்டுதவிய அரசு அச்சக ஆட்சியாளர்உயர்திரு கி.தெ. சானகிராமன், I.A.S. அவர்களுக்கும், அவர்களுடைய துணைவர்களுக்கும் சங்கம் நன்றி கூறுகின்றது.

சென்னை தஞ்சை மாவட்டக் கோவில் வரலாறுகள் ஆக்கப் பெறுகின்றன. முதலில் சென்னை மாவட்டக் கோவில் வரலாறு அச்சிட்டு வெளியிடப்பெறும். அதன்பின் வரிசையாகத் தஞ்சை முதலிய மாவட்டங்களின் வரலாறுகள் வெளிவரும். மாவட்டக் கோவில் வரலாறு என்ற வரிசையில் முதன்முதலாக வரும் இந் நெல்லை மாவட்டக் கோவில் வரலாற்றை ஏற்றுக்கொண்டு படித்துத் தோன்றும் நல்ல திருத்தங்களைத் தெரிவிக்குமாறு தமிழகப் பெருமக்களை அன்புடன் வேண்டிக்கொள்கின்றோம்.

10, 11-6-1934-ல் திருநெல்வேலியில் நடைபெற்ற சென்னை மாகாணத் தமிழர் முதலாவது மாநாட்டு அமைச்சராக இருந்து, அம்மாநாட்டின் விளைவாகத் தோன்றிய நம் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் அமைச்சராகி இருபத்தெட்டாண்டுகளாகத் தமிழ்த் தாய்ப்பணி செய்துவரும் டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்களை "நீடூழி வாழிய" என வாழ்த்துகிறோம்.

திருவருளே துணை,

திருநெல்வேலி,
15—9—1962.

சு. இராமசாமிக் கோனார்,
தலைவர்,
சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்.

பொருளடக்கம்

# நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு


*முகவுரை, அணிந்துரை, நூன்முகம், பொருளடக்கம்* i—ix *பக்கம்*

க. நெல்லை மாவட்ட அமைப்பு .. .. 1

உ. போக்குவரவு .. .. .. 8

ந. நெல்லை மாவட்ட வரலாறு .. .. 13

**திருக்கோவில்கள்** 17

க. பிள்ளையார் திருக்கோவில்கள் .. .. 21

உ. சிவன் கோவில்கள் .. .. .. 41

- க. அம்பாசமுத்திரம் வட்டம் .. 44
- உ. திருநெல்வேலி வட்டம் .. 93
- ந. சீவைகுண்டம் வட்டம் .. .. 109
- ச. திருச்செந்தூர் வட்டம் .. .. 125
- ரு. நான்குநேரி வட்டம் .. .. 128
- சு. தென்காசி வட்டம் .. .. 133
- எ. சங்கரநயினார் கோவில் வட்டம் .. 149
- அ. கோவிற்பட்டி வட்டம் .. .. 163

ந. கூத்தர் கோவில்கள் .. .. .. 169

ச. பெருமாள் கோவில்கள் .. .. 175

- க. அம்பாசமுத்திரம் வட்டம் .. 178
- உ. திருநெல்வேலி வட்டம் .. .. 184
- ந. ச. சீவைகுண்டம், திருச்செந்தூர் வட்டங்கள் .. .. .. 194
- ரு. நான்குநேரி வட்டம் .. .. 211
- சு. தென்காசி வட்டம் .. .. 218
- எ. சங்கரநயினார் கோவில் வட்டம் .. 218

ரு. திருமுருகன் திருக்கோவில்கள் .. .. 219

சு. பலவகையின திருக்கோவில்கள் .. .. 237

எ. அடியார் கோவில்கள் .. .. 245

அ. செங்கோட்டை வட்டத் திருக்கோவில்கள் .. 249

திருச்சிற்றம்பலம்

# நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு

## காப்பு.

" சீரோங்கு செந்தமிழ்ச் செல்வத் திருக்கோவிற்
பேரோங்கு நல்வளம் பேசியுளம்—நாரோங்கி
ஆண்டான் அருளே அடைந்து நலம்பெறவே
பூண்டேன் திருவடியாம் பூண. "

" நெல்லைமா வட்ட நெடும்புகழும் கோவில்கள்
எல்லையிலா மாவளமும் இன்புறவே—சொல்லுதற்கு
நெல்லையப்பன் பொன்னடியே நெஞ்சிற் பதித்தேன் அச்
செல்வன் திருவருளே சேர்பு. "

## க. நெல்லை மாவட்ட அமைப்பு

### எல்லைகள்

" திருநெல்வேலி மாவட்டம் " தமிழ் நாட்டின் தென் பாகத்தில் உள்ளது. இதற்கும் தெற்கே இருப்பது இப்போது புதிதாக அமைந்துள்ள கன்னியாகுமரி மாவட்டம். " திருநெல்வேலி" என்பது " நெல்லை " என மருவி வழங்கும். இது முன் எடுத்த கணக்குப்படி நாலாயிரத்து முந்நூற்றிருபத்தாறு சதுர மைல் பரப்பினை உடையது. இப்போது 68 சதுர மைல் பரப்புள்ள செங்கோட்டைப் பகுதி இம்மாவட்டத்திற் சேர்க்கப்பட்டுள்ளது. தெற்கிலும் கிழக்கிலும மன்னார் குடாக் கடலும், வடக்கே இராமநாதபுரம் மாவட்டமும், மேற்கே கேரளத்துக்கும் தமிழ் நாட்டுக்கும் எல்லையாக உள்ள மேற்குத் தொடர்ச்சி மலையும் நெல்லை மாவட்டத்துக்கு எல்லையாக அமைந்திருக்கின்றன. இதன் தென் கிழக்கு முனைக் கடற்கரை கன்னியாகுமரி முனையிலிருந்து கிழக்கே நான்கு மைல்களில் உள்ளது. செங்கோட்டைப் பகுதியிலுள்ள கோவில்கள் கன்னியாகுமரி மாவட்டக் கோவிலாட்சிக் கழகத்தினிடம் உள்ளன.

## வட்டங்களும் முதன்மை நகரங்களும்

செங்கோட்டைப் பகுதி நீங்கலாக நெல்லை மாவட்டம் எட்டு வட்டங்களாகப் பிரிந்துள்ளது ; அவையாவன : (1) திருநெல் வேலி, (2) அம்பாசமுத்திரம், (3) தென்காசி, (4) சங்கரநயினார் கோவில், (5) கோவிற்பட்டி, (6) சீவைகுண்டம், (7) திருச்செந்தூர், (8) நாகனேரி (நான்குநேரி), இந்த அமைப்பு கி. பி. 1910-லிருந்து அமைந்தது.

கி.பி. 1910-ல் இராமநாதபுரம் மாவட்டம் புதிதாக அமைந்தது. நெல்லை மாவட்டத்தில் அது வரை இருந்து வந்த சாத்தூர், சீவில்லி புத்தூர் வட்டங்கள் இராமநாதபுரத்தோடு சேர்க்கப்பட்டன. அன்று வரை ஓட்டப்பிடாரம் வட்டமாக இருந்து வந்தது, கோவிற்பட்டி வட்டமாக ஆக்கப் பெற்றது ; அப்போது திருச் செந்தூர் ஒரு புது வட்டமாக அமைந்தது.

திருநெல்வேலி, பாளையங்கோட்டை, மேலைப் பாளையம், தூத்துக் குடி என்ற பெரு நகரங்கள் நகராட்சி (Municipality) களாக இருக்கின்றன. கோவிற்பட்டி, சங்கரநயினார் கோவில், அம்பாசமுத் திரம், தென்காசி என்பன நகராட்சி ஆகத் தகுந்தன. சேரன் மாதேவி, சீவைகுண்டம் போன்றன சில நகரங்கள். ஏனைய, பேரூர் களும் சிற்றூர்களும் ஆக உள்ளன.

## தலைமை நகரம்

பாண்டி நாட்டில் மதுரைக்கு அடுத்த முதன்மை நகரம் திருநெல்வேலியே. இதைத் தலைமை இடமாகக் கொண்டு பாண்டியர் சிலர் அரசாண்டிருந்தனர். நாயக்கர் காலத்திலும் இப்பகுதிக்கு இது தான் தலை நகரம். பாளையக் காரர் சண்டைக் காலத்தில்தான் பொருநைப் பேராற்றின் கீழைக்கரையிலுள்ள கோட்டையோடு கூடிய பாளையங் கோட்டை முதன்மை பெறத்தொடங் கிற்று. கி. பி. 1801-ல் கிழக்கிந்தியக் கம்பெனியாருடைய தலை நகரம் இராமநாதபுரமாக இருந்து வந்தது ; இவ்வாண்டில் முதன் முதலாக இலசிங்தன் (Lushingtion) என்பவர் மாவட்ட ஆட்சித் தலைவர் (Collector) ஆகி ஆற்றின் கீழைக் கரையிலுள்ள கொக் கறை குளத்தில் தமது அலுவலகத்தை அமைத்தார். கொக்குகள் மீன் தேடி மிகுதியாகக்கூடி அறையும் (கத்தும்) குளத்தின் அருகே

தோன்றிய சிற்றூர் அது. இந்த அலுவலகம் சில காலம் திருநெல் வேலி நெல்லையப்பர் திருக்கோவிலின் அருகே ஒரு கட்டிடத்தில் இருந்தது; அங்கே போவதும் சில காலம் இங்கே வருவதுமாக இருந்த இந்த மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் கி.பி. 1831-ல் கொக்கறை குளத்தில் நிலையாக நின்று விட்டது. அங்கே வணிகத் துறைக் கட்டிடம் ஒன்று இருந்துவந்தது; அத் துறை எடுபட்ட பின்னர் அக்கட்டிடம் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகமாக நிலையாக அமைந்தது. அப்போது கோட்டையும் அதைச் சூழ இருந்த சில கட்டிடங்களும் உடைய ஒரு சிற்றூராகவே பாளையங்கோட்டை இருந்தது. கொக்கறைகுளம் தனி ஊராக இருந்து வந்தது; கி.பி. 1902-ல் பெரிதாகி வளர்ந்திருந்த பாளையங்கோட்டையில் அமைந்த நகராட்சியுடன் இணைக்கப்பெற்றது; அது முதல் பாளையங்கோட்டையே உண்மையில் நெல்லை மாவட்டத் தலைமை நகரமாக ஆயிற்று.

## மேற்குத் தொடர்ச்சி மலை

இம்மாவட்டத்தின் மேற்கு எல்லையாக உள்ள மேற்குத் தொடர்ச்சி மலை வட மேற்கு எல்லையிலிருந்து நேர் தெற்காகத் தென்காசி வட்டத்தில் ஒரு சிறு வளைவாகித் தண்பொருநைப் பள்ளத்தாக் குடன்கூடிய பாவநாசம் வரை வருகிறது; பின் தென் கிழக்காகப் பன்னிரண்டு மைல் ஒரு பெரு வளைவாகச் சென்று அதன் பிறகு நேர் தெற்காகக் கடல் வரை செல்கிறது. மிகத் தொலைவிலுள்ள எந்தச் சம வெளியிலிருந்து பார்த்தாலும் கண்ணுக்குத் தெரியக் கூடிய உயரமான இந்த மலைத்தொடர் பல முடிகளோடு கூடியது. வடக்கில் நெல்லை மாவட்டம் தொடங்கும் சிவகிரியிலிருந்து தென் காசி வட்டத்தின் வடக்கு எல்லை வரை இம் மலை திடீரென்று மிக உயரமாகின்றது. அடிவாரத்திலிருந்து நேர் கோடிட்டுப் பார்த்தால் உச்சி மூன்று அல்லது நான்கு மைல் இருக்கும். சராசரி ஐயாயிரம் அடி உயரமுள்ள இருபது முடிகள் குறைந்தது இவ்வெல்லையில் உள்ளன. சிவகிரியை ஒட்டியுள்ள கள்ளக்கடை மொட்டை (5,721 அடி) யும், புளியங்குடியை ஒட்டியுள்ள கோட்டை மலை (6,335 அடி) யும், கிருட்டிணபுரத்தை அடுத்துள்ள குளிராட்டி (5,876 அடியும்) இவைகளில் முதன்மையானவை. தெற்கே வர வர உயரம் குறை யும் இம் மலைத் தொடரின் முதன்மைப் பகுதி ஆரியங்காவுக் கணை வாய்க்குச் சென்று பின் மறுபடி உயரத் தொடங்கி "ஐந்தருவி"க்கு

மேலே 5,000 அடியாகிக் குற்றாலத்துக்கு மேலே 5,135 அடி உயர முள்ள கண்ணைக் கவரும் " பஞ்சந் தாங்கி " என்ற பெயருடைய முடி யாகத் திகழ்கின்றது. பஞ்சம் வராமல் மழையைப் பெய்வித்து மக்களைத் தாங்கும் முடி இது. அம்பா சமுத்திர வட்ட எல்லையி லுள்ள மத்தாளம் பாறைக்கு மேலே சிறிது உயரம் குறைந்தாலும் இம்மலை பார்க்க இனிய குளிராட்டி முடியுடன் விளங்குகின்றது. இங்கே இம்மலைத் தொடர் விரியத் தொடங்கிப் பாவநாசத்தை ஒட்டி மிக்க அகலமாக மிளிர்கின்றது.

இந்த இடத்தில் சிறப்போங்க 6,125 அடி உயரமாகக் காட்சி யளிக்கும் முடி அகத்தியர் மொட்டை என்றும் " அகத்தியர் மலை " என்றும் பெயர் பெறுகிறது. மாலைப் போதில் சூரியன் மலை மேல் ஏறி விளங்கும் போது அகத்தியர் மொட்டை கண்ணுக்கும் அதன் வழியாக உள்ளத்துக்கும் எல்லையற்ற மகிழ்ச்சியை ஊட்டு கின்றது. வட கிழக்குப் பருவக் காற்று, தென் மேற்குப் பருவக் காற்று ஆகிய இரண்டு பருவக் காற்றுகளின் முழுப் பயனை இம் மலை முடி அடைகின்றது. இக்காரணங்களால் இதனை " ஏகபொதிகை " என மக்கள் பாராட்டுகின்றனர். இங்கேதான் முத்தமிழ் வளர்ச் சிக்கு அகத்தியமான இலக்கணம் வகுத்த அகத்திய மா முனிவர் எழுந்தருளியிருந்து இப் பகுதி மக்கள் வாழ்ந்தோங்கத் தண் பொருநை யாற்றைத் தோற்றுவித் தருளினர். இதற்குத் தெற்கே இருப்பது ஐந்து தலைகளாக உள்ள முடி; அதனால் இது " ஐந்தலைப் பொதிகை " என்று பெயரமைந்துள்ளது.

இங்கிருந்து நாகனேரி வட்ட எல்லை வரை மலை தென் கிழக்காகச் சென்று அங்கிருந்து நேர் தெற்கு நோக்கிச் செல்கிறது. இப்பகுதி வர வர அகலம் குறைந்து செங்குத்தாகிச் சராசரி ஐயாயிரம் அடி உயரத்தை ' உடையது. திருக்குறுங்குடிப் பக்கமாக இது ஆறுயிரம் அடி உயர்ந்து மகேந்திரகிரியை ஒட்டிச் சிறிது உயரம் குறைகின்றது. பணகுடிக்கு வடக்கே ஒரு கணவாய் இருக்கிறது. இந்த இடத்திலிருந்து மலை தென்கிழக்காக உயரம் குறைந்து சென்று ஆரல் ஆம் பொழி அருகே கணவாயாக நின்று விடுகிறது. ஆரல் ஆம் பொழி என்பது ஆரல்—மதில், பொழி—எல்லை என்று இருசொற்களாகப் பிரிந்து எல்லையாகிய மதில் என்று பொருள்படும். திருவாங்கூருக்கும் திருநெல்வேலிக்கும் இது எல்லை. ஆரல் ஆம் பொழி என்பது ஆராம் பொழி என்று மருவி வழங்குகின்றது. இதன் பிறகு இப்

பெருமலை குன்றுகக் குன்றித் தெற்குக் கோடியில், கடலிலிருந்து இரண்டு மூன்று மைல் தூரத்தில் முடிந்துவிடுகிறது; இந்த முடிவிடம் கன்னியா குமரி முனைக்குச் சிறிது சரிவாக மேற்கு.

## தண்பொருநையாறு

நெல்லை மாவட்டப் பேராறு தண்பொருநையாறுதான். இது தோன்றும் பெரிய பொதிகையிலிருந்து கடல் வரை நெல்லை மாவட்டத்தை வளம் படுத்துகிறது. இதன் நீளம் 75 மைல். இது 1,750 சதுரமைல்கள் பரப்புள்ள நிலத்தினை வளம் படுத்துகின்றது. பேயாறு, உள்ளாறு, பாம்பாறு, காரியாறு, சேர்வையாறு இந்த ஐந்து ஆறுகளும் மலை மேலே தோன்றி மலைமேலேயே தண்பொரு நையோடு சேர்கின்றன. மணிமுத்தாறு என்பது சிங்கம்பட்டிக்கு அருகே பொருநையில் வந்து சேர்கிறது. இது மலைமேலே செங்கல் தேரிச் சோலையிலே தோன்றி வரட்டாறு, கூசன்குழி ஆறு ஆகிய சிற்றாறுகளால் நிரப்பப் பெறுகிறது.

கடையம் பெரும்பத்துக்கு மேற்கே பெருமலையின் கீழைச் சரிவில் தோன்றி வருகிறது சம்பு நதி. மேலைக் கடையத்திற்குத் தெற்கே செங்குத்தான மலையிலிருந்து ஓடி வருகிறது இராம நதி. இவை இரண்டும் இரவண சமுத்திரத்தின் அருகே ஒன்று சேர்கின்றன. இவ்விரண்டும் சேர்ந்த ஆறு வராக நதி என்று பெயர் பெறும். சிவசைல மலை மேல் தோன்றி வருகிற கருணையாற்றில் பாப்பாங் குளத்தருகில் வராக நதி சேர்கிறது. கருணையாறு தண்பொருநை யாற்றில் திருப்புடை மருதூரருகே கலக்கிறது. ஆண்டவன் கருணை போல் ஆண்டு முழுவதும் நிரம்பி வரும் இவ்வாறு கடனா நதி என்றும் பெயர் பெறும்.

களக்காட்டு மலையாகிய வெள்ளி மலையிலே பச்சையாறு தோன்று கிறது. இது தருவை என்ற இடத்தில் பேராற்றிற் கலக்கிறது. பேராறு ஆகிய பொருநையில் சிற்றாறு என்பது சீவலப்பேரியில் வந்து கூடுகிறது. இது திருக் குற்றால மலையாகிய திரி கூட மலை மேல் தோன்றிக் குற்றாலம், தென்காசி, கங்கை கொண்டான் வழியாக நாற்பது மைல் தூரம் ஓடி வருகிறது. பண்புளி மலை மேல் தோன்றும் அனும நதி சொக்கம்பட்டி மலைமேல் தோன்றும் கருப்பாற்றின் நீரை ஏற்றுப் பன்னிரண்டு மைல் ஓடி வந்து வீர கேரளன் புதூருக்கு அருகே சிற்றாற்றிற் சேர்கிறது. இதற்கு மேலே மலையடிவாரத்திலேயே மத்தளம் பாறையிலிருந்து வரும் அழுத கண்ணீராறும், ஐந்தருவியாறும் சிற்றாற்றிற் சேர்கின்றன

உப்போடை என்பது சிந்தாமணிப்பக்கம் தோன்றிக் கழுகு மலையில் உருவாகிப் பல குளங்களை நிரப்பி ஓடி வந்து, சிவலப்பேரியின் அருகே சிற்றாற்றைக் கூடுகிறது. உப்போடை, சிற்றாறு, பேராறு, ஆகிய மூன்றும் சேரும் இடம் முக்கூடல். மூன்று ஆறுகள் கூடும் இடம் முக்கூடல். இதுவே சிவலப்பேரி. தென்காசிக்கு மேற்கே ஒரு முக்கூடலும், திருப்புடை மருதூருக்குக் கீழே ஒரு முக்கூடலும் இருக்கின்றன. தண்பொருநையாறு அம்பாசமுத்திரம், சேரன்மா தேவி, திருநெல்வேலி, சீவைகுண்டம் முதலிய பெரு நகரங் களின் வழியாக ஓடி ஆற்றூர், கொற்கையருகே கடலிற் கலக்கிறது.

## சிறு மலைகள்

குன்று, பறம்பு, பொற்றை என்பன சிறு சிறு மலைகளைக் குறிப் பன. ஊற்றோடு கூடிய மலை ஊற்று மலை. இதன் அருகில் **ஊற்று மலை** என்ற ஊர் இருக்கிறது; இது தென்காசி வட்டம். அம்பா சமுத்திரம் வட்டத்தில் கடையத்துக்கு அருகே **முள்ளி மலையும்,** சேரன் மாதேவிக்குத் தெற்கே **கொழுந்து மா மலையும்,** திருநெல் வேலிக்குத் தென் கிழக்கே **குன்னத்தூர்ப் பொற்றையும்,** பாளையங் கோட்டைக்குக் கிழக்கே **சிவந்தி பட்டிப் பறம்பும்,** நான்குநேரிக்கு அருகே **சூட்டுப் பொற்றை, கன்னிமார் பொற்றை, பிரண்டை மலை** என்பனவும், சீவைகுண்டத்தின் வட மேற்கே **வல்லன் நாட்டுப் பறம்பும்,** கோவிற்பட்டிக்குத் தெற்கே குருமலை என்ற ஊரருகே **குருமலையும்,** சங்கரநயினார் கோவிலுக்கும் கோவிற்பட்டிக்கும் இடையே **கழுகுமலையும்,** கோவிற்பட்டியை ஒட்டித் தென் மேற்கே **பொன்மலைக் குன்றும்,** சங்கர நயினார் கோவிலுக்கு வட மேற்கே கூடலூருக்கு அருகே **மூஞ்சி மலையும்** உள்ளன.

இவற்றுள் குருமலை, கொழுந்து மா மலை முதலியன மருந்து மூலிகைகள் பல உடையன; அதனால் அவை அனுமன் இலங்கைக் குத் தூக்கிச் சென்ற மருந்து மா மலையிற் சிதறி விழுந்த கொழுந்துகள் என்று சொல்லப்படுகின்றன.

## சிற்றாறுகள்

சிறு ஆறுகள் சிற்றாறுகள். **கருமேனியாறு, நம்பியாறு, அனுமநாறு** என்பன நான்குநேரி வட்டத்தின. மாகேந்திர மலைத் தாக்கு களில் மாயப் பறம்புச் சோலையிலே தோன்றித் **தாமரையாறு,**

**கோம்பையாறு, கோடைமடையாறு** என்ற சிற்றாறுகளால் நிரப்பப் பெற்றுத் திருக் குறுங்குடி யருகே தரையில் இறங்கித் தென் கிழக்காக ஓடித் தோட்டவிளைக்கு அருகே கடலில் விழுகிறது நம்பியாறு. இவ் வாற்றுக்குத் தெற்கே **அனுமனாறு** திருவாங்கூர்ப் பகுதியில் தோன்றி இருபது மைல் ஓடி மாவட்டத் தென் கோடி எல்லைக்கு ஐந்து மைல் கிழக்கே கடலைச் சேர்கிறது. நான்குநேரி, விசயநாராயணக் குளங்களிலிருந்து கழிந்த நீர் சாத்தான் குளத் தருகில் ஒன்று சேர்ந்து கருமேனியாறு என்று பெயர் பெற்ற சிறு ஆறு மணப்பாட்டிற்கு அருகே மன்னார் குடாவில் விழுகிறது.

வைப்பாறு என்பது வாசுதேவநல்லூருக்கு மேற்கே உள்ள தோர் குளப் புறமடையருகே தோன்றிக் கரிவலம்வந்த நல்லூரைச் சேர்ந்து இராமநாதபுரம் மாவட்டத்திற் புகுந்து சாத்தூருக்குக் கிழக்கே உள்ள முத்தலாபுரத்தில் திருநெல்வேலி மாவட்டத்தில் திரும்பி வந்து விளாத்தி குளத்தின் வழியாகப் போய் வைப்பாறு என்ற ஊரின் அருகே மன்னார் குடாவிற் கலக்கின்றது. தாழை யூற்றாறு, வடுகப்பட்டியாறு, அருச்சுனன் ஆறு என்பன வைப்பாற்றில் வந்து சேருவன. கோவிற்பட்டி வட்டத்திற் பெய்கிற மழை நீர் திரண்டு வரட்டாறு என்ற பெயருடன் கடலை அடைகிறது. உப் போடை என்பது ஓட்டப் பிடாரத்திற்கு மேற்கேயுள்ள மேட்டிடங் களில் தோன்றிக் கோரம்பள்ளம் என்ற குளத்தின் வழியாகச் சென்று தூத்துக்குடிக்குத் தெற்கே கடலில் நுழைகிறது.

வாழைமலையாறு, கோட்டை மலையாறு, நிசேபநதி, காக்காநதி, பாலையாறு என்பன புளியங்குடிப் பகுதியில் மழைக் காலத்தில் பெருகிவருகின்றன. அவை ஒரு தொடராக உள்ள பல குளங்களை நிரப்புகின்றன.

ஆற்றங்கரைகளிலேதான் மக்கள் குடியேறித் திருக் கோவில்கள் பலவற்றைக் கட்டிக்கொண்டு வாழ்ந்து வருகின்றனர். ஆறுகள் கால்வழிச் சென்று, வயல்களில் நீர் நிறைந்து நின்று பயிர்களை விளைவிக்கின்றன. மேலும் அவை மக்கள் எளிதில் குளிப்பதற்கும், குடிப்பதற்கும் தண்ணீரைத் தந்து பாதுகாக்கின்றன.

# உ. போக்கு வரவு

மாவட்டத்தின் தலைநகரமாகிய திருநெல்வேலி நடுநாயகமாக விளங்குகின்றது. இம் மாவட்டத்தின் பல பகுதிகளிலிருக்கும் சாலைகளை நான்கு விதமாகப் பிரிக்கலாம். அவை (1) இந்திய நாட்டுப் பெருஞ்சாலை, (2) தமிழ் நாட்டுப் பெருஞ் சாலை, (3) மாவட்டச் சாலைகள், (4) மாவட்டப் புதுச் சாலைகள் என்பன. தனிப்பட்ட தொடராகப் புகைவண்டிச் சாலையும் இருக்கிறது. இவைகளை விவரிப்போம்.

## 1. இந்தியநாட்டுப் பெருஞ்சாலை

தெற்கே திருவனந்தபுரத்திலிருந்து ஒரு சாலை தென் கிழக்காக நாகர்கோவிலுக்கு வந்து அங்கிருந்து நேர் வடக்காகத் திரும்பிப் பணகுடி, வள்ளியூர், நான்குநேரி, பாளையங்கோட்டை வழியாகத் திருநெல்வேலிக்கு வந்து தாழையூற்று, கயத்தாறு, நாலாட்டின் புத்தூர், கோவிற்பட்டி வழியாக இராமநாத புரம் மாவட்டம் சாத்தூரைத் தாண்டி நேர் வடக்கே மதுரை வழியாகச் சென்னை யையும் கடந்து செல்கின்றது.

## 2. தமிழ்நாட்டுப் பெருஞ்சாலை

இது தூத்துக்குடியிலிருந்து தொடங்கிச் சிறிது தென் மேற்காகப் புதுக்கோட்டை , வாகைக்குளம், வல்லன் நாட்டு வழியாகப் பாளையங் கோட்டை, திருநெல்வேலியை அடைந்து பின் வடமேற்காகப் புறப் பட்டு மாருந்தை, ஆலங்குளம் வழியாகத் தென்காசியைச் சேர்ந்து நேர் வடக்கே திரும்பி நயினாரகரம், கடயநல்லூர், புளியங்குடி, வாசு தேவனல்லூர், சிவகிரி வழியே இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சேத்தூர், இராசபாளையம், சீவில்லிபுத்தூர் போய் மதுரை வழியே செல்லுகிறது.

## 3. மாவட்டச் சாலைகள்

(1) தெற்கே பணகுடியிலிருந்து திருக்குறுங்குடி, களக்காடு, பத்தமடை வழி நேர் வடக்கே பொருநையாற்றைத் தாண்டி மேலைக் கல்லூருக்குப் போகிறது ஒரு சாலை,

(2) தென்காசியிலிருந்து ஒரு சாலை கடையம், பொட்டற்புதூர், பாப்பான்குளம், துப்பாக்குடி, முக்கூடல், அரியநாயகிபுரம், கல்லூர், பேட்டை வழி திருநெல்வேலிக்கு வருகிறது. இது கடையத்திலிருந்து பிரிந்து வீரவனல்லூர், கார் குறிச்சி, சேரன்மாதேவி, பத்தமடை, கோபால சமுத்திரம், தருவை, முன்னீர்ப் பள்ளம் வழி பாளையங் கோட்டை திருநெல்வேலியைச் சேர்கிறது. இது தென்காசியி லிருந்து குற்றாலம், இலஞ்சி, செங்கோட்டை, பண்புளி வழியாக மேற்கே திருவாங்கூர் எல்லையைச் சேர்கிறது. மேலும் இது பண் புளியிலிருந்து வடகிழக்கே வடகரை சென்று பின் தென் கிழ்ச் சாய லாக நயினார் அகரம் வருகிறது.

(3) திருநெல்வேலியிலிருந்து வடமேற்குச் சாயலாக ஒரு சாலை மானூர், தேவர்குளம், பனைவிடலி வழி சங்கரநயினார் கோவிலைச் சேர்ந்து வடக்கே கரிவலம்வந்தநல்லூர் வழி இராச பாளையம் செல் கிறது. இதன் கிளை சங்கரன் கோவிலிலிருந்து மேற்கே புளியங்குடிக்குச் செல்வதோடு கிழக்கே கழுகுமலை வழி நாலாட்டின் புத்தூரில், இந்தி யப் பெருஞ்சாலையைச் சேர்ந்து கோவிற்பட்டி வழி கிழக்கே எட்டையா புரம், விளாத்திகுளம் சேர்கிறது. மற்றொரு கிளை கரிவலம்வந்த நல்லூரிலிருந்து கிழக்கே திருவேங்கடம், இளவரசனேந்தல் வழி கோவிற்பட்டிக்கு வருகிறது.

(4) சங்கரன் கோவில் திருநெல்வேலிச் சாலை சங்கரன் கோவிலுக்குத் தெற்கே ஐந்தாவது கல்லில் சின்னக் கோவிலான் குளத்தில் பிரிந்து தென்மேற்கே ஊற்றுமலை, வீராணம் வந்து மேற்கே வீரகேரளன்புதூர் சென்று தெற்கே அத்தியூற்று என்னும் இடத்தில் திருநெல்வேலி—தென்காசிப் பெருஞ் சாலையைச் சேர் கிறது. இதன் கிளை வீரகேரளன்புதூரிலிருந்து வடக்கே சுரண்டை வழியாகச் சேர்ந்தமரம் சேர்கிறது. சேர்ந்தமரத்திலிருந்து ஒரு புதுச் சாலை பாம்புக் கோவிற் சந்தை, முள்ளிக் குளம் வழி சங்கரன் கோவிலை அடைகிறது.

(5) திருநெல்வேலியிலிருந்து ஒரு சாலை வடகிழக்காகச் சீவலப் பேரி, மணியாச்சி, பாண்டியாபுரம், ஓட்டப்பிடாரம் வழியே குறுக்குச் சாலையை அடைந்து பின் குளத்தூர் வழி வைப்பாற்றையும், குளத் தூரிலிருந்து பிரிந்து வடக்கே விளாத்தி குளம், நாகலாபுரம் வழியாக அருப்புக் கோட்டையையும் சேர்கிறது. தூத்துக்குடியிலிருந்து ஒரு

சாலை வடக்கே குறுக்குச் சாலை வந்து மேலும் வடக்கே எப்போதும் வென்றான், எட்டையபுரம், முத்துலாபுரம் வழி அருப்புக் கோட்டைக்குப் போகிறது.

(6) கயத்தாற்றிலிருந்து வடகிழக்காகக் கடம்பூர் சென்று கிழக்கே பசுவந்தனை வழியாக எப்போதும் வென்றான் சேர்கிறது ஒரு சாலை.

(7) ஒரு சாலை திருநெல்வேலியிலிருந்து தெற்கு நோக்கி இரெட்டியார்பட்டி வழி மூலைக்கரைப்பட்டிக்கு வந்து முனஞ்சி பட்டி வழியாக மெய்ஞ்ஞானபுரம் சேர்கிறது. நான்குநேரியிலிருந்து ஒரு சாலை வட கிழக்கே மூலைக்கரைப்பட்டி வழியாகக் கருங்குளம் வருகிறது. நான்கு நேரியிலிருந்து மற்றொரு சாலை தென்கிழக்காக விசய நாராயணம், சுவிசேசபுரம், திசையன் விளை வழியாக இடையன்குடியை அடைகிறது.

(8) வள்ளியூரிலிருந்து ஒரு சாலை கிழக்கே சமுகரங்கபுரம் வழி சுவிசேசபுரம் சென்று, வட கிழக்கே இட்ட மொழி வழியாகச் சாத்தன் குளம் சென்று நாசரேத்தை அடைகிறது. மற்றொரு சாலை தென் கிழக்காக இராதாபுரம் தாண்டி விசயாபதியைச் சேர்கிறது.

(9) திருநெல்வேலியிலிருந்து கிழக்கே ஒரு சாலை இருட்டிறு புரம், செய்துங்கன் நல்லூர், கருங்குளம், சீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, குறும்பூர், நல்லூர் வந்து ஒரு கிளை தென் கிழக்காகத் திருச்செந்தூரைச் சேர்கிறது ; மற்றொரு கிளை கிழக்கே ஆறுமுகனேரி, காயற்பட்டினம் சேர்கிறது. திருச்செந்தூரிலிருந்து தெற்கே ஒரு சாலை குலசேகரன்பட்டினம் சேர்ந்து வடமேற்காக உடன்குடியை அடைகிறது. சீவைகுண்டத்திலிருந்து ஒரு சாலை வடகிழக்கே பேட்மா நகரம் வந்து நேராக வடக்கே முடித்தானேந்தல் வழி வாகைக் குளம் சேர்கிறது. இதன் ஒரு கிளை பேட்மா நகரத்திலிருந்து சிவகளை, பெருங்குளம், ஏறல் சேர்கிறது.

## 4. மாவட்டப் புதுச்சாலைகள்

ஆழ்வார்திருநகரியிலிருந்து ஒரு சாலை தெற்கே திருக்களூர், நாசரேத்து வந்து தென்கிழக்காக மெய்ஞ்ஞானபுரத்தின் வழி உடன்குடியை அடைகிறது. உடன்குடியிலிருந்து ஒரு சாலை நேர் வடக்கே பரமன் குறிச்சி சென்று வடகிழக்காகத் திருச்செந்தூரைச் சேர்கிறது. திருச்செந்தூரிலிருந்து வடக்காக ஒரு சாலை ஆற்றூர், முக்காணி வழியே தூத்துக்குடியை அடைகிறது.

அண்மையிற் போடப்பெற்ற புதுப்புதுச் சாலைகள் பலப்பல. அவை பற்பல சிற்றூர்களை ஒன்று சேர்க்கின்றன. முன் காலத்தில் மாட்டு வண்டிகள், குதிரை வண்டிகள், பின் எட்டாள் ஏறும் உந்து (Motor) வண்டிகள் முதலியன போக்குவரவுக்குப் பயன்பட்டன. இப்போது பெரிய பெரிய உந்து வண்டிகள் ஓடிப் பெரும்பாலும் பேரூர்களையும், சிற்றூர்களையும் ஒன்று சேர்க்கின்றன. ஆதலின் திருநெல்வேலியிலிருந்து கோவிற்பட்டி, குற்றாலம், தென்காசி, திருச்செந்தூர், கன்னியாகுமரி, நாகர்கோவில், தூத்துக்குடி, உடன்குடி, சங்கரநயினார் கோவில் எங்கும் மிக எளிதாகச் சுருங்கிய செலவிலும் விரைவிலும் அடிக்கடி சென்று சேர வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. திருநெல்வேலி - திருச்சிராப்பள்ளி, திருச்சிராப்பள்ளி-சென்னை, திருநெல்வேலி—மதுரை– கோயம்புத்தூருக்கும் இறங்காமல் நேராகச் செல்லும் விரைவு வண்டிகளும் விரைந்து செல்கின்றன.

## 5. புகைவண்டிச் சாலை

புகைவண்டி 1876-ம் ஆண்டு சனவரி மாதம் 1-ம் தேதியில் வடக்கே நள்ளி, கோவிற்பட்டியிலிருந்து மணியாச்சி வழி கிழக்கே தூத்துக்குடிக்கும் தெற்கே திருநெல்வேலிப் பாலத்துக்கும் ஓடத் தொடங்கிற்று. இது 1902-ல் கல்லிடைக்குறிச்சிக்கும், 1903 ல் செங்கோட்டைக்கும் சென்றது. 1924-ல் திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூருக்கும், பின் 1928-ல் விருதுநகரிலிருந்து குறுக்கே இராசபாளையம் சங்கரநயினார்கோவில் வழியாகத் தென்காசிக்கும் புகை வண்டி ஓடுவதாயிற்று. இந்த நிலையில் புகைவண்டி செல்லக் கங்கைகொண்டானில் சிற்றாற்றின்மேல் ஒரு பாலமும், பின் திருச்செந்தூர் போகும் வண்டிக்குத் திருநெல்வேலிக்குக் கிழக்கில் ஒன்றும், மேற்கே போகும் வண்டிக்குக் கல்லூருக்கும் சேரன்மாதேவிக்கும் இடையில் ஒன்றும், கல்லிடைக் குறிச்சிக்கும் அம்பா சமுத்திரத்திற்கும் இடையில் ஒன்றும் ஆகத் தண்பொருநை மேல் மூன்று பாலங்களும் போடப்பெற்றுள்ளன.

ஆகையால் கோவிற்பட்டி, மணியாச்சி, தூத்துக்குடி ; கங்கை கொண்டான், திருநெல்வேலி ; சீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, திருச்செந்தூர் ; கல்லிடைக்குறிச்சி, அம்பாசமுத்திரம், கடையம், தென்காசி, செங்கோட்டை ; கடயநல்லூர், சங்கரநயினார்

கோவில், கரிவலம்வந்தநல்லூர் முதலிய முதன்மையான ஊர்களும் இடையிடையே பல சிறு ஊர்களும் புகை வண்டிச் சாலையால் இணைக்கப்பெற்றிருக்கின்றன. இவைகளுக்கு இடையே நாடோறும் நான்கு வண்டிகள் போவதும் வருவதுமாக இருக்கின்றன. திருவனந்தபுரம் விரைவு வண்டி மாலை இரண்டு மணிக்குச் செங்கோட்டையிலிருந்து புறப்பட்டுத் தென்காசி, கடயநல்லூர், சங்கரநயினார் கோவில் வழியாகவும், திருநெல்வேலி விரைவு வண்டி மாலை $3\frac{1}{4}$ மணிக்கும், தூத்துக்குடி விரைவு வண்டி பகல் 12 மணிக்கும் புறப்பட்டு, மணியாச்சி, கோவிற்பட்டி வழியாகவும் சென்னைக்குச் சென்று மறுநாள் காலையில் முறையே 7, $8\frac{1}{4}$, $6\frac{1}{4}$ மணிக்கு எழும்பூர் சேர்கின்றன. அங்கிருந்து இவை முறையே மாலை $8\frac{1}{4}$, $6\frac{3}{4}$, $9\frac{1}{4}$ மணிக்குப் புறப்பட்டு மறுநாள் பகல் செங்கோட்டைக்குப் பிற்பகல் 1 மணிக்கும், திருநெல்வேலிக்கு முற்பகல் $11\frac{1}{2}$ மணிக்கும், தூத்துக்குடிக்குப் பிற்பகல் $3\frac{1}{4}$ மணிக்கும் வந்து சேர்கின்றன.

# ௩. நெல்லை மாவட்ட வரலாறு

தமிழ் நாட்டின் ஒரு பகுதியே நெல்லை மாவட்டம்; இது இந் நாட்டின் தென்கோடியில் இருப்பது. இம் மாவட்டத்தின் வரலாறு முதன் முதலாக டாக்டர் கால்டுவெல் என்பவரால் எழுதி அவரால் அச்சிடப் பெற்றது. பின், அதனைப் பெருக்கிப் பேட்டு என்பவர் எழுதினார். பேட்டு எழுதிய வரலாறு திருநெல்வேலி மாவட்ட வரலாறு **(The Tinnevelly District Gazetteer)** என்ற பெயருடன் அரசாங்கத்தாரால் அச்சிடப் பெற்றுள்ளது.

தமிழ் நாட்டின் பண்டை வரலாறு "இறையனார் அகப் பொருள் உரை" என்ற நூலில் கூறப் பெற்றுள்ளது. அகத்தியனாரிடம் தொல்காப்பியனாருடன் பயின்ற ஒரு சாலை மாணாக்கராகிய பனம்பாரனார் என்ற புலவர் தொல்காப்பியத்துக்கு எழுதிய பாயிரத்தில் அக்காலத் தமிழகத்தின் எல்லையைப் பின்வருமாறு கூறுகிறார் :—

> "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
> தமிழ்கூறும் நல்லுலகத்து."

வடக்கே வேங்கடமலையும், தெற்கே குமரிக்கோடும் தமிழ்நாட்டின் எல்லை. வேங்கடமலை என்பது திருப்பதிமலை. குமரிக்கோடு என்பது அக்காலத்தில் தென்கோடியிலிருந்த மலைச்சிகரம். அதிலிருந்து தோன்றிய ஆறு குமரியாறு என்று பெயர்பெறும்.

இறையனார் அகப்பொருள் உரையில் தமிழ் நாட்டின் தென் கோடியிலிருந்த "தென்மதுரைப்" பதியில் பாண்டிய மன்னர் தலைச்சங்கத்தை நிலைநாட்டிப் பல்லாயிரம் ஆண்டுகள் தமிழாராய்ந்தனர் என்பதும், தென்மதுரையைக் கடல் கொள்ளக் கபாடபுரத்தில் இடைச் சங்கத்தைக் கூட்டினர் என்பதும், கபாடபுரத்தையும் கடல்கொள்ள அவர்கள் இப்போதுள்ள மதுரையிற் கடைச் சங்கத்தைக் கூட்டித் தமிழாராய்ந்தனர் என்பதும் கூறப் பெற்றுள்ளன.

இப்போதுள்ள தமிழ்நாடு, பாண்டிநாடு, சோழநாடு, சேரநாடு என மூன்று பிரிவாக இருந்து வந்தது. இப்போது புதிதாக அமைந்

நுள்ள கன்னியா குமரி மாவட்டம், திருநெல்வேலி, மதுரை, இராம நாதபுரம் ஆகிய மாவட்டங்கள் பாண்டியராலும், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், தென்னார்க்காடு, வடார்க்காடு, சேலம், செங்கற்பட்டு ஆகிய மாவட்டங்கள் சோழராலும், திருவாங்கூர், கொச்சி நாடுகள், கோவை மாவட்டம் ஆகிய பகுதிகள் சேரராலும் அரசாளப்பட்டு வந்தன. பாண்டியருக்குத் தலைநகரம் மதுரை ; கொற்கை என்பது பெரிய துறைமுகம் ; அதனை உடைமையால் பாண்டியர் "கொற்கையாளி" என்று புலவர்களாற் போற்றப் பெற்றனர். சோழர்களுக்குத் தலைநகர் உறையூர் ; காவிரிப்பூம்பட்டினம் என்பது பெரிய துறைமுகம். இத்துறைமுகத்தையும் சோழர் பலர் தலைநகரமாகக் கொண்டு ஆண்டிருந்தனர் ; இப்பெருநகரமும் கொற்கையும், கடலாற் கொள்ளப்பட்டு அழிந்தன. இப்போது காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் காவிரிப்பூம்பட்டினம் என்ற சிற்றூரும், தண் பொருநை கடலோடு கலக்கும் இடத்தில் கொற்கை என்ற சிற்றூரும் அடையாளமாக இருக்கின்றன. சேரருக்குத் தலைநகரம் வஞ்சிமாநகரம்.

காவிரிப்பூம் பட்டினத்தில் நடந்த பண்டை வரலாறு கோவலன் கண்ணகியைப் பற்றியது. அதனை ஒரு பெருங் காவியமாகப் பாடினார் இளங்கோவடிகள். இவர் வஞ்சிமாநகரை அரசாண்டிருந்த சேரன் செங்குட்டுவனுடைய உடன்பிறந்த தம்பியார். தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் சிறந்த தோழரும் அவருடன் திருக்கைலைமாமலைக்கு எழுந் தருளிச் சென்று சிவபெருமானைப் பாடிய பெரும் புலவரும் ஆகிய சேரமான்பெருமாள் நாயனார் சேரநாட்டை ஆண்ட சேர மன்னர்.

திருநெல்வேலி மாவட்டத்தில் இருந்த கொற்கை மாநகரம் மறைந்த பின் குலசேகரன்பட்டினம் பெரிய துறைமுகமாக இருந் திருக்கிறது. அதன்பின் அண்மைக் காலத்தில் தோன்றிய தூத்துக்குடி பெரிய துறைமுகமாகி இன்றும் வளர்க்கப்பெற்று வருகிறது. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் காலத்திலிருந்த கூன்பாண்டியராகிய நின்றசீர் நெடுமாற நாயனாரும், அவர்தம் திருமனைவியாரும் சேக்கிழார் பெருமானால் "எங்கள் தெய்வம்" என்று வாய்குளிரப் புகழப் பெற்றவரும் ஆகிய மங்கையர்க்கரசி யாரும் எழுந்தருளி வந்திருந்து சிலகாலம் அரசாண்ட பெரு

மையை உடையது திருநெல்வேலி மாநகர் இந்நகரிலுள்ள நெல்லையப்பர் காந்திமதி திருக்கோயிலில் பல திருப்பணிகள் இவர்களாற் செய்யப்பெற்று விளங்குவதாயிற்று ; இவர்களாற் புதிதாகக் கட்டி அமைக்கப்பெற்ற திருக்கோயிலே இம்மாநகரி லுள்ள தொண்டர்கள் நயினார் திருக்கோவில்.

பேராசிரியர் சுந்தரம்பிள்ளை "மனோன்மணீயம்" என்ற ஒப்பற்ற நாடக நூலை ஆக்கினார்; அதில் சீவக பாண்டியன் மதுரையின் நீங்கித் திருநெல்வேலியைத் தலைநகராக்கிச் சில காலம் அரசாண்டு வந்தான் என்று கூறுகின்றார்.

மதுரையிலேயிருந்து பல நூற்றாண்டுகள் அரசாண்ட பாண்டி யர்களுடைய ஆட்சி, கி.பி. 1559-ல் அற்றுப் போயிற்று. அதன் பின் கி.பி. 1736 வரை நாயக்க மன்னர்கள் பாண்டியநாட்டை ஆண்டு வந்தனர். அவருள் திருமலை நாயக்கர் (கி.பி. 1623—1659), மங்கம்மாள் (கி.பி. 1689—1704) ஆகிய இருவரும் மிகமிகச் சிறப்பாக நீதிநெறி தவறாமல் ஆண்டு வந்தனர். திருமலை நாயக்கர் மதுரையிலும், சீவில்லிபுத்தூரிலும் செய்துள்ள திருப்பணிகள் இன்றும் நின்று அவருடைய புகழைப் பேசு கின்றன. மங்கம்மாள் கன்னியாகுமரி முதல் திரு இராமேச்சுரம் வரை அமைத்த பெருஞ்சாலை இன்றும் மங்கம்மாள் சாலை எனப் புகழப் பெறுகின்றது.

நாயக்க மன்னர் காலத்தில் திருநெல்வேலி மாவட்டத்தில் பலர் திசை காவலர்களாக அமர்த்தப்பட்டார்கள். அவர்கள் பாளையக்காரர் கள். அவர்கள் பாளையத்தை, அதாவது ஆயுதம் தாங்கிய படையை, உடைமையினால் பாளையக்காரர் எனப்பட்டனர். அவர்கள் ஒவ் வொருவருக்கும் அரசர் ஒவ்வொரு பகுதி நாட்டைக் கொடுத்து அதில் வரிகளை வாங்கித் தம் செலவுக்கும் படைச் செலவுக்கும் வைத்துக்கொள்ளும்படி தக்க ஏற்பாடு செய்திருந்தார். அத் தகைய பாளையப்பட்டுக்கள் பின் வருவன :—சொக்கன்பட்டி என்ற வடகரை, நெற்கட்டுஞ் செவல் என்ற ஆவுடையாள்புரம், வீரகேரளன் புதூர் என்ற ஊத்துமலை, சிவகிரி, சேத்தூர், சிங்கம்பட்டி, தலைவன் கோட்டை, அளகாபுரி, ஊர்க்காடு, சுரண்டை, கடம்பூர், மணியாச்சி, எட்டையபுரம், இளவரசனேந்தல், பாஞ்சாலன்குறிச்சி முதலியன.

உலாந்தர்கள் (தச்சுக்காரர்), போர்ச்சுக்கீசியர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகிய ஐரோப்பியர்கள் இந்தியாவில் வாணிகம் செய்ய வந்தவர்கள் ; நாளடைவில் நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றத் தொடங்கினார்கள். அவர்களுள் ஆங்கிலேயரே வெற்றி கொண்டு இந்தியா முழுமைக்கும் அரசராயினர். 1858-ல் கிழக்கிந்திய வணிகர் கழகம் இந்திய ஆட்சியை இங்கிலாந்து அரசுக்கு மாற்றித் தந்தது. அதுமுதல் இங்கிலாந்து அரசரே இந்தியாவை ஆளத் தொடங்கினார். நாடெங்கும் அமைதி நிலவுவதாயிற்று ; கல்வி பரவியது. அதனால் தம்முணர்ச்சி பெற்ற இந்தியர் "காங்கிரசு" என்ற சங்கத்தை நிலைநாட்டி அதன் வழியாக "இங்கிலாந்து அரசர் இந்தியாவின் ஆட்சியை இந்தியரிடம் ஒப்புவிப்பதுதான் ஒழுங்கு" எனக் கிளர்ச்சி செய்வாராயினர்.

திருநெல்வேலி மாவட்டத்தில் இக்கிளர்ச்சிக்குத் தலைமைதாங்கி நடத்தியவர் கப்பலோட்டிய வீரரும் பெரும் புலவரும் கவிஞரும் ஆகிய வ. உ. சிதம்பரம்பிள்ளையாவார். காந்தியடிகள் வரி கொடாமை, மறியல் ஆகிய அமைதிப்போரை நடத்தினார். நன்றாகப் படித்த உணர்ச்சி வீரர்கள் சேனையிற் சேர்ந்தார்கள். அவர்கள் செய்த கிளர்ச்சியின் பயனாக இந்தியாவுக்கு முழு உரிமையைத் தந்து ஆங்கிலேயர்கள் விலகிக் கொண்டதோடு இன்றும் தம் முழு ஆதரவும் தந்துதவுகின்றார்கள். தமிழ்நாட்டுத் தலைமையமைச்சர் உயர்திரு கே. காமராசர், கல்வி, நிதி, கோவில் அமைச்சர் உயர்திரு மீ. பக்தவத்சலம் முதலிய அமைச்சர்கள் தலைமையில் தமிழ்நாடு முழுவதும் அமைதி நிலவுவதோடு பல துறைகளிலும் மிக்குயர்ந்த முன்னேற்றம் தோன்றி வளர்ந்து திகழ்கின்றது.

## திருக்கோவில்கள்

நெல்லை மாவட்ட அமைப்பும், போக்கு வரவும், மாவட்ட வரலாறும் சுருக்கமாக ஆராய்ந்து குறிப்பிடப் பெற்றன. இப்போது நெல்லை மாவட்டத் திருக்கோவில்களை ஆராய்வோம்.

திருக்கோவில்கள் என்பன ஆண்டவன் எழுந்தருளியிருக்கும் இடங்கள். கோ—தலைவன், ஆண்டவன், இல்-இடம்; அவன் எங்கும் நிறைந்த பரம்பொருள்; அவன் இல்லாத இடமே இல்லை; அவன் நம்முடைய உயிரிலும் கலந்திருக்கிறான்; உடலிலும் கலந்திருக்கிறான். வெட்டை வெளிகளிலும் அவன் இருக்கிறான். அதனால் அவன் இறைவன் எனப்படுகிறான். இறுப்பவன் இறை; இறுத்தல்—எங்கும் தங்கியிருத்தல். அவன் கடவுள் எனப் பெறுகிறான்; அவன் மனம், மொழி, மெய்களைக் கடந்து நிற்பவன்; மனத்தால் அவன் இத்தன்மையன் என்று எண்ணுதல் எவர்க்கும் முடியாது; வாயாற் சொல்லுதலும் முடியாது; உடம்பால் உணர்தலும் இயலாது. திருநாவுக்கரசர் வினவிடைத் திருத்தாண்டகத்தில் பின்வருமாறு பாடுகிறார்:

“மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சிமயானத்தான்
வார் சடையான் என்னின் அல்லால்
ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஓர் ஊரன் அல்லன் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே.”

“மை தீட்டிய திருக்கண்களையுடைய உலகத் தாயாரும் தானும் ஆகத் திருக்கச்சி மயானத்தில் எழுந்தருளி யிருக்கின்றான், நீண்ட சடைகளை உடையவன் என்று மட்டும் நம்மாற் சொல்லுதல் முடிகிறது. அவனே ஒப்பற்றவன், ஒருவன் அல்லன், யார் யார் எப் பெயர் இட்டு அழைத்தாலும் எவ்வுருவில் வணங்கினாலும் அவ்வவ் வுருவில் வணங்கும் அடியார்கள் முன்தோன்றி அருளும் பல்வேறு திருமேனியை உடையவன்.

'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்'

என்றார் அருணந்திசிவாசாரியார் சிவஞான சித்தியாரில். ஓர் ஊரிலே மட்டும் இருப்பவன் அல்லன்; திருநெல்வேலியில் நெல்லையப்பனாக வடிவம்மையுடன் விளங்குகின்றான்; மதுரையில் மீனாட்சி சுந்தரனாகத் திருவருள் புரிகின்றான். அவனுக்கு உவமை சொல்லுதல் முடியாது. அந்தந்தத் தன்மையும், அந்தந்த நிறமும், அந்தந்த அழகும் அவனுடைய திருவருளே நம் கண்ணாகக் கொண்டு அவனைப் பார்த்தால் தோன்றியருளுவான்; அப்படி யல்லாமல் ஊனக் கண்ணால் கண்டு அவன் இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இதோ பாருங்கள் இவன்தான் இறைவன் என்று படத்தில் அவன் உருவத்தை எழுதிக் காட்டுதல் யாருக்கும் இயலாது."

அவனுடைய திருவருளே கண்ணாகக் கொண்டு கண்டு அவன் திருவருள் உருவம் இப்படிப்பட்டது என்று கூறியருளிய ஒப்பற்ற அடியார்கள் அமைத்துத்தந்த திருவுருவங்களைப் புனிதமான இடங்களில் தங்கள் தங்கள் ஊரில் வைத்துக் கொண்டு மக்கள் வழிபடுவாராயினர். அவ்விடங்கள்தாம் திருக்கோவில்கள். இம்மண்ணுலகினுள்ள மக்கள் அனைவரும் தாம்தாம் வாழும் பேரூர்களிலும் சிற்றூர்களிலும் திருக்கோவில்களை அமைத்துக் கொண்டு கூடிக்கூடி வழிபட்டு வருகின்றனர். "கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பது தமிழ் மக்கள் கொண்ட முடிவு. "திருக்கோவில் இல்லாத திருஇல் ஊரும்" என்றார் திருநாவுக்கரசப் பெருமானும். திரு-அழகு, ஆக்கம்.

திருக்கோவில்கள் மக்கள் அனைவருக்கும் பொதுச் சொத்து. "கோவில் வாழக் குடிவாழும்" என்பது தமிழ் மக்கள் முதுமொழி. திருக்கோவில்களில் ஆகமப்படி நடைபெற வேண்டிய பூசனைகள் தவறுதல் கூடாது; தவறினால் உலகில் பல அவகேடுகள் விளையும் என்பது பட்டறிவு; அதாவது அனுபவத்திற் கண்ட உண்மை.

"ஆற்றரு நோய்மிக்கு அவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத்தான் திருக் கோவில்களானவை
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே."

" முன்னவனார் கோவில் பூசைகள் முட்டிடில்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளம் குன்றும்
கன்னம் களவு மிகுந்திடும் காசினிக்கு,
என் அருள் நந்தி எடுத்துரைத்தானே."

—திருமூலர் திருமந்திரம்.

திருக்கோவில்களில் பூசனை தவறாது நடைபெறுவதற்காக மன்னரும், செல்வரும் பெருநிலங்களை நன்கொடையாகக் கொடுத்திருக்கிறார்கள். ஆதலின் பூசனை முறைப்படி நடைபெறும்படி கண் காணிக்கும் பொறுப்பும் உரிமையும் அரசுக்கும் மக்கள் அனைவருக்கும் உண்டு. தென்காசித் திருக்கோவிலைக் கட்டிக் குடிகள் கும்பிட்டு உய்யுமாறு வைத்த பராக்கிரம பாண்டிய மன்னர் பின் வரும் பாடலை அத்திருக்கோவிலின் கோபுரத்தில் வடக்குச்சுவரில் எழுதி வைத்திருக்கிறார் :—

" ஆராயினும் இந்தத் தென்காசி மேவும் பொன்னாலயத்து
வாராததோர் குற்றம் வந்தால் அப்போது அங்கு வந்ததனை
நேராக வேஒழித்துப் புரப்பார்களை நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன் பராக்கிரம பாண்டியனே."

கல்லைப்போன்ற உள்ளத்தையும் கரைக்கும் அருமைப்பாடல் இது. ஆதலின் மக்கள் அனைவரும் திருக்கோவில்களிற் சென்று நாடோறும் தவறாது வழிபடுதல் வேண்டும்; அங்கு குற்றம் ஒன்றும் நேராது பாதுகாத்தல் வேண்டும்; திருக் கோவில்களைத் தங்கள் தங்கள் உயிரும் உடலும் போலப் பேணி வருதல் ஒவ்வொருவருக்கும் உற்ற உரிமையும் கடமையும் ஆகும்.

நம் தமிழ் நாட்டிலுள்ள நம்முடைய திருக்கோவில்களை ஆறு வகையாகப் பிரித்துக்கொள்வோம். அவையாவன :—

(1) பிள்ளையார் கோவில்கள், (2) சிவன் கோவில்கள், (3) கூத்தர் கோவில்கள், (4) பெருமாள் கோவில்கள், (5) திரு முருகன் திருக்கோவில்கள், (6) பிறகோவில்கள்.

பிற கோவில்கள் என்ற தலைப்பில் சாத்தனார் கோவில்கள், அம்மன் கோவில்கள், அடியார் கோவில்கள், பிற சில்லறைக் கோவில்கள் அமையும். அகத்தியனார், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், குமரகுருபரர், சிவஞான முனிவரர் என்பவர் திருக் கோவில் பெற்ற அடியார்.

நமது ஆராய்ச்சியின் முன் நிற்கும் கோவில்கள் பெரும்பாலும் நீர்வளமுள்ள இடங்களிலேயே குவிந்திருக்கின்றன. தண்பொருநை யாற்றின் இரு கரைகளிலும், அதன் துணையாறுகளின் கரைகளிலு மாகப் பெரிய பெரிய கோவில்களை நாம் காணலாம். சில கோவில் களைத் தவிர ஏனைய பிற ஆற்றங்கரைகளிலும், மலையடிவாரத்திலுள்ள சிறு ஆறுகளின் கரைகளிலும் அமைந்துள்ளன.

நெல்லைமாவட்டத்தில் இன்று அறநிலைய ஆட்சித்துறையினர் கணக்கில் வந்துள்ள திருக்கோவில்கள் அறு நூற்றுப்பதின் மூன்று. அவற்றுள் அம்பாசமுத்திரம் வட்டத்தில் 137 கோவில்களும், திரு நெல்வேலி வட்டத்தில் 145-ம், சீவைகுண்ட வட்டத்தில் 97-ம், திருச்செந்தூர் வட்டத்தில் 48-ம், நான்குநேரி வட்டத்தில் 45-ம், தென்காசி வட்டத்தில் 65-ம், சங்கரநயினார்கோவில் வட்டத்தில் 36-ம், கோவிற்பட்டி வட்டத்தில் 40-ம் ஆக மொத்தம் 613 கோவில் கள்.

இவற்றுள் 87 பிள்ளையார் கோவில்கள் ; 196 சிவன் கோவில் கள் ; 159 பெருமாள் கோவில்கள் ; 31 திருமுருகன் கோவில்கள் ; 140 பிற தெய்வங்களின் திருக்கோவில்கள் ; ஆக மொத்தம் 613 கோவில்கள். பிற கோவில்கள் என்ற தலைப்பில் அம்மன் கோவில்கள் 91, சாத்தன் கோவில்கள் 38, மாடன் கோவில்கள் 4, நாராயணசாமி கோவில்கள் 3, அகத்தியர் கோவில்கள் 3, கருப்பன் கோவில் 1. ஆகமொத்தம் 140 கோவில்கள்.

இவற்றுள் ஆண்டொன்றுக்கு ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய் வருவன 103 ; ஓராயிரத்தின் மேல் மூவாயிரம் வரை வரவுடையன 156 ; ஓராயிரத்துக்கும் குறைவாய் வருவாயுடையன ஏனையமுந்நூற்றைம்பத்து நான்கும்.

முதற்கண் பிள்ளையார் திருக்கோவில்களை ஆராய்வோம்.

# க. பிள்ளையார் திருக்கோவில்கள்

யானைமுகக் கடவுள்தான் பிள்ளையார். பிள்ளையாருக்கு உரிய பெயர்கள் கணபதி, விக்கினேசுவரர், விநாயகர் முதலியன. சிவ பெருமானுடைய பிள்ளை ஆதலினால் இவர் பிள்ளையார் எனவும், சிவகணங்களுக்குத் தலைவர் (கணம்=கூட்டம் ; பதி=தலைவர்) ஆன தால் கணபதி என்றும், விக்கினங்கள் அதாவது இடையூறுகள் வராமல் காக்கும் கடவுள் (ஈசுவரர்) ஆனதால் விக்கினேசுவரர் என்றும், யாவர்க்கும் சிறந்த தலைவர் (வி-சிறந்த ; நாயகர்=தலைவர்) ஆனதால் விநாயகர் என்றும் பல பெயர்களைப் பெற்றார்.

பிள்ளையார் என்ற பெயர் யானைமுகக் கடவுளாகிய இவருக்கும், திருமுருகனுக்கும் வழங்கப்பெற்று வருகிறது. இவர் சிவனாருக்கு மூத்த திருப்பிள்ளையாரென்றும், இவருக்குப் பின் தோன்றிய தம்பியாகிய திருமுருகன் இளைய திருப்பிள்ளையாரென்றும் அழைக்கப் பெறுவர். ஆனால் ஆராய்ச்சி அறிஞர், "மூத்த பிள்ளையார் வழி பாடு திருஞானசம்பந்தர் காலத்தில் சிறுத்தொண்ட நாயனார் வாதாபி என்ற வட நாட்டுப் பெரு நகரை அழித்த பின்னரே தமிழ் நாட்டுக்கு வந்தது, அதற்குமுன் பிள்ளையார் என்ற வழக்குச் சங்க நூல்களில் திரு முருகப் பெருமானையே குறிப்பதாக உள்ளது" என்று கூறுகிறார்கள். அவர்கள் கூற்றுப் பின்வருவது :—

"திரு முருகாற்றுப் படையின் உரையாசிரியர் உரையிலும், கவிப் பெருமாள் முதலியோர் உரையிலும் பல இடங்களில் முருகன் "பிள்ளையார்" என அழைக்கப்படுகிறான். 'பிள்ளையார் அயனைச் சபித்த பின்' என 162-ம் அடி உரைக் குறிப்பிலும், 'பிள்ளையார் சபித்தலாலே, எனவும் 'பிள்ளையார் அசுரரை அழித்து, எனவும் 163—165-ம் அடி உரைக் குறிப்பிலும், 'சித்தன் என்பது பிள்ளையாருக்குத் திருநாமம்' என 176-ம் அடி உரைக் குறிப்பிலும், 'பிள்ளையார் வேலை' என 222-ம் அடி உரைக் குறிப்பிலும், 'பிள்ளையார் கோவில் என்று மாம்' என 238-ம் அடி உரைக் குறிப்பிலும், 'பிள்ளையார் வரும் படி' என 244-ம் அடி உரையிலும் 'பிள்ளையார் வேலை எனவும் 'பிள்ளையாரால் வந்ததென—' மதுரைக்காஞ்சி 11-ம் அடி உரைக் குறிப்பிலும் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் முரு

கணைப் பிள்ளையார் எனச் சுட்டுகிறார். இக்காலத்தில் பிள்ளையார், கணபதி, விநாயகர் என்ற பெயர்கள் யானைமுகக் கடவுளுக்கு உரியன. எனவே இவ்வாசிரியர்கள் காலத்துக்குப் பிறகே தமிழ் நாட்டில் விநாயகர் வழிபாடு பரவியிருத்தல் வேண்டும். ஆற்றங் கரை, குளத்தங்கரையிலும், சந்திகளிலும் முருக வழிபாடு இருந் தது. இதற்குச் சான்று திருமுருகாற்றுப்படை அடிகள் 222—226

வேலன் தைஇய வெறி அயர் களனும்
காடும் காவும் கவின் பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்,

"ஆற்றங்கரை குளக்கரையிலும், சந்திகளிலும் முருக வழி பாட்டுக்கு மாறாக விநாயகர் வழிபாடு நிலவியது. பிள்ளையார் என்ற பெயரும் யானைமுகக் கடவுளாகிய அவருக்கு உரியதாயிற்று. யானைமிசைக் கடவுளாகிய முருகன் இளைய பிள்ளையார் ஆனார்." இக்கூற்று எவ்வளவு பொருந்தும் என்பதனை ஆராய்வோம்.

இளைய பிள்ளையாராகிய திரு முருகனைக் குறிக்கும் இடங்களில் உரையாசிரியர் 'பிள்ளையார்' என்று மட்டும் கூறியதே பொருந்தும். ஒவ்வோரிடத்தும் 'இளைய பிள்ளையார்' என்று குறித்தால் அது மிகையேயாம். தமிழ் நாட்டில் மூத்த பிள்ளையார் வழிபாடு பன் னெடுங் காலத்துக்கு முன்னரே பரவியிருந்தது. இவர் தாம் மூத்த பிள்ளையார் ஆதலினால் இவரைப் பிள்ளையார் என்று குறித் தலே அமையும். இவரையும், திரு முருகனையும் குறிக்கும் இடங் களில் மட்டும் திருமுருகனை 'இளைய பிள்ளையார்' என்று குறித்தல் இன்றியமையாதது. ஆதலின் இவ்வாறு பொருத்தமில்லாத கார ணத்தைக்கொண்டு பிள்ளையார் வழிபாடு தமிழ் நாட்டுக்குப் பிற் காலத்தில் தான் வந்தது என்று முடிவு கட்டுவது சரியாகாது. வேறு சிலர் பின்வரும் காரணம் கூறுவர்.—

"வாதாபி என்ற நகரத்தைப் பரஞ்சோதியார் என்ற சிறுத் தொண்ட நாயனார் வென்று அழித்தார். அவர் தாம் கணபதி வழி பாட்டை வாதாபியிலிருந்து தமிழ் நாட்டிற்குக் கொண்டு வந்தார்." இதனை ஆராய்வோம்.

வாதாபி என்பது வட நாட்டுத் தொன்னகரம்; இது பம்பாய மாகாணத்தில் பெல்காம் என்ற மாவட்டத்தில் இருக்கிறது. இது சாளுக்கிய அரசன் புலிகேசியினுடைய தலைநகரம். மகேந்திர வர்மன் மகனாகிய நரசிம்மவர்மன் என்னும் பல்லவ அரசனுக்குச் சேனைத்தலைவராய் இருந்தார் பரஞ்சோதியார். அவர் ஒரு பெரும் படைகொண்டு சென்று வாதாபி நகரத்தைக் கி.பி. **642**-ல் அழித்தார். (இது கல் வெட்டாற் கண்ட முடிவு.) வாதாபியின் சிதைந்த பகுதிகள் இன்றும் உள்ளன. வாதாபியிலிருந்த கணபதி கோவில் மிகவும் புகழ் பெற்றது. "வாதாபி கணபதி" என்று இசைப் புலவர் இன்றும் இசையரங்குத் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்தாகப் பாடுகிறார்கள். போருக்குப் போய் வாதாபி ஊரை அழித்த பரஞ் சோதிப் பெரியாருக்கும் இந்தப் பிள்ளையாருக்கும் என்ன தொடர்பு ?

பரஞ்சோதியாருடைய ஊர் செங்காட்டங்குடி என்பது. அங்கே உள்ள திருக்கோவிலின் பெயர் 'கணபதீச்சரம்' என்பது. கணபதி என்ற மூத்த திருப்பிள்ளையார் இந்த இடத்தில் சிவபெருமானை நிலைபெறுத்தி வணங்கினார். கணபதியினால் பூசிக்கப்பெற்ற சிவ பெருமான் 'கணபதி ஈசுவரர்' எனப் பெயர் பெற்றார்; அக் கோவில் கணபதீச்சரம் என்று அழைக்கப் பெறுவதாயிற்று. இந்த உண்மையை அறியாதார் "கணபதீச்சரமென்பது கணபதி கோவில், அந்தக் கணபதியைப் பரஞ்சோதியார் என்ற சிறுத்தொண்ட நாயனார் வாதாபி யிலிருந்து கொண்டுவந்து தம்முடைய ஊரில் ஒரு கோவிலைக் கட்டி அதில் நிலை பெறுத்தினார்" என்று தவறாகக் கூறி மலைவாராயினர்.

கணபதீச்சர வரலாற்றைப் பற்றிக் கந்தபுராணம் கூறுகின்றது. கந்தபுராணம்—கயமுகன் உற்பத்திப் படலத்தில்

"ஏடவிழ் அலங்கல் திண்டோள் இபமுகத்து அவுணன் மார்பில்
நீடிய குருதிச் செந்நீர் நீத்தமாய் ஒழுகும் வேலைப்
பாடுற வரும் கான்றன்னில் பரத்தலின் அதுவேசெய்ய
காடு எனப்பெயர் பெற்று இன்றும் காண்தக இருந்தது அம்மா."

(இபம் = யானை) செய்யுள்—250

"நீண்டு செங் காட்டில் ஓர்சார் மேவி மெய்ஞ்ஞானத் தும்பர்
தாண்டவம் புரியும் தாதை தன்னுருத் தாபித்து ஏத்திப்
பூண்ட பேரன்பிற் பூசை புரிந்தனன் புவியுளோர்க்குக்
காண்டகும் அனைய தானம் கணபதீச்சரமது என்பர்."

(செய்யுள்-264).

"கயமுகாசுரனை (கயம்=யானை) விநாயகமூர்த்தி கொன்றபோது அவனுடைய மார்பிலிருந்து இரத்த வெள்ளம் பெருகி ஒரு காட்டில் பரந்தது. அதனால் அது செய்யகாடு—செங்காடு எனப் பெயர் பெற்றது. அந்தச் செங்காட்டில் உண்டான குடி **செங்காட்டங்குடி** யாயிற்று. அங்கே கணபதிப் பெருமான் திரும்பச் சென்று தம்முடைய தந்தையாராகிய தாண்டவ மூர்த்தியை நிலை பெறச் செய்து எத்திப் பேரன்போடு பூசை புரிந்து கயமுகனைக் கொன்ற பாவம் தீர்த்தனர். அதனால் அது கணபதீச்சரம் என்று பெயர் பெற்றது."

பெரிய புராணமும் சிறுத்தொண்டநாயனார் புராணத்தில் நாயனார் தாம் செங்காட்டங்குடி வந்து கணபதீச்சரத்தில் வழிபாடு செய்தார் என்று மட்டும் கூறுகிறது—

"மன்னவனை விடை கொண்டு தம்பதியில் வந்தடைந்து
பன்னு புகழ்ப் பரஞ்சோதியார் தாமும் **பனிமதிவாழ்**
**சென்னியரைக் கணபதீச்சரத்து** இறைஞ்சித் திருத்தொண்டு
முன்னைநிலை மையின்வழுவா முறைஅன்பிற் செய்கின்றார்."
(செய்யுள்-11).

திருஞான சம்பந்தப் பெருமான் செங்காட்டங்குடியில் எழுந்தருளியிருக்கும் கணபதீச் சரத்தான் திருவடி தொழுது இரண்டு திருப்பதிகங்கள் பாடியிருக்கிறார். அவைகளில் சிறுத்தொண்டரைப் புகழ்ந்து, புகழ்ந்து பாடியிருக்கிறார் சம்பந்தர். தேவாரத்திலோ, பெரிய புராணத்திலோ சிறுத்தொண்டர் கணபதியைக் கொண்டு வந்தமை கூறப் பெறவில்லை. அவர் வாதாபியிலிருந்து கணபதியைக் கொண்டு வந்து திருச்செங்காட்டங்குடியில் ஒரு கோயில் கட்டி எழுந்தருளச் செய்திருக்கிறார் என்று சிலர் சொல்வது ஒரு வேளை உண்மையேயாயினும் அது கணபதியாகிய மூத்த பிள்ளையார் வழிபாடு அதற்கு எத்தனை எத்தனையோ காலத்தின் முன்னரே தமிழ் நாட்டில் இருந்தது என்று கூறும் உண்மை வரலாற்றுக்கு எந்த விதமான தடையும் ஆகாது.

சந்தி, நடுத்தெரு, குளம், ஆறு, ஏரி, காடு, கரைகளிலும் பிள்ளையார் கோயில் காணப்பெறுகிறது. சிவன் கோவில்களிலெல்லாம் ஒவ்வொரு கோவிலிலும் பலப்பல இடங்களில் பிள்ளையார் இருக்கிறார். அம்மை கோவில்களிலும், முருகன் கோவில்களிலும் பிள்ளையார் இருக்கிறார். ஐயனார், மாடன், இருளன், கருப்பசாமி முதலிய தெய்வங்களுக்கு அமைந்துள்ள சிறு சிறு கோவில்களிலும் பிள்ளை

யார் இருக்கிறார். இவர் இல்லாத இடமே இல்லை. இவருக்கு முதலிற் பூசனை நடந்த பின்புதான் சிவபெருமான் முதலிய தெய் வங்களுக்கெல்லாம் பூசனை தொடங்கப்பெறுகிறது. திருமணச் சடங் குகள், ஈமக்கிரியை சடங்குகள்கூடப் பிள்ளையாரை வழிபட்ட பின்பு தான் தொடங்கப்படுகின்றன. கல்லிலும், பொன்னிலும் இவர் திருவுரு அமைக்கப்பெறுகிறது. திருமணச் சடங்குகளில் மா, மஞ்சளினாலும், மற்றைய சடங்குகளில் சாணியினாலும் இவர் திருவுருவம் பிடித்து வைக்கப்படுகிறது. அவ்வுருக்கள் சிவலிங்கம் போன்றே இருக்கும். இதனால் யானை முகவனும் சிவபெருமானும் வேறல்லர் என்பது வெளிப்படை. பிள்ளையார் சதுர்த்தியன்று இவர் உரு களிமண்ணினால் அமைக்கப்படுகிறது.

யானைமுகப் பிள்ளையாருக்கு வாகனமாக இருப்பது பெருச்சாளி. பெருச்சாளி மேல் யானை ஏறிச் செல்வது என்பது மிக்க வியப்பினைத் தருகின்றதல்லவா ? இந்தப் பெருச்சாளியும் பகைவனாகிய யானை முகாசுரனே. சாவா வரம் பெற்று ஆயுதங்களால் மடிக்கமுடியாத வரம் பெற்ற அவனைத் தம் ஒரு கொம்பை முறித்து அதனால் அவனுடைய மார்பைப் பிளந்து வென்றார் இவர். அவன் பெருச் சாளியாகி இவரோடு போர் தொடங்க அந்தப் பெருச்சாளியைத் தம் ஊர்தியாக்கி மகிழ்ந்தார் பிள்ளையார்.

பிள்ளையார் இச்சிறு பெருச்சாளி மேல்தான் வருகிறார் என்று எண்ணாதீர்கள். யானை முகத்து எம் அண்ணலாகிய பெருமான் யானை மேலும் ஏறி மகிழ்வார். திருநெல்வேலி வட்டம் புதூர் என்ற ஊரில் இருக்கும் விநாயகர் "ஆனை மேல் அழகிய விநாயகர்" என்று பெயர் பெறுவார். மயில் வாகனராகிய இளைய பிள்ளையார் யானை மேல் வருவது போல் எலி வாகனராகிய பிள்ளையாரும் யானை மேல் வருவதாகப் படம் எழுதி வைத்து வழி பட்டால் துன்பமெல்லாம் தொலையுமே!

பெருமாள் கோவில்களிலும் யானைமுகன் தென் மேற்கு மூலை யில் "தும்பிக்கை ஆழ்வார்" என்ற திருப்பெயருடன் காட்சியருள் கின்றார். பிள்ளையாருக்குப் பூசனை செய்வது மிக எளிது. ஆற்றங் கரை, குளக்கரைகளிலே பெரும்பாலும் அரசமரத்தடியில் இருக்கும் பிள்ளையாரைப் பெண்கள் ஒரு குடத்தில் தண்ணீரைக் கொண்டு வந்து முழுக்காட்டி இரண்டு அறுகம் புல்லை அவர் தலை மேல்

வைத்துக் கும்பிட்டு, நேர்ந்தபடி பல சுற்றுக்கள் சுற்றி வந்து வழி பட்டு எண்ணிய எண்ணமெல்லாம், பிள்ளைப் பேறு முதல், கைகூடப் பெற்று மகிழ்வதோடு கைம்மாருகத் தேங்காய்களை விடலை போடு இருர்கள். தேங்காய்களைப் பல சுக்கல்களாகச் சிதறும்படி எறிவதே விடலை என்பது. சிதறிப் போகும் துண்டுகளைப் பலர் எடுத்துத் தின்று மகிழ்வார்கள். அதனுல் விடலை எறிந்தவர் பாவம் தொலை யும் என்பது கருத்து. விடலைத் தேங்காய்களை ஏலத்துக்கு விட்டு அக்கருத்து நிறைவேருது செய்வது தவறு.

பிள்ளையாரில் வலம்புரி விநாயகர், இடம்புரி விநாயகர், கூத்து டைய பிள்ளையார் முதலிய பல திருவுருவங்கள் உண்டு. நரமுகப் பிள்ளையார் சிதம்பரத்தில் இருக்கிருர். அதாவது அவர் யானை முகம் இல்லாமல் மனித முகத்துடன் இருக்கிருர். ஆதிபகவன் எந்த உருவிலும் காட்சி அருளி அடியார்களை ஆதரிப்பான் என்பது இதன் கருத்து.

இனிப் பிள்ளையாரைப் பற்றிப் புராணம் கூறும் உண்மை வர லாற்றை ஆராய்வாம்.

## விநாயக புராணம்

பிள்ளையாரப்பனுடைய வரலாறு கூறும் புராணம் விநாயக புராணம். அது திருவாவடுதுறை ஆதீனத்தின் அறிவுக் களஞ்சியமாக விளங்கிய மாபாடியம் சிவஞான முனிவர் பெருமானுடைய முதன் மாணுக்கர் கவிச் சக்கரவர்த்தி கச்சியப்ப முனிவராலே திருவாய் மலர்ந்தருளப்பெற்றது.

## பிள்ளையாருடைய தோற்றம்.

மாகதன் என்ற முனிவர் பெருமானுக்கும் விபுதை என்ற அம்மைக்கும் யானை முகத்துடன் ஒரு பிள்ளை பிறந்தான். அந்த யானை முகன் சிவபெருமானை நோக்கிப் பெருந்தவம் செய்தான். சிவபரம்பொருள் அவனுடைய ஒப்பற்ற பேரன்புத் தவத்தைக் கண்டு மகிழ்ந்து அவனுக்குக் கேட்ட வரமெல்லாம் அருளினுர். அவன் கேட்ட வரம் "என்னை எந்த ஆயுதமும் கொல்லக்கூடாது; மனிதர், பறவை, விலங்கு முதலிய உயிர்கள் என்னை வெல்லுதல் கூடாது; அழியா உடல் அருள்க" என்பதுவே.

அந்த வரத்தினால் மெய்ம்மறந்து போன யானை முகன் தேவர்களைத் துன்புறுத்தினான். தேவர்கள் சிவபெருமானையடைந்து முறையிட்டார்கள் ; அவர்களுக்குத் திருவருள் செய்ய எண்ணிய சிவபெருமான் பார்வதி தேவியோடு ஒரு சித்திர மண்டபத்தை அடைந்தார். அங்கே ஒரு சித்திரமாக இருந்த மூலமந்திரம், சிவமும் சத்தியும், ஆண் யானை வடிவும் பெண் யானை வடிவும் கொண்டு சேரச் சிவபெருமானுடைய திருவருளினாலேயே யானை முகத்துடன் திருமகனார் ஒருவர் தோன்றினார். அவரே சிவபெருமான் ; சிவபெருமானும் யானை முகனும் வேறல்லர்.

> " பிடியதன் உரு உமை கொளமிகு கரியது
> வடிகொடு தனதடி வழிபடும் அவர் இடர்
> கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
> வடிவினர் பயில் வலி வல முறை இறையே "
>
> —திருஞான சம்பந்தர் தேவாரம்.

துன்புறுத்தப்பட்டவர்களைப் பாதுகாப்பதற்காக யானை முகப் பெருமான் யானை முகனுடன் போர் தொடுத்து அவன் எந்த ஆயுதத்தாலும் மடியான் ஆனதால் தமது வலது கொம்பை முறித்து அவன் மேலே எறிந்தார். யானை முகன் உடல் பிளக்கப்பட்டு இரத்தவெள்ளம் பெருகிற்று. இரத்தம் பட்ட இடம் செந்நிறம் அடைந்து செங்காடு (திருச்செங்காட்டங்குடி) எனப் பெயர் பெற்றது. அங்கே கணபதிப் பெருமான் சிவபெருமானைப் பூசித்தார். அதனால் அவ்விடம் கணபதீச்சரம் என்றும் பெயர் பெற்றுத் தேவாரமும் பெற்றுத் திகழ்கின்றது.

உடல் பிளக்கப்பட்ட கயமுகன், அழியாத உடலைத் தவத்தாலே பெற்ற பெரியவன்; ஆனதாலே பெருச்சாளியின் உருவெடுத்துப் பிள்ளையாரைத் தாக்க ஓடி வந்தான். அப்போது யானை முகத்து எம் அண்ணல் அவனைக் கருணைக் கண் கொண்டு நோக்கினார். அதனால் அகந்தை அழிந்து ஓய்ந்து ஞானம் பெற்று யானை முகன் பெருச்சாளி உருவுடன் அவருடைய திருவடிகளை வணங்கி நின்றான். உடனே பிள்ளையார் அப்பெருச்சாளியைத் தமக்கு வாகனமாக அமைத்துக் கொண்டார். இது, மயிலுருத் தாங்கி வந்த சூரபதுமனைத் தமக்கு ஆறுமுகப் பெருமான் வாகனமாக ஆக்கிக் கொண்டது போலும் என்க. பிள்ளையாருக்குத் தும்பிக்கை தவிர நான்கு கைகள் உண்டு. அவைகளில் வலக்கையில் அங்குசமும், இடக்

கையில் பாசமும் இருக்கின்றன. மற்றொரு வலக் கையில் தமது ஒடிந்த கொம்பு இருக்கிறது. அடுத்த இடது கையில் அவர் மோதகம் வைத்திருக்கிறார். தும்பிக்கை அவருக்கு ஐந்தாவது கை. அதனால் பிள்ளையார் "ஐந்து கரத்தன்" என்று புகழப் பெறுவார்.

யானை முகன் ஆட்சி செலுத்தி வந்தபோது அவனிடம் செல்லும் தேவர்கள் அவனை வணங்கித் தலையிற் குட்டிக்கொண்டு தோப்பணம் போட்டு வந்தார்கள் ; அந்நினைவிற்காகக் கயமுகன் மறைந்த பின்னர் பிள்ளைப் பெருமானைத் தேவர்கள் வணங்கித் தலையிற் குட்டிக்கொண்டு தோப்பணமும் போட்டு " இங்ஙனமாகவே இனி எங்கள் வழிபாட்டினை ஏற்றருள் செய்யவேண்டும் " என்று வேண்டிக் கொண்டார்கள். பெருமானும் இசைந்தருளினார். அன்றுதொட்டு அவர்முன் குட்டிக்கொண்டு தோப்பணம் போடும் வழிபாட்டு முறை ஏற்பட்டது. இங்ஙனமாக இவரைப் பிற்காலத்தில் இராவணேசுவரனும், அகத்திய மாமுனிவரும் வழிபட்டு வரம் பெற்றார்கள். முதலில் இராவணேசுவரன் வரலாற்றை ஆராய்வோம்.

## இராவணேசுவரன் அருள் பெற்றது.

இராவணேசுவரன் சிவபெருமானிடத்தில் எண்ணற்ற வரம் பெற்றவன். சிவபெருமான் அவனுக்குச் சிறந்த உடை வாள் ஒன்றும், மூக்கோடி வாழ்நாளும் அருளினார். அவன் ஒரு சமயம் கயிலைக்குச் சென்று தவம் செய்து தனது இலங்கை மாநகரம் அழியாமல் இருப்பதற்கு ஒரு சிவலிங்கம் பெற்று இலங்கையை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். அதனை அறிந்த தேவர்கள் யானை முகக் கடவுளைப் பணிந்து " இராவணன் எண்ணம் ஈடேறினால் உலகத்துக்கே பேரழிவை அவன் செய்வான். அதனால் அவன் எண்ணம் ஈடேறாது தடை செய்தருளல் வேண்டும்." என்று வேண்டிக் கொண்டார்கள். பெருமான் அவ்வேண்டுதலுக்கு இரங்கி அவனுக்கு நீர் பெருகும்படி அருளி அவன் முன் ஒரு சிறு பிள்ளையாக நின்றார். அப்போது இராவணேசுவரன் தான் நீர் கழித்து வரும் வரை அச் சிவலிங்கத்தை வைத்திருக்கும்படி அப்பிள்ளையை வேண்டிக் கொண்டான். பிள்ளையார் "நான் சிறு பிள்ளை, என்னால் நெடு நேரம் இச் சிவலிங்கத்தைத் தாங்கி நிற்க முடியாது. அதனால் என் கை வலித்ததும் மூன்று முறை உன்னை அழைப்பேன். நீ வராவிட்டால் இந்தச் சிவலிங்கத்தைக் கீழே வைத்து விடுவேன் "

என்று சொல்லி அதனை வாங்கிக் கொண்டார். அவர் மூன்று முறை அழைத்தும் இராவணேசுவரன் வரவில்லை. அதனால் அவர் சிவ லிங்கத்தைக் கீழே வைத்து விட்டார். இராவணன் ஓடோடியும் வந்து தன் வலுவெல்லாம் சேர்த்து அதனைத் தூக்கிப் பார்த்தும் சிவலிங்கம் வாராது வேரூன்றி நின்று விட்டது. இதுவே சிவபெருமானுடைய ஆணையும். இராவணன் முழு வலுக் கொண்டு தூக்கியதால் அச் சிவலிங்கம் பசுவின் காது (கோகர்ணம்) போல் வளைந்து விட்டது. அதனால் அவ்விடம் திருக்கோகர்ணம் (பம்பாய் மாநிலத்திலுள்ள பாடல் பெற்ற தலம்) என்று பெயர் பெற்றது. (கோ—பசு ; கன்னம் —காது) பேராற்றல் படைத்த இராவணேசுவரனாலேயே தூக்க முடியாத மிக்க வலுவை உடைமையினாலேயே அச்சிவலிங்கம் மாபல லிங்கம் எனவும் பெயர் வழங்கப்பெறுவதாயிற்று. இராவணன் சினங் கொண்டு தன் முன் நின்ற பிள்ளைப் பெருமானை அறியாது சிறுவன் என்று எண்ணித் தலையிலே குட்டினான். அதனால் மிகவும் சினங் கொண்டவர் போலக் காட்டிய பிள்ளையார் தமது இயற்கை வடிவை எடுத்து அவன் முன் நின்று அவனைத் தமது துதிக்கையாலே தூக்கி உயர எறிந்து எறிந்து பந்தாடினார். இராவணேசுவரன் உண்மை யறிந்து விநாயகப் பெருமானைப் பலவாறு போற்றித் தலையிலே குட்டிக் கொண்டு தோப்பணம் போட்டு அவரைக் கும்பிட்டு நின்றான். கணபதிப்பிரான் அவனுக்கு அருள் பாலித்தார். இனி, அகத்தியனார் வரலாறு கூறுவோம்.

## அகத்தியனார் அருள் பெற்றது.

சூரபதுமனுடைய மகனாகிய பானுகோபன் விண்ணுலகின்மேற் படையெடுத்துச் சென்று பொன் உலகத்தைக் கரி உலகமாக்கி இந்திர னுடைய மகனாகிய சயந்தனையும், விண்ணவரையும் பிடித்து வந்து சிறையில் அடைத்து விட்டான். இந்திரனோ தன் மனைவி இந்தி ராணியுடன் வேறு உருக்கொண்டு தப்பி ஓடி வந்து சீர்காழி நகரை யடைந்து மூங்கில் வனத்திலே மறைந்து வாழ்ந்தான்.

> “ காடு போந்தனன் இந்திரன் பொன்னகர் கரிந்து
> பாடு சேர்ந்தது சயந்தனும் சிறையிடைப்பட்டான்
> நாடில் விண்பதச் செய்கை ஈது ; எம்பிரான் நல்கும்
> வீடதே அலால் துன்பறும் ஆக்கம் வேறு உண்டோ?”

—கந்தபுராணம்.

இந்திரன் தன் பாவம் தீரவும் நல்லருள் பெறவும், சிவபெருமானைப் பூசித்து வந்தான். மழை வளம் குறைந்து பூந்தோட்டங்கள் படத் தொடங்கின. அதனால் சிவ பூசைக்குப் பூ இல்லாமல் இந்திரன் வாடினான். அப்போது அங்கே வந்த நாரத முனிவர் அவனைப் பார்த்து, "கவலைப்படாதே. இங்கு மேற்கு மலையிலே அகத்திய முனிவர் வந்திருக்கிறார். அவருடைய கமண்டலத்திலே கங்கை இருக்கிறது. நீ விநாயகப் பெருமானை வணங்கி வேண்டிக் கொள்; உன் எண்ணம் ஈடேறும்" என்று சொல்லிப் போயினார். இந்திரன் பிள்ளையாரை எண்ணி எண்ணிப் பலவாறு போற்றினான். அவர் உள்ளம் இரங்கினார்; உடன் அவர் காக்கை உருவுடன் சென்று அகத்திய முனிவருடைய கமண்டலத்தின் மேலேறி அதனைக் கவிழ்த்து விட்டார். அங்கிருந்து தண்ணீர் ஆறாக ஓடிவந்து சீர்காழியிற் பாய்ந்து இந்திரன் கவலையைத் தீர்த்தது. காகம் விறியமையால் உண்டான ஆறு அது. ஆனதால் காவேறி என்று பெயர் பெற்று மருவிக் காவேரி எனவும் காவிரி எனவும் பெயர் வழங்குவதாயிற்று. பூசனை முடித்து விழித்துப்பார்த்த அகத்தியனார் முன்னால் பிள்ளைப்பெருமான் ஒரு சிறு பிள்ளையாக நிற்பதையும் தமது கமண்டல நீர் கவிழ்ந்து ஓடுவதையும் கண்டு அப்பிள்ளைதான் அதனைக் கவிழ்த்திருக்கவேண்டும் என்று எண்ணித் துரத்தினார். நெடுந்தூரம் ஓடியும் அப்பிள்ளை அவருக்கு அகப்படவில்லை. அப்போது அவர் மிகவும் களைத்துச் சோர்ந்து நின்றார். உடனே பெருமான் அவருக்குக் காட்சியருளினார். அகத்தியனார் உண்மையுணர்ந்து கீழே விழுந்து தலைமேல் குட்டித் தோப்பணமும் போட்டு நின்று பல முறை கும்பிட்டு "அடியேனைக் காத்தருள வேண்டும்" என்று வேண்டி நின்றார். விநாயகப்பெருமான் அவருக்குத் திருவருள் பாலித்தார்.

## ஆறுமுகனுக்குத் துணை புரிந்தது.

முருகப் பெருமான் சூரபதுமனோடு போர் தொடுத்து ஆட்கொள்ளச் சென்றபோது, சூரனுடைய படைகளில் செத்தவைகளையெல்லாம் பிழைக்கும்படி செய்து வந்த அவனுடைய தாய் மாயாதேவியின் மர்ம மாயங்களைத் தடுத்துக் கணபதியாரே துணை புரிந்தார்; முருகப்பெருமான் வள்ளி நாயகியாரைத் திருமணம் செய்யச் சென்ற போதும் பிள்ளையார் யானையாகத் தோன்றி வள்ளிப்

பெருமாட்டியை அச்சுறுத்தி வலிய அணைத்துக்கொள்ளும்படி செய்து தமது தம்பியாருக்குத் திருமணம் முடித்து வைத்தார்.

## ஔவையாருக்கு அருளியது.

சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமாள் நாயனாரும் திருக்கைலாச மலைக்கு முறையே வெள்ளானை மீதும், குதிரை மேலும் ஏறிச்சென்றபோது, ஔவைப்பிராட்டியார் தாமும் உடன் செல்ல ஆசைப்பட்டுப் பிள்ளையாருக்குத் தாம் வழக்கமாக நாடோறும் செய்து வந்த பூசனையை மிக விரைவாக முடிக்கத் தொடங்கினார். அப்போது பிள்ளையார் அவரைத் தடுத்துப் பூசையை ஆர அமரச் செய்யும்படி கட்டளையிட்டார். அங்ஙனமே ஔவையார் "விநாயகர் அகவல்" என்ற நூலைப்பாடிப் பூசனையாற்ற, மகிழ்ந்த பிள்ளைப் பெருமான் ஔவையாரை வாழ்த்தித் தமது துதிக்கையால் அவரைத் தூக்கிக் கயிலை மலை மேல் சிவபெருமான் கோவிலின் திருமுன்பு சுந்தரனாரும், சேரமானும் சேரு முன்னர் விட்டருளினார்.

"காட்டு வழி போனாலும் கள்வர் பயமானாலும்
கேட்டு வழிக் காலனார் இட்டிடினும்—நாட்டமுடன்
நம்பிக்கை உண்டே நமக்கோர் விநாயகனார்
தும்பிக்கை உண்டே துணை."

ஔவையார்.

திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாருடைய திருவருளினாலேயே தேவாரத் திருமுறைகள் உலகத்தாருக்குக் கிடைத்தன. இவ்வரலாற்றினை ஆராய்வோம்.

## திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார்.

திருநாரையூர் என்ற பதியிலே பொல்லாப் பிள்ளையாருடைய திருக்கோயில் இருக்கிறது. பொல்லாப் பிள்ளையார் என்றால் பொல்லாத தன்மையுடைய பிள்ளையார் என்பது பொருள். பொள்ளாத என்ற சொல்லே பொல்லாத என்று மருவி நிற்கின்றது. 'பொள்ளாத' என்பது 'உளியினால் செதுக்கப்படாத' என்று பொருள் படும். அங்கே கருப்பக் கிரகத்திலே எழுந்தருளியிருக்கின்ற பிள்ளையார், திருமேனி சிற்பியினாலே செதுக்கப்பெறாமல், இயற்கையாகவே பிள்ளையார் திருமேனியைக் கொண்டவர். அவரைப் பூசித்து வந்த சிவ அந்தணருக்கு நம்பியாண்டார் நம்பி என்ற மகனார் பிறந்

தருளினார். நம்பியாண்டார் நம்பி சிறு பருவமாகப் பள்ளியிற் பயின்றிருந்த காலத்திலே ஒரு நாள் அவருடைய தந்தையார் அயலூருக்குச் சென்றுவிட்டார்; அப்போது பொல்லாப் பிள்ளை யாருக்குப் பூசனையாற்றும் கடமை நம்பியாண்டார் நம்பியைச் சேர்ந்ததாயிற்று. அவர் பிள்ளைப் பெருமானுக்குத் திருமுழுக்காட்டி னார்; அவரைப் பூமாலைகளினாலே அழகுறச் செய்தார்; திருவமுது படைத்தார்; உண்ணும்படி அன்புடன் வேண்டி நின்றார்; பிள்ளை யார் உண்ணாதிருப்பது கண்டு நம்பி தாம் ஏதோ பெரும்பிழை செய்து விட்டதாகக் கருதி, "பெருமானே! அடியேன் செய்த பிழை யாது? அருளும்" என்று கதறினார்; பின்னும் பிள்ளையார் உண்ணா திருப்பது கண்டு "உண்ணவும் மாட்டீர், சிறியேன் செய்த பிழை இது என உரைக்கவும் மாட்டீர், ஐயரே! அத்தகைய கொடும் பிழையா அடியேன் செய்துவிட்டேன்; இனியான் உயிர் வாழேன்" என்று புலம்பி அங்கிருந்த தூண் ஒன்றில் தமது தலையை மோதி உடைத்து உயிரை விடமுயன்றார். அப்போது அருட்கடலாகிய பிள்ளையாரப்பனுடைய திருக்கை அவரைத்தாங்கிக் கொண்டு அவர் படைத்திருந்த திருவமுதினையும் மகிழ்ந்து எடுத்து உண்ட ருளியது. பிள்ளைப்பெருமான் நம்பியாண்டார் நம்பிகளுக்கு ஆசி ரியராகவும் இருந்து கலைகளையெல்லாம் ஓதாது உணருமாறு செய்த ருளினார்.

இந்நிகழ்ச்சியினை அறிந்த அபய குலசேகர சோழ மன்னவர் பிள்ளையாருக்கு மிக்க பல படைப்புக்களைக்கொண்டு படைத்து நம்பி யாண்டார் நம்பிகள் வேண்டிக் கொள்ளப் பிள்ளையார் அவைகளை உண்டருளியதைக் கண்ணாரக் கண்டு திருவருளை வாழ்த்தினார். அரசருடைய வேண்டுகோளுக்கு இசைந்து நம்பியாண்டார் நம்பிகள் பிள்ளையாரைப் பணிந்து தேவாரத் திருமுறைகள் இருக்கும் இடத்தை அறிவித்தருளவேண்டிக் கொண்டனர். பிள்ளையார் அவை சிதம்பரம் திருக்கோவிலில் இருக்கும் செய்தியை உணர்த்தினார். அரசர் நம்பியாண்டார் நம்பிகளையும் உடன் அழைத்துக்கொண்டு சிதம்பரத்திற்குச் சென்று தில்லைப் பெருமானைக் கும்பிட்டு அருள் பெற்றுத் தேவாரத் திருமுறைகளை உலகறிய வெளிப்படுத்தினார்.

சைவசமைய சந்தானாசிரியராகிய மெய்க்கண்டதேவ நாயனார் தமது சிவஞானபோதமாகிய முதல் நூலுக்குக் காப்பாகத் திரு வெண்ணெய்நல்லூரில் எழுந்தருளிய பொல்லாப் பிள்ளையாரையே வாழ்த்துகின்றார். அதுபின்வருமாறு;

"கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே"

திரிபுரத்தை அழித்தருளும்படி தேவர்கள் வேண்டிக்கொள்ள, சிவபெருமான் இசைந்தருளினார். அவருக்கு ஒருதேர் அமைத்தனர் விண்ணவர். பூமிதான் தேர், சூரியசந்திரர் சக்கரங்கள், நான்கு வேதங்களும் நான்கு குதிரைகள். நான்முகன் தேரோட்டி, திருமால் பெருமானைத் தாங்கும் இடபஊர்தி ; இங்ஙனமாகத் தேர் அமைந்து நின்றது. சிவபெருமான் அதில் ஏறுவதற்காகக் காலை வைத்தார். உடனே தேரின் அச்சு முறிந்துவிட்டது. இது நிகழ்ந்த இடம் இப்போதும் அச்சிறுபாக்கம் என்னும் பெயரால் விளங்குகின்றது.

"தச்சு விடுத்தலும் தாம் அடி இட்டலும்
அச்சு முறிந்தது என்று உந்தீபற
அழிந்தன முப்புரம் உந்தீபற".

திருவாசகம்—மாணிக்கவாசக அடிகள்

"முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சறப் பொடிசெய்த அதிதீர" என்றார்

அருணகிரிநாதர். இந்நிகழ்ச்சிக்குக் காரணம் தேவர்கள் அவ்வேளையில் பிள்ளையாரை வழிபட மறந்தமையே என்று அறிஞர் கூறுப. அச்சு முறிந்ததும் சிவபெருமான் நகைத்தார் ; உடனே முப்புரங்களும் எரிந்து பட்டன.

வடக்கே காசி முதல் தெற்கே கன்னியா குமரிவரை அனைவராலும் வணங்கி வழிபடப்பெறும் இப்பிள்ளைப்பெருமான் சிவபெருமானுடைய மூத்த திருப்பிள்ளையார். இக்கணபதியையே முழுமுதற் கடவுளாக வழிபடுவாரும் உளர். அங்ஙனம் வழிபாடு கூறும் சமையம் "காணபத்தியம்" என்று பெயர் பெறும்.

**பிள்ளையார் விரதம்**

பிள்ளையார் தோற்றம் ஆவணி மாதம் வளர் பிறைச் சதுர்த்தியன்றாகும். இது பற்றி விநாயக புராணம் பின் வருமாறு கூறுகின்றது.—

"இவ்வாறு தலைவர் அவதரித்த வைகல்
பந்தமறும் ஆவணித் திங்களின் வளரும் சதுர்த்தி."

"சிங்கமா மதியிடைச் சேர்முன் பக்கத்துத்
தங்கும் நம் சதுர்த்தி".

ஆவணி மாதம் வளர்பிறைச் சதுர்த்தியன்று விநாயகப்பெருமானைக் குறித்துச் சைவ உலகம் திருநாட் கொண்டாடிப் பூசனையாற்றுகின்றது.

## க. திருநெல்வேலி—சந்திப்பிள்ளையார்

திருநெல்வேலி மாநகர் தெற்குப் புகை வண்டித் தொடரின் தென் கோடியில் இருப்பது. இந்நகரின் நடுநாயகமாக விளங்குவது நெல்லையப்பர் வடிவாள் பெருங்கோவில். அக்கோவிலைச் சூழ நான்குதேரோடும் தெருக்களிருக்கின்றன. அவைகளில் தெற்குத் தேர்த்தெருவும், மேற்குத் தேர்த்தெருவும் சந்திக்கும் சந்தியிலே எழுந்தருளியிருக்கும் பிள்ளையார் சந்திப்பிள்ளையார். இச்சந்தி மிகப் பெரிய சந்தி. இந்த இடத்திலிருந்துதான் பாளையங்கோட்டை, பெருமாள்புரம், பேட்டை முதலிய பற்பல இடங்களுக்குப்போகும் நகர வாடகை மோட்டார் வண்டிகள் புறப்படுகின்றன. திருநெல்வேலியிலிருந்து மேற்கேயுள்ள கடையம், தென்காசி முதலிய ஊர்கட்கும் வடக்கேயுள்ள சங்கரன் கோவில், கரிவலம்வந்த நல்லூர் முதலிய ஊர்கட்கும் போகிற வாடகை மோட்டார் வண்டிகள் யாவும் சந்திப்பிள்ளையார் திருமுன்பு வழியாகவே ஓடுகின்றன. இவ்வூரில் மிகப் பழமையான பிள்ளையார் இவர்தாம். இவரை வழிபட்டு எண்ணற்ற மக்கள் எண்ணியவெல்லாம் பெற்றுப் பெருவாழ்வடைகின்றனர்.

மாலை வேளையிலே மாலைப் பூசனை நடைபெறும்போது தெற்குத் தேர்த்தெரு நெடுகக் கூட்டங்கூட்டமாக மக்கள் கைகூப்பி வணங்கி நிற்பது உள்ளங்கவரும் சிறந்த காட்சியாகும். மேலும் தெற்குத் தேர்த் தெருவின் கீழைக் கோடியிலிருந்து கிழக்கு நோக்கித் தொடங்குவது தெற்குப் புதுத் தெரு. அத்தெரு இப்போது நாட்டு விடுதலை வீரர் 'வ.உ. சிதம்பரம் பிள்ளை தெரு' எனப் பெயர் மாறி வழங்கப்பெறுகிறது. இத்தெருவிலும் கண்ணுக்கு எட்டும் வரை மக்கள் திரண்டு கும்பிட்டு நிற்பார்கள்.

## உ. தூத்துக்குடி—சுந்தரபாண்டியப் பிள்ளையார்

தூத்துக்குடி மிக மிகச் சிறிய ஊராக இருந்து இப்போது நகராட்சியாக வளர்ந்து விளங்குகின்ற பெரிய துறைமுகப்பட்டினம். இவ்வூரைப் பற்றிய வரலாறு பின்னால் விவரமாக எழுதப்பெறும்.

அழகான நடுமண்டபத்தோடு கூடிய தெப்பக்குளமும், அதன் மேற்குக்கரையிலே நமது சுந்தரபாண்டியப்பிள்ளையாருடைய திருக் கோவிலும் விளங்குவது கடவுட்பற்றற்ருர் நெஞ்சினுள்ளும் மெய்ப் பற்றை விளக்கும் என்பது திண்ணம். தூத்துக்குடி மேலூர், கீழூர் என இரண்டு பகுதிகளாக இருக்கிறது. கீழூரில் இருந்த பெரியார் மூ. சுப்பராயப்பிள்ளை என்பவர் இந்தப் பிள்ளையார் கோவிலைக் கட்டி, அதற்கு முன்னுல் ஓர் அழகான தெப்பத்தை வெட்டி அதனைச் செப்பமாகக் கட்டிப் பெருமானுடைய பூசனைக்கு வேண்டிய சொத்துக்களையும் வாங்கி, இவ்வூர்ப் பெரிய சிவன் கோவில் சங்கரராமேச்சுரப் பெருமானும் அம்மை பாகம் பிரி யாளும் தைப்பூசந்தோறும் இங்கே எழுந்தருளிவந்து தெப்பவிழா ஆர்வதற்கும், சித்திரைப் பெருவிழாவில் ஏழாம் திருநாளன்று அக் கோவிலிலிருந்து கூத்துடைப் பெருமான் இக்கோவிலில் எழுந் தருளி வந்திருந்து விழா ஆர்வதற்கும், கட்டளை ஏற்படுத்திச் செல வுக்கு வேண்டும் வருவாய் தரும் சொத்துக்களையும் வாங்கி வைத்திருக்கின்றனர்.

கருப்பக் கிரகத்திலே அழகிய விமானத்தின் கீழ் சுந்தரபாண்டியப் பிள்ளையார் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருந்துகொண்டு தம்மை வழிபடும் அடியார்களுக்குத் திருவருள் பாலிக்கின்ருர். அர்த்த மண்டபத்தில் தென்புறம் எழுந்தருள் பிள்ளையார் இருக்கின்ருர்; மண்டபத்தின் நடுவே பெருச்சாளி இருக்கிறது. மா மண்டபம், பெரியதாகவும் சிறப்பாகவும் அமைந்திருக்கிறது. கோவிலின் வடக் குச்சுற்று மா மண்டபத்தின் வடபுறம் வந்து சேர்கிறது. அவ் வழிக்கு வடபுறம் மாமண்டபத்தைப் பார்க்க ஓர் அறை இருக்கிறது. அதில் இக் கோவிலைக் கட்டிப் பெரும் புண்ணியம் தேடிக்கொண்ட பெரியார் தம் வீட்டில் வைத்துப் பூசித்துவந்த முருகப் பெருமான் திருப்படம் பூசனையில் இருக்கிறது. கீழை மாடத் தெருவில் கோவி லுக்குத் தென்புறம் ஒரு மண்டபம் இருக்கிறது. இதுதான் கூத் துடைப்பெருமான் பெரிய சிவன்கோவிலிலிருந்து வந்து எழுந்தருளி யிருக்கின்ற ஏழாம் திருநாள் மண்டபம்.

### 3. எட்டையாபுரம்—பட்டத்துப் பிள்ளையார்

மகமதிய மன்னர் நவாபுக்கும், மதுரை மன்னருக்கும் திசை காவலர்களாக இருந்து அவர்களிடம் நிலக் கொடை பெற்றுப் போர்ப் படையுடன் வாழ்ந்திருந்த சிற்றரசர்களில் நெல்லை மா

வட்டத்தில் பெருநிலை பெற்றவர் எட்டையாபுரம் மன்னர். இம் மன்னவர்களிற் பலர் பெரும் புலவர்களாகவும், புலவர்கள் பலரை ஆதரித்துத் தமிழும் சமையமும் வளர்த்த பெரு வள்ளல்களாகவும் இருந்திருக்கிறார்கள். கி.பி. 1900-க்கும் 1918-க்கும் இடையில் இருந்தார் ஒரு பெரு வள்ளலார் வேங்கடேசுவர எட்டப்ப நாயக்கர் ஐயன். இவர் மாணவர் அனைவருக்கும் சம்பளக் காசு வாங்காமல் உயர் கல்வி தரும் உயர் நிலைப் பள்ளி ஒன்றை மிக மிகச் சிறப்பாக நடத்திவந்தார்.

கோவிற்பட்டிப் புகைவண்டி நிலையத்தில் இறங்கினால் கிழக்கே எட்டாவது மைலில் இருக்கிறது எட்டையாபுரம். இதன் மேற்குப் பகுதி நடுவிற்பட்டி என்று பெயர் பெறும். இதற்கும் மேற்கே இளம்பூவனம் என்ற சிற்றூர் உள்ளது. இதில்தான் எட்டையாபுரம் என்ற ஊர் அமைவதற்குமுன்னால் எட்டப்ப மன்னர் குடியிருந்தனர். அதனால் இளம்பூவனம் இளசை என்று மருவ இம் மன்னர் இளசை மன்னர் என்று புலவர்களாற் போற்றப்பெற்றனர். இளசைக்கும் எட்டையாபுரத்திற்கும் நடுவே அமைந்துள்ள பட்டி ஆதலின் இப் பகுதி நடுவிற்பட்டி எனப் பெயர் பெற்றது.

நடுவிற்பட்டியில் பெரிய பெரிய மளிகைக் கடைகளும் துணிக் கடைகளும் தனித்தனி இரண்டு தெருவாகச் சீருற அமைந்து விளங்குகின்றன. இப் பெருங் கடைத் தெருவிற்கு அடுத்த வடபுறம் இருக்கிறது நம் பட்டத்துப் பிள்ளையார் திருக் கோவில். இக் கடைத் தெருவினை அரசருக்காகக் கட்டி அமைத்த அரண்மனைப் பேட்டைக் கணக்கப்பிள்ளை சுப்பிரமணிய பிள்ளை என்பவரே சிறிதாக இருந்த இக்கோவிலை நல்ல முறையில் அரசர் செலவில் கற்பணியாகக் கட்டி அமைத்தார்.

எட்டையாபுரம் மன்னர் பட்டத்துக்கு வந்து முடிசூடும்போது, முதலில் இத் திருக்கோவிலில் வழிபாடு செய்வது இன்றியமையாத வழக்கம். ஆதலின் இப் பிள்ளையார் பட்டத்துப் பிள்ளையார் என்று பெயர் பெற்றார்.

## 4. ஆறுமுக மங்கலம்—ஆயிரத்தெண் பிள்ளையார்

தண்பொருநை கடலோடு கலக்கும் இடத்தில் ஆற்றின் வட கரையில் இருப்பது ஆறுமுகமங்கலம். மிக அண்மையிலுள்ள திருச் செந்தூர் ஆறுமுகப் பெருமானுடைய திருப் பெயர்கொண்டு அமைந்த

ஊர் இது ; இதற்கு எதிர்க்கரையில் ஆற்றூரும், ஆறுமுகனேரியும் இருக்கின்றன. இவ்வூர் வழியாக வாடகை மோட்டார் வண்டிகள் ஓடுகின்றன. இவ்வூரில் ஒரு புதிய சத்திரம் இருக்கிறது ; இச் சத்திரத்தின் வரலாறு பின்வருமாறு :—

ஒட்டப்பிடாரத்தில் பிறந்து வளர்ந்து அவ்வூரில் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் காளியம்மையின் திருவருள் பெற்று அருட் கவியாக விளங்கிய ஆண்டான் கவிராயர் ஒரு சமயம் இவ் வூருக்கு வந்திருந்தார். அவர் கடும் பசியினால் துன்புறும்போது அவருடைய பசித்த முகத்தைப் பார்த்துப் பசியாற்றுவார் யாரும் அவ்வூரில் இலராயினர் ; அதனால் அவர்,

" ஆறுமுக மங்கலத்துக்கு ஆரொருவர் போனாலும் சோறுகொண்டு போங்கள் சொன்னேன் சொன்னேன்" என்று பலரும் அறியக் கூறினார், அதனால் அவரை இன்னார் என்று அறிந்து அவ்வூரார் பலவகையாலும் மகிழ்வித்தனர்; அவர்கள் இந்தச் சத்திரத்தைக் கட்டி அதிற் பால் காய்ச்சும் விழாவினுக்குக் கவி ராயரையும் வரவழைத்துச் சோற்று விழா ஆர்ந்தனர். அது கண்டு மகிழ்ந்த ஆண்டான் கவிராயர்,

" ஆறுமுக மங்கலத்துக்கு ஆரொருவர் போனாலும்
சோறு உண்டு போங்கள் சொன்னேன் சொன்னேன்,"

என்று தமது முதல்வாக்கை மாற்றிப் பாடினார். இது, " எந்நேரம் போனாலும் சோறு உண்டு, ஆதலின் அங்கே உண்ணப் போங்கள் " என்றும், " இச் சத்திரத்தில் சென்று சோற்றை உண்டுபோகத் தவறாதீர் " என்றும் பொருள்படுமாறு காண்க.

இவ்வூரில் எழுந்தருளியிருக்கிறார் ஆயிரத்தெண் பிள்ளையார். இப் பிள்ளையாருடைய திருப் பெயர் புதுமையாக இல்லையா ? இவ ருக்கு இப்பெயர் வந்த வரலாற்றைக் கேளுங்கள்.

இவ்வூரில் ஒரு பெரிய வள்ளல் இருந்தார். அவர் இத் திருக் கோவிலைக் கட்டிப் பிள்ளையாரை எழுந்தருளச் செய்து நாற்பத் தெட்டு நாட்கள் மாகேசுர பூசை சிறக்கச் செய்தார். மாகேசுர பூசை என்பது சிவனடியாருக்கு உணவூட்டுவது. அந்த வள்ளல் நாடோறும் ஆயிரத்தெட்டுப் பேருக்கு விருந்துணவு ஊட்டி மகிழ்ந் தார். ஆயிரத்தெட்டுப் பேரை அச்சிற்றூரில் அக் காலத்தில் பெறுவது அருமை. இருந்தாலும் அவ் வள்ளல் பெரும்பாடுபட்டு ஆயிரத்

தெண்மரை நாடோறும் திரட்டி உணவூட்டி வந்தார். கடைசி நாள் ஒருவர் குறைய ஆயிரத்தெழுவர்தாம் சேர்ந்தனர். பல இடங்களில் தேடியும் யாரும் கிடைக்கவில்லை. அதனால் மிக்க கவலையுற்று வள்ளல் வாடியிருக்கும்போது பதினெட்டு வயதுடைய இளைஞர் ஒருவர் கோவிலுக்குள்ளே இருப்பதைக்கண்டு மிகமிக மகிழ்ந்து அவரை அன்போடு அழைத்துப் பந்தியில் இருக்கச் செய்து சிறப்பாக அவருக்குத் தாமே அருகில் நின்று உணவருத்தினார். உண்டவுடன் திடீரென எழுந்து அவ்விளைஞர் கோவிலுள்ளே சென்று மறைந்தார். அங்ஙனம் திருவுருகொண்டு எழுந்தருளிவந்து ஆயிரத்தெண்மராக அமர்ந்து வள்ளலுடைய வாட்டத்தைத் தீர்த்தவர் பிள்ளையாரே என்பதை அறிந்து அப் பிள்ளையாருக்கு "ஆயிரத்தெண் பிள்ளை யார்" என்ற திருப்பெயரைச் சூட்டி அனைவரும் கீழேவிழுந்து கும்பிட்டு அருள்பெற்றார்கள். அதன் நினைவாகப் இப் பிள்ளை யாருக்குச் சிறப்புப் பூசனை நிகழும் காலங்களில் ஆயிரத்தெட்டுத் தேங்காய்கள் படைக்கப்பெறுகின்றன.

## 5. சங்கர நயினார் கோவில்—ஆதிசங்கர விநாயகர்

சங்கரநயினார் கோவிலைப்பற்றிப் பின்னர் விரிவாக ஆராய்வோம். சங்கரநயினாருக்குத் திருக்கோவில் அமைத்த காலத்தில் அதனை ஒட்டிஎழுந்ததுதான் இவ்வூர். ஆதியில் இவ்வூரில் இருந்த பிள்ளை யார் இவர்; ஆதலின் இவர் ஆதிசங்கர விநாயகர் என்று பெயர் பெற்றார். இத் திருக்கோவில் இவ்வூரின் தென்கோடியிலுள்ள ஆதிசங்கர விநாயகர் கோவில் தெருவுக்கு அழகு செய்வதாக மேலைக் கோடியில் நடுநாயகமாகத் திகழ்கின்றது.

இதற்கு அடுத்து வடபுறம் இருக்கும் தெருவில் மேலோரத்தில் களா மரத்தடியில் ஒரு பிள்ளையார் இருக்கிறார். அவர் களாவடி விநாயகர் என்று பெயர் பெற்றார். இவ்வூரில் களவு செய்வதற்கு வரும் கள்வருக்கு ஒதுக்கிடமாக இருக்கும் காரணத்தால் அறியாதார், சொல்லாராய்ச்சியிற் புகுந்து, அவரைக் "களவாணிப் பிள்ளையார்" என்று அழைக்கின்றனர். அந்தத் தெருவின் நடுவில் ஒருவரும், கீழோரத்தில் ஒருவருமாக வேறு இரண்டு பிள்ளையார்கள் இருக் கின்றனர். ஆதிசங்கர விநாயகருக்குப் பக்கத்தில் அரசடிப் பிள்ளை யார் ஒருவர் இருக்கிறார். அரச மரத்துக்கு அருகில் ஒரு வேம்பு

வைத்து அரசுக்கும் வேம்புக்கும் திருமணம் நடத்திப் பார்க்கும் அறிஞரும் உளர். அரசுக்குத் துணையாக வேம்பு இருப்பது இன்றி யமையாதது என்று நம்பப்படுகிறது. அதன் காரணம் அரசிலும் வேம்பிலும் சூரியன் எழும்போது விழும் சூரிய ஒளி அம் மரங்களின் அடியிலிருக்கும் காற்றை மருந்தாக மாற்றுகிறது. அம் மருந்துக் காற்றைப் பிள்ளையாரைச் சுற்றிச் சுற்றி வந்து உட்கொள்பவர் உடம்புள் ளிருக்கும் நோய்ப்புழுக்கள் மடிய, நோய் நீங்கப் பெறுகின்றனர். கருப்பையுள்ளிருக்கும் கரு உண்ணிப் புழுக்களும் மடிவதால் கருத் தங்குவதற்கும் வழி பிறக்கின்றது.

இவ்வூருக்கு வடமேற்கே ஆத்திமரத்தடியில் ஓர் பிள்ளையார் இருக்கிறார். அவர் ஆத்தியடிப் பிள்ளையார் என்று பெயர் பெற்று இப் பக்கத்தார் அனைவராலும் அன்புடன் வழிபடப்பெறுகிறார். இவருடைய கோவிற் கிணறு வற்றாக் கடலாக நல்ல தண்ணீரை உடையது. குளிப்பதற்கு வேறு சரியான கிணறு இல்லாமையால் இவ்வூராரிற் பெரும்பாலோரும் இவ்வூருக்கு வரும் புதியோரும் இங்கு வந்து உடலாரக் குளித்து, உள்ளமாரப் பிள்ளையாரைக் கும்பிட்டுக் கண்ணாரக் களித்துப் பெருவாழ்வு பெறுகின்றனர்.

இவ்வூரில் மட்டும் நாடோறும் வழிபாடு நடைபெறும் பெரிய பிள்ளையார் கோவில்கள் இருபதுக்கு மேல் இருக்கின்றன. இவ் வூரில் செங்குந்தர் தெருக்கள் இருபத்திரண்டு உள. அவை ஒவ் வொன்றிலும் ஒவ்வொரு பிள்ளையார் இருக்கிறார். திருநெல்வேலி மாநகரத்திலோ கேட்கவேண்டாம்; திரும்பிய இடமெல்லாம் பிள்ளையார் ; பேட்டையிலே சருக்கரைப் பிள்ளையார் ; கார் குறிச்சியில் காளத்திப் பிள்ளையார்.

நெல்லை மாவட்டத்தில் அறநிலைத் துறையினர் கணக்கில் வந் துள்ள பிள்ளையார் கோவில்கள் எண்பத்தேழு என்று முன்னர்ப் பார்த்தோம் ; கணக்கில் வராதன எண்ணற்றன. வந்தவை தம்முள் ரூபா மூவாயிரத்தின்மேல் வருவாய் வருவன நான்கு :—

(1) பிரமதேசம்—கற்பகப் பிள்ளையார்.

(2) பேட்டைச் சருக்கரைப் பிள்ளையார்.

(3) ஆறுமுகமங்கலம் ஆயிரத்தெண்பிள்ளையார்.

(4) அம்மன்புரம் மாகணபதி.

இவர்தம்முள் புகழால் பெரியவராகிய நெல்லைச் சந்திப் பிள்ளையாரையும், ஆறுமுகமங்கலம் ஆயிரத்தெண்பிள்ளையாரையும், பேட்டைச் சருக்கரைப் பிள்ளையாரையும் பற்றி முன்னரே பார்த்தோம். சருக்கரைபோல இனித்த அருள்தரும் பிள்ளையாருடன் அறுபத்துமூன்று நாயன்மாரும் அங்கே வழிபடப் பெறுகின்றனர்.'

கேட்பதையெல்லாம் கொடுக்கும் கற்பக மரம்; அதைப்போலத் தம்மை வந்து அடுத்த அடியார்கள் கேட்பதையெல்லாம் அருளுபவர் அம்பை மாவட்டம் பிரமதேசத்தில் எழுந்தருளியிருக்கும் கற்பகப் பிள்ளையார்.

திருச்செந்தூர் வட்டம் அம்மன்புரத்தில் மாகணபதி எழுந்தருளியிருக்கிறார். மாகணங்கள் என்பன பெரிய சிவகணங்கள்; அவைகளுக்குத் தலைவர் மாகணபதி. பதி—தலைவர். கூட்டம் கூட்டமாக ஒன்றின்மேல் ஒன்றாக வரும் துன்பங்களையெல்லாம் நீக்கியருள்பவர் மாகணபதி.

சேரன்மாதேவியில் மிளகுப் பிள்ளையார் என ஒருவர் உளர். இவர் திருக்கோவில் ஊரின் தென் கோடியிலுள்ள குளத்தங் கரையில் இருக்கிறது. தண்பொருந்தப் பேராற்றிலிருந்து அவ்வூர் வழியாக வரும் கன்னடியன் காலில் தண்ணீர் ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் குறைந்துபோனால், மிளகினைத் தண்ணீர் விட்டு அரைத்து இப் பிள்ளையார் மேலே சாத்துகிறார்கள். பின் இவருடைய சிறு கோவிலைத் தண்ணீரால் நிரப்புகிறார்கள். தரையை ஒட்டியுள்ள மடையில் அடைப்பானைத் திறந்துவிட்டவுடன் தண்ணீரும் மிளகுக் குழம்பும் கலந்து ஓடிக் கால்வாயில் பாய்கின்றன. முறை தவறாமல் இது செய்யப்பட்டால் மறுநாள் கால்வாயில் மிகுதியாகத் தண்ணீர் வருவது உறுதி. இதற்கு ஆகும் செலவினைப் பகிர்ந்துகொள்ள ஊரார் முந்துகின்றனர். இப் பிள்ளையாருக்கு ஓர் அரசுக் கொடை நடந்து வருகிறது.

# உ. சிவன் கோவில்கள்

இதுவரை பிள்ளையார் திருக் கோவில்களைக் கண்டு பணிந்தோம். இப்போது சிவன் கோவில்களைக் கண்டு வணங்கித் திருவருளைப் பெற்று வாழ்வோம். நெல்லை மாவட்டத்தில் ரூபா மூவ்வாயிரத் தின்மேல் வருவாய் வருவன அறுபத்திரண்டு சிவன் கோவில்கள்.

சிவன் என்ற சொல் செம்மை என்ற சொல்லடியாகப் பிறந்தது. செம்மை என்பது சிவப்பு, நேர்மை, பெருமை, அழகு முதலிய பல பொருள்களை உடையது. சிவந்த திருமேனியை உடையவன் சிவன். தமிழ்மறை,

"சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" என்று கூறுகின்றது. செம்மேனி—சிவப்பு நிறம் உடைய மேனி ; மேனி—உடம்பு, வடிவம், நிறம், அழகு ; சிவனுடைய உடம்பு செம்மேனி—அதாவது செம்மை, நேர்மை, பெருமையே ஓர் உருவமாக இருப்பவன் சிவன் ; அழகே ஓர் வடிவ மானவன் சிவன் ; சிவப்பு நிறம் உடையவன் சிவன் ; சிவனே மெய்ப் பெருமையை உடையவன் ; அதனுல் அவன் சிவபெருமான் என்னப் பெற்ருன்.

தேவர் உலகமாகிய சுவர்க்கத்தை அடைந்து தேவராகியவர் இன்பத் திற்சொக்கித் தம் நிலை மறந்து தகாத செயல்களைச் செய்யத் தொடங் கும்போதெல்லாம் **சூரபதுமன்** முதலிய அசுரரைக் கொண்டு தாக்கு வித்துத் தம்மை மறவாமல் வழிபடச்செய்யும் நேர்மையாகிய செம் மையை உடையவன் சிவன் ; திரிபுர அசுரர் தாரகாட்சன், கமலாட் சன், வித்யுந்மாலி முதலிய அசுரர்களும் தாம் பெற்ற வரச் செருக் கால் தேவருக்கு மிக்ககொடுமை புரியும்போது தானே நேரில் வந்து திருவருள் புரியும் நேர்மையாகிய செம்மையை உடையவன்.

வரம்பு கடந்து கொடுமை செய்த முப்புரங்களைக் கண்டு சிவபெருமான் சிரித்தான். "எத்தனையோ தவம் செய்தீர் ; பெறு வதற்கு அருமையான வரங்களைப் பெற்றீர். தேவர்களை அன்பு நெறியினுல் வெல்வதை விடுத்துக் கொடுமை பல செய்தீர்களே," என்று அவர்களைப் பார்த்துச் சிரித்தான். உடனே அவர்களுடைய மூன்று கோட்டைகளாகிய மும்மலங்களும் எரிந்து சாம்பலாயின,

தம் நிலை அறிந்து மூன்று அசுரர்களும் சிவபெருமானைத் தொழுது நின்றனர். அப்போது அவர்களை ஆண்டவனாகிய சிவபெருமான் எவ்வாறு ஆண்டான் என்பதைச் சுந்தர மூர்த்தி நாயனார் பின் வருமாறு தேவாரம் பாடி நமக்கு அறிவுறுத்துகின்றார் :

" மூவெயில் செற்ற ஞான்று உய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோவிலின் வாய்தல்
காவலாளர் என்று ஏவிய பின்னை
ஒருவன் நீ கரிகாடு அரங்காக
மானை நோக்கி ஓர் மாநடம் மகிழ
மணிமுழா முழக்க அருள்செய்த
தேவதேவ நின்திருவடி அடைந்தேன்
செழும் பொழில் திருப்புன்கூர் உளானே."

" மூன்று அசுரரில் இருவர் தன் திருவாயில் காவலராக, அம்மை கண்டு மகிழத் திருநடனம் தான் ஆடும்போது அருகே நின்று ஆட்டத்துக்கு ஏற்றவாறு ஒருவன் மணி முழா முழக்கும்படி அருள் செய்த பெம்மானே " என்று யாரும் அடைய முடியாத பெரும் பேற்றை அம்மூவரும் அடைந்தமையைப் புகழ்கின்றார் சுந்தரனார். தேவர்களுக்குள் நேர்மையானவன் எமதருமன் ; அவன் நேர்மை தவறியபோது அவனை உதைத்த சீலத்தையும் நம்பியாரூரர் பின் வருமாறு போற்றுகின்றார் :—

" அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரணமாக
வந்த காலன்றன் ஆருயிரதனை
வவ்வினாய்க்கு உன்றன் வன்மை கண்டு. "

தன்னுடைய தோழராகிய சுந்தரமூர்த்திகள் திருவொற்றியூரில் சங்கிலியாருக்கு அவரைப் பிரிவதில்லை, என்று அளித்த வாக்குறுதியை மறந்து திருவாரூருக்குப் புறப்பட, உடனே அவருடைய இரண்டு கண்களையும் குருடாக்கி

" பிழையுளன பொறுத்திடுவரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய் "

என்றும்,

" தண்பொழிலொற்றிமா நகருடையாய்! சங்கிலிக்கா வென்கண் கொண்ட
பண்ப! நின்னடியேன் படுதுயர்களையாய் பாசுபதா பரஞ்சுடரே!"

என்றும்,

அலறுமாறு நேர்மை செய்தான் சிவபெருமான். யாவரே யாயினும் தவறு செய்யப் பெருமான் ஒருப்படான். பின்பு சுந்தரர் திருந்திய அன்பு கண்டு அவருக்கு ஒரு கண்ணைக் காஞ்சியிலும் மற்றொரு கண்ணைத் திருவாரூரிலும் தந்தருளினான்.

தமக்கு மறக்க முடியாத கேடு செய்தாரும் தம்மை வந்து அடைந்து பணிந்து திருந்துவாரேயாயின் அவர்க்கு அருள் செய்வதே நேர்மை, பெருமை, செம்மை. இராவணன் கைலை மலையையே பெயர்த்தெறியத் தொடங்கினான்; அவனை மலைக் கீழ் வைத்து நசுக்கினான் ஆண்டவன்; பின் அவன் தன் தவற்றினை உணர்ந்து பெருமான் புகழ் பாடினான்; உடனே அவனுக்குப் பெறற்கரும் திருவருள் பாலித்தான் செம்மையாளன் சிவன். இதனைச் சுந்தரர் கூறுமாறு காண்க:—

" எறியும் மாகடல் இலங்கையர் கோனைத்
துலங்க மால் வரைக் கீழ் அடர்த்திட்டு

குறிகொள் பாடலின் இன்னிசை கேட்டுக்
கோலவாளொடு நாளது கொடுத்த

செறிவு கண்டு நின் திருவடி அடைந்தேன்
செழும்பொழில் திருப்புன் கூருளானே."

உலகில் பிறந்து, இறந்து, பிறந்து உழலும் உயிர்களுக்கு அவன் தந்தை. அப்பெம்மான் "பிறவான் இறவான்". சிவனுடைய பெருமை பேசி இன்ப வழி காட்டுவதே சைவம். தாயுமான அடிகள் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளுகிறார்:—

" சைவ சமையமே சமையம்; சமையாதீதப் பழம்பொருளைக்
கைவந்திடவே மன்றுள்வெளிகாட்டும் இந்தக் கருத்தை விட்டுப்
பொய்வந்துழலும் சமையநெறி புகுதவேண்டாம் முத்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்கே சேரவாரும் செகத்தீரே."

சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றுப் பேரின்ப வாழ்வு அடைவதற்குச் சுருக்கமான வழி, நேர்மையைக் கடைப்பிடித்துச் சிவன் எழுந்தருளியிருக்கும் இடங்களுக்கெல்லாம் சென்று தி-

முன்பு மெய்ம்மறந்து அவனைப் புகழ்ந்து பாடி நிற்பதுவே. முதன் முதலாக நெல்லை மாவட்டத்தில் உள்ள சிவனார் திருக்கோவில்களைத் தண்பொருநைப் பேராறு தோன்றும் இடத்திலிருந்து நாமும் புறப்பட்டு அதனுடனேயே தொடர்ந்து சென்று வழிபட்டு உய்வோம்.

நெல்லை மாவட்டத்தில் உள்ள சிறந்த சிவன் கோவில்கள் ஒரு நூற்றுத் தொண்ணூற்றுரு. அவைகளுள் ஆண்டொன்றுக்கு ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய் வரும் முதன்மையானவை களையே நாம் காணப்போகின்றோம். அவை அறுபத்திரண்டாம்; அவை பின்வருமாறு எட்டு வட்டங்களிலும் பிரிந்திருக்கின்றன: (1) அம்பாசமுத்திரம் 18; (2) திருநெல்வேலி 9; (3) ஸ்ரீவைகுண்டம் 7; (4) திருச்செந்தூர் 3; (5) நான்குநேரி 7; (6) தென்காசி 5; (7) சங்கரன்கோவில் 7; (8) கோவிற்பட்டி 6.

முதற்கண் அம்பை மாவட்டத்தை ஆராய்வோம்.

## க. அம்பாசமுத்திரம் வட்டம்

கடலை ஆடையாக உடுத்த இம்மண்ணுலகத்திலேயே முதன்மை பெற்று விளங்கும் மலைகள் நமது இந்தியாவிலேதான் இருக்கின்றன. கங்கை, சிந்து முதலிய பெரிய ஆறுகளுக்குப் பிறப்பிடமாக உள்ள இமைய மலையைப் போலும் பெரியமலை இந்த உலகத்திலே வேறு எங்கே இருக்கிறது? பார்ப்பவர் அச்சத்தாலும் வியப்பாலும், இமையாது பார்த்து நிற்கும்படி செய்யும் பெருமையுடைமையினாலேதான் புலவர் இதனை இமையம் என்று பெயர்வைத்து வழங்கினர் போலும்! இமம் என்பது பனி; பனிக்க அதாவது நடுங்கச் செய்தலினாலே இமையம் என்ற பெயர் ஆயிற்று. பனித்தலின் முதிர்ந்த நிலைமையே இமையாது நிற்கும் நிலை; அதனைச் செய்தலினாலே பனி இமம் எனப் பட்டது போலும்! இமை, இமைப்பு என்பன ஒரு பொருட் சொற்கள்; இமைப்பு என்பது பேரொளி; பகலவன் கதிரொளி படும்போது இமத்தால் மூடியிருத்தலினாலே கண்ணைப் பறிக்கும் பேரொளியுடன் இம்மலை விளங்கும். அதனால் பேரொளி விளக்கம் உடையது என்னும் பொருளில் இமையம் என்ற சொல் ஆயிற்று என்று கொள்ளுதலும் ஒரு தலை.

இமைய மலை இவ்வளவு பெருமையுடையதாக இருந்தாலும், அது சிறிது காலத்துக்கு முன்புதான் தோன்றியதெனக் கல் நூல் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அவர்கள் அம்மலையின் கல்லை

ஆய்ந்து பார்த்தபொழுது அது சில காலத்தின் முன்புதான் அமைந் திருக்க வேண்டும் என்ற உண்மை வெளியாயிற்று. அது சில நூற்றாண்டுகளுக்கு முன் கடலினுள்ளே முழுகியிருந்தது என் பதை அம்மலைமிசைக் காணப்பெறும் கடல்வாழ் உயிர்களின் உடற் கூடுகள் முதலிய சான்றுகளைக் கொண்டு அறிஞர் நிலை நாட்டு கின்றனர்.

"ஒப்புயர்வற்ற இமைய மலையின் நிலைமையே இவ்வாறாயின் வேறு எம்மலைதான் முதலில் தோன்றிய பெருமையுடையது?" என விணுவின், அது தண்டமிழ் நாட்டின்கண் உயர்ந்து விளங்குகிற பொதிகை மலையே. கல் நூல் ஆராய்ச்சியாளர் இம்மலையின் கல்லை ஆராய்ந்து இம்மலைதான் உலகத்திலேயே மிக முதியது என்று அறுதியிட்டுரைக்கின்றனர். உயிர் நூல் ஆராய்ச்சிப் புலவர்கள் மக்கள் முதலில் தோன்றிய இடம் எனக் கூறும் தமிழகத்தின் ஒரு பகுதியாக இம்மலை அமைந்திருக்கிறது. ஆதலின் இமைய மலை யினும் தொன்மையில் முதன்மை பெற்றுப் புலவர்களாற் பெரிதும் புகழப் பெற்றது பொதிகை மலையே என்பது வெள்ளிடை மலைபோல் விளங்குவதாயிற்று.

"சந்தனப் பொதிகைத் தடவரை" என்றார் புலவர். சந்தனம் முதலிய மரங்களினாலே பொதிந்து வைக்கப்பெற்றது பொதிகை மலை. இது பொதியம் என்றும் பெயர் பெறும்; பொதி என்ற சொல்லுக்குப் பிணிப்பு, தொகுதி, முளை, அரும்பு என்ற பொருள் கள் இருக்கின்றன. இவைகளினால், தீப்பிழம்பாகச் சுழன்றுகொண் டிருந்த பூமியில் பல அணுக்கள் ஒன்றாகத் தொக்குப் பிணிக்கப்பட்டு இறுகிய முதல் இடம் இது என்பதும், செடி கொடிகள் முளைப்பதற் கும், உயிர்கள் அரும்புவதற்கும் தகுந்த முதல் இடமானது இது என்பதும் அறிஞர் ஆராய்ச்சியில் தோன்றுவன. இம்மலையி லிருந்து தோன்றும் தென்றற் காற்று, சந்தன மரங்களிற் படிந்து அவைகளின் நறுமணம் கவர்ந்து உலாவிவரும்போது தமது உடலில் வீசப் பெற்றாரே நல்வினையாளராவர். சிவபெருமானார் தாம் கூத்தாடும்போது தோன்றும் இளைப்பை நீக்கிக்கொள்ளும் பொருட்டு "ஆரம்மென்கால் திருமுகத்திடை வீசி மடுக்கவும், தமிழ் திருச்செவி மாந்தவும் அன்றோ தென் திசை நோக்கி அடுக்க வந்து உவந்து ஆடுவான்" எனத் திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதியார் கூறுகின்றார். இம்மலையை அடுத்துள்ள திருநெல்வேலிக்கு வந்

திருந்த சைவ சமைய ஆசிரியராகிய திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் தமது தேவாரத்திலே " தென்றல் வந்து உலவும் திருநெல் வேலி " என அருளிச் செய்திருக்கிறுர்.

இச் சந்தன மரங்களையன்றி, ஏனைய தேக்கு, வேங்கை, மா முதலிய மரங்களெல்லாம் இம்மலையில் வானுற ஓங்கி வளம்பெற வளர்ந்து நெருங்கியிருக்கின்றன. பெரிய பெரிய மரங்களெல்லாம் வெட்டப்பட்டு மலைக்காடுகள் எல்லாம் பணம் பற்றி அழிக்கப்படுகிற இக்காலத்திலும் கூடப் பகலவனது ஒளி நுழையப் பெறுத பூமரச் சோலைகள் இம்மலைமேல் அளவிடற்கரியனவாய்க் காணப்படுகின்றன. இம்மரச் சோலைகளே பொதிகைமலையின் கைகளைப் போல மேலே போகின்ற மேகக் கூட்டங்களையெல்லாம் பிடித்து, அங்குமிங்கும் விடாமற் பிணித்து, மிகுதியாக மழை பொழியச் செய்கின்றன.

யானைகள் மந்தை மந்தையாகக் கூடி மேய்ந்து திரிகின்ற இப்பொதிகையிலே தண்டமிழ் முனிவராம் அகத்தியனுர் எழுந்தருளி யிருக்கின்றனர். அவருக்குப் பழைய பாவநாசம் என்னும் இடத்தில் ஓர் அழகான கோவில் திகழ்கிறது. அவருக்கு அம்பாசமுத்திரம் எனும் ஊரிலும் ஒரு பெரிய தனிக் கோவில் இருக்கிறது. அவர் பல் அன்பர்களுக்கு நல் வரம் தந்து வாழ்விக்கும் பெருமையுடையவர். அவர் வாழும் பொதிகை முடியிலிருந்தேதான் பொருநைப் பேராறு தோன்றுகிறது. தண்மை—குளிர்ச்சி, தண்மை பொருந்திய தன்மையால்தான் இது தண்பொருநை என்று பெயர் பெறுவதாயி யிற்று. தண்பொருநைதான் தாமிரபரணி என்று பிற மொழியாள ரால் திரித்து வழங்கப் பெற்றது. இதிலிருந்து தாமிரம் கலந்திருக் கும் நீரையுடையது இந்த ஆறு என்று சிலர் பொருள் கூறவும் நம்பவும் தலைப்பட்டனர். ஒத்தைக் கல் மந்து என்பது ஆங்கிலேயர் களால் ஒட்டகமண்டு என்று மருவி வழங்கிப் பின் உதகமண்டலம் என அதனைச் சிலர் அறியாது வழங்கத் தொடங்கியதோடு நில்லா மல் உதகம்—பனி, பனிமண்டலம் என்று தம் அறியாமைக்கு ஒரு பொருள் கூறவும் தொடங்கியிருப்பது போன்ற வழக்கே தாமிரபரணி என்பதுவுமாம்.

பொருநையாறு இம்மலைமிசைத் தோன்றிக் கீழ்நோக்கி ஓடி வருகிறது. இது தோன்றும் இடம் சதுப்பு நிலமாக எப்போதும் தண்ணீர் ஊறிக்கொண்டே இருக்கிறது. இது சிறிதுதூரம் வந்த

வுடன் **கன்னிகட்டி** என்று ஓர் இடம் இருக்கிறது. அவ்விடம் மரச் செறிவுள்ளதாய்ப் பேரழகினதாய் விளங்குகின்றது. இங்கே தங் கிடம் (Bungalow) ஒன்றிருக்கிறது. அதிலிருந்து சிறிது தூரம் இந்த ஆறு ஓடி வந்து **வாணதீர்த்தம்** என்னும் இடத்திலே மிக உயரத்திலிருந்து அருவியாக விழுகிறது. வாணன் முழுகி அருள் பெற்ற தீர்த்தம் இது என அறிஞர் கூறுகின்றனர். சிலர் இது வானத்திலிருந்து விழுவது போல மிக உயரத்திலிருந்து விழுவதினுலேயே வான தீர்த்தம் என்று பெயர் பெற்றதெனக் கூறுகின்றனர். உடலைப் பற்றிய அழுக்கையும், தாகத்தையும் தீர்த்துவைப்பது போலவே உயிரைப் பற்றிய பாவத்தையும் தீர்த்து வைப்பது இத் தீர்த் தம். ஆதலின் அவ்வருவியிலே நீராடுவதற்கு ஆடி மாதத்தில் வரும் இருள்மதி (ஆடி அமாவாசை) யன்று ஆண்டு தோறும் மக்கள் பலர் பல இடங்களிலிருந்தும் பெருங்கூட்டமாக இங்கே வருகின்றனர். மலையடியிலிருந்து ஏறிப் பல மலைகளைத் தாண்டி இங்கே வந்து நீராடுவதன் அருமை பற்றி, "வாணனைக்கொடுத்து வாணதீர்த்தம் ஆடி" என்ற பழமொழியும் வழங்குவதாயிற்று.

இதற்குச் சிறிது கீழே "கட்டளைமலை" என்னும் இடம் இருக் கிறது. இம்மலைப் பகுதி பண்டு பாவநாசருடைய பூசனைக்குக் கட்டளை யாக அமைந்திருந்தமையின் இப்பெயர் பெற்றது. இவ்விடத்தில் காரியாறு என்பது தன் பொருநையுடன் கலக்கிறது. இவ்விடத்தில் ஒரு பெரிய ஆழம், நீல கண்டன் கசம் எனப்பெயர் பெறும். இங்கே இப்போது பெரிய அணை ஒன்று கட்டப்பெற்றிருக்கிறது ; அதனுல் கட்டளை மலையில் ஒரு பகுதியும், காரியாறும் இந்த அணையிற் கட்டும் நீரில் முழுகி விடுகின்றன. இவ்வணை ஏற்படுமுன் கட்டளைமலைச் சோலையில் பல அருமையான பழங்களைப் பறித்துத் தின்றுகொண்டு நண்பருடன் அளவளாவி வாணதீர்த்தத்தை நோக்குவார் உள்ளம் அடையும் இன்பத்திற்கு ஓர் எல்லையும் உண்டோ? காரியாறு நஞ்சாறு ; காரி-நஞ்சு ; அதில் கோடையில் நீர்குடித்தவர் கொடுமையான காய்ச் சலைப் பெற்றுத் துன்புற்றனர்.

இதற்கும் கீழே சேர்வையாறு என்னும் சிற்றாறு பொருநையில் வந்து சேர்கிறது. இரண்டாறுகள் முண்டும் துறையாதலின் அக் கூடிடம் முண்டுந்துறை எனப்பெயர் பெறும். இவ்விடத்தில் ஒரு பெரிய தங்கிடமும் (Bungalow), மலைக்காவலர் குடியிருக்கும் வீடுகளும் இருக்கின்றன. இவ்விடத்திலுள்ள ஆழத்தில் முதலைகள்

உள்ளன. இங்குள்ள தோணியில் ஏறி உகைத்து மகிழ்வுடன் இன்னிசை பாடி மகிழலாம். பொருநைப் பேராறு பின்னும் கீழ் நோக்கி வந்து கலியாணதீர்த்தம் என்னுமிடத்தில் அருவியாக விழுகிறது. அகத்தியனார் சிவபெருமானுடைய கலியாணக் காட்சியைக்கண்டு பணிந்து அருள்பெற்ற இடம் இத்தீர்த்தக்கரையாதலினாலேதான் இவ்விடம் இப் பெயர் பெற்றது போலும்! இவ் வருவியில் நீராடுவது கடினம். ஏனெனில் இது மிகவும் சிக்கலான இடத்திலே முந்நூறடி உயரத்திற்கு மேலிருந்து விழுகிறது. இதற்குச் சிறிது கீழே வந்த போது ஆறு "பழைய பாவநாசம்" என்னும் இடத்தில் அருவியாக விழுகிறது. இவ்வருவியிலே தலையைக்கொடுத்து முழுகுவது மிக இன்பந்தருவது ஆகும். இங்கிருந்து சிறிது தூரம் சென்றவுடன் ஆறு மலையிலிருந்து நிலத்தில் இறங்குகிறது. இவ்விடம்தான் பாவநாசம் எனப் பெயர் பெறும். இவ்விடத்திலே தான் முக்களாலிங்கர் கோவில் இருக்கிறது. முக்களாலிங்கரே நமது பாவநாசப்பெருமான். நாம் அன்பு செய்யச் செய்ய நம்முடைய பாவங்களையெல்லாம் நசுக்கி நாசம் செய்யும் பாவநாசர் இவர். கோவிலின் வாயிலில் அமைந்துள்ள மண்டபத்திலே முழுமதி நாளன்று இருந்துகொண்டு கிழக்கே அதனடியிலிருக்கும் ஆற்றை நோக்கின், மீன்கள் மின்னித் துள்ளும் காட்சியுடன் புலனாகும் இயற்கைப் பேரழகு எடுத்தியம்ப இயலாத மேன்மையுடையது.

பாவநாசம் விக்கிரமசிங்கபுரத்தின் ஒரு பகுதி; இது திருநெல்வேலி மாவட்டத்தின் அம்பாசமுத்திரம் வட்டத்தைச் சேர்ந்தது. இவ்வூரைச் சூழப் பல குளங்கள் இருக்கின்றன. மலை மேலே ஆற்றிலிருந்து பிரிந்து வரும் கால்வாயொன்று விக்கிரமசிங்கபுரத்தின் ஊடே செல்கிறது.

அம்பாசமுத்திரம் இரயிலடியிலிருந்து விக்கிரமசிங்கபுரம் ஐந்து கல்; அங்கிருந்து பாவநாசம் ஒரு கல். திருநெல்வேலி—சேரன் மாதேவி—அம்பாசமுத்திரம்—தென்காசிச் சாலையிலிருந்து இவ்வூருக்கு நல்ல சாலை இருக்கிறது. இரட்டை மாட்டுவண்டிகளும், குதிரை வண்டிகளும் எப்போதும் வாடகைக்குக் கிடைக்கும். மேலணைவரை இப்போது நல்ல சாலை ஏற்பட்டுவிட்ட படியால் மேலணைக்கும் திருநெல்வேலிக்கும் அடிக்கடி வாடகை மோட்டார் வண்டிகள் ஓடுகின்றன. இச்சாலை மேல் இருக்கிறது பாவநாசப் பெருமான் திருக்

கோவில். கோவில் வாசலில் மோட்டார் வண்டியில் ஏறி நேரே கன்னியாகுமரிக்கும், நாகர் கோவிலுக்கும், திருநெல்வேலிக்கும், தென்காசிக்கும் போகலாம்.

இவ்வூர் அருங்கோடையிலும் நன்றுகப் படிந்து முங்கிக் குளிக்கும் ஆழமுடைய பளிங்கு போன்ற தண்பொருநையாற்றை உடைமையால் எப்போதும் குடியிருப்பதற்கு மிகவும் வாய்ப்பான இடம். பாவநாசத்திலிருந்து திருவனந்தபுரம் போவதற்கு ஒரு நல்ல மலைப்பாதை இருக்கிறது. இங்கிருந்து முண்டுந்துறை நான்குகல்; அங்கிருந்து **கன்னிகட்டி** பதினெருகல்; கன்னிகட்டி 5,550 அடி உயரத்திலிருக்கிறது. அதிலிருந்து மேலும் எட்டுக் கல் சென்றுல் தண்பொருநை தோன்றும் இடத்தைக் காணலாம். அதுவே மலை உச்சி. அதிலிருந்து இறங்கிச் சென்றுல் நேராகத் திருவனந்த புரத்தை அடையலாம்.

## விக்கிரமசிங்கபுரம்—பாவநாசர் திருக்கோவில்

ஏழுதட்டுகளையுடைய பெரிய கோபுரத்தோடு திருக்கோவில் தண் பொருநையாற்றின் மேற்குக் கரையிலே பல திருமடங்களுக்கிடையிலே திகழ்வது காண்பவர் உள்ளத்தே அன்புணர்ச்சியையும் இன்பத்தை யும் ஊட்டுவது திண்ணம். அகத்திய முனிவர் போன்ற பெரியோர் வந்து தங்கித் தவம் புரியத்தக்க இடம் இதுவே. இது யோகபீடம் என்றும், திருக்குற்றுலம் போகபீடம் எனவும், சிவசைலம் ஞான பீடம் என்றும் சொல்லப் பெறுகின்றன. கோவிலின் முன்பு ஆறு வடக்கு முகமாக வருவது அதன் பெருமையைப் பல நூறுபங்கு ஓங்கச் செய்கிறது. கோபுரத்தின் உயரம் எண்பதடி; கதவின் உயரம் பதினறரை அடி; கதவடியில் வாசல் அகலம் எட்டேகாலடி; முதல் தட்டின் தென்வடல் நீளம் நாற்பத்தாறு அடி; கிழமேல் அகலம் இருபத்தொன்பதரையடி.

திருக்கோவில் இரண்டு பகுதிகளாக இருக்கிறது. ஒன்றில் பாவ நாசப் பெருமான் எழுந்தருளியிருக்கின்றுர். இவர் சுயம்புலிங்கம்; உளிபடாத் திருமேனி; பெருமானுடைய திருப்பெயர்கள் பாவ நாசர், வயிராசலிங்கர், பழமறைநாயகர், முக்களாலிங்கர், பரஞ் சோதிலிங்கர் என்பன. இரண்டாவது பகுதி அம்மன் கோவில்,

அம்மை திருப்பெயர் உலகம்மை என்பது. இவைகளில் முதலில் அமைந்தது பெருமான் கோவிலே ; பின்னர் அமைந்ததே அம்மை கோவில் என்பது கட்டிடங்களின் அமைப்பினாலே விளங்குகின்றது.

இவைகள் தனித்தனியாகக் கரு அறை, அர்த்தமண்டபம், மாமண்டபம், மணிமண்டபங்களோடு உட்சுற்றும், வெளிச்சுற்றுமாக இரண்டு சுற்றுக்கள் உடையன. வெளிச் சுற்றைச் சூழப்பெரிய திரு மதில்கள் மூன்றுவாயில்களோடு இருக்கின்றன. இதில் உயரிய பலா, மாமரங்கள் பல உள. உட்சுற்று மண்டபம், வசந்த மண்டபம், கூத்தர் மண்டபம், வாகன மண்டபம், திருமண மண்டபம் என்பன கோவிலின் உள்ளே உள. சுக்கிரான் செட்டி மண்டப மென்பது கோவிலின் வெளியில் தலைவாயிலேயே இருப்பது. வசந்த மண்டபத்தின் மேல் தளத்தில் ஒற்றை மீன், இரட்டை மீன் வடிவங்கள் பொறிக்கப்பெற்றிருப்பதால் இக்கோவில் பாண்டியர் கட்டிய தென்பது விளங்கும். பெருமான் கோவிலில் சண்டேசுரர் கோவில் உள்ளது ; அம்மை கோவிலில் சண்டேசுரி அம்மன் இல்லை. உலகம்மை திருவுருவம் முன்னர் பழுதாகவே, புதியதொரு திருவுருவம் அமைக்கப்பெற்றது. அதுதான் இப்போது காட்சியருளுவது.

வெளிச் சுற்றில் காசிலிங்கம், முக்களாமரத்தின்கீழே முக்களா லிங்கப் பெருமான், கல்லுருவான கூத்தர் கோவில்கள் உள்ளன. முக்களா என்பது மூன்று கிளைகளுடன் கூடிய களாமரம். உட்சுற்றில் கலியாணசுந்தரரும், தெற்கணாமூர்த்தியும், ஆறுமுகநயினாரும் எழுந் தருளியிருக்கின்றனர். அகத்தியனாரும் அவர் மனைவியாரும் வணங்கி நிற்க, குண்டோதரன் குடைபிடிக்க எழுந்தருளியிருக்கின்றார் திருமணக் கோலத்தில் கலியாணசுந்தரப்பெருமான். தெற்கணாமூர்த்தி திருமுன்பு திருமுறைக் கோவில் இருக்கின்றது. இங்கே ஒன்பது கோள்கள் தனித்தனி வேறு வேறு இடங்களில் நிலைபெற்றுள்ளன.

மாமண்டபம் அருமையான கருங்கல் வேலைப்பாடு அமைந்தது. பெரிய யாளிகள், முனிவர், பெண்கள் தூண்களாக நின்று தாங்கவும் அவைகளுக்கு மேல் போதிகைகளைச் சிறு சிங்கங்களும் யாளிகளும் தாங்குகின்றன. வசந்த மண்டபமும், கூத்தர் மண்டபமும் திரு மண மண்டபமும் அழகிய கருங்கல் வேலைப்பாடமைந்தன. இங்கும் யாளிகளும், சிங்கங்களும் போதிகைகளைத் தாங்குகின்றன ; கூத்தப்

பெருமான் ஒரே கல்லில் கண்கவர் வனப்புடன் திகழ்கின்றார். கலியாணசுந்தர மூர்த்தியும் அங்ஙனமே ஒரே கல்லில் அமைந்துள்ளார். கோபுரமும், விமானங்களும் நல்ல வேலைப்பாடுடையன.



**விக்கிரமசிங்க பாண்டியன்.**—இவ்வூரில் பலகாலம் வாழ்ந்து அருள் பெற்ற விக்கிரமசிங்க பாண்டியனாலே இக்கோவில் கட்டப்பெற்றது. இவன் பெயரால் விக்கிரமசிங்கபுரம் என்ற ஊரின் பெயர் அமைந்திருப்பதே இதற்குத் தக்க சான்றாகும். இவ்வூர் சிங்கபுரம், சிங்கை என்றும் வழங்கப்பெறும்.

**சிவஞானமுனிவர்.**—தாம் பிறந்து விளையாடியருளிய தலைவாசலிலேயே திருக்கோவிலில் எழுந்தருளியிருந்து அருள் செய்யும் பெருமை படைத்தவர் மாதவச் சிவஞான அடிகளாவார். சிவஞான போதமென்னும் சைவசித்தாந்த சாத்திரத்திற்கு மாபாடியம் என்னும் பேருரை வகுத்தருளியமையின் இவர் மாபாடியம் சிவஞான முனிவர் என அழைக்கப்பெற்றார். இப்பெருந்தகை இலக்கண இலக்கியங்களின் வரம்பு கண்டு இயற்றியருளிய நூல்கள் எண்ணில. இவரது மாணவ பரம்பரையில் வந்தவர்களே இப்போதுள்ள தமிழ்ப் பெரும் புலவர்கள். இவருடைய பெருமையே திருவாவடுதுறைக்குள்ள கல்விப் பெருமையெல்லாம்; இவருடைய குருபூசை ஆண்டு தோறும் ஆதீனத்தாரால் மிகவும் சிறப்பாகச் சித்திரை மாதம் ஆயிலிய நாளில் நடத்தப்பெறுகிறது. சைவப் பஞ்சாங்கம் இவருடைய குருபூசை ஆண்டைக் குறித்து வருகிறது; அதன்படி இன்று சிவஞானமுனிவர் யாண்டு நூற்றெழுபத்தொன்பது, (கி,பி. 1962).

இந்தக் குருபூசையைச் சிறப்பாக முதன்முதலாக நடத்தத்தொடங்கியவர்கள் அம்பாசமுத்திரம் வழக்குரைஞர்கள் காந்திமதிநாத பிள்ளையும் சிவஞானம் பிள்ளையும் ஆவர். காந்திமதிநாத பிள்ளை இயற்றிய "சிவஞானபோத விரிவுரை" என்ற நூல் சைவ உலகத்திற்கு ஒரு பெருங்கொடையாகும்.

**கோட்டைமலை.**—கட்டளை மலைக்கு நேர்வடக்கே கோட்டைமலை இருக்கிறது. அங்கே இருந்த கோட்டையின் அடிப்படைகளை நாம் இன்றும் காணலாம். பதினைந்தாம் நூற்றாண்டுக்கும் பதினெட்டாம் நூற்றாண்டுக்கும் இடையில் திருவாங்கூரார் திருநெல்வேலியில் நுழைந்து கொள்ளையிட்டு வந்தபோது தமக்குத் தங்கிடமாக இந்தக் கோட்டை மலையைப் பயன் படுத்தி வந்தனர். ஒரு காலத்தில் சேரன்மாதேவி

சேரருடைய ஆட்சியிலிருந்தமை கல்வெட்டுக்களினால் தெரிகிறபடியால் தென்திருவாங்கூரிலிருந்து இவ்வூருக்கு வரும் குறுக்கு வழியில் இக்கோட்டை அமைந்திருந்ததென்பது மிகவும் பொருத்தமே. 1759-ல் வடகரை மன்னருக்கும் திருவாங்கூர் அரசருக்கும் நடந்த போரில் வடகரைக்குத் தெற்கே பதினைந்து கல் தொலைவிலுள்ள இக் கோட்டைமலைக் கணவாய் பயன்படுத்தப்பட்டதென்பது சரித்திர வரலாறு. [இக்குறிப்பைப் பேட்டுதுரை எழுதிய திருநெல்வேலி மாவட்ட வரலாறு கூறுகிறது.]

**தல புராணம்.**—இது சிங்கை முக்களாலிங்க முனிவரால் இயற்றப் பெற்று முப்பத்தைந்து சருக்கங்களை உடையது. தேவேந்திரன், அகத்தியர், காசியபர், விராட்டு, மறைகள், பொதிகைமலை, சையம், தாருத்தா என்ற மலைகள், சந்திர பாண்டியன், விக்கிரம சிங்க பாண்டியன், கருணாகர பாண்டியன், இராசராச பாண்டியன், சுந்தரன், அரிகுத்தன் முதலிய பலருக்குப் பாவநாசர் திருவருள் பாலித்திருக்கின்றார். இருக்கு, யசுர், சாமம் என்னும் மூன்று மறைகள் முக்களாவாகி வழிபட்டன. இராசராச பாண்டியன் தவம் செய்திருக்கும் போது கண்ட அகத்தியர் அவன் தம்மை மதியாதிருந்தனன் எனக் கருதிக் கொடுத்த சாபத்தால் அவன் காட்டானையாகி, நாரதர் சாபத்தால் முதலையான வித்தியாதரனால் விழுங்கப் பெற்றபோது திருமால் முதலையைக் கொல்ல, பாவநாசர் அருளால் முதலையும், யானையும் நன்னிலையடைந்தன. சுந்தரன் என்னும் பிராமணன் தன் கூடா ஒழுக்கத்திற்குப் பொருள் தராத தாய் தந்தையரைக் கொன்ற பாவத்தை இங்கு வந்து தீர்த்தான். ஊழ்வினைப் பயனால் பிரிந்து சென்ற அரிகுத்தனும் அவன் தமக்கையும் காசியிலே ஒன்று கூடி ஒருவரை ஒருவர் அறியாது காதல் கொண்டு மணந்து பின் உண்மையறிந்து வருந்தி அப்பாவம் தீரக் கருப்புடையுடுத்துத் திரிந்து இங்கே வந்து வணங்கி வெள்ளுடையாகப் பெற்றுப் பாவந்தீர்ந்தனர்.

**மீன்கள்.**—கோவிலின் திருமுன்பு ஆற்றில் எண்ணற்ற பலநிற மீன்கள் காணப்பெறுகின்றன. இவைகளுக்குக் கோவிலிலிருந்து உணவு தரப்பெறுகிறது. நோய்வாய்ப்பட்டார் நேர்ந்து கொண்டு நோய் நீங்கியவுடன் இங்கே வந்து இவைகளுக்கு உணவு தருகின்றனர். இவைகளைப் பிடித்தால், பிடிப்பார் கண்கள் அவிந்து விடுகின்றன

என்பதும் இங்கே சொல்லப்படும் வரலாறு. முன்னொரு நாள் இவை களில் ஒன்றைப் பிடித்துப் படாதபாடு பட்ட ஐரோப்பியன் ஒருவனுடைய வரலாறு மிகவும் விரிவாகக் கூறப்பெறுகிறது.

**திருவிழாக்கள்.**—சித்திரை விசுவன்று தீர்த்தம் கொடுக்குமாறு நடைபெறும் பங்குனித் திருவிழாவே பெருந்திருவிழா. இதில் ஒன் பதாம் நாள் தேரோட்டம்; பத்தாம் விழாவை ஒட்டியதே தெப்பத் திருவிழா. முதல் திருநாள் தொடங்கித் தேரோட்டம் முடியத் திரு விழா விக்கிரமசிங்கபுரத்தில் நடைபெறுகின்றது. பாவநாசரும், உலகம்மையும் அக்காலம் செவந்தியப்பர் கோவிலில் தங்கியிருப்பர்.

**கீழ் அணைக்கட்டு.**—பழைய பாவநாசத்தில் கீழ் அணைக்கட்டு இருக் கிறது. இதிலேதான் தண்ணீரின் வேகத்தால் மின்சாரம் ஆக்கப் பெறுகிறது. விக்கிரமசிங்கபுரத்தில் நூல் ஆலை ஒன்று 1883-ல் ஆரம் பிக்கப்பட்டு 1885-ல் வேலை தொடங்கிச் சீரும் சிறப்புமாக நடந்து வருகிறது. இந்த ஆலைக்குப் போவதற்கு 1891-ல் ஆற்றின் மேல் ஒரு பாலம் கட்டப் பெற்றது. இந்த ஆலை ஆற்றுத் தண்ணீரின் வேகத்தால் ஓடுகிறது.

## சிங்கம்பட்டி—மாதேவர்

பொருநையாற்றில் வந்து தரையில் முதலில் கலக்கும் துணை யாறு மணிமுத்து ஆறு என்பது. தான் செல்லும் வழியைத் தானாகவே அறுத்துக் கொண்டு செல்வது ஆறு. கால் என்பதும் வழியே; ஆனால் இது மக்களால் கல்லி அதாவது தோண்டி நீர் ஓடிச்செல்ல வழி ஆக்கப்பெற்றது. மணியும் முத்தும் வாரிவரும் ஆறு என்று புலவர்கள் இதனைப் புகழ்ந்ததனாலோ அல்லது மணியையும் முத்தையும் போல மிகத் தெளிந்த நீரை உடைமையி னாலோ இது இப் பெயர் பெற்றது! இவ்வாற்றின் நீரைப்போல மிகச் சுவையுடைய நீர் உலகமெங்கும் இல்லை என்பது சுற்றி அறிந்தார் கூறும் உண்மை; ஓடிவரும் கரையில் நெடுக நெல்லி மரங்கள் மிகுந்திருப்பதனாலேயே அத்தனை சுவை பெறுகிறது இதன் நீர் என்பது கண்டார் கூறும் உண்மை.

இவ்வாற்றின் கரையிலே, இது தண் பொருநையைச் சேர்வதற்கு இரண்டு மைல் கீழே இருப்பது சிங்கம்பட்டி என்ற ஊர். பட்டி என்பது சிற்றூர், பட்டணம் என்பது பேரூர்; பட்டினம் கடற்கரை

நகர். ஊர் நகர் என்பன ஊர்தல் நகர்தல் என்று ஒரே பொருள் உடைய சொற்களாக இருந்தாலும் சிறிய உருவினது ஊர் எனவும், பெரிய உருவினது நகர் என்றும் பகுத்துப் பெயர் அமைக்கப் பெற்றுள்ளன.

சிங்கம்பட்டி விக்கிரம **சிங்கன்** பெயரால் அமைந்தது என்று கூறுகின்றனர். இது ஒரு குறு நில மன்னருடைய தலைமை ஊர். அம்மன்னரின் முன்னோரால் ஆக்கப்பெற்றதே மாதேவர், அகத்தீசர் திருக்கோவில். மாதேவராகிய சிவபெருமானையும் அம்மையையும் பொன்னாலும் பூவாலும் அணி செய்து முன் இருந்த மன்னர் தம் தோளில் சுமந்தும் இன்பக் கண்ணீர் வடித்து இன்னிசை பாடி வாழ்த்தியும் நல் வாழ்வு வாழ்ந்திருந்தார் என்பது நேரில் அறிந்தார் கூறும் செய்தி. வாண தீர்த்தம் இவருடைய நிலத்தில் இருக்கும் உண்மை பற்றி இம்மன்னருக்குத் தீர்த்தபதி என்ற பட்டம் அமைந்தது. அடியாராகிய அகத்திய முனிவரையும் கோவிலில் எழுந்தருளுவித்து இம்மன்னவர் வணங்குவாராயினர்.

## அம்பா சமுத்திரம் கோவில்கள்

அம்பா சமுத்திரம் என்பது வட்டத் தலைநகர். கி.பி. 1861-ல் தான் இந்நகர் தலை நகராயிற்று. அதன் முன் இது பிரமதேச வட்டம் எனப் பெயர் பெற்றிருந்தது; அதன் தலை நகர் பிரமதேசம். அம்பா சமுத்திரத்திற்கு வடக்கே இரண்டு மைலுக்குள் பிரம தேசம் இருக்கிறது. பாண்டியர் காலத்திலும் இப் பகுதியில் பெரிய நகரமாகப் பிரமதேசமே இருந்திருக்கின்றது என்பதற்குக் கல் வெட்டுக்கள் ஆதாரமாக இருக்கின்றன. அம்பா சமுத்திரம், பிரம தேசம், மன்னார் கோவில், ஊர்க்காடு, கல்லிடைக்குறிச்சி முதலிய ஊர்களை நாம் ஒரு தொகுதியாகச் சேர்க்கலாம்.

## அம்பா சமுத்திரம்—சங்கரலிங்கர், கோமதியம்மை

அம்பா சமுத்திரம் என்பது அம்பா பெயரால் அமைந்த சமுத்திரம். இவ்வூரை ஒட்டி இரவண சமுத்திரம், வடமலை சமுத்திரம், அரங்க சமுத்திரம், தளபதி சமுத்திரம், கோபால சமுத்திரம் ஆகிய

பல ஊர்கள் சமுத்திரம் என்று முடிகின்றன. சமுத்திரம் என்பது பெருங்கடல்; பெருங்கடல் போல மிகுந்த நீரையுடைய பெருங் குளத்தை இது உணர்த்தும். இரவணன், வடமலை, அரங்கன், தளபதி, கோபாலன், அம்பா என்பவர்களுடைய பெயரால் ஆங்காங்கு இருக்கும் குளமும், பின் அக் குளத்தை ஒட்டி எழுந்த ஊரும் அழைக்கப் பெற்றிருத்தல் வேண்டும். அம்பா, அம்மா, அம்மை என்ற சொற்கள் தாய், காளி, உமாதேவி என்ற பொருளை உடையன. இவ்வூரில் முதன்மையாகக் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற மரகத வல்லியம்மை பெயரால் இது அமைந்து, பின் அம்மை சமுத்திரம், அம்பா சமுத்திரம் என்று நின்றிருத்தல் வேண்டும். அம்மா பேட்டை, அம்மா சத்திரம் என்ற ஊர்ப் பெயர்களையும் காண்க. அம்மை என்பது அம்பை என்றும், அம்மா என்பது அம்பா என்றும் திரிவனவாயின. இப்போது அம்பா சமுத்திரம் என்ற பெயரே நிலைத்துவிட்டது. இது முன் அம்மை, அம்பை என்றும் வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும். அவைகளில் அம்பை என்பது மட்டும் இன்று நிலைத்து விட்டது.

அம்பா சமுத்திரம் என்ற பெயர், கல்வெட்டுக்களிற் காணப் படாமையால், அண்மையில்தான் அமைந்திருத்தல் வேண்டும். இவ்வூர் சில காலம் வேளா குறிச்சி என்றும், இளங்கோக்குடி எனவும் பெயர் பெற்றிருந்தது.

மேலை அம்பா சமுத்திரத்தில் உள்ளது சங்கரலிங்கர்—கோமதி யம்மை திருக்கோவில். ஊருக்கு மேல்பால் ஒரு மைல் தள்ளி ஆற்றின் மேற்குக் கரையில் இத்திருக் கோவில் உள்ளது. சங்கர நயினார் கோவிலில் நடப்பது போல ஆடிமாதம் நிறை மதி (பூரணை) யன்று ஆடித்தவசுத் திருவிழா நடைபெறுகிறது. அப்போது இங்கே பெரிய கூட்டம் கூடி அம்மை தவம் புரிவதையும் அப்பன் அம்மைக்குக் காட்சியருளுவதையும் கண் குளிரக்கண்டு மகிழ்கின் றது. இக்கோவிலை ஒட்டியே கொஞ்சம் தெற்கே கன்னடியன் அணை இருக்கிறது.

## அம்பா சமுத்திரம்— காசிநாதர், திருமூலநாதர், வீரமார்த்தாண்டர், அம்மையப்பர் கோவில்கள்

அம்பா சமுத்திரம் ஊருக்குள் நான்கு சிவன் கோவில்கள் உள. அவை தெற்கே (1) காசி நாதர் கோவில், (2) மேற்கே திருமூல

நாதர் கோவில், (3) கிழக்கே வீரமார்த்தாண்டர் கோவில், (4) வடக்கே அம்மையப்பர் கோவில் என்பன. ஊரின் நான்கு திசைகளிலும் நான்கு திருக் கோவில்கள்!

## காசிநாதர் கோவில்

காசி நாதர் கோவில் என்பது ஊருக்குத் தெற்கே பொருநை ஆற்றங்கரைமேல் இருக்கிறது. கங்கையாற்றங்கரையில் காசியும் அதில் காசிநாதர் கோவிலும் இருக்கின்றன. கங்கையாறு நண் பொருநையாற்றில் கலந்து வருவதாகப் புராணம் கூறும். அக் கங்கையையும் காசியையும் நினைந்து இப்பக்கத்தார் இப்பெருமானுக்குக் காசி நாதர் என்று பெயர் வைத்து வழிபடுவாராயினர் ; ஆற்றில் இத்துறை காசித் தீர்த்தம் ஆயிற்று. பின் வந்தவர் இதனையே காசிபதீர்த்தம் எனவும், பெருமானைக் காசிப நாதர் என்றும் சொல்வாராயினர். காசிபர் என்ற முனிவர் வழிபட்டமையை இப்பெயர்க்குக் காரணமாகக் கூறுகின்றனர். இக் கோவிலில் உள்ள கல்வெட்டுக்களில் முள்ளி நாடு இராசராச சதுர்வேதி மங்கலம், இளங்கோக்குடி, திருப்போத்துடைய நாயனார், திருப்போத்துடைய தேவர், திருப்போத்துடைய ஆழ்வார், திருப்போத்துடைய மாதேவர், திருப்போத்துடைய பட்டாரகர் என்று பெருமானார் குறிக்கப்பெறுகிறார். போத்து என்பது காளை ; அதனை வாகனமாக உடைய பெருமான் என்பது இதன் பொருள், பட்டாரகர்—கடவுள். இக் கோவில் திருப் போத்தீச்சரம் எனவும் படும். இதனைச் சிலர் போற்றீச்சரம் என மருவி வழங்குவர். இதுவே எருத்தாளுடையார் கோவில் என்றும் பெயர் பெறும், எருத்து—போத்து—காளை—எருது. பெருமான் எருத்தாளுடைய நாயனார் எனப் பெறுவார். இது பிற்காலத்தில் மருவி எரித்தாளுடையார் கோவில் என்றும், எரிச்சாளுடையார் கோவில் என்றும் வழங்குவதாயிற்று. இதனை விளக்க ஒரு கதையும் வந்து தோன்றியது. அடைக்கலமாக வைத்த பொருளை வைத்துக் கொண்டு இல்லையென்று பொய்புகன்ற பூசாரியைப் புளிய மரத்துடன் பெருமான் எரித்தருளிய வரலாறு இதனை விளக்கப் பின் கூறப் பெற்று அம்பைத் தல புராணத்திலும் இடம் பெறுவதாயிற்று.

## அம்பைத் தல புராணம்

அம்பைத் தல புராணத்தின் ஆசிரியர் அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியராக இருந்த

தமிழ்ப் பெரும் புலவர் அரிகர ஐயர் என்பார்; அந் நூல் இருபது சருக்கங்களோடு கூடிய ஓராயிரத் திருநூற்று இருபத்தொரு பாடல்களை உடையது. பதினாறாவதாகிய எரித்தாட் கொண்ட சருக்கம் என்பது ஒரு நூற்று முப்பத்து நான்கு பாடல்களைக் கொண்டிருக்கிறது. மக்கள் அறிந்து கொள்ள வேண்டிய இன்றியமையாத உண்மைகளை உடைமையினால் இதனை ஆராய்வோம்.

காசி நாதர் கோவிற் பூசாரி ஒருவன் ஆகமங்களில் மிக வல்லவன்; பெருமானுக்கு உரிய பூசையை ஒழுங்காகச் செய்து வந்தான். அவனை ஓர் அந்தணன் வந்து கண்டு அவனுடன் சில நாள் இருந்து தான் கொண்டு வந்த ஒரு பிரம்புக் குழாயை அந்தச் சிவ அந்தணனிடம் அடைக்கலமாக வைத்து அகத்திய முனிவரைக் கண்டு அருள் பெறச் சென்றான். சிவ அந்தணனுக்கு வறுமை வந்ததால் துன்புற்று அந்தக் குழாயை எடுத்து உடைத்தான். அதனுள் விலை மதிக்க முடியாத பொன் இருந்தது; அப்பொன்னைத் தான் பயன் படுத்தத் தொடங்கினான். அது கண்ட அவன் மனைவி அவனைத் தடுத்தாள்.

"சொல்லும் நாயகன் மொழியெலாம் செவிசுடத் தோணக
இல் அடைப் பொருள் கவர்தரல் எவர்க்குமே தீமை
யல்லது இல்லையால் நஞ்சினும் கொடியதது ஆமால்,
நல்லது இல்லை இக்காரியம் நரகமே நல்கும்.

"காணக்கொல்லும் ஓர் விடம் இது; கருதவும் படுமோ?
பேணிக் கேட்டிடில் கொடுத்தவர், பெரிதும் நீர்த்லைகீழ்
நாணிக் கோட்டிடல் அழகதோ? அஃதினும் நலிதல்
மாணச் சீரிய தல்லவோ?" எனப்பல வகுத்தாள்."

— அம்பைத் தல புராணம்

ஏழை சொல் அம்பலம் ஏறுமோ? சிவ அந்தணன் தன்மனம் போல அடைக்கலமாகத் தன்னிடம் இருந்த பணத்தைச் செலவிட்டு வாழ்ந்தான்; வறுமையின் கொடுமை அவன் அறிவையும் சீலத்தையும் அழித்துவிட்டது.

அந்தணன் அகத்திய முனிவரைக் கண்டு அருள் பெற்றுச் சில நாட்களில் மீண்டு வந்து அடைக்கலப் பொருளைக் கேட்டான்; சிவ அந்தணன் "இது தானோ பூலோகம்?" என்றான். நடுவர்

வற்புறுத்தி ஆணையிட்டமையினால் சிவ அந்தணன் மறு நாள் சிவ லிங்கப் பெருமானைத் தாழ்விக்கொண்டு சத்தியம் செய்யவும் இசைந் தான்.

" தன் நெஞ்சு அறிவது பொய்யற்க ; பொய்த்தபின்
தன் நெஞ்சே தன்னைச் சுடும்."

—தமிழ் மறை.

அல்லவா ? சிவ அந்தணன் வருந்தினான். அவன் பெருமான் திருமுன்பு நின்று கொண்டு " பெருமானே ! அருட்கடலே ! இந்தக் குடத்தில் எழுந்தருளும்." என்று மந்திரம் தன்னால் அழைத் தனன். சிவபெருமான் அக்குடத்தினுள் எழுந்தருளினான். அக் குடத் தைக் கோவிலுக்கு வெளியிலிருந்த ஒரு புளிய மரத்தடியிற் புதைத்து விட்டான் சிவ அந்தணன். முன்பு ஒரு நாள் சுந்தர மூர்த்தி நாயனாருடைய வேண்டுதலின்படி திருவொற்றியூர்ப்பெருமான் சிவலிங்கத்திலிருந்து மகிழ மரத்தடியில் எழுந்தருளியிருந்தான் அல் லனோ ? எங்கும் நிறைந்த பரம்பொருளாகிய ஆண்டவன் இலிங்கத் திருவுருவத்திலும் மகிழ மரத்து அடியிலும் எப்போதும் இருந்தான் என்பதைச் சுந்தரர் கூட ஆத்திரத்தினால் அறிந்தாரல்லரே ? அங் ஙனமே சிவ அந்தணனும் ஆத்திரத்தால் ஆண்டவன் சிவலிங்கத் தினிடத்தில் இல்லாமல் குடத்தினுள்ளே மந்திரத்தால் வந்து அடங்கி விட்டான் என்று நம்பினான். அன்று திருவொற்றியூர்ப் பெருமான் சங்கிலி நாச்சியாருக்குச் சுந்தரருடைய சூதினைக் கனவில் தோன்றி உணர்த்தியதைப் போலவே இங்கும் பறி கொடுத்த அந்தணனுக்குச் சிவ அந்தணனுடைய சூழ்ச்சியைக் கனவினில் தோன்றி அறிவித் தருளினான் பெருமான்.

மறு நாள் அந்தணன் வேண்டுதலின்படி சிவ அந்தணன் புளியமரத்தைக் கட்டிக் கொண்டு சூளுரைக்க உடனே மரத்தோடு எரிந்து போனான். விண்ணுக்கும் மண்ணுக்கும் தீவடிவாய் நின்ற பெருமானின் திருவிளையாடலைக் கண்டார் அனைவரும் கீழே விழுந்து பெருமானைப் பணிந்தனர்.

" இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்."

என்ற தமிழ் மறை உண்மையை உணர்ந்த அந்தணன் பெரு மானை நோக்கி வேண்டுகிறான் :—

" அடியேற் களித்த வரம் அனைத்தும் அடைந்தேன் ;
எனினும் என்னாலே
பொடியாக் கிடந்தான் எழ வேண்டும் ; பொருந்தாப்
புவிமேல் வாழ்ந்து எளியேன்
முடிவாங் காலை நின்பதத்தில் முயங்கல் வேண்டும்
அளித்தி" எனக்
கடியார் கடுக்கைப் பெருமான் அக்காதல் அனைத்தும்
அளித்தருளி "

மேற்கு நோக்கிய திருமுகத்தோடு திருக்கோயில் கொண்டு எழுந் தருளினான்.

பொடியாகக் கிடந்த அந்தணன் எழுந்தான் ; பெருமானைக் கும்பிட்டான் ; கூத்தும் ஆடி அந்தணனை ஆக முறத் தழுவிக் கொண்டு "மன்னித்தருள்க அடியேனை. பெருமானைத் தொட்டு வழி படும் பேறு பெற்றும் சிறுமை பிடித்து அழிந்தேன். உம்முடைய திருவருளால் பெருமான் எளியேனை எழுப்பியருளினான். இக் கோவிலுக்கு வந்து, அடியேனை எரித்து, உம்மையும் என்னையும் ஆளுடைய இப் பெருமானைக் காணுந்தோறும் யாவரும் ' அடைக்கலப் பொருளை ஆவித்துக் கொள்வார் அழிவார் ' என்ற உண்மையினை அறிந்து திருந்துவாராக." என்று கூறி அந்தணாளன் தன்னிடம் தந்து போன பொருளை யெல்லாம் கொண்டுவந்து தந்து பணிந்தான். அந்தணனே அதிற் பெரும் பகுதியை ஆண்டவனுக்கும் ஒரு பகுதி யைச் சிவ அந்தணனுக்கும் தந்து தன் பெருந்தன்மையை உலகறியச் செய்தான்.

இவ் வரலாற்றிற் காணும் நீதிகளை அறிந்து உலகம் உய்யுமாறு எரித்தாளுடையார் திருவருளைப் பரவச் செய்தல் தருமத் தலைவர் முதல் அனைவர் கடனும் ஆகும்.

ஆற்றின் வடகரையில் இருந்தது வேளாகுறிச்சி ; தென்கரை யில் இருப்பது கல்லிடைக்குறிச்சி. குறிஞ்சிநில மக்கள் குடியிருக் கும் ஊர் குறிச்சி என்று பெயர் பெறும். மலையும் மலையடுத்த நிலமும் குறிஞ்சி நிலமாம். வேள் என்பது விரும்பு எனப் பொருள் பட்டு முதல் நிலைத் தொழிற் பெயராய் விரும்புதலை உணர்த்திப் பின் எல்லாராலும் விரும்பப்படும் பொருளாகிய அழகன் முருகப் பெரு

மானை உணர்த்துகின்றது. முருகவேள் குறிஞ்சிநில மக்களுடைய குலதெய்வம். ஆதலின் வேள் குறிச்சி, வேளாகுறிச்சி எனப் பெயர் அமைந்திருப்பது மிகமிகப் பொருத்தமே. இளங்கோ—இளவரசன்; இளங்கோவின் குடியிருப்பாக இராசராச சதுர்வேதி மங்கலத்தின் இப் பகுதி இருந்திருத்தல் கூடும்; அதனாலேதான் இது இளங்கோக்குடி எனப் பெயர் பெற்றிருக்கலாம்.

அம்மை மரகதவல்லி. இக் கோவில் தோன்றி 1,200 ஆண்டுகள் இருக்கலாம். இக் கோவிலிற் பல கல் வெட்டுக்கள் காணப்படுகின்றன. இமையமலையில் நடந்த சிவபெருமான் திருமணக் காட்சியை அகத்தியர் காண்பதாக, இங்கே சித்திரை மாதப் பிறப்பைப் பத்தாம் நாளாக உடைய பங்குனிப் பெருந் திருவிழா நடைபெறுகின்றது.

## திருமூலநாதர் கோவில்.

திருமூலநாதர் கோவில் ஊரின் மேல்பகுதியில் இருப்பது. அம்மை உலகம்மை. தாமே முளைத் தெழுந்திருக்கும் திருமூல நாதர் மண்மேனியர். அதனால் இவருக்கு மேலே குவளை சாத்தித் திருமுழுக்குச் செய்யப்பெறுகின்றது. இக் கோவிலைத் திருச் சாலைத் துறை என்று கல் வெட்டுக்கள் கூறுகின்றன. பெருஞ் சாலையை ஒட்டி இருத்தல் பற்றி இக் கோவிலும் கிழக்கே இருக்கும் பெருமாள் கோவிலும் திருச் சாலைத் துறை எனப் பெயர் பெறுகின்றன. பெருமாள் திருச் சாலைத் துறை ஆழ்வார்; திருச்சாலைத் துறையுடைய நாயனார், திருச்சாலைத் துறையுடைய மாதேவர் எனத் திருமூலநாதர் அழைக்கப்பெறுகிறார். இங்கே நடப்பது ஆனிப் பெருவிழா.

## வீர மார்த்தாண்டசேர் கோவில்

ஊருக்குக் கிழக்கே இருப்பது வீர மார்த்தாண்டேசர் கோவில். வீரமார்த்தாண்டனால் நிலைபெறுத்தப் பெற்றமையால் பெருமான் வீரமார்த்தாண்டேசர் எனப் பெயர் பெற்றார். அம்மை நித்திய கலியாணி. இக் கோவிலின் அருகே அழகான நடு மண்டபத்துடன் அமைந்த தெப்பக்குளம் இக் கோவிலுக்கும் கண்ணன் கோவிலுக்கும் பொதுவாக ஆன தீர்த்தமாகப் போற்றப்படுகிறது. இக் கோவில் தோன்றி எண்ணூறு ஆண்டுகள் இருக்கும்,

## அம்மையப்பர் கோவில்

ஆற்றங்கரையிலுள்ள திருப்போத்துடைய பெருமானுர் ஊரினுள் வந்து தங்கித் திருவிழாக் கொண்டருளுவார் ; அக்காலத்தில் அவர் ஊர் நடுவே தங்கும் இடம் அம்மையப்பர் திருக்கோவில் எனப் பெறும். அம்மை சுகுந்தள குந்தளாம்பிகை. இக் கோவில் தோன்றி ஐந்நூறு ஆண்டுகள் இருக்கலாம்.

வீரமார்த்தாண்டீசர் கோவிற் கல்வெட்டில் பின் வரும் பகுதியை ஆராய்ச்சி அறிஞர் பார்வைக்குத் தருகிறோம். அது வருமாறு :— "செய்துங்க நாட்டு சங்கரநாராயண வேந்து மண்கொண்ட பூதல வீர வீரராமவன்மராய நாம் முள்ளி நாட்டு பிரமதேயம் இராசராச சதுர் வேதி மங்கலத்து நடுவிற்கரை வேளாகுறிச்சி கீழ்பால் உதைய மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலத்து நயினர் வீரமார்த்தாண் டீச்சுரமுடைய நயினர் கோயில்."

## பிரமதேசம்—கைலாச நாதர் கோவில்

கி.பி. 1861 வரை பிரமதேசமே வட்டத் தலைநகராக இருந்த தென்பது குறிப்பிடப் பெற்றது. இராசராச சதுர்வேதி மங்கலத்தின் நடுவிடமாகப் பிரம தேசம் அமைந்திருந்தது. தெப்பக் குளத்தைச் சூழ உள்ள மாளிகைகளும் பிறவும் இதனை வலியுறுத்தும். கி.பி. 985—1013-ல் அரசாண்ட இராசராச சோழன் கல்வெட் டொன்று அம்பா சமுத்திரத்தில் இருப்பது "இராசராச சோழன் காலத்தில் இராசராச சதுர்வேதி மங்கலம்" என்ற பெயருடன் இது முதன்மை பெற்றது என்பதைப் புலப்படுத்துகிறது.

அம்பாசமுத்திரத்தின் வடக்கே இரண்டு மைல் தொலைவிலுள்ளது இவ்வூர். இக் கோவிலில் பல கல் வெட்டுக்கள் உள ; அவை ஒன்றில் பங்குனித் திருநாள் குறிக்கப்பெறுகின்றது. கோபுரம் விசுவநாத நாயக்கர் காலத்திற் கட்டப்பெற்றது. குளத்தின் மேல்புறம் அமைந்துவிளங்கும் இக் கோவிலில் பல அரிய சிற்பச் சிறப்புக்கள் காணப்பெறுகின்றன.

ஒரு பாதி யானையும் ஒரு பாதி சிங்கமுமாகவுள்ள இரண்டு பெரிய யாளிகளின் வாயில், வெளியே எடுக்க முடியாத, மிகப் பெரிய கல்லுருண்டைகள் இருக்கின்றன. முகட்டிலிருந்து ஒரே கல்லில்

அமைந்த சங்கிலி மணியுடன் தொங்குவது கண்டு பாராட்ட இனியது. சோமவார மண்டபத்திலுள்ள இரண்டு குரங்குருவங்களைக் கண்டு பாராட்டாதவர் இலர். குதிரை வீரர், பறவைகள், விலங்குகள், பாம்புகள் இவைகளின் உருவங்கள் கோவில் முகப்பிலுள்ள முருகன், பிள்ளையார் கோவில்களின் சரிந்து வரும் முகட்டில் அழகாக விளங்கு கின்றன. இனி, திருக்கோட்டியப்பரைக் கும்பிட ஊர்க்காடு சேர்வோம்.

## ஊர்க்காடு—திருக்கோட்டியப்பர் கோவில்

அம்பாசமுத்திரத்திற்குக் கிழக்கே ஒரு மைல் தூரத்துக்குள் இருப்பது ஊர்க்காடு. கடுப்பது—காடு ; கடுத்தல்—நோவெடுத்தல், உளைதல் ; தன்னுட் புகுந்தவருக்கு நோவைத் தருவது ; காட்டினுட் புகுந்து செல்பவர் உடல் நோவும், கால் உளைதலும் பெறுவர் என்பது வெளிப்படை. ஊரான காடு ஊர்க்காடு. ஊர், நகர் என்பன ஒரு பொருட் சொற்கள். பரவு, நெருங்கு என்பன இவற்றின் பொருள். மக்கள் கூடிப் பரவி நெருங்கி வாழும் இடம் ஊர் ; ஊரிற் பெரிய ஊர் நகர் எனப் பெறும். காடு திருத்தப் பெற்று ஏர் வளத்துடன் ஊரான பின்பு அது ஏர்க்காடு என்ற பெயரை அடைந்தது போன்றதே ஊர்க்காடும் ஆகும்.

கோட்டம், கூட்டம், கோட்டி என்பன ஒரு பொருட் சொற்கள். கோடு அதாவது வரம்பு கட்டப் பெற்றது கோட்டம் ; அங்ஙனம் வரம்புள் அமைந்த கூட்டமே கோட்டி. கோட்டி என்பது அடியார் கோட்டி ; அடியார் கோட்டிக்கு அப்பர் அதாவது தந்தையார் கடவுள். இங்ஙனம் திருக்கோட்டியப்பர் என்ற பெயரைப் பெற்றார் இவ் வூர்ச் சிவபெருமான். கல்வெட்டுக்களில் திருக்கோட்டீச்சுவரமுடையார், திருக்கோட்டீச்சுரமுடைய நாயனார் என்று குறிப்பிடப் பெறும் இப் பெருமான் கோவில் மலை மண்டலம் அகோர தேவன் என்ற ஆதிச்ச தேவரால் கட்டப் பெற்றது.

ஊர்க்காடு குறுநில மன்னர் ஒருவருடைய தலைநகர். அவரைச் சேர்ந்தது இத் திருக்கோவில். இதன் அருகே இருப்பன உப்பு வாணியன்புதூரும், சாட்டுப்பத்தும். இவைகளும் இராசராச சதுர் வேதிமங்கலத்தைச் சேர்ந்த பகுதிகளே. மறவர் வகுப்பினர்

மன்னர். அவருடைய ஆதரவில் பல புலவர்கள் கூடித் தமிழை வளர்த்தது இவ்வூர். இனி, மானேந்தியப்பர் மாணடி தொழக் கல்லிடைக்குறிச்சி செல்வோம்.

## கல்லிடைக்குறிச்சி—மானேந்தியப்பர் கோவில்

கல்வெட்டுக்களில் கல்லிடைக்குறிச்சி முள்ளி நாடு இராசராச சதுர் வேதி மங்கலத்தின் தென்பகுதியென்று குறிப்பிடப் பெறுகிறது. இது ஆற்றின் தென்கரையில் அம்பாசமுத்திரத்துக்கு நேர் தெற்கே ஒரு கல் தூரத்தில் இருக்கிறது. கல்லிடைக் குறிச்சிக்கும் அம்பா சமுத்திரத்துக்கும் இடையிலே 1841-ல் கட்டப்பெற்று, 1869 வெள் ளத்தில் சிறிது பழுதாகி 1873-ல் நன்றாக ஆக்கப்பெற்ற வண்டிப் பாலம் இருக்கிறது. அதற்கு ஒரு மைல் மேற்கே இரயிற் பாலம் உள்ளது. 1902-ல் முதன் முதலாகக் கல்லிடைக்குறிச்சிக்கு வந்த இரயில் இப் பாலம் முடிந்தவுடன் 1903-ல் செங்கோட்டை சென்றது.

கல்லிடைக்குறிச்சியில் கல்வெட்டுக்கள் உள்ள பல கோவில்கள் இருக்கின்றன. அவைகளில் முதன்மையானது மானேந்தியப்பர் கோவில். மானைக் கையில் ஏந்தியிருக்கும் அப்பர் சிவபெருமான். கல்வெட்டில் மானேந்தியப்பர், மானேந்தீசுரமுடைய நாயனார் என்ற பெயர்கள் காணப்பெறுகின்றன. இனி, பொருநைக்கரை வழியே சென்று திருப்புடைமருதூர் சேர்வோம்.

## திருப்புடைமருதூர்—நாறும் பூ நாதர் கோவில்

வீரவநல்லூர்ப் புகைவண்டி நிலையத்திலிருந்து வடமேற்கே நான்கு மைல் தூரத்தில் இருப்பது அத்தாள நல்லூர். அத்தாள நல்லூ ருக்கு வடக்கே ஒரு மைல் சென்றால், பொருநை ஆற்றில் கருணை யாறு கலக்கும் இடத்தில் இருக்கும் திருப்புடைமருதூரைக் காண லாம். மருது ஒரு மரம்; மருது நிரம்பிய நிலம் மருத நிலம்-புடை உடையது ஒரு மருத மரம்; அதன் கீழே சிவலிங்கப் பெருமான் முளைத்தெழுந்தார். அதனால் புடை உடைய அம் மருத மரத்தடியில் ஓர் ஊர் தோன்றிற்று. அது புடை மருதூர் என்று பெயர் பெற்றது. வடக்கே தஞ்சை மாவட்டத்தில் இரண்டு மருத மரங்களுக்கு இடை யில் சிவனார் முளைத்து எழ அங்கே தோன்றிய ஊர் இடை மருது

ஊர் ஆயிற்று. இது திருப்புடை மருதூர், அது திரு இடை மருதூர். மருத மரத்தின் மணம் நாறும் பூக்கள் பெருமான் மேல் வீழ்ந்து அழகு செய்தன. நாறும் பூக்களைக் கொண்டருளிய நாதர் நாறும் பூ நாதர் எனப் பெருமான் பெயர் பெற்றார். கல் வெட்டு இவரை "நாறும் பூக் கொண்டருளிய நயினார்" என்கின்றது. செப்புப் பட்டயம் "தெற்குக் காசி என்ற திருப்புடை மருதூர் நயினார் நாறும் பூக்கொண்டருளிய தம்பிரான்" என்று கூறுகின்றது.

ஆற்றின் வலது கரையிலே விளங்குகின்ற திருப்புடை மருதூரான் பெருங்கோவிலிலே ஒரு சிறு கோபுரம் தலைவாயிலிலே நிற்கின்றது. அதற்கு ஐந்து தட்டுக்கள் இருக்கின்றன. அவைகளின் மேல் எளி தாக ஏறிச் செல்ல நல்ல படிக்கட்டுக்கள் உள்ளன. அவைகளின் வழி யாக உச்சியிலே ஏறிச் சென்று நின்றால் மிக மிக அழகான இயற் கைக் காட்சிகள் கண்ணைக் கவரும். ஆற்றங்கரையில் இருப்பத னால் அமையும் அணிகளெல்லாம் சேர்ந்து அமைந்து திகழும் இயல்பினாலே இதனை ஆற்றணி நல்லூர் என்று நாம் அழைப்பது சாலப் பொருந்தும். அதனாலேதான் இவ்வூருக்குச் சிறிது தென் பால்ஆனையைக்காத்தருளிய பிரான் எழுந்தருளியிருக்கும் ஊர்ஆற்றணி நல்லூர் என்றே பெயர் பெற்றது போலும்! இவ்வூர் இப்போது அத்தாள நல்லூர் என்று அழைக்கப்பெறுகின்றது.

திருப்புடை மருதான் திருக்கோவில் சிற்பக் கலைக் களஞ்சியமாக விளங்குகின்றது என்று சொன்னால் அது ஒரு சிறிதும் மிகையாகாது. கவுதங்கள் பெரிய நீளமான கற்களினாலேயே ஆயிருந்தாலும் மரத் தினாலேகூடச் செதுக்க முடியாத நுட்பமான முறையிலே அமைந் துள்ளன. மண்டபங்களின் உச்சியிலே காணப்பெறும் பூ வேலை கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மாதிரியாக அமைந்திருக்கின்றன. இத்தனைக்கும் மேலாகச் சிற்பக் கலைக் களஞ்சியமாகத் திகழ்வது இக் கோவிலின் கோபுரமே.

படிக்கட்டுகளின் இருபுறமும் சுவர்களில் தங்க முலாம் பூசியது போல மின்னும்படி சாந்து பூசப்பெற்று மின்னுகின்றது. ஒவ் வோர் தட்டிலும் சுவர்களிலே நிறப்படங்கள் ஆண்டவன் திருவிளை யாடல்களை விளக்கி விளங்குகின்றன. தூண்களிலும் முகடுகளிலும் உள்ள மரவேலைகள் கண்கொள்ளாக் காட்சி தருவன. மரத்தூண் களிலுள்ள உருவங்கள் உயிருள்ளவைபோலவே காணப் பெறு

கின்றன. மரவேலைகளிலே தலைசிறந்த சிற்பிகள் பலர் சேர்ந்து இவ் வேலைகளை அழகுபெறச் செய்து முடித்திருக்கின்றார்கள். இங்ஙன மாயதொரு சிற்பக் கோபுரம் கட்டுவதற்கு எத்தனை கோடி செலவு செய்தாலும் இக் காலத்தில் இயலாதென்றே அறிஞர் கூறுகின்றனர்.

இருவருக்கும் பொதுவான ஒரு முகத்தோடு கூடிய இரண்டு வீரர்கள், நான்குக்கும் பொதுவான ஒரே தலைகொண்ட நான்கு குதிரைகள், இரண்டுக்கும் பொதுவான ஒரே முகத்தில் இரண்டு சிங்கங்கள், ஒருபுறம் பார்த்தால் யானை, மறுபுறம் திரும்பினால் சிங்க உருவம், ஒரே உடலில் மூன்று அன்னங்களின் தலைகள் முதலிய பலப்பல அருமையான பணிகள் சொல்லாலோ எழுத் தாலோ விளக்கும் தன்மையன அல்ல. நேரிற் சென்று கண்டு கண்டு மகிழ்ந்திருந்தால் பசியே தோன்றாது. இவ்வளவு அருமை யும் பெருமையும் வாய்ந்து விளங்கும் சிற்பக் கலைக் களஞ்சியம் இதுகாறும் உலகினர் கண்டு மகிழப் பெறாமல் மறைந்திருந்தது வருந்தத்தக்கதே.

சங்கரநயினார் கோவிலிற்போல இவ்வூரிலும் பல நோய்ப்பட்டாரும், பேய் பிடித்தாரும் கூடிவந்து கும்பிட்டு நோயும் பேயும் நீங்குகின்றனர். இங்குள்ள அம்மை பெயரும் கோமதியம்மையே. நொய்ந்து போகும் படி அதாவது உடல் நைந்து போகும்படி செய்வது நோய், உடலி லுள்ள உறுப்புக்களை இயல்பாகத் தம் செயல் புரியாது பிணிப்பது பிணி. பிணி-கட்டு. அப்பிணியை அவிழ்ப்பது அவிழ்தம்.

தைப் பூசத்தன்று இங்கே பெருவிழா நடக்கும். அன்று கணக் கில்லாத மக்கள் ஆண்டுதோறும் கூடி, கருணையாறு தண் பொருநை யிற் கலக்குமிடத்தில் மூழ்கிப் பெருமானை வணங்கி அருள் பெறு கின்றனர். திருப்புடைமருதூருக்குத் தெற்கே மூன்று மைல் சென் றால் இருப்பது அரிகேசவனல்லூர்.

## அரிகேசவனல்லூர்—அரியநாதசாமி கோவில்

வீரவனல்லூருக்கு வடக்கே ஒன்றரை மைலில் உள்ளது அரிகேசவ னல்லூர். "முள்ளிநாடு அரிகேசரிநல்லூர், அரிகேசரி ஈசுரமுடைய நாயனார்" என்பது கல்வெட்டு. அரிகேசரி என்ற பாண்டியன் பெய ரால் இவ்வூரும், இவ்வூர்ப் பெருமானும் பெயர் பெற்றனர். அம்மை பெரிய நாச்சியார். அரிகேசரி என்பது அரிகேசவன் என

மாறிற்று. தளவாய் அரியநாத முதலியார் தம் பெயரைப் பெருமானுக்கு வைக்க அரியநாதசாமி என்ற பெயர் வழங்குவ தாயிற்று. இவ்வூருக்குத் தெற்கே ஒன்றரை மைல் சென்றால் வீரவனல்லூரைக் காணலாம்.

## வீரவனல்லூர்—விக்கிரம பாண்டீசர் கோவில்

இவ்வூர் ஓர் இரயிலடி; திருநெல்வேலியிலிருந்து பதினைன் காவது மைலில் இருக்கிறது. இதிலிருந்து அம்பாசமுத்திரம் ஆறு கல். இக்கோவிற் கல் வெட்டினால் இவ்வூர் முடி வழங்கு பாண்டிய சதுர் வேதி மங்கலம் என்பதும், பெருமான் விக்கிரம பாண்டிய ஈசுரமுடைய நாயனார் என்பதும் விளங்குகின்றன. குலசேகர பாண்டியர் காலத்தில் அம்மை செண்பகத்தாய் நிலை பெற்றார். வீரமாறன் என்ற பாண்டியன் பெயரால் வீரவன் நல்லூர் என்ற பெயர் அமைந்தது. வீரமாறன்தான் முடி வழங்கு பாண்டியன் போலும்!

கோவிலின் கீழைத் தலையாயிலாகக் கால்வாய் இருக்கிறபடியால் தெற்குப்புறம் அம்மை கோவிலின் திருமுன்புள்ள தெற்குத் திருவாசலே பழக்கத்தில் இருந்து வருகிறது. கருப்பக் கிரகத்தில் விக்கிரம பாண்டீசப் பெருமான் சிவலிங்கமாக எழுந்தருளியிருக் கின்றார். பெருமானுக்கு மணி மண்டபமே அம்மைக்கு மாமண்டபமாம். அம்மை செண்பகவல்லித் தாயார் தெற்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றார்.

இவ்வூரிலிருந்து ஆற்றுக்கு இரண்டு அல்லது இரண்டரை மைல் தூரம் இருக்கும். ஊரின் வட்புறமாகக் கன்னடியன் கால் வரு கிறது. இதனால் விளைகிற நஞ்சை நிலங்களுக்குக் கணக்கே இல்லை. இக் கால்வாயில் கோடை காலத்தில் மட்டும் ஏப்ரல், மே மாதங்களில் தண்ணீர் வராது. சாரற்காலத்திலும் மழைக்காலத்திலும் மலை மேல் மழைபொழிந்து ஆற்றில் வெள்ளம் வரும்; அதனால் இக்கால்வாயில் தண்ணீர்த் தட்டே இடையாது. ஆகையால் ஆண்டுதோறும் இரண்டுபோகம் நன்றாக விளையும்; முதற் பூ கார் என்று பெயர் பெறும். இதில் அறுவடையாகிற நெல் சம்பா என்று சொல்லப்பெறும். சம்பா அரிசி சிவப்பு நிறமாகச் சுவையிற் சர்க்கரைபோல் இருக்கும். கூலிவேலை செய்பவர்களுக்கு

இது நல்ல பசி தாங்கும் உணவாகிறது. இரண்டாம் பூ பிசானம்; இதில் விளைகிற நெல் ஆனைக்கொம்பன். இது மிகவும் பொடியான வெள்ளை அரிசியுடையது. இது செல்வவான்களுக்கு உணவாவது. தண்ணீர் இல்லாத கோடையில் குளிக்க முழுக ஆற்றுக்குத்தான் போக வேண்டும். ஆற்றுக்கு நல்ல சாலை இருக்கிறது. கோடையில் குடிதண்ணீர் பெருமாள் கோவிலைச் சேர்ந்த தெப்பத்தில் எடுக்கப் பெறுகிறது. கன்னடியன்கால் கல்லிடைக்குறிச்சிக்கு மேற்கே ஒரு கல் தொலைவில் தண் பொருநையாற்றிற் கட்டப் பெற்றுள்ள பெரிய அணையிலிருந்து பிரிகிறது. சிங்கம்பட்டி மலையிலே தோன்றிச் சிங்கம்பட்டி வழியாக ஓடிவரும் மணிமுத்தாறு பொருநையிற் சேரும் இடத்தில் இவ்வணை இருக்கிறது. மணிமுத்தாறு இருகரைகளிலும் உள்ள நெல்லி மரங்களினிடையே வருதலினாலே மிகவும் இனிப்பான நீரையுடையது. உலகமெல்லாம் சுற்றிய ஆராய்ச்சியாளர் இவ்வாற்று நீர்போலச் சுவையுடையநீர் உலகத்தின் வேறு எப்பகுதியிலும் இல்லையென்று துணிந்து கூறுகிறார்கள். பொருநையில் வெள்ளம் வரும் காலம் தவிரப் பிறகாலங்களிலெல்லாம் இம் மணிமுத்தாற்று நீரே கன்னடியன் காலில் ஓடுகிறது. அண்மையில் மணிமுத்தாற்றில் ஒரு பெரிய அணை கட்டப்பெற்றுக் கால்வழியாகக் கிழக்கே பல ஊர்களுக்குச் சென்று தாய்போல நிலங்களை விளைவித்து மக்களைக் காப்பாற்றுகின்றது.

கால்டுவெல் பாதிரியார் இக் கன்னடியன் அணை முதலில் கட்டப் பெற்றது பதினான்காம் நூற்றாண்டுக்கும் பதினாறும் நூற்றாண்டுக்கும் இடையில் இருக்கலாம் என்று கூறுகிறார். இது 1842-ல் ஆர்சிலேயரல் திரும்பக் கட்டப் பெற்றுப் பல விதமாகப் பிற்காலத்திலும் செப்பனிடப் பெற்றது. இது அடிகற்களினாலே உறுதியாகக் கட்டப்பட்டது. இதன் உயரம் ஒன்பது அடி, இதன் உச்சி அகலம் ஆறடி. இதன் அடிப்படை நல்ல பாறையின் மேல் அமைந்தது. கால்வாய் ஆற்றின் வலது அதாவது தெற்குக் கரையில் தொடங்குகின்றது. இம் மிகப் பழைய அணை கட்டப் பெற்றது பற்றி ஒருவரலாறு கூறப் பெறுகின்றது.

வேலூரில் அரசாண்டிருந்த மன்னன் ஒருவனுக்குத் தீராத நோயொன்று வந்ததாக, அதனை ஒரு கன்னடிய வைத்தியன் தீர்த்து வைத்தான். அதனால் அவனுக்கு அரசன் ஏராளமாகப் பொருள் தந்தான். அப்பொருளோடு வந்த கன்னடியன் பொதிகை

மலையைச் சேர்ந்து அகத்திய முனிவரை நோக்கித் தவம் இருந்தான். முனிவர் அவனுக்குக் காட்சி கொடுத்து, "அப்பனே! நீ பொருநையில் ஓர் அணை கட்டிக் கால்வாயும் வெட்டு. உன்னுடன் ஒரு பசுவரும்; அது போகும் வழி நெடுகக் கால்வாயை வெட்டு; அது படுக்கும் இடத்தைக் குளம் ஆக்கு" என்று கட்டளையிட்டார். கன்னடியன் பெரிய அணையைக் கட்டித் தன் முன் தோன்றி நின்ற பசு போன வழி நெடுகக் காலும் வெட்டினன். அதன்படி கால் கல்லிடைக் குறிச்சி, வீரவனல்லூர், கார்குறிச்சி, கூனியூர், சேரன்மாதேவி, பத்த மடை, கொழுமடை, செவல் வரை வெட்டப் பெற்றது. கார் குறிச்சி யில் முதலிற் பசு படுத்தபடியால் அங்கே ஒரு குளம் தோன்றிற்று; அது மேலைச் செவலுக்கு வந்த போது மறுபடி படுத்தது. அங்கும் ஒரு குளம் வெட்டப்பெற்றது; பசு திடீரென மறைந்துவிட்டது. அதனால் அவ்வேரி காணாமல் ஆன ஏரி என்று பெயர் பெறுவதா யிற்று. இவ்வேரி இப்போது காடவராயப்பேரி என்று வழங்கப் பெறுகிறது. இது காடவ மன்னன் பெயரால் ஏற்பட்ட குளமாகவும் இருக்கலாம். கால் இப்போது இதன் மேலும் பிரான்சேரி வரை சென்று அங்குள்ள குளத்தில் முடிகிறது. இவ்வரலாற்றைத் திருநெல்வேலி மாவட்ட வரலாறு (Tinnevelly District Gazetteer) என்ற நூலில் எழுதி 1917-ல் அரசாங்கச் சார்பில் அச்சிட்ட பேட்டுத்துரை அவ்வாண்டின் கணக்குப்படி "கன்னடியன் கால்வாயால் பதினோராயிரத்து ஐந்து ஏக்கர் இரு பூ நன்செய் நிலங்களும் இருநூற்று நாற்பத்தைந்து ஏக்கர் ஒரு பூ நன்செய் நிலங்களும் விளைவடைகின்றன" என்று குறிப்பிட்டிருக்கிறார். இக் கால்வாய் ஊரின் வடக்கே அருகாகக் கிழக்கு நோக்கி நெடுந்தூரம் ஓடிவந்து தெற்கே திரும்பி ஊரின் நடுவே ஓடுகிறது. நமது பெரு மான் திருக்கோவிலின் கிட்ட இக்கால் தென் வடக்காக வருகிறது. காலின் வலது அதாவது மேற்குக் கரையில் நமது பெருமானார் திருக்கோவில் கிழக்கே பார்க்கத் திகழ்கின்றது. ஊருக்குத் தெற்கே மலையடி வரையில் மருதங்குளம், அரசன் குளம், வீற்றிருந்தான் குளம் முதலிய அறுபத்து நான்கு குளங்கள் இருக்கின்றன.

## தலபுராணம்

இவ்வூருக்குத் தலபுராணம் ஒன்று இருக்கிறது. ஆனால் அது இவ்வூரின் கீழைக்கடைசியில் இருக்கும் பூமி நாதர் திருக்கோவிலுக்கு மிகவும் உரிமையானது. அதில் இக்கோவிலைப்பற்றிய சில குறிப்புகள் மட்டும் காணப் பெறுகின்றன.

## வீரவன்நல்லூர்

தல புராணத்திலிருந்து பின்வரும் வரலாறுகள் தெரிகின்றன. அதிவீரபாண்டியன் என்பவன் பகை மன்னனால் தோற்கடிக்கப்பட்டு உயிர்விட எண்ணியபோது பூமிநாதரைக் கண்டு அருள்பெற்றுப் பகைவென்று கோவிலைக் கட்டினான். சித்திரசேனன் என்னும் கோசல மன்னன் வீரகண்ட நற்பதியான் அருளால் பிள்ளைப்பேறு எய்தி வீரகண்டன் எனப் பெயர் புனைந்தான். வீரகண்டன் அம்மை கோவிலைக் கட்டினான். வீரமாறன் என்ற பாண்டியன் வேட்டையாடுகையில் ஒரு முயல் தன் நாயை எதிர்க்கக் கண்டு வியந்து அங்கிருந்து சென்ற எறும்பொழுக்கால் பூமிநாதரிடம் சேர்ந்து பணிந்து ஆணைப்படி கோவிலைப் பெரிதாகக் கட்டி ஊரையும் உண்டாக்கித் தனக்கும் ஓர் அரண்மனை கட்டி வாழ்ந்திருந்தான். அவன் பெயராலேயே ஊர் வீரவனல்லூர் என்றாயிற்று. அவன்தான் செண்பகவனத்திலிருந்த விக்கிரம பாண்டீசரைக் கண்டு அவருக்கும் செண்பகத் தாயாருக்கும் கோவில் கட்டினான்.

## வீரவன்நல்லூர் விக்கிரம பாண்டீசர் கோவிற் கல்வெட்டுக்களும் அவைகளின் விவரமும் பின்வருவன.

1916-ல் எடுக்கப்பெற்றவை.

**கோவிலின் தெற்குச் சுவர்.**—எண் 719–சடாவர்மன் என்ற திரிபுவன சக்கரவர்த்தி, குலசேகரதேவன் எனப் பெயரிய பாண்டியனது 20-வது ஆண்டு—முள்ளிநாடு பிரமதாயமாகிய முடிவழங்கு பாண்டிய சதுர்வேதிமங்கலத்திலுள்ள விக்கிரம பாண்டீசரமுடையார் கோவில் தரும கருத்தர்களின் ஆணை என்னவென்றால்—சேரன்மாதேவி சதுர்வேதிமங்கலத்தின் சிறு ஊராகிய ஐயனூரில் உள்ள சீவல்லவன் மதிகை வியாபாரிகள் வீட்டு வாடகையாகத் தரவேண்டிய இரண்டு அச்சுக்களில் ஒன்று கோவிற் பரிவட்டத்திற்காகக் கொடுக்கப்பெற்றது. இது அக்கனுடைய அடுக்களையார் என்னப்பெறும் பணியாளருள் ஒருவனாகிய குலசேகர பிரமாதிராயனது வேண்டுதலின்படி செய்யப்பெற்றது. துஞ்சனூருடையான் என்ற விக்கிரம பாண்டிய விழுப்பரையன் கையெழுத்து.

எண் 720– சடாவர்மன் என்ற திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகர தேவன் என்னும் பாண்டியனது இரண்டாவது ஆண்டு—“பூதல வனிதை” என்று தொடங்குகின்றது. மாடக்குளத்தின் கிழக்கே

மதுரை அரண்மனையிலுள்ள அகப் பரிவாரப் பெண் ஒருத்தி சீ கைலாசத்திலுள்ள விக்கிரம பாண்டிய ஈசுவரமுடைய நாயனார் கோவிலில் அம்மையை நிலை பெறுத்தி, அவ்வம்மைக்குத் தன் மகள் பெயரால் சொக்க நாய்ச்சியார் என்று பெயரிட்டாள். அவள் சீராமதேவன் பெரிய நம்பி என்ற குலசேகர பிரமாதிராயன் மூலமாக நிலங்களும், வீடுகளும் தானமாகக் கொடுத்தாள். மேலும் தானே கால்வடம், பாடகம், திருச்சரி, முகக்காரை, முலைத்தடம், ஆரம், மங்கிலியம், பட்டைக்காரை, தோடு, வாளி, பஞ்சசரம், ஏகவடம், தாழ்வடம் ஆகிய நகைகளைத் தந்தாள்.

## வீரவன்நல்லூர்—பூமிநாதர் கோயில்

மார்க்கண்டனுடன் எதிர்த்தமைக்காகச் சிவபெருமான் காலனைக் காலால் மிதித்துக் கொல்ல, அதனால் பூமியில் சாவாரில்லாமல், பாரம் மிகுதியாகப் பூமிதேவி தவம்செய்து பெருமான் அருளைப் பெற்றாள். அதனால் காலன் பிழைத்து மறுபடி காலம் முடிந்தவர்களைக் கைக்கொண்டு சென்றான். பூமி பூசித்த நாதர் பூமிநாதர் என்று பெயர் பெற்றார், அம்மை மரகதவல்லித்தாய். இதுவே இவ்வூரிற் பெரிய கோவில்.

பூமிநாதசாமி கோவிற் கல்வெட்டுக்கள் :—

முன் மண்டபத்தின் மேற்குச் சுவர்.

எண் 721—சடாவர்மன் என்ற திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகரதேவன் என்னும் பாண்டியன்—கொல்லம் 720-ம் ஆண்டு ஆவணி மாதம் 30-ம் தேதி சேரன்மாதேவி சதுர்வேதி மங்கலத்தைச் சுற்றியுள்ள தேவதான பிரம்மதேய நிலங்களை யெல்லாம்கைவிட்டுவிட்டுக் குடிபடைகள் போன பிற்பாடு இராம இராசய விட்டலதேவ மாராசரின் ஆளாகிய விசுவநாத நாயக்கர் இந்த நிலங்களுக்கு ஒரு காணியில் ஒருமா நிலத்திற்கு மட்டும், தீர்வை விதித்து மற்றைய உழவு, பண்டாரவாடை முதலிய வரிகளையெல்லாம் தள்ளுபடி செய்தார்.

மேலே கண்ட கல்வெட்டுக்களினால் முன் **வீரவன்**நல்லூர், முடி வழங்கு பாண்டிய சதுர்வேதிமங்கலம் என வழங்கப் பெற்றது என்பதும், விக்கிரம பாண்டீசர் கோவில் அம்மை பெயர் சொக்க நாய்ச்சியார் என்பதும், குலசேகர தேவர் காலத்தில் அம்மை நிலைபெற்றாள்

என்பதும், குலசேகர பாண்டியர் காலம், இற்றைக்கு நானூற்றுப் பதினோர் (1137–726) ஆண்டுகளுக்கு முன் என்பதும் தெளிவா கின்றன.

இங்கிருந்து தண் பொருந்தப் பேராற்றுடன் கிழக்கே நான்கு கல் வந்தால் சேரன்மாதேவியைச் சேர்வோம்.

## சேரன்மாதேவி—அம்மைநாதசாமி கோவில்

புகைவண்டி வழியாகச் சென்னையிலிருந்து தஞ்சாவூர் மாயவரம் பெருவழியே சேரன்மாதேவி 456 கல் தொலைவிலிருக்கிறது. திருச்சி-விழுப்புரம் குறுக்கு வழியாக இது 416 கல். திருநெல்வேலிக்கும் அம்பாசமுத்திரத்துக்கும் நடுமையத்தில் இவ்வூர் விளங்குகின்றது. கிழக்கே திருநெல்வேலியும் பத்து மைல், மேற்கே அம்பாசமுத்திர மும் பத்துக் கல். தென்காசி மேற்கே 33 கல் தூரத்திலுள்ளது. இரயிலடியிலிருந்து கோவில் இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது.

இங்கிருந்து திருநெல்வேலிக்கும், தென்காசிக்கும், களக்காட்டிற் கும், நான்குநேரி, நாகர்கோவில், கன்னியாகுமரிக்கும், அம்பாசமுத் திரம், பாவநாசம் மலைமேல் அணைக்கட்டிற்கும் அடிக்கடி வாடகை மோட்டார் வண்டிகள் போய் வருகின்றன. இங்கே பல திசைகளி லிருந்து மோட்டார் வண்டிகள் வந்து கூடுகின்றன. இக்கூடிடம் இரயிலடியின் அருகிலேயே இருக்கிறது. ஊருக்குள்ளே போகவர வாடகைக்கு இரட்டை மாட்டு வண்டிகள் எப்போதும் காத்துக்கொண் டிருக்கும்.

புகைவண்டி மதுரையிலிருந்து திருநெல்வேலிக்கும் தூத்துக் குடிக்கும் 1-1-1876-ல் வந்தது; திருநெல்வேலியிலிருந்து கல்லிடைக் குறிச்சிக்கு 1902-லும், அங்கிருந்து செங்கோட்டைக்கு 1903-லும், அதிலிருந்து கொல்லத்துக்கு 1904-லும் சென்றது. புகைவண்டி தண் பொருநையாற்றைத் தாண்டும் இடத்தில் ஒரு பெரிய பாலம் இருக் கிறது. இவ் வாற்றில் அடிக்கடி பெரிய வெள்ளம் வருவது வழக்கம். 1877-ல் $28\frac{1}{4}$ அடி உயரம் வெள்ளம் வந்தது. 4-12-1914-ல் வெள் ளத்தின் உயரம் 26 அடி. 1902-ல் கட்டிய இரயிற் பாலம் 1914 வெள்ளத்தில் சிறிது பழுதாகிச் செப்பனிடப் பெற்றது. பின் 17-12-1923-ல் வந்த வெள்ளம் இதனை மறுபடி கெடுத்து விட்டது. அதனால் இப்போதுள்ள அருமையான இரும்புப் பாலம் தோன்றுவ

தாயிற்று. இதில் இப்போது நான்கு பெரிய திண்டுகளும், ஐந்து கண்களும் இருக்கின்றன. இப் பாலத்தின் மேல் ஐந்து இருப்பு ஏணிப்பந்தல்கள் ஒரே தொடர்பாக அமைந்துள்ளன. இப் பாலத்தின் அடியிலே ஆற்றின் தென்கரையில் நமது அம்மைநாதர் கோவில் இருக்கிறது.

பொதிகை மலையிலிருந்து தோன்றி வரும் தண்பொருநையாறு கோவிலருகே வடபுறம் கீழமேலாக ஓடி வருகிறது. கோவிலிலிருந்து இவ் வாற்றில் இறங்கி முழுகுவதற்கு நல்ல படித்துறைகள் உள்ளன. இந்த ஆறு மிகவும் புண்ணியமான ஆறு; ஆனதால் மார்கழி மாதம் வியதீபாதயோக நாளன்று இந்த இடத்தில் பெருங் கூட்டம் கூடுகின்றது. அந்த நாளில் கங்கையாறு இங்கே வந்து முழுகித் தன் பாவங்களையெல்லம் போக்கிக் கொள்கிறது என்று புராணம் கூறுவதால் இதனை மக்கள் நம்பி இங்கே வந்து கூடுகின்றனர்.

கல்லிடைக்குறிச்சிக்குச் சிறிது மேற்கே பொருநையிலிருந்து பிரிந்து வரும் கன்னடியன் கால்வாய் இக் கோவிலிலிருந்து ஒன்றரை மைல் தொலைவில் தெற்கே இருக்கிறது. இக்கால்வாய் ஆற்றங் கரைவரை சிறு சிறு வாய்க்கால்களின் வழியே ஓடி வந்து அளவிட முடியாத நஞ்சை நிலங்களைத் தட்டின்றி விளைவிக்கின்றது. இதுவே சேரன்மாதேவி மக்களுக்குக் குளிக்கவும் குடிக்கவும் பயன்பெறுகிறது. இதிலே தண்ணீர் வராத ஏப்ரல், மே மாதங்களிலும்கூட இதன் நீரே ஊரின் நடுவிலுள்ள தெப்பக்குளங்களில் நிரப்பப் பெற்று எடுக்கப்பெறுகிறது. அக்காலத்தில் இவ் வூர் மக்கள் குளிப்பதற்கு ஆற்றுக்கே போய் வருகிறார்கள். ஊரின் இடையில் பல சிறு சிறு குளங்கள் உள்ளன.

நாட்டாண்மைக் கழக ஆட்சியிலுள்ள வழிப்போக்கர் விடுதியொன்றும், அரசாங்க வழிப்போக்கர் விடுதியொன்றும் ஆக இரண்டு வழிப் போக்கர் விடுதிகள் தங்குவதற்கு வசதியாக இருக்கின்றன. ஆற்றங் கரையில் கன்னடியன் சத்திரம் ஒன்று உள்ளது.

புகைவண்டிப் பாலத்தின் அருகில் ஆற்றின் தென் கரையில் கிழக்கே பார்க்க அழகான சிறிய அரச கோபுரத்துடன் கோவில் விளங்குவது காண்போர் கண்ணுக்கும் உள்ளத்துக்கும் தக்க விருந்தாகின்றது. கோவில் இரண்டு பகுதிகளாக இருக்கிறது. வடக்குப் பகுதி அம்மைநாதர் திருக்கோவில், தெற்குப் பகுதி ஆவுடையம்மை திருத்தளி. பெருமான் கோவிலின் கருப்பக் கிரகத்தில் அம்மைநாதர் தாமே

முளைத்தெழுந்த மூர்த்தியாகக் காட்சியருளுகின்றார். இவர் திருமேனி உளிப்படாதது. அர்த்த மண்டபத்தைத் தாண்டி மாமண்டபத்துக்கு வருவோம். இங்கே திருவாயில் காவலரும் அனுக்கைப் பிள்ளையாரும் நடுவே நந்தியும் இருக்கின்றனர். தெற்கே பார்க்கக் கூத்தப் பெருமான் சிவகாமியம்மையுடனும், காரைக்காலம்மையுடனும் எழுந்தருளியிருக்கின்றார். வட கிழக்கு மூலையில் கருவூலம் இருக்கிறது மணி மண்டபத்தில் வடக்கோரத்திலுள்ள தூணில் இக் கோவிலைக் கண்ட உரோமச முனிவருடைய திருவுருவம் காணப் பெறுகிறது. இதிலே ஒரு புதுமையும் உளது. அதாவது இரண்டு பெண்களுடைய உருவங்கள் உரல் உலக்கையுடன் அமைந்து விளங்குகின்றன. இதைப்பற்றி ஒரு வரலாறு சொல்லப் பெறுகிறது. "அக்காளும் தங்கையுமாகிய இரண்டு பெண்கள் நெல்குத்திப் பிழைத்து வந்தனர். அவர்களுக்குப் பெரும் பொருள் திரண்டது. தாங்கள் உடற்பாட்டினாலே தேடிய பொருளை அப் பெண்கள் இக்கோவிலைக் கட்டுவதிலே பயன்படுத்தினர். அதனாலேயே அவர்களுடைய திருவுருவங்கள் பொருள் சேர்வதற்குத் துணையாயிருந்த உரல் உலக்கைகளுடன் அத் தூணில் செதுக்கப்பெற்றன" என்பதுவே அவ் வரலாறு.

## தல புராணம்

இக் கோவிலுக்குத் தனிப்புராணம் இல்லை. திருநெல்வேலித் தல புராணம் இக்கோவில் பற்றிய வரலாறு கூறுகின்றது. அதன் ஆசிரியர் திருநெல்வேலியில் திருவருள் பெற்று விளங்கிய நெல்லையப்ப பிள்ளையவர்களாவர். இக்கோவில் வரலாறு "உரோமசேசுர தீர்த்தச் சருக்கம்" என்ற தலைப்பில் இருபத்தெட்டுப் பாடல்களில் அமைந்திருக்கிறது. அதன் சுருக்கமும் சில பாடல்களும் கூறுவோம்.

"உரோமச முனிவன் கைலாச மலையையடைந்து நித்தியத்துவம் வேண்டுமென்று கேட்டுப் பெருமான் ஆணைப்படி தண்பொருநையின் தென்கரையடைந்து ஆலமரத்தின் அடியிற் சிவலிங்கம் கண்டு பூசனை புரிந்தான். பெருமான் அவன்முன் தோன்றி அருள் புரிந்தான்.

"அத்தனை ஆதியானை அம்மை நாயகனை அஞ்சொல்
நித்தியகல்யாணித்தாயை நெறியொடு பூசை செய்தே
சுத்த நன் மலர்கள் ஏந்தித்துணையடிக் கமலம் தூவிப்
பத்தியோடெதிரே நின்று பகர்துதி பலவும் சொல்வான்.

" அண்ணலே அமுதே ஆதி அமலனே அரனே அந்தி
வண்ணனே உமையோர் பாகா மதியணி மவுலியானே
கண்ணுதற் பொருளே வெய்ய கடல்விட முண்டதேவே
நண்ணியிங் கிருந்த அம்மை நாதனே கருணையானே.

" நிலை பெறு முனிவன் அந்த நித்தியம் பெறவே எண்ணி
மலை மகள் பாகனூர்தம் மலரடி வழுத்தி நின்றான்
அலை நதி அரவு கொன்றை ஆத்தி என் பெருக் கூமத்து
மிலைச் சென்னி அம்மைநாதர் விடையின் மேல் எதிரே வந்தார்.

" கண்டிரு கண்ணீர் வாரக் கசிந்து நற்றுதிகள் செய்து
கொண்டபேருவகையோடும் குழகனைப் போற்றி நின்றான்
அண்டர் நாயகனும் நோக்கி அருந்தவமுனி நீ வேண்டும்
எண்டிசை புகழும் நித்யம் உதவினேம் என்று போந்தான்.

" அண்ணலார் மறைந்த பின்பு அங்கருந்தவ முனிவன் அந்த
வண்ணம் நித்தியமும் பெற்று வளம் பெருலயத்தைச் சூழ்ந்தே
நண்ணியங் குறையும் அம்மை நாதனை உமையாளோடும்
புண்ணியன் உள்ளம் போற்றிப் புகழ்ந்தினி துவந்து போந்
தான்."

## சேரண் மாதேவி

சேரன்மாதேவி, சதுர்வேதிமங்கலம் என்ற பெயர், இவ்வூரிலுள்ள கல் வெட்டுக்களில் நான்கு கோவில்களிலே காணப் பெறுகிறது. அவை காலங் கூறமுடியாத பாண்டியர்கள் கல் வெட்டுக்கள். மாதேவி என்பது தான் சேரன்மாதேவி என இப்போது வழங்கி வருகின்றது. ஆதலின் இவ்வூர் ஒரு காலத்தில் சேர மன்னருடைய ஆளுகையில் இருந்து வந்தது என்பது வெளிப்படை.

## கல்வெட்டுக்கள்

இவ் வூரில் 1895-ல் 16-ம், 1911-ல் 18-ம், 1916-ல் 107-ம் ஆக மொத்தம் 141 கல் வெட்டுக்கள் எடுக்கப்பட்டுள்ளன. சேரன்மா தேவி இராச இராச பாண்டி நாட்டு உத்தம சோழ வளநாட்டு, முள்ளி நாட்டு பிரமதேயம், நிகரிலி சோழ சதுர்வேதிமங்கலம் என்னும் விவரத்துடன் கூறப்பெறுகிறது. இப்பகுதி முள்ளிநாடு என்பதும், சேரன்மாதேவி நிகரிலி சோழ சதுர்வேதி மங்கலம் என்று

பெயருடையதென்பதும் புலனுகின்றன. 1895-ல் எடுத்த எண் 192, 193, 194 கல்வெட்டுக்கள் முறையே இக்கோவிலின் தெற்குச் சுவரிலும், மேற்குச் சுவரிலும் உள்ளவை. அவைகளில் பெருமான் கைலாயத்து ஆழ்வார் என்றும், கைலாயமுடையார் என்றும், கூறப்பெறுகிருர். கோச்சடையவர்மரான சுந்தர சோழ பாண்டியர் என்ற அரசர் காலமும் இராச ராச கேசரி வர்மரான இராசராச தேவர் என்ற மன்னர் காலமும் குறிப்பிடப்படுகின்றன. இராச ராச தேவர் காலக் கல் வெட்டு இராமசாமி கோவிலிலும் உளது.

இக் கோவிலுக்கு மேற்கே கூப்பிடு தூரத்தில் உள்ள பக்தவத்சலர் கோவிலிலுள்ள கல்வெட்டுக்களில் கோச்சடையவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலசேகர தேவர் பெயரும், குலோத்துங்க சோழ தேவர் பெயரும் குறிப்பிடப் பெற்றுள்ளன. 1895 எண் 189-வது கல்வெட்டில் இக்கோவில் " தண் பொருந்தத் தென்கரை "-யில் இருப்பதாகப் பொறிக்கப் பெறுகிறது. அதனுல் அக்காலம் ஆறு தண்பொருந்தம் என்று வழங்கப்பெற்று வந்தது காண்க. தண் பொருந்தம் தண்பொருநை என்றும் வழங்கப் பெறுகிறது.

## சேரன்மாதேவி—வைத்தியநாதர்

பொதிகை மலையிலிருந்து தோன்றி வரும் தண்பொருநையாறு வைத்தியநாதர் திருக் கோவிலுக்கு வடக்கே ஒன்றரை மைல் தொலைவில் கிழமேலாக ஓடுகிறது. இதிலிருந்து கல்லிடைக்குறிச்சிக்கு மேற்கே பிரிந்து வரும் கன்னடியன் காலின் தென்கரையில் நமது வைத்திய நாதப்பெருமான் திருக்கோவில் இருக்கிறது. இக்கால் வாயைத் தாண்டுவதற்குக் கோவில் வாசலின் அருகே ஒரு பாலமும், அதற்கு சிறிது மேற்கில் ஒன்றும், கிழக்கில் ஒன்றும் ஆக மூன்று பாலங்கள் உள்ளன. இரயிலடியின் அருகிலும், செல்விபுரத்தின் வழியாகப் பத்தமடைக்கு நடந்துபோக, ஒரு நல்ல பாலம் உண்டு, இவ் வயல்வழியே கிழக்கே பத்தமடை போக ஒன்றரைக்கல் இருக்கும்.

இவ்வூர் கோவில்களுக்குப் பெயர் போனது. ஊருக்கு வடக்கே, வடக்கு வாய்ச்செல்வி கோவிலும், தெற்கே தெற்குவாய்ச் செல்வி கோவிலும் உள. தெற்கு வாய்ச்செல்வி கோவிலருகே உள்ள இடம், செல்விபுரம் என்று பெயர் பெற்றுள்ளது. இங்குள்ள பிராமணர் தெருக்களில் ஒன்று சென்னை ராசபுரம் என்பது; இது சென்னப்பட்டினம் (சென்னை) என்ற நகருக்குக் காரணமாய் இருந்த

சென்னப்ப நாயக்க மன்னனோடு தொடர்புடையதாக இருக்க வேண்டும் என்று அறிஞர் சிலர் கூறுகின்றனர். வைத்தியநாதர் தெற்குத் தேர்த் தெருவுக்குத் தெற்கிலுள்ள இடம் சேரன் கோவிற்பத்து என்று பெயர் பெறுகிறது. சேரன் கோவில் என்பது சேரனுடைய அரண்மனை ; இது சேரனுடையஅரண்மனை இருந்த இடமாக இருத்தல் வேண்டும்.

அம்மைநாதர் கோவில், அப்பன் வெங்கடாசலபதி கோவில், தெய்வீச்சர முடையார் கோவில், இராமசாமி கோவில், நடுவுள் அப்பர் கோவில், செங்கோடையன் சாத்தா கோவில், சாத்துப்பால் விநாயகர், எட்டுச்சாத்தா கோவில்கள் என்பன இவ்வூரிலுள்ள பிற முதன்மையான கோவில்கள். இவை நீங்கலாக, தெருத் தெருவாக எண்ணற்ற சிறு தெய்வங்களின் கோவில்கள் காணப் பெறுகின்றன. சேரன்மாதேவியிலிருந்து வடக்கே போகிற பெருஞ்சாலைக்குக் கிழக்கே கால் மைல் தூரத்தில் ஆற்றங் கரையிலிருக்கும் பக்தப் பிரியர் கோவில் பேரழகினது. கோவிலின் புற மதில்களிலுள்ள கற்களில் மிக மிக அரிய நுட்பமான வேலைப்பாடுகள்அமைந்துள்ளன. இவைகளுக்கு ஈடான வேலைப்பாடுகள் மணப்படை வீடு, தென்காசிக் கோவில்களில் இருக்கின்றன. முதற் குலோத்துங்கன் (கி.பி. 1074–1118), இலங்கையும், கொங்கும், சோழமும் வென்ற வீர பாண்டியன் (கி.பி. 1252–1267) ஆகிய இவர்களுடைய கல்வெட்டுக்கள் இக்கோவிலில் உள்ளன. பெருஞ்சாலைக்கு மேற்கிலுள்ள அழகியப்பர் கோவிலும் ஆற்றங்கரையில் இருக்கிறது. அதில் ஒரு சத்திரம் இருக்கிறது.அங்கே நல்ல மிளகுச்சாறு வழிப்போக்கருக்குப் படைக்கப் படுகிறது. அழகியப்பர் கோவிலுக்கு அடுத்த கீழ்புறம் உள்ளது சோமநாதர் கோவில். மழையில்லாத காலங்களில் இங்கே வருணஜெபம் நடக்கிறது. பெருமானுக்கு மேலே ஒரு தண்ணீர்ப் பாத்திரத்தைத் தொங்க விட்டு அதன் கீழுள்ள ஓட்டை வழியாகத் தண்ணீர் சொட்டுச்சொட்டாகப் பெருமான் முடிமேல் எட்டு நாள் விழுமாறு செய்யப் பெறுகிறது; தண்ணீர் தீர்ந்து போனால் பால் விடப்படும்; அதுவும் தீர்ந்து போனால் அந்தணர்கள் தண்ணீரில் இறங்கி நின்று கொண்டு பெரிய சத்தமிட்டுப் பெருமானை அழைக்கின்றனர். மழை தவறியதேயில்லை. கன்னடியன் காலின் தென் கரையில் கிழக்கே பார்க்க இத்திருக்கோவில் அழகிய விமானங்களுடன் திகழ்கின்றது.

கருப்பக் கிரகத்திலே வைத்தியநாதப் பெருமான் சிவலிங்க உருவமாக விளங்குகின்றார். இவருக்கு மணிமண்டபமாக இருப்பது இதன் வடக்கில் தெற்கே பார்க்கக் கருப்பக்கிரக அர்த்த மண்டபங்களோடு கூடி எழுந்தருளியிருக்கின்ற ஒப்பிலா நாயகியாருக்கு மாமண்டபமாக விளங்குகின்றது.

இத்திருக்கோவில் அகத்திய முனிவராலே நிலை பெறுத்தப்பெற்று வழிபடப் பெற்றது என்பது ஊரார் கூறும் வரலாறு, வைத்தியக் கலைக்கு முதலாசிரியர் சிவபெருமானே, அவரிடம் இக்கலையை அறிந்தான் முருகப் பெருமான், முருகப் பெருமானிடம் மாணவராக இருந்து இவ்வைத்தியக் கலையை அறிந்தார் அகத்திய முனிவர். ஆதலினாலே வைத்தியநாதரை அகத்திய முனிவர் இங்கே நிலை பெறுத்தி வணங்கினார் என்பது மிகவும் பொருத்தமே.

இக்கோவில் முன் மண்டபம் கிழக்குச் சுவரில் சடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகர தேவன் கல்வெட்டு ஒன்று சகம் **1522**, கொல்லம் **774**-ல் விசுவநாத நாயக்கர் தலைவர் கிருட்டினப்ப நாயக்கரால் கணக்கன் ஒருவன் நியமிக்கப்பட்டதைக் கூறுகிறது. அது இற்றைக்கு 363 (1137-774) ஆண்டுகளுக்கு முற்பட்டது.

## சேரன்மாதேவி—மீனாட்சிசுந்தரேசர் நவநீத கிருட்டினசாமி கோவில்கள்

இவை ஊர் நடுவே பிராமணர்கள் தெருவில் இருக்கும் கோவில்கள். சிவன் சுந்தரேசர், அம்மை மீனாட்சி; நவநீதக்கண்ணனும் இருக்கின்றனர். நவநீதம்—வெண்ணெய். கண்ணனுக்கு வெண்ணெய் தானே உகந்தது.

இதுவரை ஆற்றின் வலக்கரை (தென்கரை) வழியே வந்தோம்; இனி, நேர் வடகரை சென்று திருக்கோவில்களைக் காண்போம்.

## பாப்பாக்குடி—திருக்கடுக்கை மூன்றீசுவரர் கோவில்

பாப்பாக்குடிக்கு நேரே தெற்கே ஒரு கல் தூரத்தில் தண்பொருநைப் பேராறு ஓடி வருகின்றது. அதன் தென்கரையில் உள்ளது திருப்புடைமருதூர். பாப்பாக்குடியின் தென்பகுதியாகிய நம்பன்தட்டை என்ற சிற்றூர் ஆற்றின் வடகரையில் உளது. இந்த

இடத்திலே தான் கருணையாறு தண்பொருந்தப் பேராற்றிலே சேர்கி றது. இவ்வூர்த் திருக்கோவில் முன்பாக ஓடிவருகிற உள்ளாறு என்ற சிறு ஆறு நம்பன்தட்டைக்குச் சற்று கிழக்கே பேராற்றுடன் கலக்கிறது. இங்ஙனம் இங்கே மூன்று ஆறுகள் கூடுவதினாலே இவ் விடம் முக்கூடல் எனப் பெயர் பெறும். இப் பெயரையே இவ் விடத்துக்குக் கிழக்கே ஒரு கல் தூரத்தில் இருக்கும் ஊர் தாங்கி விளங்குகின்றது.

இவ்வூரிலிருந்து தென் மேற்கே ஐந்து கல் தூரத்தில் பிரம தேசத்தின் பக்கத்திலே கருணையாற்றில் காங்கயன் அணை இருக் கிறது; அதிலிருந்து வரும் கால்தான் காங்கயன்கால் என்பது. அது இவ்வூரைச் சூழ்ந்து வளம்படுத்துகிறது. அதனால் இப்பகுதி காங்கையன் காற் பாசனம் என்று பேர் பெறும். இவ்வூரைச் சூழப் பின்வரும் குளங்கள் இருக்கின்றன. தெற்கே சாரற்குளம், முறியன் குளம் என்பன; மேற்கே கருங்குளம்; வடக்கே பாப்பான்குளம்; வடகிழக்கே ஊருணிக்குளம்; கிழக்கே நிலமேல் அழகியான்குளம்; தென்கிழக்கே ஐயன்குளம்; இத்தனை குளங்களிலும் காங்கயன் கால்நீரே நிரம்புகின்றது. கோவிலின் முன்னுள்ள சிறு ஓடையென்ற உள்ளாற்றின் மேல் ஒரு சிறு கற்பாலம் போடப்பெற்றுள்ளது. இப்பாலத்தைத் தாண்டியே திருக்கோவிலுக்குப் போதல் வேண்டும்.

திருநெல்வேலி-கடையம் சாலை மேல் சாலைக்கு வடபுறமாகக் கிழக்கே பார்க்க உள்ளாற்றின் மேல்கரையில் உள்ளத்தைக்கவரும் சிறந்த தோற்றத்துடன் இத்திருக்கோவில் விளங்குகின்றது. இக் கோவில் இருக்கும் இடம் மொத்த அளவு நான்கு ஏக்கர் நான்கு செண்டு.

கருவறையிலே பூமிநாதர் என்னும் மண்ணீச்சரமுடைய நாயனார் சிவலிங்க வடிவமாக எழுந்தருளியிருக்கின்றார். அவரே திருக்கடுக்கை மூன்றுமுடைய நாயனார் என்றும், திருக்கடுக்கை மூன்றீசர் எனவும் பெயர் பெறுவார். பூமிநாதர், மண்ணீச்சர முடைய நாயனார் என்ற வழக்கால் பெருமான் இங்கே மண் வடி வான இலிங்கமாக அமைந்தவராதல் வேண்டும் என்பது தெரி கிறது; பின்னரே இவருக்கு அடியார்கள் திருமேனி அமைத்திருக் கின்றனர். கடுக்கை என்பது கொன்றை; கடுக்கை மூன்று என்பன சரக்கொன்றை, மஞ்சட் கொன்றை, செங்கொன்றை; இம்மூன்று வகைக் கொன்றை மலர்களையும் அணிந்தவர் பெருமான். மேலும்

பூமிநாதராக அமைந்தது கொன்றையின்கீழ் இருத்தலும் கூடும். இக்கொன்றை தொன்றுதொட்டு இத்திருக்கோவிலிற் பேணி வளர்க்கப் பெற்று வருகின்றது இதற்குத் தக்க சான்றாகும்.

ஆண்டவன் இலிங்க வடிவமாகத் தமிழ்மக்களால் வழிபடப் பெறுகின்றான். அம்மை தனிக்கோவில் வழிபாடு பிற்காலத்திலே தோன்றியதே. தேவார ஆசிரியராகிய திருஞான சம்பந்தர், திரு நாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவரும் தாம் பாடிய ருளிய திருப்பதிகங்களிலெல்லாம் ஆண்டவனையே நேர் முகமாக அழைத்து உள்ளம் குழைந்து பாடியருளியிருக்கின்றார்கள். திரு வாசக ஆசிரியர் மாணிக்க வாசகப் பெருமானும் அங்ஙனமேதான் நமது மனத்தைக் கரைத்து மலத்தைக் கெடுக்கும் திருப்பாடல்கள் அருளியிருக்கின்றார். சிவலிங்கத் திருமேனியோ இன்ன உருவினது என்று யாரும் கூறமுடியாத இயற்கை வடிவு; இன்னதன்மையன் என்று ஆண்டவன் எவராலும் கூறமுடியாத தன்மையை இத் திருவுரு விளக்கும்படி அறிவுக்களஞ்சியமாகிய தமிழ்ப்பெரியோர் அமைத்து வழிபட்டனர். தேவார திருவாசகங்களாகிய தமிழ்மறை யிலே எங்கும் அம்மைக்குரிய தனிப் பதிகமோ அன்றித் தனிப் பாடலோ இல்லை. ஆண்டவனுடைய அருட் சத்தி பெண்ணுருவமாக அமைக்கப்பட்டது பிற்காலத்திலே தான்; அதன் பின்னரே பள்ளி யறை ஏற்பட்டது. அறியாமாந்தர் சிலர் ஆண்டவனுக்கும் பள்ளி யறையா? என்று தம் அறியாமையினாலே அரற்றுவாராயினர். பள்ளியறைக்கு எழுந்தருளும் ஆண்டவனுடைய திருமேனியை இவர் கள் காணுதல் வேண்டும்; காணும்போது தமது மூதாதையரது சிறந்த அறிவு நுட்பத்தை உணர்ந்து பாராட்டித் தாமும் பள்ளியறைச் சொக்கரை விழுந்து விழுந்து கும்பிடுவார்கள் என்பதில் தடையே யில்லை.

திருவள்ளுவ நாயனார் தமது தெய்வத் தமிழ்த் திருமறையிலே முதலாவதாகக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.

> "கற்றதனால் ஆய பயன் என்கொல்? வாலறிவன்
> நற்றாள் தொழாஅர் எனின்"

என்பது திருவள்ளுவ நாயனாருடைய கட்டளை. ஆண்டவன் எப்படிப் பட்டவன்? அவன் "வாலறிவன்" என்று அவர் கூறினார். வால் அறிவு என்பது களங்கமில்லாத அறிவு; அதாவது மெய் அறிவு.

வால் என்பது பெருமை ; வால் அறிவு பேரறிவு. மெய்ம்மையான பேரறிவே ஆண்டவனுடைய திருமேனி. இதனையே மாணிக்கவாசகரும்,

"பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவுபாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப்பொருள் முடிவே
பேதை ஒருபால் திருமேனிஒன்றல்லன் "

என ஓதுகின்றார்.

அப்பெருமானை,

"உண்டு ஓர் ஒண்பொருள் என்று உணர்வார்க்கெலாம்
பெண்டிர் ஆண் அலி என்று அறியொண்ணிலை "

என்றும் அருளுகின்றார். ஆதலின் அவன் திருவுருவம் பெண்ணோ ஆணோ அலியோ என்று கூறுதல் இயலாது. அதனாலேயே அவன் இவை ஒன்றிலும் சேராத இலிங்க வடிவமாக வழிபடப் பெறுகின்றான். இலிங்க வடிவமே இயற்கையான் வடிவம். இதனையே நாம் எங்கும் காண்கிறோம். நம் ஒவ்வொருவர் தலையும் ஒவ்வொரு இலிங்க உருவமாகவே இருக்கிறது, ஒவ்வோர் உயிர்ப் பிராணியின் தலையும் அப்படியே அமைந்துள்ளது. இலை, பூ, பழம், விதை முட்டை, பிண்டம், சோதி யாவும் இவ்வியற்கை வடிவமே; மலையின் சிகரங்கள் யாவும் இலிங்க வடிவமாகவே உள்ளன. மணலைக் குவித்தாலும், கல்லைக் குவித்தாலும், எதனைக்குவித்தாலும் இலிங்கவடிவமாகவே குவிகின்றன. இவ்வுண்மையை ஆராய்ந்து தமிழ் மூதாதையர் தம் பேரறிவின் ஆராய்ச்சியினாலேயே கண்ட இப் பேரறிவு வடிவத்தை ஆண்டவனாக எண்ணி வழிபட்டனர். வாலறிவன் என்பது வாலறிவின் பயனாகக் கண்ட மெய்ம்மையான திருவடிவுடையான் என்று பொருள் படுகின்றது இதனால் மெய்ப்பிக்கப்பெற்றது.

இத்தகைய பெருமானது திருவடி அடைதலே அவனைக்கண்டு பேரின்பம் பெறுவதற்கு ஏற்ற வழியாகும். இதனை வள்ளுவ நாயனார், "நல்தாள் தொழுதல்" என்றார். கடவுள் வாழ்த்து என்ற இம்முதல் அதிகாரத்திலேயே இத்திருவடியினை (க) நல்லதாள், (உ) மாணடி, (ந) அடி, (ச) தாள், (ரு) தாள், (சா) தாள், (எ) அடி என்று ஏழு இடங்களில் அவர் கூறுகின்றார். திருவடியே தஞ்சம் என்று அடைந்தவரே அடியார். அவர்களே தமது புலன்களை அடக்கி ஒடுக்கி அடிமைப்படுத்தியவர் ஆவர்.

''காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய் "

தமிழ்மறை.

காமம்—விருப்பு. வெகுளி—வெறுப்பு, சினம். மயக்கம்—அறியாமை. இவைகளை அடிப்படுத்துதல் வேண்டும். அதுவே அடி தொழுதலாம். இவை மூன்றுக்கும் அடிப்படை காமம்; அதாவது ஆசை; அதனாலேயே எல்லாத் துன்பமும் உண்டாகும்.

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்
ஆசைப்படப்பட ஆய் வரும் துன்பம்
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே" என்பது திருமந்திரம்.

"ஆராஇயற்கை அவா நீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்"

"இன்பம் இடையறாது ஈண்டும் அவா என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்"

என்பன திருக்குறள். ஆண்டவனுடைய அடியைத் துணையாகக் கொள்பவருக்கே இன்பம் இடையறாது ஈண்டும்; இதுவே முடிந்த முடிவு. இதனை வற்புறுத்தவே பள்ளியறைக் காட்சி அமைக்கப் பெற்றது. பள்ளியறைக்கு எழுந்தருளுவது ஆணோ, பெண்ணோ ஆகிய எவ்வுருவமும் அன்று. எம்பிரான் "திருவடிகளே" பள்ளியறைச் சொக்கர் எனப் பெறுவன. நல்வினை தீவினை ஆகிய இரு வினைகளையும் அறுப்பதற்காகவே இரண்டு "திருவடிகள்" அமைந்துள்ளன. படுக்கப்போகும்போதும், பள்ளியெழுந்திருக்கும்போதும் இத் திருவடிகளை எண்ணுபவருக்கு எப்போதும் இன்பமே.

மாமண்டபத்தைத் தாண்டி மணி மண்டபத்துக்கு வருவோம். இது அம்மை கோவிலுக்கு மாமண்டபமும் ஆகும். இதற்கு வடபால் தெற்கே பார்க்க அம்மை சிவகாமித்தாய் திருக்காட்சியருள் கின்றாள்.

வடமேற்கு மூலையிலே ஒரே கல்லில் அமைந்த பிரபையோடு கூடிய மயில் மேலே முருகப்பெருமான் வள்ளி தேவயானையுடன் அமர்ந்திருக்கின்றனர்.

பார்ப்பார்குடி என்பது பாப்பாக்குடி ஆயிற்று. பார்ப்பனர் குடியிருந்த ஊர். கல்வெட்டில் இது "ஆதித்தவன்ம சதுர்வேதி மங்கலம் என்ற பாப்பாக்குடி" என்னப்பெறுகிறது. ஆதித்த வன்மன் என்ற அரசன் இவ்வூரை ஆக்கியமை இதனால் விளங்கும்.

இவ்வூர் அணைக்கட்டினைக் கொல்லம் 839-ல் வட மலையப்ப பிள்ளை யன் காலத்தில் தம்பிரான் தோழ பிள்ளையும் சிதம்பரநாத பிள்ளை யும் கட்டி முடித்தனர்.

**கல்வெட்டுக்கள்.**—இக்கோவிலில் மூன்று கல்வெட்டுக்கள் இருக் கின்றன. அவை 1916-ல் எடுக்கப்பட்டன. அவை வருமாறு:— தென்முகக்கடவுளுக்கு அடுத்த கீழ்புறம் சுவரில் :

477—கொல்லம் 704 சித்திரை 29-தேதியன்று சட்டி வெள்ளி சூலயோகம், வராக கரணம், புணர்பூசம்—மலை மண்டலம் பள்ளக் கால் ஊரார் மூவரால் முள்ளிநாடு பாப்பாக்குடி திருக்கடுக்கை மூன்று முடைய நாயனார் கோவிலுக்குக் கருவை நல்லூர்ப் பற்றில் கொல்லங்குளம் என்ற பூசன சேரியில் ஒரு குளம் கொடுத்தது. இம் மூன்று பேரும் கோவிலைச் செப்பனிட்டு ஆசாரிய தட்சிணை யாக இக்குளத்தையும் நிலங்களையும் பெற்றதாகவும் பின் இவர்கள் தம்முள் மாறுபட்டுத் தாம் பெற்றவைகளைக் கோவிலுக்கே திரும்பக் கொடுத்து விட்டதாகவும் தெரிகிறது.

கோவிலின் முன்புள்ள மண்டபத்தின் கிழக்குச் சுவரில் :

478—சகம் 1492 கொல்லம் 745 ஆனிமீ 30-ம் தேதி செவ்வாய்க்கிழமை சுவாதி தசமி—ஆதித்தவன்ம சதுர்வேதி மங்க லம் என்ற பாப்பாக்குடி திருமண்ணீச்சுரமுடைய நாயனார் கோவிலில் பரம்பரைக் கணக்கராக கருமுகிலான் கேரளாதித்திய தேவன் என் பவனை மகா மண்டலேசுர இராமராய திருமலை நாயகனுடைய படைத் தலைவர்களாகிய விசுவநாத நாயகன், இருட்டினப்ப நாயகன், வீரப்ப நாயகன் ஆகிய மூவரின் ஆணையாளராகிய அரிய நயினார் முதலியார் வீரராகவ முதலியார் சிரீகாரியம் இராமப்ப நாயகன் ஆகிய இவர்கள் நியமித்தது.

பாப்பாக்குடி அணைக்கட்டுக் கல்லில்—

480—கொல்லம் 839 ஆவணி 19-ம் தேதி வியாழக்கிழமை திரயோதசி பூசம்—வடமலையப்ப பிள்ளையின் ஆணையாளர் திருமலைக் கொழுந்துப் பிள்ளையின் சிறப்புக்காக இந்த அணையைத் தம்பிரான் தோழபிள்ளையும் சிதம்பரநாத பிள்ளையும் கட்டி முடித்தனர்.

## அரியநாயகிபுரம்—புராந்தநாதர்

சேரன் மாதேவிக்கு எதிர்க்கரையில் இருப்பது அரியநாயகிபுரம். அரியநாயகிபுரம் அணை என்பது பொருநை ஆற்றில் இவ்வூரை ஒட்டியுள்ள அணை.

"கொல்லம் 739-ல் முள்ளிநாடு குலசேகர நல்லூரில் வென்று முடிகொண்ட பாண்டீசுரமுடைய நாயனாரை நிலைபெறுத்தினார் திரிபுவனச் சக்கரவர்த்தி, கோனேரி மெய்கொண்டான், குலசேகர தேவன் என்ற கண்டியத் தேவர்" என்று கூறும் இக்கோவிற் கல்வெட்டு. வென்று மண்கொண்ட பாண்டீசுரமுடையார் என்றும் இப்பெருமான் கூறப்பெறுகிறார். வென்று மண்கொண்டு முடியும் கொண்டவர் கண்டியத் தேவர் என்பது தெரிகிறது. பின் தளவாய் அரியநாத முதலியார் பெயரால் இவ்வூர் அம்மை அரியநாயகி எனப்பெற்றாள்; அதனால் ஊர் அரியநாயகிபுரம் என அழைக்கப் பெறுவதாயிற்று.

இதன்மேல், தண்பொருநையாறு அம்பாசமுத்திரம் வட்டம் தாண்டித் திருநெல்வேலி வட்டத்திற் புகுகின்றது. அங்குள்ள கோவில்களை ஆராயத் தொடங்குமுன் அம்பாசமுத்திரம் வட்டத்தில் தண்பொருநையில் வந்துகூடும் கிளை ஆறுகளின் கரைகளிலுள்ள திருப்பதிகளை ஆராய்வோம்.

## ஆழ்வார்குறிச்சி—சிவசயில நாதர்

சயிலம் என்பது மலை; உயரிய மரங்களும் முட்புதர்களும் அடர்ந்து வளர்ந்தோங்கி ஏறித் தாண்ட எண்ணுபவர் உள்ளத்தை மலைக்கச் செய்வதனாலே மலை என்ற பெயர் வந்தது. அசையம் அதாவது அசைய மாட்டோம் என்ற சொல்லே சையம் எனவும் அசைவு இலம் என்ற சொற்றொடரே சயிலம், சைலம் எனவும் நின்று மலையை உணர்த்துகின்றன.

> "அளக்கலாகா அளவும் பொருளும்
> துளக்கலாகா நிலையும் தோற்றமும்
> வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே"

என்பது பவணந்தியார் நன்னூற் சூத்திரம். துளக்கலாகா நிலை என்பது அசைக்கப்படாத தன்மை.

சிவசயிலம் பாவ நாசத்திலிருந்து மேற்கே நான்கு மைல் தூரத்திலும், திருக்குற்றாலத்திலிருந்து தென்கிழக்கே பத்து மைல் தூரத்திலும் இருக்கிறது. இதற்கு ஒன்றரை மைல் கிழக்கே ஆழ்வார்குறிச்சிப் புகைவண்டி நிலையம் உளது; அதிலிருந்து வடக்கே ஒன்றரை மைல் தூரத்தில் ஊர் இருக்கிறது; இரயில் வழியாகத் திருநெல்வேலியிலிருந்து ஆழ்வார் குறிச்சி இரயிலடி இருபத்தேழு கல்; தென்காசியிலிருந்து பதினாறு கல். வண்டிப் பாதை வழியாகத் திருநெல்வேலியிலிருந்து ஆழ்வார்குறிச்சி ஊருக்கு இருபத்து நான்கு கல்; தென்காசியிலிருந்து பதி னைந்து கல். இங்கிருந்து கிழக்கே அம்பாசமுத்திரம் எட்டுக் கல். ஆழ்வார்குறிச்சி வழியாக வாடகை மோட்டார் வண்டிகள் திருநெல் வேலிக்கும் தென்காசிக்கும் அடிக்கடி ஓடுகின்றன. இங்கிருந்து சிவ சயிலத்தின் வழியாக ஒரு காட்டுப்பாதை மலைமேலுள்ள கணவா யைப்பற்றிக் குளத்துப் பிறை என்ற ஊரைச் சேருகிறது. தென் காசி, செங்கோட்டையிலிருந்து திருவனந்தபுரம் போகிற வண்டிச் சாலை குளத்துப் பிறை வழியாகவே போகின்றது. இச்சாலையில் வாடகை மோட்டார்களும் போகின்றன. ஆழ்வார்குறிச்சியிலிருந்து காட்டுப்புளி வரை நல்ல சாலை போடப் பெறுமாயின் மிகச் சுருங்கிய செலவில், காலத்தில் இங்கிருந்து திருவனந்தபுரம் போவது எளி தாகும். இது காட்டுப் பாதை யாகவே இருந்து வருகிறது. கோவிலி லிருந்து அரைக்கல் வட மேற்கே சம்பகன் களமும், வடக்கே இரண்டு கல்லில் கோவிந்தப்பேரியும், கிழக்கே முக்காற் கல்லில் செட்டிகுளமும் உள. ஆற்றின் தென்கரை சிவசயிலம்; வடகரை கலியாணிபுரம்.

வெள்ளி மலையிலே தோன்றுகிறது கருணையாறு; இது கடனை யாறு என்றும் சொல்லப்பெறும். இவ்விடத்திலேதான் மேற்குத் தொடர்ச்சி மலை வடக்கே திரும்புகிறது. இந்தக் கடவிலே இருக்கிறது சிவசயிலம். இதற்கு வடக்கே முள்ளிமலை என்ற சிறுபறம்பு இருக் கிறது. ஆதலினாலே மூன்றுபுறமும் மலையினாலே சூழப்பெற்றது சிவசயிலம். இதற்கு வடபுறம் கோவிலை அடுத்துக் கிழக்கே பார்க்க வருகிறது கருணையாறு. இதில் திடீரென்று வெள்ளம் வருவதும் வற்றுவதுமாக இருக்கும். ஆனால் எந்த அருங் கோடையிலும் மூங்கி முழுகும்படி தண்ணீர் ஓடிவரும் உயிராறு இது. இவ் வாற்றில் ஆழ்வார்குறிச்சிக்குக் கீழ்புறம் இராமநதி வந்து சேருகிறது.

இராமநுறு கடையத்திற்கு வடக்கே மலையிலிருந்து கீழிறங்கி வந்து கடையத்தை ஒட்டி வரும் வரட்டாற்றுடன் இரவணசமுத்திரத்தின் அருகிலே கூடிப் பாய்கிறது. கண வாயில் மலையடிவாரத்திலிருந்து ஒன்றரை மைல் மேலே அத்திரிகூடம் இருக்கிறது. அங்கே அத்திரி ஊற்று என்று சொல்லப்படும் அத்திரி தீர்த்தம் உள்ளது. இவ்வூரைச் சூழப் பல குளங்களிருக்கின்றன.

சிவசயிலத்தைப் போலக் குடியிருப்புக்கு வசதியான இடம் எங்கும் இல்லை என்று உறுதியாகச் சொல்லலாம். எந்தக் கோடையிலும் போக்கறாத கருணையாறும், மரமடர்ந்த சோலைகளும், சித்திரை பத்து முதல் புரட்டாசி பத்து வரை விடாமல் கணவாய் வழியாக வீசும் காற்றும் பனிநீர் தெளிப்பது போன்ற சாரலும் உடலையும் உள்ளத்தையும் குளிரச் செய்து பூரிக்கச்செய்கின்றன.

கருணையாற்றின் தென்கரையில் மேற்கே பார்க்கப் பேரழகுடைய இருக் கோபுரத்துடன் திகழ்கின்றது சிவசயில நாதர் திருக்கோவில்.

கோவிலின் தலைப்பிற் பந்தல் மண்டபம் மிகப் பெரியதாக இருக்கிறது. அதன் வழியாகக் கிழக்கே சென்றால் குடைவரு வாயில் என்று சொல்லப்பெறும் திருக்கோபுர வாயில் உள்ளது. கோவில் மிகப் பெரியதாக எல்லாப் பக்கங்களிலும் தட்டோட்டியால் மூடப்பெற்று உள்ளே ஒருவரும் நுழைய முடியாதபடி வான வெளியே இல்லாமல் அமைந்திருக்கிறது. இது காட்டுக்கோவிலான படியால் இரவில் வன விலங்குகளோ கள்வரோ உள்ளே நுழைய முடியாதபடி இங்ஙனம் காப்புச் செய்யப்பெற்றது போலும்! கோபுரவாயிலின் தென்புறம் தட்டோட்டிக்குப் போகும் வாசல் இருக்கிறது. அதற்கு ஒரு கனமான பலத்த இரும்புக் கதவு உள்ளது.

கோபுரம் ஐந்து தட்டுக்களோடு கூடியது; அதன் தென்புறம் வடக்கே பார்த்திருக்கும் அதிகார நந்தியை வணங்கி ஆணை பெற்றுக்கொண்டு உள்ளே நுழைந்து தென்புறம் கிழக்கே பார்க்க இருக்கும் பிள்ளையாரையும் நெல்வேலி நாதரையும் பணிந்து திருமுன்பு வந்தால் பலிபீடத்தையும் நந்தியையும் கொடி மரத்தையும் காணலாம். நந்தியின் அழகு கண் கவரும் பெருமையது; முழுக்கார்ப்புடன் விளங்கும் போது அழகிய காளை ஒன்று படுத்திருப்பது போலவே காணப்பெறும். நந்திக்கு அடிக்கடி திருமுழுக்

கும் முழுக்காப்பும் செய்யப்பெறும் இடங்களில் இதுவே முதன்மை யானது. கால் நடைகளுக்கு ஏற்படும் நோய்கள் தீர இங்குள்ள நந்திக்குச் சிறப்பு வழிபாடு நடத்துவது வழக்கம்.

கொடிமர மண்டபத்தைத்தாண்டி மணி மண்டபத்தில் ஏறி மாமண்டபத்திற் சென்று அங்குள்ள சிறு நந்தியின் பக்கலில் நின்று கருப்பக் கிரகத்தில் சடை முடியோடு கூடிய சடையப்பரை, சிவசயில நாதரை, கண்குளிரக்கண்டு வணங்கித் திருவருள் பாலிக் கும்படி போற்றிசைப்போம். சிவலிங்கப்பெருமான் தானுக முளைத் தெழுந்த பரம்பொருள்; உளிபடாத திருமேனி; பின்னுலே சடை முடித்தது போலும் காட்சி.

மாமண்டபத்தின் நடுவே ஒருதடையளி போடப்பட்டிருக்கிறது. இது மேற்கேயிருந்து மிகுதியாக வீசும் காற்றைத் தடுத்து உள்ளே யுள்ள விளக்குகள் ஆடாமலிருக்கும்படி செய்வதற்காகவே போடப் பெற்றது. வடபுறம் பிள்ளையார் இருக்கிருர். அவருக்கும் பின்புறம் கல்லில் எழுத்துக்கள் தலைகீழாக உள்ளன. இதனுல் அக்கல் முன் திருப்பணிக் காலத்தில் தலைமாற்றிவைக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது புலனுகிறது.

கருப்பக் கிரகத்தில் அம்மை பரம கலியாணித்தாய் நான்கு திருக் கரங்களுடன் காண்பவர் கண்குளிரக் காட்சி தருகின்ருள்.

## செவந்தியப்பர் கோவில்

இது ஆழ்வார்குறிச்சியிலிருந்து சிவசயிலம் வரும் வழியிலே மேற்கே அரைக்கல்லில் இருக்கிறது. இக்கோவிலும் மேற்கே பார்த் ததுதான். செவந்தியப்பர் கோவிலில் கருப்பக் கிரகமும் அர்த்த் மண்டபமும் மாமண்டபமும் இருக்கின்றன. தென் கிழக்கில் மடைப் பள்ளியும் மேற்கே முன் மண்டபமும் குடை வருவாசலும் உள. அவைகளுக்கு முன்னுல் திருவிழாப் பந்தலும் நடுவே அனுப்பு மண்டபமும் காணப் பெறுகின்றன. அவைகளுக்கு முன்னுல் சிறிது மேற்கே தள்ளித் தேரோடும் தெரு இருக்கிறது. வடமேற்குப் பக்கத் தில் குளத்தூர் ஐயனுர் கோவிலும் அதையொட்டித் தெருவடியிற் பெருமான் திருத்தேரும் உள்ளன. சிறிது தெற்கே தள்ளி அம்மை திருத்தேர் நிற்கிறது. வடகிழக்கில் இருப்பது ஈசான பலி பீடம்.

இங்கேதான் சிவசயிலநாதர் ஆண்டுதோறும் பங்குனி மாதக் கடைசியிலே தொடங்கும் சித்திரை விசுத் திருவிழாவில் எழுந்தருளி வந்திருந்து திரு வீதி உலா வந்து திருத்தேர்க்காட்சி தந்தருளு கின்றார்.

**அத்திரிகூடம்.**—மலை மேலே அத்திரிகூடத்தில் உள்ள சிவலிங்கப் பெருமான் திருக்கோவில் இப்போது உடைந்து இலமாக இருக் கிறது. இது கிழக்கே பார்த்த கோவில். இது செம்மை செய்யப் பெறுதல் வேண்டும்.

**சிற்பச் சிறப்புகள்.**—மண்டபங்களிலுள்ள தூண்களிலெல்லாம் சிங் கங்கள் அமைந்து முகட்டைத் தாங்குகின்றன. மண்டபங்களின் வேலைப்பாடு எடுத்துக் காட்டும் பேரழகினது. பந்தல் மண்டபத்தின் முகட்டில் உட்பக்கம் பலநிறப் பூக்கள் தீட்டப் பெற்றுள.

இரண்டு மரத்தேர்கள் இருக்கின்றன. பெரியது பெருமானது; சிறியது அம்மையது. பெருமான், பெருமாட்டி கருப்பக்கிரகங்களின் மேலே நல்ல வேலைப்பாடுள்ள விமானங்கள் உயரத் தங்கமுலாம் பூசப்பெற்றுக் கண்கவர் வனப்பின. அரச கோபுரம் ஐந்து தட்டுக் கள் உடையதாகிப் பல சித்திரப் பதுமைகளோடு காணப்படுகிறது.

சிவசயிலத் தல புராணம் நெற்குன்றைமாநகர் வீரப்ப முதலி யாரால் பாடப்பெற்று 1910-ல் அச்சேற்றப்பெற்றது. இவ்வாசிரியர் வாக்கு மிகச்சிறந்ததாகக் காணப்பெறுகிறது. இவர் திருக்கருவைத் தல புராணமும் பாடியருளியிருக்கின்றார்.

சித்திரை விசுவில் தீர்த்தவாரி பன்னிரண்டாம் நாள்; பதினொராம் நாள் திருத்தேர்; இது பங்குனிப் பெருவிழா. ஐப்பசியில் திருமண விழாவும், திருவாதிரையன்று கூத்தர் காட்சியும் நடை பெறுகின்றன.

**கல்வெட்டுக்கள்.**—பெருமானுடைய மணிமண்டபம் வடபுறச் சுவரி லும் கோபுர வாயிலின் வட புறத்திலும் கல் வெட்டுக்கள் இருக் கின்றன. ஆழ்வார்குறிச்சியில் ஆவுடையம்மன் கோவிலில் கொல்லம் ஆண்டு 568 (சகம் 1315)-ல் ஒரு கல்வெட்டும், 725-ல் ஒரு கல் வெட்டும், 736-ல் ஒன்றும் எழுதப்பெற்றிருக்கின்றன. முதற் கல் வெட்டில் இக்கோவில் நரசிங்க ஈசுவர முடையார் கோவில் என்பதும், இரண்டாம் கல் வெட்டில் இராமப்ப நாயகரையன் செட்டிகுளம்

என்ற ஊரைத்தானம் செய்ததும், மூன்றும் கல் வெட்டில் விசுவநாதநாயகன் (1559-1563) தானம் செய்தான் என்பதும் குறிப்பிடப் பெற்றுள்ளன. கோனேரின்மை கொண்டான் ஆறும் ஆண்டில் எழுதிய மற்றொரு கல்வெட்டு பெருமானின் பெயர் நரசிங்கேசுவரன் என்பதும் ஊரின் பெயர் கொல்லம் கொண்ட பாண்டிய சதுர்வேதிமங்கலம் என்பதும் கூறுகின்றது. ஆழ்வார் குறிச்சி வன்னியப்பர் கோவிலிலுள்ள கல்வெட்டு ஒன்று பெரு மானின் பெயர் திருவன்னீசுரமுடையார் என்றும் அது உள்ள இடம் முள்ளிநாட்டு இராசராச சதுர்வேதி மங்கலத்துக் காடேறு எனவும் கூறுகின்றது. மற்றொரு கல்வெட்டு வன்னிதீர்த்தக்கரை யில் உள்ள திரு வன்னீசருக்கு முத்து வீரப்ப நாயகர் கொல்லம் 787 (சகம் 1532)-ல் நிலத்தானம் செய்ததைக் காட்டுகின்றது.

சிவசயிலத்துக் கோவிலில் உள்ள 1916-ல் எடுத்த எண் 520-வது கல்வெட்டு சகம் 1509 (கொல்லம் 763)-ல் கடதீர்த்தக் கரையில் இரசதகிரி (வெள்ளிமலை)-க்கருகில் சிவசயில நாதபுரத்தில சிவசயிலமுடைய தம்பிரானார் கோவிற்கரைக்கு திருவிலாஞ்சனை முதலிய பணிவிடைகள் உமையொருபாக முதலியார் பண்டாரத்துச் சீடர் ஆண்டு கொண்ட நயினார் செய்யும்படி நியமிக்கப்பட்ட செய்தி யைக் கூறுகின்றது. எண் 521-வது கல்வெட்டு கொல்லம் 823-ல் இராமப் பையன் காலத்தில் ஒழுங்காகப் பரதேசிகளுக்கு அன்னம் அளிக்கப்பட்டது நின்று போக, சொக்கலிங்க நாயகன் அதனை மீண்டும் கொடுக்க ஆணையிட்டதைக் குறிக்கிறது.

மேல் ஆம்பூர், பூங்குறிச்சிக் குளக்கரையில் 1916-ல் எடுத்த 519-வது எண் கல் வெட்டு சகம் 1560 (கொல்லம் 813)-ல் சிவசயில நாதப்பெருமானுக்கா ஆம்பூர், ஆழ்வார் குறிச்சி, கிருட்டிணபுரம், கடையம் முதலிய ஊர்களைச் சேர்ந்த நாட்டவர் சில வரிகளைக் கொடுக்கும்படி தானம் செய்யப்பட்டதைக் கூறுகிறது. கீழ் ஆம்பூரில் 1916-ல் எடுத்த 518-வது எண் கல்வெட்டு வட்டெழுத்தில் வேணாட் டரசன் இரவிவர்மனைக் குறித்துள்ள ஒரு செய்யுளாக இருக்கிறது.

**தருமபுரம் திருமடம்.**—பஞ்சக்குரோச மத்தி சிவசயிலம். குரோ சம் என்பது இரண்டாயிரம் தண்டம்; அதாவது இரண்டேகால் மைல் தூரம். பாவநாசத்திலிருந்து கடையம் வரை பதினொன்றே கால் மைல் தூரம்; இதன் நடுவே இருத்தலினாலே சிவசயிலம்

பஞ்சக்குரோச மத்தியாகும். பாவ நாசம் சூரியகலை, திருக்குற்ருலம் சந்திரகலை, சிவசயிலம் சுழிமுனை அதாவது அக்கினி கலை; பாவ நாசம் யோக பீடம், திருக்குற்ருலம் போக பீடம், சிவசயிலம் ஞான பீடம். சிவசயிலத்தில் ஞானக்காற்று வீசுகின்றது. இவ்வுண்மை யினுலே சிவசயிலம் தருமபுரம் திருமடத்தின் சின்னப்பட்டத்திற்கு இருப்பிடமாகப் பன்னெடுங்காலம் விளங்கியிருந்தது. சடையப்பராகிய சிவசயிலப்பருக்கு அன்பு பூண்டமையினுலேயே தருமபுரத்தாருக்குச் சடைமுடி திகழுவதாயிற்று. தரும புரத்தார், இக்கோவிலைத் தமது சொந்தக் கோவிலாகவே போற்றி வந்தனர்.

இப்போது இம் மடத்திற்குச் சிவசயிலம் அரசப்பத்திலும், குருந் துடையார் குளத்திலும், வேப்பங் குளத்திலும், ஆழ்வார் குறிச்சி யிலும், இறுக்குந்துறை முதலிய பல இடங்களிலும் அன்னதானத் துக்காகவும் மடத்தின் செம்மை நிலைக்காகவும் மிக ஏராளமாகச் சொத்துக்கள் இருக்கின்றன.

திருமடம் பண்டாரக்கட்டு, பூசைக்கட்டு, கொலு மண்டபம் முதலிய பல பெரிய மண்டபங்களோடு பல நூற்றுக் கணக்கான பேர் ஒருங்கிருந்து உண்ணும் இடமுடையதாகப் பொலிகின்றது. ஐந்நூறு பேருக்கு ஒரேதடவையிற் சோறு சமைக்கும் மிகப் பெரிய வெண்கல உருளியொன்று இங்கிருந்தது. அது இருபதாண்டுகளின் முன் ரூபா இருநூற்றைம்பது வழிச்செலவில் தருமபுரத்திற் கொண்டு போய் வைக்கப்பெற்றிருக்கிறது. இத்திருமடத்தைச் சேர்ந்த பாற் பண்ணையில் "இங்கே ஐந்நூறு பசுக்கள் இருந்தன" என்று கண்டு மகிழ்ந்த பெரியார் கூறுகின்றனர். தெற்கு வீட்டார் பாற் பண்ணையிலும் இருநூறு பசுக்கள் இருந்தனவாம்.

**சாபத்தூர் :**

செவ்வந்தியப்பர் இருக்கும் இடம் தான் சிவசயில நாதருடைய திருவிழா நகரமென்று கூறினேம். இது ஆழ்வார் குறிச்சியின் மேற்குப்பகுதி. இது இப்போது சாபத்தூர் என்று வழங்கி வருகிறது. பண்டைக்காலத்தில் மலையடியிலிருந்து இவ்விடம் வரை கடம்பவனமாக இருந்தது. அதனுல் சிவசயில நாதர் காடு தாண்டி மக்கள் அன்புடன் குடியிருக்கும் அன்பூர் வந்து திரு வோலக்கக் காட்சி தந்தருள்வாராயினுர். அதன் பொருட்டுத்தான் அவர் வந்து தங்கியருளும் இடத்தில் செவ்வந்தியப்பர் கோவில்

தோன்றுவதாயிற்று. அக்காலத்தில் ஆழ்வார் குறிச்சியும் ஆம்பூரும் அன்பூர் என்றே பெயர் பூண்டிருந்தன. செவ்வந்தியப்பர் இருக்குமிடத்தில் பண்டு பல தெருக்களோடு கூடிய நகரம் இருந்தது. அது சாபத்தால் அழிந்து விட்டபடியால் இப்போது சாபத்தூர் எனக் கூறப் பெறுகிறது.

## கீழாம்பூர்—காசி விசுவநாதர்

ஆழ்வார் குறிச்சிக்குக் கிழக்கே மூன்று மைல் கீழாம்பூர் ; இது அம்பாசமுத்திரத்தின் மேற்கே நான்கு கல். ஆம்பல் என்பது அல்லி ; ஆம்பல் நிரம்பிய ஊர் ஆம்பலூர், அதுவே ஆம்பூர் என்ருயிற்று. ஆம்பூரில் பூங்குறிச்சிக்குளம் இருப்பது இதனை வலியுறுத்தும். இது மேல் ஆம்பூர் கீழாம்பூர் என இரண்டு பிரிவானது. கீழ் ஆம்பூர் புகைவண்டி நிலையம். இதிலுள்ள பெருமான் காசி விசுவநாதர், அம்மை விசாலாட்சி.

## துப்பாக்குடி— ஆதித்தவர்மேசர்

பண்டைய மக்கள் பேசிய மொழி தமிழ் மொழியே, தமிழ் மக்களே பல்கிப் பெருகி இப்பூமண்டலத்தின் ஏனைய பகுதிகளிலெல்லாம் சென்று குடியேறி வாழ்கின்றனர் ; அவர்கள் தம் முன்னோர் தமிழ் மக்கள் என்பதையும், அவர்களுடைய தாய் மொழியாகிய தமிழ் மொழியையே தமிழகத்திலிருந்து பிரிந்து வந்த தம் முன்னோர் பேசி வந்தனர், அத்தமிழ் மொழியே அவரவர் குடியேறிய தட்ப வெப்ப நிலை சூழ் நிலைக்களுக்கு ஏற்ப மாறிப் பல்வேறு உருவினது ஆயிற்று என்பதையும் தமிழ் மக்களின் சிறந்த அறிவுக் களஞ்சியமாகிய பண்பாட்டின் பயனுகப் பழுத்த சமையமே சைவ சமையம் என்பதையும் ஆதலினுலே உலகப் பொது மொழியாகும் தகுதி வாய்ந்தது தமிழ்மொழியே, தமிழர் சமையமே உலகப் பொதுச் சமையம் என்பதையும் உலக மக்கள் மறந்து போய்ப் பல சமையநெறிப் பட்டுத் தட்டழிவாராயினர். இந்த உண்மையை நிலை நிறுத்தவும் நினைவுப் படுத்தவுமே மாணிக்கவாசகப் பெருந்தகையார் திருவாசகத்திலே,

“ தென்னுடு உடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி”

என்று அருளிச் செய்திருக்கின்றார். இவ்வுண்மைகளையெல்லாம் நாம் உலகறியச் செய்து நிலை நாட்டவேண்டும்.

அம்பாசமுத்திரத்திற்கு நேர் வடக்கே துப்பாக்குடி என்ற சிற்றூர் இருக்கின்றது. இது திருநெல்வேலிக்கு நேர் மேற்கே பத்தொன்பது கல் தொலைவில் உளது ; இவ்வூருக்கு மேற்கே ஆறு கல் தூரத்தில் உள்ளது கடையம். துப்பாக்குடி ஒரு பஞ்சாயத்து ஊர். இதற்கு அஞ்சல் நிலையம் பாப்பான்குளம் ; தந்தி நிலையம் கடையம்; புகைவண்டி நிலையமும் கடையமே. தென் மேற்கே நான்கு மைல் தூரத்தில் உள்ள ஆழ்வார்குறிச்சியும் இதற்குப் புகைவண்டி நிலையமே.

திருநெல்வேலிக்கும் கடையத்துக்கும் அடிக்கடி வாடகை மோட்டார் வண்டிகள் ஓடுகின்றன. ஆதலின் இவ்வூருக்கு வருவது மிக எளிது. சாலையிலிருந்து வடக்கே அரை மைல் தூரத்தில் துப்பாக்குடி ஊர் இருக்கிறது.

சிவ சயில மலையிலே தோன்றுகிற கருணையாறு இவ்வூருக்குந் தெற்கே ஓடிவந்து திருப்புடை மருதூருக்கு அருகே தண் பொருந்தத்தில் பொருந்துகிறது. கடையத்தைச் சேர்ந்த மலைப் பகுதியிலே தோன்றும் அனுமனாற்றைச் சேர்த்துக்கொண்டு பாய்ந்து வரும் இராமனாறு பாப்பான் குளத்துக்கு மேற்கே கருணையாற்றிற் கலக்கின்றது.

இராமனாற்றில் பொட்டற் புதூருக்கு அருகே ஓர் அணை கட்டப் பட்டிருக்கிறது. அதிலிருந்து வரும் கால்வாய் பாப்பான்கால் என்று பெயர் பெறும் ; அது சம்பன் குளத்தையும் கற்குறிச்சிக் குளத்தையும் நிரப்பி அதன் மேல் துப்பாக்குடிக்கால் என்று பெயர் பெற்றுப் பாப்பான்குளத்தைச் சேர்ந்த செக்கடிக் குளம், மேல் பறையன் குளம், கீழ் பறையன் குளம், பாட்டக் குளம், பேராமணிக் குளம், குரவன் குளம் ஆகிய குளங்களை நிரப்பக் கிளைக் கால்களை அனுப்பித் துப்பாக்குடிக் குளத்தில் நீர் நிரப்புகின்றது. இக்குளம் மிகவும் பெரியது.

ஊரின் வடகிழக்குப் பகுதியிலே ஆதித்த வன்மேசர் திருக்கோவில் பேரழகுடன் விளங்குகின்றது. கர்ப்பக் கிரகத்திலே சிவலிங்கப் பெருமான் காட்சியருள்கின்றார்.

கோவிலின் தலைவாயில் தெற்கு வாயிலே. மண்டபத்தின் வட பகுதியில் நடுநாயகமாக அம்மை ஆனந்தவல்லியார் திருக்கோவிலில் எழுந்தருளியிருக்கின்றார்.

**வரலாறு**

ஆதித்த வன்மன் என்ற பாண்டிய மன்னன் பாப்பாக்குடியிலிருந்து அரசாண்ட செய்தி தெரிய வருகிறது; அவன் கட்டி வழிபட்ட பெருமான் ஆனதினாலே ஆதித்த வன்மேசர் என்ற பெயர் சிவலிங்கப் பெருமானுக்கு அமைந்தது; அம்மன்னவனுக்குத் துப்பாகும் குடிகள் வாழ்ந்து வந்த ஊர் துப்பாக்குடி. துப்பு என்பது வலிமை. அரசனுக்கு வலிமையாவர் அவனுடைய படை வீரரே.

## கடையம்—வில்வவனநாதர்

கடையர் மருத நிலத்தில் வாழும் தாளாளர்; அவர்கள் வாழும் ஊர் கடையம். ஆழ்வார்குறிச்சிக்கு இரண்டு மைல் மேற்கே இருப்பது கீழக் கடையம் புகைவண்டி நிலையம். இவ்விரண்டிற்கும் நடுவில் இரவண சமுத்திரம் புகைவண்டி நிலையம் இருக்கிறது. ஊருக்கு மேற்கே ஒரு கல் தூரத்தில் இருப்பது வில்வவனநாதர் கோவில். வில்வ மரங்கள் அடர்ந்த வனமாக இவ்வூர் இருந்தது. அதிலே முளைத்தெழுந்த பெருமான் வில்வவனநாதர். இவ்வூரின் மலைமேல் தோன்றி வரும் இராமன் ஆறு, சாம்பவன் ஆறு என்ற இரண்டும் இக்கோவிலைத் தெற்கொன்றும் வடக்கொன்றுமாக மாலை போல் வளைந்து ஓடி ஊரின் தெற்கே ஒன்று சேர்ந்து வராக நதியாகின்றன. ஆறுகள் கோவிலை வளைந்து ஓடுவதால் இவ்வூர் வளைசை என்றும் பெயர் பெறும். கல்யாணியம்மையுடன் பெருமான் திருவிழா ஆர்வது ஊரினுள் இருக்கும் கைலாசநாதர் கோவிலில் வந்து எழுந்தருளியிருந்தே.

கல்வெட்டில் இவ்வூர் விக்கிரம பாண்டியனல்லூர் என்ற கோனாடு கடையம் என்று கூறப்பெறுகிறது. விக்கிரம பாண்டியன் பெயரால் அமைந்த இவ்வூர்க் கோவில் சீகைலாசம் எனப் பெறுகிறது; பெருமாள் கலியுகராமேசுரம் உடையார், தசரத ராமேசுரமுடையார் எனப் பெறுகிறார். தானாக இறந்த பார்ப்பனப் பிள்ளைக்காக, தவம் செய்திருந்த சம்பகனைக் கொன்ற பாவம் தீரத் தசரத மன்னன் மகன் இராமன் தன் பெயரால் இராமன் ஆற்றை ஆக்கி இவ்வூர்ப்

பெருமானைப் பூசித்துப் பாவம் தீர்த்தமையால் தசரதராமீச்சரம் உடைய நாயனூர் எனப்பெற்றூர் வில்லவன நாதர். இங்கே சித்திரைத் திருவிழாச் சிறப்பாக நடைபெறும்.

## இரவண சமுத்திரம்—சொக்கலிங்கப் பெருமான்

இரவண சமுத்திரம் என்பதில் சமுத்திரம் குளத்தை உணர்த்தும். இலவணம்—உப்பு. இலவண சமுத்திரம் போன்ற பெரிய குளத்தையும் குளத்தின் கிட்ட உள்ள ஊரையும் இது குறிக்கும். கிழக்கே கருங்கடல் என்ற ஊர் இருப்பதும் காண்க. இலாவணம் என்பது பார்ப்பனருக்குப் பிரித்துக் கொடுக்கும் பொருள்; அதனுல் அவர்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டதினுல் இலாவண சமுத்திரம் என ஆயிற்று என்பாரும் உளர். "இராவணன்தனை ஊன்றி அருள் செய்த இராவணன்" (தேவாரம்) எனப் பெயர் கொண்ட சொக்கலிங்கப் பெருமானுக்கு உரிய சமுத்திரம் இராவண சமுத்திரம், அது இரவண சமுத்திரம் ஆயிற்று என்று அறிஞர் கூறுகின்றனர். இவ்வூரின் கிட்டத்தான் இராமன் ஆறும் சாம்பவன் ஆறும் ஒன்று சேர்ந்து வராக நதியாகி ஓடிப் பாப்பான் குளத்தருகே கருணையிற் கலக்கின்றன.

இது காறும் ஆராய்ந்தன எல்லாம் அம்பாசமுத்திரம் வட்டத்திலுள்ள கோவில்கள்; இவை யாவும் ஆற்றை ஒட்டியே இருக்கின்ற உண்மை கண்டோம். இனி தண்பொருநதப் பேராற்றைத் தொடர்ந்து திருநெல்வேலி வட்டப் பெரும்பதிகளை ஆராய்வோம்.

# உ. திருநெல்வேலி வட்டம்

தண் பொருநையாறு திருநெல்வேலி வட்டத்திற் புகுந்து வளம் பெறுத்தத் தொடங்குகின்றது. அம்பாசமுத்திர வட்டத்தில் பதினெட்டுத் திருக்கோவில்களைக் கண்டு கும்பிட்டோம். அவையாவும் பொருநையாற்றின் இரு கரைகளிலும் இருப்பன. மணிமுத்தாறு, கருணையாறு இவை பொருநையிற் சேரும் கிளையாறுகள்; இராமன் ஆறு, சாம்பவன் ஆறு சூழ்ந்து வணங்கிய பெருமானையும் கண்டோம். உண்ண உணவும் உடுத்த உடையும் தருவது பொருளே; அப்பொருளைத் தருவது பூமியே. பூமியிற் காணப்படும் பொன்னும்

விளையும் மணிகளும்தாம் பொருளாகி விளங்குகின்றன. அவைகளை இறைவன் அருளால் வழங்குவது தண்ணீரே. ஆதலால் நீர் வளமும் அதனால் நில வளமும் ஒருங்கே பெற்றுத் திகழும் அம்பா சமுத்திர வட்டத்தில் பதினெட்டுச் சிவன் கோவில்கள் பத்தி நெறியை வளர்ப்பனவாயின. இவற்றுள் எட்டுக் கோவில்கள் ஆண்டுக்குப் பதி னாயிரத்தின் மேல் வருவாய் பெறுவன.

நெல்லை வட்டத்தில் ஆண்டுக்கு ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய் பெறுவன ஒன்பது திருக்கோவில்களே. அவை தம்முள் ஓரிலட்சத்துக்கு மேல் வருவாய் உடையது நெல்லையப்பர் திருக்கோவில் ஒன்றே. கைலாசபுரம், மானூர், சீவலப்பேரி ஆகிய மூன்று ஊர் களில் உள்ள கோவில்கள் பதினாயிரத்தின்மேற் பெறுவன. ஏனைய ஐந்தும் மூவாயிரத்தின் மேல் ஐயாயிரத்தினுள் வருவாய் உடையன. அவை கங்கைகொண்டான்—கைலாசநாதர், முன்னீர்ப்பள்ளம்—பரி பூரண கிருபேசர், பாளையங்கோட்டை—திரிபுராந்தகர், பேட்டை—பால் வண்ணநாதர், நெல்லை—தொண்டர்கள் நயினார் திருக்கோவில்கள்.

பொருநைத்தாய் காட்டும் வழியிலே சென்று சிவபெருமானார் எழுந்தருளியிருக்கும் திருக்கோவில்களைப் பணிவோம். அவை தம் முள் மூவாயிரத்திற் குறைந்து வருவாய் பெறினும் வேறு சிறப்பு டைய பதிகளையும் காணுவோம்.

## பழவூர்—தழுவக் குழைந்த நாதர்

திருநெல்வேலி வட்டத்தின் மேற்குக் கோடியிலுள்ள முதல் ஊர் மிகப் பழைமையான ஊர். அதனால் அது பழவூர் எனப் பெயர் பெற்றது. பேராற்றில் இங்கே ஓர் அணையிருக்கிறது. இவ்வணை யிலிருந்து வலது கரையிலே கிளம்பும் கால் பாளையங்கோட்டைக்கு வருகிறது. அதனால் அது பாளையங்கால் எனப் பெயர் பெற்றது. இதன் நீளம் இருபத்தேழு மைல்.

ஆற்றின் நடுவில் அம்மை மணலைச் சிவலிங்கமாக அமைத்துப் பூசனை புரிந்தாள். அதனைக் கண்டு மகிழ்ந்த சிவபெருமான் ஆற் றில் வெள்ளம் வர அருளினான். அம்மை வெள்ளத்தைக் கண்டு அஞ்சி உடனே சிவலிங்கப் பெருமானைத் தழுவிக் கொண்டாள். அம்மை அன்புக்கு அகம் குழைந்த ஆண்டவன் அம்மை தழுவுமாறு

உடலும் குழைந்து கொடுத்தனன். அதனால் தழுவக் குழைந்த பெருமான் என்பது அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குப் பெயராயிற்று.

## சுத்தமல்லி—பகவதீசுவரர்

இவ்வூரில் ஒரு சல்வெட்டு இருக்கிறது. அது "மேல் வேம்பநாடு—வீர விநோத சதுர்வேதி மங்கலம் என்ற சுத்தமல்லி பகவதீசுவரம் உடையார்" என்று ஊரையும் பெருமானையும் குறிப்பிடுகின்றது. அம்மை பகவதியால் வழிப்படப்பெற்ற ஈசுவரர் பகவதீசுவரர். பகவதி—காளி. இவள் மல் உடைமையினால் மல்லி எனப் பெறுவாள். மல்—வலிமை, அதுவும் கலப்பற்ற மல், சுத்தமான மல். அதனை உடையவள் சுத்தமல்லி. அவ்வம்மை பெயரே ஊருக்கும் பெயராயிற்று.

சுத்தமல்லி இராசராசேசுவரியம்மை என்றும் பெயர் பெறுவாள். இவ்வம்மைக்கு இங்கே பெரியதோர் தனிக்கோவிலும் இருக்கிறது.

திருநெல்வேலிப் பேட்டைப் புகைவண்டி நிலையத்திலிருந்து இவ்வூர் தென் மேற்கே இரண்டரை மைல். இவ்வூருக்குத் திருநெல்வேலியிலிருந்து வாடகை மோட்டார் அடிக்கடி ஓடுகிறது. இவ்வூரில் உள்ள பேராற்று அணை சுத்தமல்லி அணையென்று பெயர் உடையது; இதிலிருந்து கிளம்பும் கால் கோடகன் நல்லூர் வழியாகப் போவதனால் கோடகன்கால் எனப் பெயர் பெறும். இதன் நீளம் பதினேழு மைல். இது பேட்டை, திருநெல்வேலி வழியாகச் செல்லுகின்றது.

## திருநெல்வேலி வட்ட நகராட்சிகள்

சுத்த மல்லியைத் தாண்டிய தண்பொருநை திருநெல்வேலி எல்லையில் நுழைகின்றது. திருநெல்வேலி வட்டத்தில் மூன்று பெரிய நகராட்சிகள் இருக்கின்றன. அவை திருநெல்வேலி, பாளையங்கோட்டை, மேலைப்பாளையம் என்பன. ஆற்றின் தென்கரையிலும் மேல்கரையிலும் இருப்பது திருநெல்வேலி; கிழக்குக்கரையில் இருப்பது பாளையங்கோட்டை; தென் கிழக்கில் இருப்பது மேலைப்பாளையம். பொருநையின் மேற்குக் கரையில் தெற்கிலிருந்து வட

கோடி வரை வரிசையாகக் குறுக்குத்துறை, சிக்கல்நரசையன் கிராமம், மீனாட்சிபுரம், வீரராகவபுரம், சிந்துபூந்துறை, தச்சன் நல்லூர் என்னும் சிற்றூர்கள் உள. கிழைக்கரையில் மேலைப்பாளை யம், குறிச்சி, கொக்கறை குளம், வண்ணார்பேட்டை என்னும் ஊர்கள் இருக்கின்றன. இவைகளில் கோவில் இல்லா ஊரே கிடையாது.

திருநெல்வேலியும் பேட்டையும் குறுக்குத்துறை, சிக்கல் நரசை யன் கிராமம், மீனாட்சிபுரம், வீரராகவபுரம், சிந்து பூந்துறை என் பனவும் சேர்ந்து திருநெல்வேலி நகராட்சி; கொக்கறை குளம், வண்ணார்பேட்டை, பெருமாள்புரம், பாளையங்கோட்டை என்பன பாளை யங்கோட்டை நகராட்சி; மேலைப்பாளையமும் குறிச்சியும் மேலைப் பாளையம் நகராட்சி. மேலைப்பாளையம் சில ஆண்டுகளுக்கு முன் வரை பாளையங்கோட்டை நகராட்சியிற் சேர்ந்திருந்தது. திருநெல் வேலிச் சந்திப்பு, திருநெல்வேலி நகர், திருநெல்வேலிப்பேட்டை என்ற மூன்று புகைவண்டி நிலையங்களை உடையது திருநெல்வேலி நகராட்சி.

## பேட்டை—பால்வண்ணநாதர்

பேட்டைக்குத் தெற்கே ஒரு மைலில் இருக்கிறது பொருநை யாறு. கோடகன்கால் இங்கு கிழைப் பகுதியிலுள்ள பெரியகுளத்தை நிரப்பி இரு கூறுகிறது. அவற்றுள் ஒன்று திருநெல்வேலியின் வட பகுதியிலுள்ள நயினார் குளத்தை நிரப்புகிறது. மற்றொருகால் திருநெல்வேலி, நச்சனல்லூர் வழியாகச் செல்கின்றது.

பேட்டையிலுள்ள சருக்கரைப்பிள்ளையாரை முன்னரே கும்பிட் டோம். அவரருகே தனிக்கோவிலில் பால்வண்ணநாதர் அம்மை யுடன் எழுந்தருளியிருக்கின்றார். பால் போலும் நிறத்தையுடைய வர் இவர். சங்கரநயினார் கோவிலுக்கருகே கரி வலம்வந்த நல்லூர்ப் பெருமானும் பால்வண்ணநாதரே. இவர்கள் உளிபடாத திருமேனிகள்; தாமாகவே இயற்கையில் முளைத்தெழுந்த சிவலிங் கங்கள்.

## திருநெல்வேலி—நெல்லையப்பர்

திருநெல்வேலி மாவட்டத்துக்கும் திருநெல்வேலி வட்டத்துக்கும் திருநெல்வேலி மாநகர்க்கும் நடுநாயகமாக விளங்குகின்றது நெல் லையப்பர் திருக்கோவில். மேற்கே திருக்குற்றாலத்துக்கு வந்து

திருப்பதிகங்கள் பாடி இப்பெரு நகர்க்கு முத்துச்சிவிகையிலே எழுந்தருளிவந்த திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் கைகளும் தலைமீது ஏறக் கண்ணில் ஆனந்த வெள்ளம் மெய்யெலாம் பெருக நெல்லையப்பர் திருமுன்பு வந்துநின்று,

"மருந்தவை மந்திரம் மறுமை நன் நெறியவை மற்றும் எல்லாம்
அருந்துயர் கெடும் அவர் நாமமே சிந்தைசெய், நன் நெஞ்சமே!
பொருந்து தண்புறவினில் கொன்றை பொன் சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்தி செம்பொன்மலர் திருநெல்வேலி உறை செல்வர்தாமே."

என்று தொடங்கிப் பதிகம் பாடினார்.

"செல்வர்" என்பது சிவபெருமானைக் குறிக்கின்றது; "திருநெல்வேலி உறை செல்வர்"—நெல்லையப்பர். கொன்றை பொன் சொரிவதையும் செருந்தி செம்பொன் போல் மலருவதையும் இன்றும் நெல்லையப்பர் கோவிலினுள்ளே காணலாம்.

"நெல்லையப்பர் பெயரே நோய்களுக்கெல்லாம் மருந்து, மந்திரம், மறுமையில் நல்ல கதிக்கு வழி எல்லாம் அதுவே; ஆதலின் நெஞ்சே! அவருடைய திருப்பெயரையே சிந்தித்திருப்பாயாக; நோயும் பேயும் உன்னை அணுகா. நீ அவர் திருவடியை அடைதல் எளிது" என்று தம் நெஞ்சை நோக்கி அறிவுறுத்துகின்றார் ஞானசம்பந்தர்.

மேலும் அவர் "தென்றல் வந்து உலவும் திருநெல்வேலி" என்றும் "திங்கள் நாள் விழவு மல்கும் திருநெல்வேலி" என்றும் கூறுவதோடு அம்மை வடிவாளை "வடிவுடை மங்கை ஓர் பங்கினர்" என்று புகழ்கின்றார்.

சிந்து என்பது எலும்பு; அது பூவாயிற்று இத்துறையிலே. ஆதலின் இது "சிந்து பூந்துறை" எனப் பெயர் பெற்றது. இது புராணக்கதை. ஆனால் சிந்து பூந்துறை என்று பெயர் வந்த காரணத்தைச் சம்பந்தப் பிள்ளையார் பின் வருமாறு விளக்குகின்றார்:

"கந்தமார் தருபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை சிந்து பூந்துறை." அதாவது மரங்களிலிருந்து மதுத்திவலை சிந்தும் பூக்களையுடைய துறை ஆதலின் சிந்து பூந்துறை என்றாயிற்று.

மது—தேன், திவலை—துளி; பூக்கள் தேன் துளிகளைச் சிந்துவதற்குக் காரணம் மந்திகள் ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குப் பாய்வதுதான். இந்தத் துறையிலேதான் நெல்லையப்பர் காந்திமதியுடன் எழுந்தருளி வந்து தீர்த்தம் கொடுத்தருளுவார். இந்த இடம் நெல்லையப்பர் கோவிலிலிருந்து நேர் கிழக்கே ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. இங்கே ஒரு சிற்றூர் தோன்றி வளர்ந்தது. தைப்பூச மண்டபம் ஒன்று ஆற்றின் மேற்குக்கரையினிலே பெருமான் எழுந்தருளியிருக்கும் மண்டபமாகக் கட்டப் பெற்றது.

திருஞானசம்பந்தர் தம் பதிகத்தில் இவ்வூரைத் "திக்கெலாம் புகழும் திருநெல்வேலி" என்று புகழ்கின்றார். இம்மண்டபத்தை ஒட்டிக் கரையில் ஒரு கோவில் எழுந்தது. அதுதான் கைலாசநாதர் கோவில். இக்கோவிலைச் சுற்றி நான்கு சிறு தெருக்கள் தோன்றின. அவைகளில் தேர் ஓடுகின்றது. கைலாசநாதர் எழுந்தருளியிருக்கும் இந்தச் சிறு பகுதி இப்போது கைலாசபுரம் என்ற பெயருடன் உள்ளது.

சிந்து பூந்துறையை ஒட்டித் தண்பொருநைப் பேராற்றின் அகலம் 930 அடி. இவ்விரிந்த ஆற்றைக் கடப்பதற்கு ஒரு நல்ல பாலம் இருக்கிறது. இப்பாலம் கட்டப் பெறுவதற்கு முன் ஆற்றில் தண்ணீர் வரும் போதெல்லாம் மக்கள் இருகரையிலும் கூட்டம் கூட்டமாக நின்று தட்டழிவார்கள் என்றும், அபாயம் ஏற்படாமல் தடுக்கும் பொருட்டுக் காவலர் உடன் நிற்பார்கள் என்றும் 1840-ல் இருந்த மாவட்ட ஆட்சித்தலைவர் எழுதியிருக்கிறார். 1836 முதல் பாலம் கட்ட வேண்டும் என்ற கருத்து அரசியலாரிடம் ஊன்றியிருந்தது. அப்போது திருநெல்வேலியிலிருந்த வள்ளல் சுலோசன முதலியார் அப்பாலத்தைத் தாமே கட்டித் தருவதாக முன் வந்தார்.

நெடுவட்ட வடிவமான பதினொரு அறுபதடி வளைவுகளால் தாங்கப் பெறும் பாலம் 1843–ம் வருடம் நவம்பர் மாதம் கட்டி முடிக்கப் பெற்றது. ஓரிலக்க ரூபாச் செலவிற் கட்டப் பெற்ற இப்பெரிய பாலம் "சுலோசன முதலியார் பாலம்" என்று பெயரிடப்பெற்று மிக்க சிறப்புடன் திறந்து வைக்கப்பெற்றது. அதை முதலில் தாண்டிச் சென்றது ஒரு பெரிய யானை; அதன் பின் ஒரு காலாட் படையும் குண்டுப்படையும் சென்றன; தக்குலசு என்ற மாவட்ட நீதிபதியும்,

தாமசு என்ற மாவட்ட ஆட்சித் தலைவரும், ஆர்சுலே என்ற பொறி வலாளரும் கைலாகு கொடுத்து வர சுலோசன முதலியார் தம் பின் பல பெரியார் பின் தொடர்ந்து செல்லப் பாலத்தைத் தாண்டிச் சென்றார். கண்கள் வரை இதன் உள்ளளவு 760 அடி; இரு கோடிகளுமாக வெளியளவு 930 அடி. சுலோசன முதலியாரு டைய இப்பெருங் கொடையின் நினைவுக்காக ஒரு பெரிய நினைவுத் தூண் அப்பாலத்தின் மேற்குப் பக்கத்தில் அரசாங்கத்தார் ஆணைப் படி 1845-ல் நாட்டப் பெற்றது. பாலத்தின் நடுவே நின்று கொண்டு ஆற்றின் இருபுறமும் திரும்பிப்பார்ப்பவருக்கு எங்கும் காணு முதல் தரமான கண் கவர் காட்சி தோன்றுகின்றது. இப்பாலம் கைலாச நாதர் கோவிலின் கிட்டக் கூப்பீடு தூரத்தில் இருக்கிறது. பாலத் துக்குத் தெற்கே தைப்பூச மண்டபமும், ஆற்றுக்குள்ளிருக்கும் கோடைப் பிள்ளையார் கோவிலும், அதற்கும் தெற்கே திருச்செந்தூர்ப் புகைவண்டிப் பாலமும் குறுக்குத்துறை முருகப் பெருமான் திருக் கோவிலும் புலனாவன. அதற்கும் அப்பால் இப்போது புதிதாக ஒரு வண்டிப்பாலம் அமைந்திருக்கிறது.

நெல்லையப்பர் சோவில் இரண்டு பெரிய கோவில்களாகப் பிரிந் திருக்கிறது. தெற்கே இருப்பது வடிவம்மையாகிய காந்திமதித்தாய் திருக்கோவில், வடக்சே இருப்பது நெல்லையப்பர் கோவில். இரண்டு கோவில்களின் முகப்பிலும் கோபுரங்கள் இருக்கின்றன. நெல்லை யப்பர் கோபுரம் கி. பி. 1606-லும் அம்மை கோபுரம் கி. பி. 1626-லும் கட்டப்பெற்றன. கோபுர வாயிலினுள் அம்மை கோவிலில் அமைந்து இருப்பது ஊஞ்சல் மண்டபம். இது 96 தத்துவங்களைப் போலவே அழகான திண்ணிய 96 தூண்களால் அமைந்தது. இதனைக் கட்டியவர் சேரகுளம் வள்ளல் பிறவிப்பெருமாள் பிள்ளையன். இவராலேயே சிந்துபூந்துறையிலுள்ள தைப்பூச மண்டபமும் கட்டப்பெற்றது. திருமண மண்டபம் அம்மை கோவிலுக்குத் தெற்கே ஆயிரக்கால் மண்டபம் என்ற பெயருடன் விளங்குகின்றது. தனித் தனியாக விளங்கிய இரண்டு கோவில்களையும் சங்கிலி மண்டபம் ஒன்று 1647-ல் வடமலையப்பபிள்ளையன் கட்டி இணைத்தனர். இதற்கு மேல் புறம் கிடந்த வெளியில் 1756-ல் வேங்கட கிருட்டின முதலியார் நூறுகால்களுடன் சதுரம்பட வசந்தமண்டபத்தை அமைத்தனர். சங்கிலி மண்டபத்தின் வடக்கோரம் பெருமான் கோவிலின் தெற்கு வாசலில் நடுக்கோபுரம் அமைந்துள்ளது.

நெல்லையப்பர் கோவில் தெற்குச் சுற்றில் தென்புறம் நிற்கும் தூண்களில் பிள்ளையன் காலம் வரை அரசாண்டிருந்த நாயக்க மன்னர்களின் சிலை உருவங்கள் காணப்படுகின்றன. மேற்குச் சுற்றின் வட மேற்குப் பகுதியில் 1642-ல் திருச்செந்தூரில் ஆறுமுகப் பெருமானைக் கடலிலிருந்து மீட்டு அருள்பெற்ற வடமலையப்ப பிள்ளையனால் ஆறுமுக நயினார் கோவில் கட்டப்பெற்றது. இதில் ஒரே கல்லில் மயில்வாகனமும் அதன்மேல் வள்ளி தேவயானையுடன் ஆறுமுகப் பெருமானும் பேரழகுடன் அமைந்திருக்கும் காட்சி மிகமிக வியப்பானது.

நெல்லையப்பர் கிழக்குச் சுற்றில் வடபுறம் இருப்பது சோமவார மண்டபம். இதிலுள்ள கல் உத்தரங்களும், வளைவுகளும் மரத்தால் ஆனவை போலவே 78 வலிய தூண்களின்மேல் அமைந்துள்ளன. பெரிய கொடிமரம் கி. பி. 1555 காளயுத்தி வைகாசியில் அமைந்தது. பெரிய இடத்தை உடைய மண்டபம் 1654-ல் சிவந்தியப்ப நாயக்கரால் ஆக்கப்பெற்றது.

கொடிமர மண்டபத்தின் தூண்களில் விளங்கும் இசையாளர், வீரர்கள், வீரபத்திரர் முதலிய சிற்பச்சிலைகள் நுண்ணிய சிற்பத் திறன் காட்டுவன. இதற்கு அடுத்து உள்ளே உள்ள பெருமான் மணி மண்டபத்தின் அமைப்பு நிகரற்றது. ஒரே கல்லினாலாகிய தூண்களில் ஒவ்வொன்றிலும் தனித்தனி அறுபத்து நான்கு சிறுசிறு தூண்கள் விளங்கும்படியும் அவை ஒவ்வொன்றிலும் வேறு வேறு இசையொலி தோன்றும்படியும் அமைக்கப்பெற்றிருப்பது எங்கும் காண முடியாத சிற்பக்கலையின் மிகமிக நுண்ணிய திறனும். இம் மணி மண்டபத்தை அமைத்தவர் கூன் பாண்டியராகிய நின்றசீர் நெடுமாற நாயனாரே என்பது பின்வரும் தல புராணப் பாடலாற் புலப்படுகின்றது.—

> "நீதிதழைத் தோங்குதிரு நெல்வேலி நாதர்முன்பு நிலைபெற்
> றோங்கச்
> சோதிமணி மண்டபத்தைத் தூயமகமேருவெனத் துலங்கச்செய்தே
> வேதிகைபொற் படிதூண்கள் விளங்குதிரு வாயிலணி விரவிச்
> சூழ்ந்த
> கோதில்மணிக் கோபுரமும் சேணமதிலும் வெள்விடையும்
> குலவச் செய்தான்."

—நின்றசீர் நெடுமாறநாயனார்
சருக்கம்—56.

நெல்லையப்பர் திருக்கோவிலில் இரண்டு சிவலிங்கங்கள் இருக்கின்றன. நேரே மிக உயரமாக இருப்பவர் வேண்ட வளர்ந்த நாதர். முழுதுங்கண்ட இராம பாண்டியன் வேண்ட வேண்ட வளர்ந் தருளினர் பெருமான் தாமே முளைத்து வளர்ந்த மூர்த்தி. இவருக்கு வடபுறம் நெல்லைக் கோவிந்தர் படுத்த கோலத்தில் இருக்கிறர். உட் சுற்று சிவலோகப்பத்தி எனப் பெயர் பெறும். அதில் வடக்குச் சுற்றின் பள்ளத்தில் சிவலிங்கப் பெருமான் காட்சியருள்கின்றர். இவரே மூங்கில் முளையில் முளைத்தெழுந்த வேணுவனநாதர். முழுதுங் கண்ட இராமக் கோனுக்கு இவரே முத்தியருளினர். வேணுவனநாதர் கோவில் தனிக் கோவில். இது முழுதுங் கண்ட இராம பாண்டியனுல் முதலிற் கட்டப்பெற்றது. இச் செய்தி கூறுவது சுந்தரபாண்டியன் கல்வெட்டு ஒன்று. வெளிச் சுற்றில் தென் மேற்கு மூலையில் இருப்பது இராவணன் தூக்கிய திருக்கைலை மலைத் திருமணக் காட்சி. மேற்குச் சுற்றில் வடபுறம் கல் லளவுடன் கூடிய மண்டபம் இருக்கிறது. இதுதான் தாமிர சபை. மார்கழித் திருவாதிரையில் கூத்துடைப் பெருமானர் இதிலேதான் திருநடனக் காட்சி யருள்வார்.

திருநெல்வேலித் தல புராணம் பாடிய பெரியார் திருநெல்வேலித் தெற்குப் புதுத் தெரு நெல்லையப்ப பிள்ளை. இவர் 120 சருக்கங் களாக அருமையான 6,891 செய்யுட்களால் இப் புராணத்தைப் பாடியமைத்த பெருங்கவி. இப் புராணத்தினுல் இத் திருக்கோவிலைப் பற்றிய பல உண்மைகள் புலனுகின்றன.

கல்வெட்டுக்களில் இவ்வூர் "கீழ் வேம்பு நாட்டுச் சதுர்வேதி மங்கலம்" எனப் பெறுகிறது. வேம்பு நாடு என்பது வேப்பம் பூமாலையணிந்த வேம்பனுகிய பாண்டியனுடைய நாடு. குலசேகர பாண்டியன் இவ்வூரை நிலைபெறுத்திப் பெரும் புகழ் [illegible]. "திருநெல்வேலி உடையார், திருநெல்வேலி [illegible]" என்று பெருமான் அழைக்கப் பெறுகிறர். "திருக் காமக் கோட்ட முடைய நாச்சியார்" என்று அம்மை கா[illegible] குறிக்கப் பெறு கிறள். இக் கோவில் ஆதரவில் தேவார[illegible]பயிற்சியும், காந்திமதி யம்மை பெண்கள் உயர்நிலைப் பள்ளியும் ஏழை மக்கள் விடுதியும் நடைபெற்றுவருகின்றன.

## மானூர்— அம்பலவாணர்

திருநெல்வேலிக்கு வடக்கே சங்கரநயினர் கோவிலுக்குப் போகும் சாலையில் ஒன்பதாவது கல்லில் இருப்பது மானூர். இதிலுள்ள அம்பலவாணர் கோவில் நெல்லையப்பர் கோவிலோடு மிகவும் தொடர்புடையது. மானூருக்கு மேற்கே ஒரு பெரிய குளம் இருக்கிறது. இக் குளத்து நீரே மதவக் குறிச்சி, மாவடி, மானூர், எட்டான் குளம் ஆகிய நான்கு ஊர் நஞ்சைகளுக்கும் பாய்கின்றது. அம்பலவாணரே இவ்வூர்க் கோவிலில் நடுநாயகமாக விளங்குகின்றார். கீழ்பால் உள்ள மண்டபம்தான் கருவூர்ச் சித்தருக்கு நெல்லையப்பர் காட்சி கொடுக்க இங்கே வரும்போது இறங்கும் இடம். இக் கோவிலில் நெல்லையப்பர் காந்திமதிக்குப் புதிதாக இடம் அமைந்து பூசனை நடைபெறுகின்றது.

கருவூர்ச் சித்தருக்கு நெல்லையப்பர் இங்கே வந்து காட்சிகொடுத்து நடனமும் காட்டியருளினர். அதுதான் இக் கோவிலின் தோற்றத்துக்குக் காரணம். நெல்லையப்பர் திருநடனம் செய்யும் சபைகள் ஆறு. முதற் சபை தாமிர சபை ; இதில் ஆடியது பரப்பிரம நடனம். இரண்டாம் சபை அம்மை கோவில் முன் வடபால் இருக்கும் வடிவம்பலம் ; இதில் ஆடியது சவுந்தரிய நடனம். மூன்றாவது நெல்லையம்பலம்; இதில் ஆடியது பிரதாப நடனம். நான்காவது ஆயிரக்கால் மண்டபம் ; இதில் ஆடியது சூரிய நடனம். ஐந்தாவது சிந்துபூந்துறைத் தீர்த்த மண்டபத்தில் ; இது தீர்த்த நடனம். ஆறாவது மானூர் அம்பலம் ; இதில் ஆடியது ஆச்சரிய நடனம். கருவூர்ச் சித்தர் ஆண்டுதோறும் ஆவணி மூல நாளில் அதிகாலையில் நெல்லையப்பர் காட்சியைக் கண்டு வழிபட்டுத் தவம் செய்திருந்து கொல்லம் 386-ல் (கி.பி. 1210) காந்தீச்சரத்தில் முத்தியடைந்தனர்.

மானூர் என்பது மானவன் நல்லூர், மானமா நகரம், மானையூர் என்ற பெயர்களையுடையது. மாயமான்குறிச்சி என்பது பக்கத்தில் இருத்தலினாலே சீதையை மயக்கிய அந்த மாய மானைப்பற்றிய ஊர் என்றும் வந்திருக்கலாம் இப் பெயர். அல்லது மானவன் என்ற மன்னவனோடு தொடர்புடைய நல்லூராகவும் இருக்கலாம். மனு என்ற மன்னன் இங்கே வந்து மனுவிலிங்கம் அமைத்து வணங்கினன் என்று புராணம் கூறுகிறது. அம் மனுவின் ஊர் மானூர் என்று திரிந்து வழங்குவதோ என்று எண்ணவும் இடம் உண்டு.

கருவூர்ச் சித்தருக்கு நெல்லையப்பர் காட்சி கொடுத்த இடத்தில் மிகப் பழமையான ஒரு மண்டபம் இருந்தது. அதுதான் சித்திர சபை. அதில் வடக்குச் சுவரில் நடராசருடைய சித்திரம் எழுதப் பெற்று வழிபடப்பெற்றது. அதனாலேயே அது சித்திர சபை என்ற பெயரை அடைந்தது. கருவூர்ச் சித்தருக்குக் காட்சி ஆண்டுதோறும் நடைபெறத் தொடங்கிய பின்னால் நெல்லையப்பர் வந்து தங்குவதற் காக ஒரு மண்டபம் எழுந்தது. இவைகளே ஆதியில் உண்டானவை. சித்திர சபைத் தூண்களில் கி. பி. 800-ல் உள்ள கல் வெட்டுக்கள் காணப் பெறுவதால் இது மிகவும் பழமையான கோவில் என்பது நிலைபெறுகிறது. சீவலமாற பாண்டியர் இவ்வூரில் வந்து ஆயிரத் தெட்டு நாள் தங்கி வழிபட்டு வீடு பெற்றார் என்பது தச்சன் நல்லூர்ச் சாசனத்திற் காணப்படுவது. அம் மன்னர்பிரான் பூசித்து வந்த உடையவராகிய பாணலிங்கமே அம்பலவாணர் என்ற பெயருடன் சித்திர சபையில் எழுந்தருளச் செய்யப்பெற்று வழிபாடு செய்யப்பெற்று வருகிறது. இச் சிவலிங்கப் பெருமான் பெயரா லேயே மானூர்க் கோவிலும் சொத்துக்களும் அமைந்திருக்கின்றன.

## திருநெல்வேலிக் கைலாசபுரம்—கைலாசநாதர்

ஊரைச் சுற்றி நெல் வயல்கள் வேலி போல இருக்கின்றன. அதனாலேதான் இப் பெரு நகர் நெல்வேலி என்று பெயர் பெற்றது போலும்! பொருநையாற்றின் கீழைக் கரையில் சுலோசன முதலி யார் பாலத்திற்கு மிக அருகே ஒரு சிறு ஓடை வருகிறது. அதில் ஒரு சமயம் பலாப்பழம் ஒன்று வெள்ளத்தில் மிதந்து வரக் கண்டாள் அவ் வழியே சென்ற பெண் ஒருத்தி; அவள் அதன்மேல் ஆசை கொண்டு இடுப்பில் தன் பிள்ளையிருப்பதையும் மறந்து பிள்ளையை ஓடையிற்போட்டுவிட்டுப் பலாப் பழத்தை எடுத்தாள்; அதனால் அந்த ஓடை இன்றும் "பிள்ளையைப் போட்டுப் பலாப் பழம் எடுத்த ஓடை" என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

கருவறை (கருப்பக்கிரகம்)யில் கைலாசநாதர் சிவலிங்க வடிவாக எழுந்தருளியிருக்கின்றார். மா மண்டபத்தின் வடபுறம் அம்மை சுந்தரவல்லி தெற்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றாள். வைகாசி விசாகத்தில் ஆராட்டு நிகழும் பெரிய திருவிழா இங்கு நடைபெறும். இக் கோவிலுக்கு ஒரு திருத்தேர் இருக்கிறது.

சைவ சமையாசிரியராகிய திருஞானசம்பந்தப் பெருந்தகையாருடைய திருவடி மிதிக்கும் பேறு பெற்றது இத் திருநகர். அவருடைய திருவாயால் சிந்துபூந்துறை எனப் பெயரிடப் பெற்ற பெருமையது இத்துறை. அப் பெரியார் எழுந்தருளிவந்த ஏழாம் நூற்றாண்டிலே இத் துறையில் குரங்குகள் கூட்டம் கூட்டமாக வாழ்ந்திருந்த வானளாவிய செழுமையான சோலைகள் நிரம்பியிருந்தன என்பது அவருடைய திருநெல்வேலித் தேவாரத்தினால் தெளிவாக விளங்குகின்றது. இவ்வளவு பெருமையும் செழுமையும் வாய்ந்த சிந்து பூந்துறையின் கரையிலே இருக்கும் சிறப்பினது கைலாசநாதருடைய திருக் கோவில்.

## திருநெல்வேலி—தொண்டர்கள் நயினார்

சீர்காழியிலே பிறந்தருளி, மூன்று வயதிலே அம்மையப்பரால் ஞானப்பால் ஊட்டப்பெற்று ஞானசம்பந்தப் பிள்ளையார் என மூன்றுலகத்தாரும் கொண்டாட,

> " தோடுடைய செவியன் விடையேறி ஓர்தூவெண் மதிசூடி
> காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளம் கவர் கள்வன்
> ஏடுடைய மலரால் முனைநாள் பணிந்தேத்த அருள் செய்த
> பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் அன்றே "

என்று தொடங்கிப் பதிகம் பாடி, " பால் கொடுத்தது யார் ? " என்று கேட்ட தந்தையாருக்குப் " பெம்மான் இவன் அன்றே ! " என்று சுட்டிக் காட்டிய புகழாளர் ஆளுடைய பிள்ளையார் ஆவர். அவர் மதுரைக்கு வந்து தேவாரம் பாடிச் சமணர்களை வென்று கூன் பாண்டியரை நின்ற சீர் நெடுமாற நாயனார் ஆக்கி, அவரும் அவருடைய திரு மனைவியார் மங்கையர்க்குத் தனியரசி தமிழ் நாட்டின் குலதெய்வம் மங்கையர்க்கரசியாரும், மந்திரி குலச்சிறை நாயனாரும் உடன் வரப் பல திருப்பதிகளையும் வணங்கிக் கொண்டு குற்றாலத்தில் தேவாரம் பாடித் திருநெல்வேலிக்கும் வந்து தேவாரம் பாடித் திருமடத்தில் அடியார்களோடு எழுந்தருளியிருந்தார். ஒரு நாள் அங்கே ஒரு சிவலிங்கம் கண்டு பூசை செய்ய வேண்டும் என்று திருவருளால் அவருக்கு ஆசை உண்டாயிற்று. அப்போது உடன் இருந்த அகத்தியனார் " வேய் முத்தராகிய நம்பெருமான் நெல்லையப்பர் திருத்தளிக்கு வடமேற்கே ஒரு வில்வ

வனம் இருக்கிறது ; அங்கே சிவலிங்கப் பெருமானுர் வில்வ மரத் தடியில் தாமே முளைத்தெழுந்து கோமதியம்மையுடன் எழுந்தருளி யிருக்கின்ருர். அவரை வழிபடுவோம்” என்று கூறினுர். உடனே அவரை முன்னிட்டுக்கொண்டு ஆளுடைய பிள்ளையார் அடியார் சூழ அங்கே சென்று பெருமானைக் கண்டு பூசனை ஆற்றினுர் ; தொண்டர்கள் அனைவரும் வழிபட்டார்கள் ; அதனுல் அப் பெருமான் தொண்டர்கள் நயினுர் என்று பெயர் பெற்ருர் ; மேற்கே உள்ள தளியினர் ஆனதால் திருமேல்தளியுடைய நாயனுர் என்றும், வில் வனத்தினர் ஆதலின் வில்வநாதர், வில்வவன நாதர் எனவும் பெயர் பெற்ருர். அம்மை ஆவுடையம்மை, கோமதித்தாய். அங்கே மிக விரைவில் மன்னவரால் திருக்கோவில் எழுந்தது. அதில் காமிக ஆகமப்படி பூசனை நடைபெறுகிறது. தளி—கோவில்.

இக் கோவிலில் கல் வெட்டுக்கள் பல இருக்கின்றன. அவை ஒன்றில் குலோத்துங்க சோழன் “சம்பந்தர் நமக்குச் சொன்னபடி திருமேற்றளியுடைய நாயனுர்க்கு” என்று குறிப்பிட்டு இரண்டு வேலி நிலம் கொடுத்தமை காணப்படுகின்றது. அம்மை கோவில் மேல் தளத்தில் இரண்டு கயல் மீன்களின் வடிவங்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. அதனுல் இக் கோவிலைக் கட்டினவர் ஒரு பாண்டியர் என்பது புலனுகின்றது. இத் திருக் கோவிலின் முன்பிருந்துதான் வடக்கே சங்கரநயினுர் கோவிலுக்கு ஒரு சாலையும், மேற்கே திருக் குற்ருலத்துக்கு ஒரு சாலையும் பிரிந்து செல்கின்றன.

## திருநெல்வேலி—திருஞானசம்பந்தர்

திருநெல்வேலியில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் வந்து தங்கி யிருந்த இடத்தில் அவருக்கு ஒரு திருக் கோவில் கட்டப்பெற்றுப் பூசனையும் விழாவும் ஒழுங்காக நடைபெற்று வருவன. அக் கோவில் இருக்கும் தெரு சம்பந்தமூர்த்தி தெரு என்று பெயர் பெற்றது. தொண்டர்களே ! ஆளுடைய பிள்ளையாரைக் கண்ணுரக் கண்டு தலையாரக் கும்பிட்டுத் திருவருள்பெற்றுக் கடைத்தேறுவீர்களாக.

திருஞானசம்பந்தப் பெருந்தகையார் நெல்லையப்பர் திருக்கோவிலின் முன்பு நின்று தேவாரம் பாடிய இடத்தை அடுத்து ஒரு பிள்ளையார் கோவில் உள்ளது. இது நெல்லையப்பர் சந்நிதித் தெருவில் தெப்பக் குளத்தின் தென்மேற்கு மூலையில் இருக்கிறது. சம்பந்தர்

உருவமும், விநாயகர் கோவிலின் பக்கத்தில் அமைக்கப்பெற்று தனிச் சிறு கோவிலில் உள்ளது. இந்தப் பிள்ளையார் பெயர் கொற்கைப் பிள்ளையார். இங்கே வந்துதான் மண்ணெடுத்துச் சென்று ஆனிப் பெருவிழா ஆரம்பிக்கப்பெறுகிறது ; அதனால் இவர் அங்குரப் பிள்ளையார் என்றும் பெயர் பெறுவரர்.

## பாளையங்கோட்டை—திரிபுராந்தகப் பெருமான்

பாளையங்கோட்டை பொருநை ஆற்றுக்குக் கீழ்புறம் இருக்கும் நகராட்சி. இவ்வூரின் கீழோரத்தில் திரிபுராந்தகப் பெருமான் திருக் கோவில் இருக்கிறது. திரிபுரங்கள்—முப்புரங்கள், மூன்று கோட்டைகள். அந்தகன்—எமன் ; திரிபுரங்களுக்கு அந்தகனாகி அவைகளை எரித்த பரம்பொருள் சிவபெருமான். திரிபுர அந்த ஈசர் திரி புராந்தீசர் எனவும் இவரைக் கூறுவர். அந்தம்—முடிவு.

திரிபுராந்தகப் பெருமான் சிவலிங்கமாகக் கோமதியம்மையுடன் திருக்கோவிலில் எழுந்தருளியிருக்கின்றார். இவருக்குச் சித்திரை மாதம் பெருவிழா நடைபெறும். இவர் பத்தாம் திருவிழாவன்று வண்ணார்பேட்டையிலிருக்கும் குட்டம் தீர்த்த துறையில் மக்கள் உய்யு மாறு தீர்த்தம் அருளுகின்றார்.

இற்றைக்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கி.பி. 1648-ல் தச்சுக் காரர்கள் திருச்செந்தூர் முருகன் கோவிலிலுள்ள ஆறுமுகப் பெரு மானைத் தூக்கிப் போய்விட்ட செய்தியையறிந்த வடமலையப்ப பிள்ளையன் உடனே புதிதாக ஆறுமுக நயினார் திருவுருவம் சமைக்கச் செய்தனர். அத்திருவுரு திருச்செந்தூருக்குக் கொண்டு வரும் வழி யில் தங்கிய இடமே சாலைக் குமரர் கோவில் ; அங்கிருந்து புறப்பட்டு ஆற்றைத் தாண்டியவுடன் களவு போன திருவுருவம் கடலில் கண் டெடுக்கப்பெற்றது என்ற செய்தி வந்தது ; அந்த இடமே முருகன் குறிச்சி என்று பெயரிடப்பெற்றுப் பாளையங்கோட்டை ஊரின் மேற்குப் பகுதியாக விளங்குகின்றது. புது ஆறுமுக நயினார் திருவுரு வட மலையப்ப பிள்ளையன் ஆணைப்படி இந்தச் சிவன் கோவிலில் வைக்கப் பெற்று இன்றும் பேரழகுடன் விளங்குகின்றது. வெங்கு பாச்சா என்று புகழப் பெறுகிற வெங்கு முதலியார் என்பவர் இத் திருக் கோவிலைக் கட்டினார். இத் திருக்கோவிலின் அருகிலுள்ள குளம் புராந்தகர் குளம் என்றும், இப்பகுதி புராந்தகநகர் எனவும் பெயர் பெற்றன.

## முன்னீர்ப் பள்ளம்—பரிபூரணகிருபேசர்

முன் நீர்-முன்னீர்-கடல். நிலம் தோன்றும் முன் நீர் தோன்றியது. அந்த நீரை உடையது கடல். இதனை முந்நீர் என்றும் கூறலாம். மூன்று-நீர்—முந்நீர். மூன்று தன்மைகளை உடையது. அதாவது ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய மூன்று தன்மைகளை உடையது ; அது கடல். ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் ஆகிய மூன்று நீர்களை உடைமை பற்றிக் கடல் முந்நீர் ஆயிற்று எனவும் கொள்கின்றனர். இவ்வூர் முன்னீர் போலும் பள்ளத்தில் இருப்பது. பாளையங்கோட்டையாகிய மேட்டு நிலத்துக்கு இவ்வூர்ப் பகுதி மிகவும் பள்ளமாக இருத்தலினாலே இப்பெயர் இவ்வூருக்கு ஆகியும் இருக்கலாம்.

பரிபூரணம்-முழுமை ; கிருபை-திருவருள். முழு அருள்நாதர் என்பது பெருமான் திருப் பெயர். பாளையங்கோட்டையிலிருந்து சேரன்மாதேவிக்குப் போகும் மோட்டார் வண்டி இவ்வூர் வழியாகவே போகிறது. இப்போது இவ்வூருக்கே திருநெல்வேலியிலிருந்து அடிக்கடி மோட்டார் வண்டிகள் போய் வருகின்றன.

## சிவலப்பேரி—விசுவநாதர்

சீவல மாற பாண்டியன் இருந்து ஒரு பெரிய ஏரியை வெட்டிய படியால் அந்த ஏரி சீவலவன் ஏரி, சீவலப்பேரி எனவும் அதை ஒட்டி எழுந்த ஊரும் சீவலப்பேரி என்றும் பெயர் பெற்றன. இந்த ஊரின் கிட்டத் தண் பொருநை ஆறும், சிற்றாறும், கயத்தாறும் ஆகிய மூன்று ஆறுகளும் கூடுகின்றன ; அதனால் இவ்வூர் முக்கூடல் என்றும் பெயர் பெறும். முக்கூடல் தான் முதலில் அமைந்த பெயர்.

விசுவநாதப் பெருமான் கிழக்கு முகமாகவும், அம்மை விசாலாட்சி தெற்கு முகமாகவும் எழுந்தருளியிருக்கின்றனர். இவர்களுக்குப் பங்குனி மாதம் ஒரு பெரிய திருவிழா நடைபெறும். அதை ஒட்டி மாட்டுத் தாவணி ஒன்று இங்கே கூடுகிறது. இவ்வூர் வழியே வாடகை மோட்டார் வண்டிகள் ஓடுகின்றன. தாவணி என்பது சந்தை. விசுவம்-நாதர் : பெரிய பெருமான். விசாலம்-அட்சி—விரிந்த கண்ணை உடையாள். இப்பெயர்கள் காசியில் எழுந்தருளியிருக்கும் விசுவநாதர் விசாலாட்சியை நினைந்து அமைக்கப் பெற்றவை.

## கங்கைகொண்டான்—கைலாசநாதர்

திருநெல்வேலிக்கு வடக்கே புகைவண்டி வழியாக ஒன்பதாவது மைலில் உள்ள ஒரு புகை வண்டி நிலையம் இவ்வூர். திருநெல்வேலியிலிருந்து வண்டிச்சாலை வழியாக உள்ள தூரம் பதின்மூன்று மைல். இதன் வட புறமுள்ள சிற்றுற்றைத் தாண்டுவதற்கு நல்ல புகை வண்டிப் பாலமும் வலுவான வண்டிப் பாலமும் இருக்கின்றன. வண்டிப்பாலம் 1844-ல் எட்டையபுரம் அரசருடைய பொருட் கொடையாற் கட்டப் பெற்றது. இது ஏழு கண் உள்ளது. இது அடிக்கடி வெள்ளத்தால் தண்ணீர் கொள்ளாமல் கரையை உடைத்து வந்தபடியால் இதன் வடபுறம் ஒன்பது கண்ணுள்ள பெரிய பாலம் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் கட்டப் பெற்றுள்ளது. புகை வண்டி நிலையத்திலிருந்து ஊர் இரண்டரை மைல். இவ்வூர் வழியாக வாடகை மோட்டார் வண்டிகளும் அடிக்கடி ஓடுகின்றன.

திருக்கோவில் இரண்டு தனிப் பகுதிகளாக இருக்கிறது. வடக்குப் பகுதியில் கைலாசநாதரும் தெற்குப் பகுதியில் அம்மை ஆனந்த வல்லியும் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கின்றார்கள். பெருமான் புளிய மரத்தடியில் தாமே முளைத்தெழுந்தவர். மணப்படை வீட்டிலிருந்த சீவலமாற பாண்டியன் இத்திருக்கோவிலைக் கட்டினன். பின் வருவன கல்வெட்டுக்களிற் கண்ட குறிப்புக்கள் :—

“ சீவல்லவ மங்கலத்துக் கயிலாயத்துப் பட்டாரகர், கைலாயத்துப் பெருமான் அடிகள், பாண்டி நாட்டு முடிகொண்ட சோழ வள நாட்டுக் கீழ்க்களக் கூற்றத்து கங்கைகொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்துக் கைலாய முடையார், கங்கை கொண்டான் உடையார், கைலாயமுடைய நயினர், நாச்சியார் ஆனந்தவல்லியார், சிற்றுற்றங் கரை.” இதனல் சீவல்லவ மங்கலம் கங்கைகொண்ட சோழ மங்கலமாகிக் கங்கைகொண்டான் ஆயிற்று. இவ்வூரில் சித்திரை மாதம் பெருவிழா நடைபெறும்.

கோவில் கட்டும்போது புளிய மரத்தடியை விட்டுப் பெருமான் தொண்ணூற்றுறு அடி விலகி இருந்து இடவாய்ப்புத் தந்தருளினர். பெருமான் திருமுடிமேல் ஒரு சிறு வெட்டுக் காணப்படுவது அவர் தாமே முளைத்த அருள் வள்ளல் என்பதை வலியுறுத்தும்.

இதுகாறும் ஆராய்ந்தனவெல்லாம் நெல்லை மாவட்டக் கோவில்கள். இனி, தண்பொருந்தத்தை விடாமற் பொருந்திச் சென்று சீவைகுண்ட வட்டம் திருக்கோவில்களைக் கண்டு வழிபடுவோம்.

# ௩. சீவைகுண்ட வட்டம்

தண்பொருநையாறு சீவைகுண்ட வட்டத்திற் சிறப்புறப் புகுகின்றது. இவ்வட்டத்தில் ஏழு கோவில்கள் ஆண்டுக்கு ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய் பெறுவன. அவற்றுள், தூத்துக்குடிச் சங்கர ராமேச்சுரர் கோவில், வெள்ளூர் நடுநக்கர் கோவில், காந்தீச்சரம்—ஏகாந்த லிங்கர் கோவில் ஆகிய மூன்று கோவில்கள் மட்டும் சற்றேற ரூபா ஒரு பதினாயிரம் வருவாயுடையன. சீவைகுண்டம் கைலாச நாதர் கோவில் சற்றேற ரூபா எண்ணாயிரம் வருவாயுடையது. ஏனைய முரப்பநாடு, பெருங்குளம், பழைய காயல் ஆகிய மூன்றூர்ச் சிவன் கோவில்களும் சற்றேற ரூபா மூவாயிரம் வருவாயுடையன.

## முரப்பநாடு—கைலாசநாதர்

சீவைகுண்ட வட்டத்தில் நுழையும்போது தண்பொருநைப் பேராற்றின் தென்கரையில் இருப்பது முரப்ப நாடு. பருக்கைக் கற்கள் நிரம்பிய மேட்டு நிலம் முரம்பு எனப்படும். அந்த நிலத்தையுடைய பகுதி முரப்ப நாடு. அந்நிலத்தில் தோன்றிய ஊர் முரப்பநாடு என்று பெயர் பெறுவதாயிற்று. மருதூரில் உள்ள அணையிலிருந்து வரும் கால் இவ்வூரை மிகவும் வளம்படுத்துகின்றது. மருதூரில் கைலாசநாதர் திருக்கோவில் இருக்கிறது. "சோழ மன்னன் ஒருவன் தனக்குக் குதிரை முகத்தோடு பிறந்த பெண்ணைக் கண்டு மனம் வருந்திச் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்தான்; சிவனார் கட்டளைப்படி அவன் இங்கே வந்து அப்பெண்ணுடன் பொருநையில் முழுகினான்; உடனே அப்பெண்ணுக்கு மனித முகம் வந்தது" என்பது புராண வரலாறு.

சூரபதுமனைச் சேர்ந்த அசுரர் செய்த தொல்லையைப் பொறுக்க மாட்டாமல் முனிவர் முறைப்பட நின்று முறைப்பாடு தெரிவித்தார்கள்; பெருமான் திருவுளம் இரங்கி அவர்களுக்கு அருள் செய்தான். முறைப்படு நாடு முறைப்ப நாடு எனப் பெயர் பெற்று வழங்குவதாயிற்று இவ்வூர் என்பது புராணம்.

இங்கே கைலாசநாதர் சிவகாமியம்மையுடன் எழுந்தருளியிருந்து திருவருள் பாலிக்கிறார். திருக்கோவிலை ஒட்டி இங்கே திருவாவடுதுறைத் திருமடம் ஒன்று இருக்கிறது; இங்கே அளவிட முடியாத நஞ்சை நிலங்கள் திரு மடத்துக்கு உரியன. இவ்வூருக்கு நேர் எதிரே ஆற்றின் வடகரையிலிருப்பது வல்லன் நாடு.

## வல்லன் நாடு—திருமூலநாதர்

சீவல்லவ பாண்டியன் நாடு வல்லவன் நாடு. அந் நாட்டின் ஓர் ஊராகிய இது வல்லன் நாடு என்று பெயர் பெறுவதாயிற்று. இங்கே திருமூலநாதர் திருக்கோவில் சிறப்புடன் விளங்குகின்றது.

முரப்ப நாட்டுக்கும் வல்லன் நாட்டுக்கும் இடையே பேராற்றின் மேல் ஒரு வலுவான வண்டிப் பாலம் இருக்கிறது. அதனால் திருநெல்வேலியிலிருந்து தூத்துக்குடி போவதற்கு இவ்வழி குறுக்கு வழியாகி அடிக்கடி வாடகை மோட்டார் வண்டிகள் இவ் வழியாக விரைந்தோடுகின்றன.

வல்லன் நாட்டை ஒட்டிப் பறம்பொன்றிருக்கிறது. அந்தப் பறம்பை ஒட்டிப் பொருநையாறு போகிறது. அதிலே நல்ல கிணறுகள் வெட்டித் தண்ணீர் வல்லன் நாட்டுப் பறம்பின் வடபாலுள்ள மேட்டுக்கு ஏற்றப்பட்டுத் தூத்துக்குடிக்குக் கொண்டுபோகப் பெறுகிறது. இவ்வூர் திருநெல்வேலியிலிருந்து பத்து மைல் ; நெல்லைக்கும் இவ் வூருக்கும் அடிக்கடி நகர வாடகை மோட்டார் ஓடுகிறது. இங்கிருந்து தூத்துக்குடி இருபத்திரண்டு மைல். இங்குள்ள கல் வெட்டுக்களில் இவ்வூர் “ சயங்கொண்ட பாண்டியபுரம், சயங்கொண்ட பாண்டியன் நல்லூர் ” என்று குறிப்பிடப் பெறுகிறது.

## வேளூர்—நடுநக்கர்

வல்லன் நாட்டைத் தாண்டிய பொருநைப் பேராறு மணறகளு என்ற ஊருக்கு வருகிறது. இங்கே மீனாட்சி அம்மையுடன் சொக்க லிங்கப் பெருமான் எழுந்தருளியிருக்கின்றார். சொக்கநாதரைக் கும்பிட்டுக் கிழக்கே இரண்டு மைல் வந்தால், ஆழ்வார் கற்குளம் இருக்கிறது. அதற்குத் தென் கரையில் இருப்பது கருங்குளம். கருமை—பெருமை ; ஆதலால் கருங்குளம் என்பது பெருங்குளமாம். மிகப் பெரிய அக்குளம் சாலை மேல் கருங்குளம் என்ற பெயருடன் இருக்கிறது. இங்கே மார்த்தாண்டன் என்ற மன்னவன் கோவில் கட்டி வணங்கிய மார்த்தாண்டேசர் எழுந்தருளியிருக்கின்றார்.

இவ்வூர் திருநெல்வேலியிருந்து கிழக்கே திருச்செந்தூர்ச் சாலையில் பத்தேமுக்கால் மைலில் இருக்கிறது. இதன் அருகே தாதன் குளம் என்ற புகை வண்டி நிலையம் இருக்கிறது. அதற்குத் தெற்கே

இரண்டு மைல் தூரத்திலுள்ள தெற்குக் காரைச் சேரியில் அறம் வளர்த்த அம்மையுடன் குலசேகரநாதர் எழுந்தருளியிருக்கின்றார். 1950-ல் ரூபா 3,872 வருவாயுடையதாக இருந்த இக்கோவில் இப்போது ரூபா 1,910 வருவாயுடையதாக உள்ளது.

கருங்குளத்தில் சாலைமேல் ஒரு சத்திரம் இருக்கிறது; இதிலிருந்து கிழக்கே மூன்றரைக் கல்லில் திருச்செந்தூர்ச் சாலையிலிருந்து அரை மைல் தெற்கே தள்ளியிருக்கிறது வேளூர், இது இப்போது வெள்ளூர் என்று அழைக்கப்பட்டாலும், இதன் மெய்ப் பெயர் வேளூர்தான். வேள்—மன்மதன்; இவன் கருநிறம் உடையவன்; யாவராலும் (வேள்–விரும்பு) விரும்பப்படும் பேரழகினன். இத்தகைய மன்மதனைக் காட்டிலும் பேரழகுடைய முருகப் பெருமான் சிவப்பு நிறமுடைய வேள் என்னப்பட்டுச் செவ்வேள் என்று பெயர் பெறு கின்றான். முருகப் பெருமான் சூரபதுமனை வென்று திருச்செந் தூரில் சிவ வழிபாடு செய்தது போல இங்கும் வந்து நடு நக்கரை வழிபட்டான் என்பர்.

நக்கர்—சிவபெருமான். நக்கல்—ஒளி. ஒளியுருவாய் விளங்குபவர் நக்கர். நக்கல்—சிரித்தல்; முப்புரங்களை நக்கு எரித்தவர் நக்கர். இவ்வூருக்குத் தெற்கேயுள்ள மழவையில் ஒரு நக்கரும் வடக்கேயுள்ள புதுக்குடியில் ஒரு நக்கருமாக இருத்தலின் இங்கே வட நக்கருக்கும் தென் நக்கருக்கும் நடுவில் இருப்பவர் நடு நக்கர் என்னப் பெற்றார். இரண்டு அடியார்களுக்குள் ஏற்பட்ட ஒரு பெரு வழக்கிலே நடுநின்று தீர்த்துவிட்ட பெரியார் பெருமான்; ஆதலால் நடுநக்கர் (மத்தியஃச்தநாதர்) என்னப் பெற்றார் என்று கூறுவாரும் உளர்.

## சீவைகுண்டம்— கைலாசபுரம்—கைலாசநாதர்

கைலாசநாதர் திருக்கோவிலை உடைமையினால் சீவைகுண்டம் கைலாசபுரம் என்ற பெயரை அடைந்தது. வைகுந்த நாதன் இருக்கும் பகுதியும் கைலாசபுரம் என்றே அழைக்கப்பட்டது. பின் காலத்தில் வைகுந்தநாதன் இருக்கும் இடம் வைகுந்தம், திருவைகுந்தம் என அழைக்கப்பட்டு, கைலாசநாதர் கோவிற் பகுதியும் திருவைகுந்தம் என அழைக்கப்படுவதாயிற்று. வைகுதல்—தங்குதல். வைகும் இடம் வைகுந்தம். திருமாலும் திருமகளும் வைகும் இடம்

திருவைகுந்தம் ; இங்ஙனம் ஆழ்வாராதியர் நாலாயிரப்பிரபந்தத்தில் வழங்குகின்றனர். திருவைகுந்தம், சீவைகுந்தம் ஆகி இன்று சீவைகுண்டம் என வழங்கப்படுவதாயிற்று.

இவ்வூருக்கு மேற்கே பதினாறு கல்லில் திருநெல்வேலியும், கிழக்கே பதினெட்டுக் கல்லில் திருச்செந்தூரும் இருக்கின்றன. இக் கோவிலுக்கு வடக்கே சிறிது தூரத்தில் பொருநைப் பேராறு ஓடி வந்தது. ஆற்றினால் ஊருக்குக் கேடு விளையும் என்றமை அறிந்த நல்லான் பொன்னப்ப பிள்ளை என்பவர் ஆற்றைத் தென் முகமாகத் திருப்பினார்; முன் ஆறு சென்ற வழியில் தொடர்பாகப் பெரிய குளம், பேரூர்க்குளம், சாமியாறு, சிவகளைக்குளம், பெருங்குளம் என்பன அவரால் அமைக்கப்பட்டன. ஆற்றிலிருந்து பெரியகுளத்துக்கு வருகிற கால்வாய் அவர் பெயரால் பொன்லாங்கால் என்று அழைக்க பெறுகிறது. இங்ஙனமாகத் திருப்பி விடப்பட்ட பொருநையாறு தெற்கே திரும்பி வந்து மறுபடி கிழக்கே திரும்பி ஊருக்குத் தெற்கு எல்லையாகி ஓடுகின்றது. பெருஞ்சாலையிலிருந்து ஊருக்கு வரவேண்டுமானால் பொருநையாற்றின்மேல் அமைக்கப்பட்டுள்ள பெரிய பாலத்தைக் கடந்துதான் வரவேண்டும். தென்கரையில் சாலை மேல் புதுக்குடி இருக்கிறது. இதன் தென்புறம் சீவைகுண்டம் புகைவண்டி நிலையம் இருக்கிறது. திருநெல்வேலிக்கும், திருச்செந் தூருக்கும் செல்லும் புகைவண்டி 1924–ல் தான் முதன் முதலாக ஓடத் தொடங்கிற்று.

கருவறையில் கைலாசநாதப் பெருமான் தாமே முளைத்தெழுந்த மூர்த்தியாகக் கிழக்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றார். அம்மை சிவகாமித்தாய் தெற்கே பார்க்கக் காட்சியருள்கின்றார். கைலாசநாதர், சிவகாமியம்மை, முதலீசர், விசாலாட்சியம்மை இவர்கள் கருவறை களின் மேல் அழகிய விமானங்கள் உள்ளன.

சந்தனக்கூத்தர் மண்டபத்தில் எட்டு யாளித்தூண்கள் இருக் கின்றன. யாளிகளின் கீழே சிங்கமும் யானையும், சிங்கம் யானை இரண்டும் அமையச் செதுக்கியுள்ள காட்சி சிறப்பத் திறமையை விளக்கு கின்றது. மேலும், ஆறு யாளிகளின் வாயினுள் உருளைக் கற்கள் கிடக்கின்றன. முகப்புத் தூண்களில் பகடையும், வீரபத்திரரும் ஆடிக்

கொண்டு கையில் வில், வாள் முதலிய போர்க் கருவிகளுடன் இருப்பது காணத் தக்க காட்சி. முன் பக்கத்தில் மொட்டைக் கோபுரத்துக்கு அருகிலுள்ள தூண் இரண்டிலும் வீரர் யாளி ஊரும் காட்சி கண்ணைக் கவர்வது. அவற்றை அடுத்துள்ள தூண்களில் கூத்தர், கைலைநாதர், இராவணேசுவரன் கையால் மலையைத் தூக்குதல், நம்மாழ்வார், உடையவர் இவர்களுடைய திருவுருவங்கள் சிறப்பச் சிறப்பைச் சீர்பெறக் காட்டுவன. முதலீசர் கோவிலினுள்ளே திருச் சுவர்களிலே பேரழகு படைத்த சிற்பங்கள் உள. அவை கண்டு மகிழத் தக்க சிறப்புடையன.

பண்டைக்காலத்தில் உரோமச முனிவர் என்ற பெரியார் தண் பொருநல் யாற்றின் கரையிலே ஒன்பது இடங்களில் கைலாசநாதரை நிலை பெறுத்தி வழிபட்டார். அவை, (1) சேர்ந்தமங்கலம், (2) இராசபதி (இது அழிந்துபோயிற்று), (3) தென் திருப்பேரை, (4) திருவைகுந்தம், (5) முரப்ப நாடு, (6) குன்றத்தூர், (7) சேரன்மா தேவி அம்மை நாதர் கோவில், (8) கோடகன் நல்லூர், (9) பாவ நாசம் என்பன. இவ் வொன்பது கைலாயங்களின் ஓவியமும் பெயரும் இக்கோவிலின் கலியாணக் குறட்டின் மேல்புறம் எழுதப் பெற்றிருக் கின்றன. இங்கே சித்திரை மாதம் பெருந்திருவிழா நடைபெறு கின்றது.

இக்கோவிலின் விமானங்களையும், மண்டபங்களையும் மதுரைச் சந்திர குல பாண்டியரும், பெரிய மொட்டைக் கோபுரத்தையும், கைலையம்பலத்தையும் திருமலை நாயக்க (1623-1659)ரும், வேள்விச் சாலையையும், சந்தனச் சபாபதி மண்டபத்தையும், கொடித் தூண் அதன் கீழ்பத்தி மண்டபத்தையும், வீரப்ப நாயக்க (1609-1623)ரும் கட்டினார்கள். இக்கோவில் திருப்பணி மாலையால் இவ்விவரங்களும் பிற திருப்பணிகளின் விவரங்கள் விளங்குகின்றன.

கைலாசபுரமாகிய இத்திருப்பதியிற் பிறந்தருளிய குமரகுருபர முனிவரைப் பற்றிய வரலாறு பின்னர் ஆராயப் பெறும். பொருநைத்தாயுடன் இரண்டு மைல் கிழக்கே செல்வோம். அங்கே ஆழ்வார் திருநகரியில் ஆற்றின் வடகரையில் இருந்து இப்போது ஆற்றின் உட்பக்கம் இருப்பது காந்தீச்சுரம்.

## ஆழ்வார் திருநகரி—திருக்காந்தீச்சுரம்

காந்தி முனிவரால் வழிபடப்பட்டமையால் காந்திலிங்கம், காந்தீச்சுரம் என்ற பெயர்கள் தோன்றின. மேலும் கருவூர்ச் சித்தர் பெருமானை வழிபட அவர் முன் பெருமான் கோடி சூரியக் காந்தியுடன் தோன்றியருளினார். உடனே கருவூர்ச் சித்தர் காந்தீச்சுரம் என்ற பெயர் அமைய வரம் கேட்டார்.

" அருங்குயர் மகாலிங்கத்தில் ஆயிரம் கோடிகோடி
பருதியங் குதையம் போலும் படரொளி பரந்து தோன்ற
மருவும் முக்கண்ணும் மானும் மழுவும் செங்கரமும் மெய்யும்
கருவூரிற் சித்தர் காணக் காட்டினன் கருணைநாதன்.

" என்று நற்றுதிகள் சொல்லி இணையடி இறைஞ்சி ஏத்தி
நின்றிசை பாடி ஆடி நினைத்துளம் உருகிப் போற்றி
துன்றுமெய்ச் சோதியாகத் தோன்றலால் இந்த ஊரும்
நன்று நின்பெயரும் காந்தீச்சுரமென நவில வேண்டும்.

" மற்று நல் வரங்களெல்லாம் மகிழ்வொடு பெற்று மாயை
உற்றிடும் வினையும் நீங்கி உயர்கதி அடையும் பேறு
பெற்றுயர் கருவூர்ச் சித்தர் பிறங்கு ஒளி உருவத்தோடு
கற்றைவார் சடையார் காந்தீச்சுரர் அடிக் கமலம் சேர்ந்தார்."

—திருநெல்வேலித் தலபுராணம்.

காந்தீச்சுரர் ஏகாந்த லிங்கர். ஏகாந்த லிங்கர் என்ற பெயரே காந்த லிங்கர், காந்தீசர் என்று அமைந்திருத்தலும் கூடும். ஏகாந்த லிங்கப் பெருமான் கிழக்கே நோக்கியிருக்கின்றார். அம்மை அறம் வளர்த்தாள் தெற்கு முகமாகத் திருக்காட்சியருள்கின்றாள். குலசேகர பட்டினத்தில் இருந்த குலசேகர பாண்டியர் குலசையிற், போலவே காந்தீச்சுரம், தெற்குக் காரைச்சேரி, கல்லிடைக் குறிச்சி, செங்கோட்டை ஆகிய இடங்களில் அறம் வளர்த்த அம்மையை நிலை பெறுத்தி வணங்கினார்.

## பெருங்குளம்—திருவழுதீசர்

நம்மாழ்வாரின் முன்னோர்களில் ஒருவராகிய திருவழுதி என்ற பாண்டியரால் நிலைபெறுத்தப் பெற்றமையால் இவ்வூர்ச் சிவலிங்கப் பெருமான், வழுதி-ஈசர்—வழுதியீசர், வழுதீசர் என்று பெயர்

பெற்றார். பெரியகுளத்தை உடைமையால் இவ்வூர் பெருங்குளம் என்றும் குடந்தை எனவும் பெயர் பெற்றது. சீவைகுண்டத்தின் வழியாக ஏறலுக்குப் போகும் வாடகை மோட்டார் இவ்வூர் வழியே செல்கின்றது. இவ்வூர் பொருநையாற்றுக்கு வட கரையில் வடக்கே தள்ளி இருக்கிறது.

திருவழுதீசர் கிழக்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றார். அக் கோவிலுக்குத் தெற்கே தனிக் கோவிலில் அம்மை கோமதித்தாய் காட்சியருள்கின்றாள். இங்கே தை மாதம் பெருவிழா நடைபெறும். இவ்வூரில் செங்கோல் மடம் என்ற சைவத் திருமடம் இருக்கிறது. அம்மை கோவிலின் முன்பு ஒரு திருக்குளம் கோவிலின் உள்ளே இருக்கிறது.

## பழைய காயல்—சங்கமுகேசர்

கடலோடு பொருநையாறு கலக்கும் இடம் சங்கமுகம்; சங்க முகத்தில் திருக்கோவில் கொண்டிருக்கும் சிவலிங்கப் பெருமான் சங்கமுக ஈசர்.

காயல் என்பது கழி, கழிமுகம் ; கடலைவிட்டுக் கழிந்து மணலால் தடையுண்டுள்ள நீர்த்தேக்கம் காயல். பழைய காயல் பண்டைக் காலத்தில் இணையற்ற துறைமுகமாக இருந்தது. கடல் பின் தள்ளிப்போய்விட்டதனால் இதன் முதன்மை குறைந்துபோயிற்று. புன்னைக்காயல் துறைமுகமாகி முதன்மை பெற்றபோது இது பழைய காயல் என்று அழைக்கப் பெறுவ:தாயிற்று. காயல் மிக்க சிறப்புடன் இருந்த நாளையில் சங்கமுகேசருக்குச் சிறப்புக்கள் மிகமிக இருந்திருத்தல் வேண்டும்.

இப்போதும் புண்ணிய காலங்களில் இங்கே பெருங்கூட்டம் கூடிக் கடலாகிய சங்கமுக தீர்த்தத்தில் நீராடிச் சங்கமுகப் பெருமானை வழிபட்டு நற்பேறு பெறுகின்றது.

இதுவரை ஆராய்ந்த கோவில்கள் தண்பொருந்தப் பேராற்றினை அண்மி இருப்பன. இனி, தூத்துக்குடி மாநகரின் சங்கர இராமேசரைச் சென்று பணிவோம். தூத்துக்குடி முழுவதையும் இன்று நீரால் நிரப்புவது தண்பொருந்தப் பேராறே.

## தூத்துக்குடி நகர்

*இது திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நகராட்சி, பெரிய துறைமுகம். ஆதலின் இவ்வூர் தோன்றி வளர்ந்த வரலாற்றை விவரமாக ஆராய்வோம்.*

திருநெல்வேலி மாவட்டம் சீவைகுண்டம் வட்டத்தில் கடற்கரையிலுள்ள மிகப் பெரிய துறைமுகப் பட்டினம் தூத்துக்குடி. இது தென்னிந்திய புகை வண்டித் தொடரின் முடிவிடம். இது சென்னையிலிருந்து 405 மைல் தூரத்தில் இருக்கிறது ; அல்லாமலும் இந்நகர் தென் திசையிலுள்ள பெரிய நகரங்களோடு மிக நல்ல சாலைகளாலே இணைக்கப்பெற்றுள்ளது. குறுக்குச்சாலை எட்டையாபுரம் வழியாகக் கோவிற்பட்டி, மதுரை, சங்கரநயினார் கோவில் ; குறுக்குச் சாலை ஓட்டப்பிடாரம் வழியாக மணியாச்சி, திருநெல்வேலி ; குறுக்குச் சாலை குளத்தூர் வழியாக விளாத்தி குளம், நாகலாபுரம் ; குறுக்குச்சாலை எட்டையாபுரம் வழியாக அருப்புக்கோட்டை, மதுரை (குறுக்குச் சாலை என்ற பெயர் எவ்வளவு பொருத்தம் பாருங்கள்) வாகைக் குளம், முரப்ப நாடு, வல்லநாடு வழியாகத் திருநெல்வேலி ; வாகைக் குளம், சீவைகுண்டம் வழியாகத் திருநெல்வேலி, திருச்செந்தூருக்குக் கற்சாலைகள் இருத்தலினாலே இவ்வூர்களுக்கு வாடகை உந்து வண்டிகள் அடிக்கடி ஓடிக்கொண்டிருக்கின்றன. இவ்வூரிலிருந்து மேற்கே பத்தொன்பதாவது மைலில் மணியாச்சிப் புகை வண்டி நிலையம் இருக்கிறது. அதிலிருந்து வடக்கே சென்னைக்கும் தென்மேற்கே திருநெல்வேலி வழியாகத் தென்காசி, கொல்லம், திருவனந்தபுரத்திற்கும், திருச்செந்தூர் முதலிய ஊர்களுக்கும் நாள் தோறும் பல முறை புகை வண்டிகள் போய் வருகின்றன. உலகத்திலேயே மிகச் சிறந்த துறைமுகங்களில் ஒன்றாகிய கொழும்புக்கும் இவ்வூருக்கும் அடிக்கடி கப்பல்கள் வந்து போய்க்கொண்டிருக்கிறபடியால் உலகத்தில் எப்பகுதிக்கும் கப்பல் வழியாகப் போகும் வாய்ப்பும், அரும் பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்யும் வாய்ப்பும் இந்நகருக்கு இயல்பாகவே அமைந்துள்ளன.

இந்நகர் மேலூர், கீழூர் என இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. துறைமுகமும் கடற்கரைப் பகுதியும் கீழூர் எனப்படும். பெரும்பகுதியான மக்கள் குடியிருக்கும் இடம் மேலூர். கீழூரிலே தான்

பெரிய புகை வண்டி நிலையம் இருக்கிறது. இதிலிருந்து திருக் கோவில் மேற்கே அரை மைல் தூரத்திலிருக்கிறது. புகை வண்டி நிலையத்தில் எப்போதும் வாடகைக்குக் குதிரைவண்டிகள் கிடைக்கும். மேலூரிலும் சிறு புகை வண்டி நிலையம் இருக்கிறது; அதிலிருந்து கோவில் 2 பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது.

கி.பி. 1700-ல் இவ்வூர் இருந்த நிலையைப்பற்றி மார்ட்டின் பாதிரியார் பின் வருமாறு எழுதுகிறார் :—"கப்பலிலிருந்து பார்த்தால் தூத்துக்குடி மிகவும் அழகான நகரமாகக் காணப்படுகிறது. கடற் கரையில் பல அகலமான பண்டசாலைகள் அருமையாகவும், அழகாக வும் தோன்றுகின்றன. ஆனால், கரையில் இறங்கியவுடன் இந்த அழகெல்லாம் மறைந்து விடுகிறது. மாட்டுத் தொழுவங்களினாலாகிய நகரே புலனாகிறது".—இந்த மாட்டுத் தொழுவங்கள் இன்றும் ஒன் றிரண்டு அங்குமிங்குமாக இருக்கின்றன. ஆனால் இப்போது பெரிய பெரிய காரைச் சுவர்களினாலாகிய கட்டிடங்களாக அவை மாறி விட்டன. தொழுவங்களுக்குரிய கூரைகள் ஓடுகளாக மாறி விட்டன. இன்றும் கடற்கரையிலிருக்கிற தெருக்களும், முடுக்குகளும் ஒடுக்கமான வைகளாகவும், கோணலாகவுமே இருக்கின்றன. பெரிய பருத் திச் சாலையே இந்நகரின் பெருந் தெரு. இது நேராகவும், மற்ற வூர்களிலுள்ளவைகளைக் காட்டிலும் அகலமானதாகவும் இருக் கிறது. அப்படி இருந்தாலும் இதன் வழியாகப் போய்வரும் கூட்டம் இடைஞ்சற் படுகிறது. பருத்தி பஞ்சு வண்டிகள் ஏராளமாக அவ்வழியே வந்துகொண்டிருப்பதனாலேதான் இது "பெரிய பருத்திச் சாலை" என அழைக்கப்படுகிறது.

கடற்கரையில் ஒரு மைல் நீளத்திற்கு அழகும், உறுதியும், உயர மும், பெருமையும் உள்ள கட்டிடங்கள், வேலை நிலையங்கள், மாளிகைகள் அணியணியாக விளங்குகின்றன. அன்று 1,700-ல் கப்பலில் வந்து கொண்டிருந்த மார்ட்டின் பாதிரியார் இன்று இத் துறைமுகத்தின் காட்சியைக் காணுதல் வேண்டும்! கடற்கரைச் சாலையும், புகைவண்டி நிலையப் பக்கமும்தான் இவ்வூரின் மொத்த வியாபாரத்திற்கெல்லாம் நடு இடமாக உள்ளன. பெரிய பருத்திச் சாலை வீதியில் முதன்மையான கடைகளெல்லாம் அடங் கியிருக்கின்றன. புகை வண்டி நிலையத்திற்கு வடக்கே பலவகை யான மக்கள் கூட்டங்கள் வாழ்கின்றன. இதனுள்தான் வாடித் தெரு இருக்கிறது. இதுதான் இங்கே மக்கள் தங்கிய மிகப் பழமை

யான இடம். (வாடி-வெலி). தெற்கே பரவர்கள் மிகுதியாக வாழ்கின்றார்கள். ஊரின் வடக்கே முன் ஆளுநராக இருந்த பக்கிள் துரையால் வெட்டப்பட்ட பக்கிள் கால்வாயும், அதற்கப்பால் மணல் திரடுகளும் உள்ளபடியால் நகரம் அப்பக்கமாக விரிவதற்கு வசதி இல்லை. தெற்கே நீர்ப்பிடிப்பான பகுதி. கிழக்கிலோ கடலாயிற்று. மேற்கில் விரிவான இடமிருந்தாலும் வியாபாரத்துறைக்குத் தள்ளிப் போவதால் மக்களுக்குக் கவர்ச்சியில்லாமல் இருக்கிறது. இருந்தாலும் இப்போது துணைநீதிமன்றங்கள் ஊருக்கு மேற்கே கட்டப் பெற்றுவிட்டபடியாலும், வேறு போக்கில்லாமையாலும் மேற்குத் திசையே இவ்வூருக்கு வளர்ச்சிக்குரிய இடமாக இருக்கிறது. பெரிய வைத்தியசாலை ஒன்றும் அரசாங்கத்தாரால் இங்கேயே அமைக்கப் பெற்றுள்ளது. மேலும் வ.உ. சிதம்பரம் நகர் என்பது இப்போது ஒரு பெரிய நகராக மேற்கே வளர்ந்து விட்டது. அதில் வ. உ. சிதம்பரம் பிள்ளை கலைக் கல்லூரியும் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியும் நிலைபெற்று விட்டன.

இவ்வூருக்கு அண்மையில் மலைகள் ஒன்றும் இல்லை. எங்குபார்த்தாலும் முட்செடிகளும், பனை மரங்களும் செறிந்த மணற் பரப்புமே உள்ளன. இதற்குத் தெற்கே ஒரு மைல்தூரத்தில் உப்பு ஓடை கடலில் விழுகிறது. இது ஓட்டப்பிடாரத்திற்கு மேற்கே தோன்றிப் பல இடங்களிலுள்ள நீரை அள்ளிக்கொண்டு கோரம்பள்ளம் என்ற குளத்தின் வழியாகக் கடலை அடைகிறது. கோவிலின் வடகிழக்கில் ஒரு சிறு குளம் இருக்கிறது. இதில் வெளியிலிருந்து தண்ணீர் கோரிக் கொண்டு போகப்படுகிறது. ஊருக்கு வடக்கே முன் கூறிய பக்கிள் ஓடை ஓடுகிறது. தண்ணீருக்கு இவ்வூரார் பட்டபாடு சொல்லுந்தரத்த தன்று. தூத்துக்குடி என்ற திருப்பெயரே இதற்குப் போதுமான ஆதாரமாகும். கிணறுகள் எல்லாம் விரைவில் தூர்ந்து போகும் தன்மையன. தூர்த்துத் தூர்த்துத்தான் தண்ணீர் இறைத்துக் குடிக்க வேண்டியிருந்ததினால் இவ்வூர் தூர்த்துக் குடி என்று பெயர் பெற்று மருவித் தூத்துக்குடியாயிற்று எனச் சிலர் கூறுகின்றனர். உப்பு ஊற்றுக்கள் ஊறாமல் கிணற்றில் தளத்தைக் கெட்டித்தூர்த்துப் பின் அவற்றை நல்ல தண்ணீரால் நிரப்பி வாளியினால் அதனை எடுத்துக் குடித்து வந்ததினாலும் இப் பெயர் வந்ததாகும். 1823-ல் அச்சான சர்வேக் கணக்கின்படி அக்காலம் ஒரு குடம் குடி தண்ணீர் நான்கு பைசாவாக விற்று வந்ததாம். அண்மையில் பொருநையாற்றிலிருந்து தண்ணீர் வரும்வரை எவ்வளவோ பாடுபட்டும்

கோடை காலங்களில் மக்கள் தண்ணீருக்கு மிகவும் தவித்து வந்தார்கள். கிணறுகள் காய்ந்தோ, பொறுக்க முடியாத உப்பாகவோ போய் விடுமாதலால் பணக்காரர்கள் கொழும்பிலிருந்து குடிதண்ணீர் இறக்குமதி செய்துவந்தார்கள். 1846-ல் சில ஐரோப்பிய வியாபாரிகள் நல்ல ஊற்றுக்களைக் காணும் பொருட்டு வெட்டிப் பார்த்ததில் இருபது அடிகளுக்குக் கீழே வெள்ளைக் களிமண்ணும் அதற்குக் கீழே ஐந்தடி வரைக்கும் கரிசல் மண்ணும், மணலும், சாளும், இருபத்தைந்தாவது அடியில் பவளப்பாறையும் காணப்பட்டு இது வரை உப்பாக இருந்த தண்ணீர் முப்பத்தோராவது அடியில் சிறிது மாறியதாகக் காணப் பெற்றது. வெட்டு நாற்பத்தோரடிவரை நடந்தது. அதன் கீழ் நல்ல தண்ணீர் இருக்குமென்பது வெட்டியவர்களுடைய நம்பிக்கை. ஆனால் மேலிருந்த உப்பு நீரைத் தடுத்து அவ்வளவு ஆழத்திற்குக் கிணற்றைக் கட்டுவது முடியாததாகத் தோன்றியதால் அச்சோதனை அத்தோடு நின்றது. அங்ஙனமே 1849-லும் 1851-லும் செய்த முயற்சிகள் பயனற்றனவாயின. 1855-ல் மாவட்டப் பொறிவலாளர் ஆர்சிலே சீவைகுண்டத்தில் பெரிய அணை ஒன்று கட்டி வடக்கில் ஒரு கால்வாய் தூத்துக்குடி வரையிலும், தெற்கே ஒன்று திருச்செந்தூர் வரையிலும் குடிதண்ணீருக்கும், நீர்ப்பாசனத்துக்குமாக வெட்டத் திட்டமிட்டார். 1857-ல் இத்திட்டம் மூன்று இலக்கத்துஎண் பத்தையாயிரம் ரூபா செலவில் தொடங்கி 1874-ல் முற்றுப் பெற்றது. 1874-ல் பொருநைத் தண்ணீர் கால்வாய்வழியாகக் கோரம் பள்ளம் குளத்தைப் பெருக்கி ஐந்து மைல் நீளம் கால்வாய் வழியாக ஓடி வந்து தூத்துக்குடிக்கு வெளியே கட்டப்பட்டிருந்த தண்ணீர்த் தொட்டியை நிரப்பிக் குழாய்களின் வழியாக ஊருக்குட் சென்று பல கிணறுகளில் விழுந்து ஒருவாறு தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்கியது. 1905-ல் ஓரிலக்கம் ரூபா செலவில் கோரம் பள்ளத்திலிருந்து வந்த வாய்க்கால் கட்டுமானத்தால் மூடு வாய்க்காலாக மாறிற்று. என்ன செலவுகள் செய்தும் கோடை காலத்தில் தண்ணீர்த் தட்டுத் தோன்றிக் கொண்டே இருந்தது. அதனால் 1914-ல் பதினெட்டு இலக்கத்து இருபத்தையாயிரம் ரூபா செலவில் ஒரு திட்டம் வகுக்கப்பெற்று ஏற்றுக் கொள்ளப்பெற்றது. அதன்படி மருதூர் அணைக்கு இரண்டு மைல் கிழக்கே தள்ளிப் பொருநை ஆற்றிலிருந்து வல்லன் நாட்டுக்குத் தண்ணீர் ஏற்றி அங்கிருந்து பதினெட்டு மைல் இரும்புக் குழாய் வழியாகத் தூத்துக்குடிக்குக் கொண்டு வரவேண்டும். இத் திட்டம் பல சீர்திருத்தங்களோடு முற்றுப் பெற்றது. இப்போது

வல்லன் நாட்டுப் பொத்தைப் பக்கத்திலிருந்து நல்லதண்ணீர் கொண்டு வரப்பெற்று ஊர் முழுவதும் எளிதில் கிடைத்து வருகிறது. இதனுல் இன்று தூத்துக்குடியில் ஏழை மக்களும் குடிப்பதும், குளிப்பதும் பொருநைத் தண்ணீரே.

" ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்."

(திருவள்ளுவர்)

**1911**-ல் **40185** ஆக இருந்த இவ்வூர் மக்கள் தொகை **1941**-ல் ஆண் **38,262+37,352** பெண் ஆக மொத்த **75,614** ஆகிக் கிட்டத்தட்ட இரட்டித்து விளங்குகிறது. இவ்வூர் ஒரு நகராட்சி. இதில் **24** பகுதிகளோடு கூடிய **17,953** வீடுகள் இருக்கின்றன. இங் ஙனமாக முப்பது ஆண்டுகளில் இரட்டித்துள்ள தொகை இவ்வூர் எவ்வளவு விரைவாக வளர்ந்தோங்கி வருகிறதென்பதைத் தெளிவு படுத்துகின்றது. இது கொடிய வெப்பமுள்ள ஊராக இருந்தாலும் கடற்கரைப்பட்டினமாதலால் உடலுக்கு நன்மை தரும் கடற்காற்றும் அடிக்கடி பெய்யும் மழையும் ஏராளமாகக் கிடைக்கும். பொருள் வருவாயும் இப்போது தோன்றியுள்ள தண்ணீர் வசதியும் குடியிருப்பை மிகவும் வசதியாக்குகின்றன. சங்கரராமேசுவரர் கோவில் வாசலில் நகராட்சியினருடைய ஆளுகையிலுள்ள பெரிய சத்திரம் ஒன்று இருக்கிறது. இதனுள் கல் திருமடம் இருக்கிறது. அதன் அமைப் பைப் பார்த்தால் அது ஏதாவது ஒரு சைவ ஆதீனத்தைச் சேர்ந்த தாக இருந்திருக்கவேண்டுமென்பது தோன்றுகிறது. நாட்டாண்மைக் கழகத்தார் ஆட்சியிலுள்ள வழிப்போக்கர் விடுதி (Travellers Bungalow) ஒன்று கடற்கரையிலிருக்கிறது.

## துறைமுகம்

வியாபார உலகத்தில் தூத்துக்குடி முதன்மைப்பெற்ற வரலாறு ஒரு நூற்றுண்டையது. இவ்வளவு விரைவில் முதன்மை பெற்ற துறைமுகம் இந்தியாவில் பிறிதொன்றுமில்லை. பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் ஒரு சில நூறு ரூபாகளுக்கே கடல் வாணிபம் நடந்து வந்தது. அக்காலத்துக் காயற்பட்டினமும், குலசே கரன் பட்டினமும் மிகச் சிறந்து விளங்கின. சென்னைக்குக் கருப்புக் கட்டியும், கொழும்புக்குத் துணியும் ஏற்றிச் சென்று வந்த பதினுறு

கப்பல்கள் இந்த மாவட்டத்தில் இருந்தன. ஆண்டுக்கு மூன்று நான்கு இலட்ச ரூபா மதிப்புள்ள துணிகள் சென்னைக்குக் காயற் பட்டினத்திலிருந்து ஏற்றுமதியாயின. கடல் வழிகளில் தூத்துக் குடியும் ஒன்றுக ஏற்றுக்கொள்ளப் பெறுமையே இதன் காரணம். 1842, 1879, 1912-ஆம் ஆண்டுகளில் இத்துறைமுகம் அளந்து குறியிடப் பெற்றது. 1842-ல் பழைய தச்சுக்காரர்களுடைய சதுரத் தூண் விளக்குக்குப் பதிலாகச் சரியான கலங்கரை விளக்கொன்று ஏற்றப் பெற்றது. இப்போதுள்ள விளக்கு 1874-ல் மாற்றியமைக்கப் பெற்றது. தூத்துக்குடி திடீரென்று முதன்மை பெறத் தொடங் கிற்று. சீனுவிற்கும், இங்கிலாந்திற்கும் சென்ற பஞ்சு முழுவதும் இங்கிருந்துதான் சென்றது. 1851-க்கும் 1861-க்கும் இடையே தூத்துக் குடிக்கு உள்நாடுகளிலிருந்து சரியான கற்சாலைகள் போடப்பெற்றன, 1876-ல் புகை வண்டியும் வந்து விட்டது. சென்னையிற் பாதிக்கு மேல் இங்கு வாணிகம் நடைபெறுகிறது. பஞ்சு, சப்பான், இங்கி லாந்து, செர்மனிக்கும் ; நூல் சீனுவுக்கும் ; நிலவாகை இங்கிலாந் துக்கும், செர்மனிக்கும் ; தேயிலை ஐரோப்பா, ஆசுத்திரேலியா, அமெரிக்காவிற்கும் ; துணிகள் தென்னுப்பிரிக்கா, இலங்கைக்கும் ; காப்பிக் கொட்டை இங்கிலாந்துக்கும் ; ஆடுமாடுகள், மிளகாய், ஈருள்ளி, அரிசி, தானியங்கள் இலங்கைக்கும் ஏற்றுமதியாகின்றன. துணிகள், தீப்பெட்டி, மண்ணெண்ணெய், சில்லறைச் சாமான்கள் இவை இறக்குமதியாகின்றன. இதனுல் சென்னை மாகாணத்தில் இது இரண்டாவது துறைமுகமாகவும், இந்தியாவில் ஐந்தாவது துறைமுகமாகவும் மதிக்கப்பெற்று வருகிறது.

இலங்கைக்குப் போகும் கூலியாட்கள் பத்து மைல் தூரத்திற்கு மேற்கேயுள்ள தட்டப்பாறையில் மருத்துவக்கண்காணிப்பில் சில நாட்கள் தங்கியிருந்து கப்பலிற் போகின்றனர். கப்பல்துறைப் பாலம் 1895-ல் போடப்பெற்றது. 1899-ல் புகை வண்டி, துறைமுகமேடைக்கே வந்து விட்டது. நகருக்குத் தெற்கிலிருந்து தொடர்பான மூன்று தீவுகள். புன்னையடி, உரோஞ்சி, பாண்டியன் (முயல்) தீவு என்பன வடகிழக்குச் சாயலாகக் கடலுள் நீண்டு போகின்றன. முயல் தீவுக்கு வடக்கே ஒரு மைல் தூரத்தில் தூத்துக்குடியைப் பார்த்து வடமேற்கே விரிந்திருக்கும் பாறைத் திரடொன்று உளது. இந்த வளைந்துள்ள தீவுத் தொடரின் உள்ளேதான் துறைமுகம் இருக் கிறது. இதில் கரையை அடுத்துவரும் சிறு மரக்கலங்கள் எட்டு

ஒன்பதடி ஆழத்தில் காவலுடன் இருக்கின்றன. கடலோடும் பெரிய கப்பல்கள் நகரிலிருந்து ஐந்தாவது மைலுக்கப்பால் முயல் தீவுக்கு வெளியேயுள்ள துறையில் தங்குகின்றன. புன்னையடித் தீவும், உரோஞ்சித் தீவும் எப்போதும் ஒன்று சேர்ந்துள்ளன. புன்னையடித் தீவிற்கும் கரைக்கும் இடையேயிருந்து பதினாறடி ஆழமுள்ள இடை தூர்க்கப்பட்டதிலிருந்து அலை பெருந்தடியோடு இணைக்கப்பட்டன. ஐரோப்பாவுக்குப் போகும் பெரிய கப்பலெல்லாம் இங்கு வந்தே போகின்றன. ஆங்கில இந்தியப் புகைக் கப்பற் கம்பெனியார் கப்பல்கள் இலங்கைக்குச் சென்று வருகின்றன. இங்கேதான் தேசாபிமானச் செல்வர் திருவாளர் வ.உ. சிதம்பரம் பிள்ளையின் நன் முயற்சியால் சுதேசிக் கப்பல் கம்பெனி (**The Swadeshi Steam Navigation Company**) ஒன்று நிறுவப்பட்டு அதன் கப்பல்கள் சில காலம் இலங்கைக்குப் போய் வந்தன. இங்கே பன்னிரண்டு ஆண்டுகளுக் கொருமுறை முத்துச் சலாபம் நடை பெறுகின்றது. அருமையான முத்துக்கள் இப்பக்கத்தில் விளைகின்றன. தூத்துக்குடியிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள தொள்ளாயிரம் பாறையும், புன்னைக்காயலிலிருந்து ஆறு மைல் தூரத்தில் கிழக்கேயுள்ள கூடுமுத்துப் பாறையும் நல்ல முத்துக்கள் விளைவுள்ளனவாகத் தீர்மானிக்கப்பெற்றுள்ளன.

## ஊர் வரலாறு

பண்டைக் காலத்தில் தூத்துக்குடி பரவர்கள் வாழ்ந்து வந்த மிகச் சிறிய பட்டியாக இருந்தது. போர்த்துக்கீசியர்கள் இந்தியாவில் வந்து குடியேறி இருந்தார்கள். அவர்களுக்குக் கிழக்குக் கரையில் தலை நகராக இருந்தது புன்னைக்காயல். அதனை விட்டு விட்டுத் தூத்துக்குடிக்கு வந்து விட்டார்களென்றால் அதில் எத்தனை வசதி கண்டு அவர்கள் வந்திருக்கவேண்டும்? மகமதியர்களாலே கொடுமைப் படுத்தப்பட்ட பரவர்களைப் பாதுகாப்பதற்காகக் கொச்சியிலிருந்து புறப் பட்டு வந்த போர்த்துக்கீசியருடைய படகுகள் **1532**-ல் முதன் முதலாகத் தூத்துக்குடிக் கரைக்கு வந்து சேர்ந்தன. பரவர்கள் கிருத்தவர்களாக மாற்றப்பெற்றனர். அதனால் போர்த்துக்கீசியருடைய செல்வாக்கு நிலைபெற்றது. **1543**-க்குள் போர்த்துக்கீசியர் கவர்னர் ஒருவர் தூத்துக்குடியில் இருந்தார். அர்ச்சவேரியார் என்ற பெரியார் **1544**-ல் எழுதிய கடிதம், விசய நகரம் மன்னருடைய ஆட்களும் மதுரையிலிருந்த அவர்களுடைய சிற்றரசராகிய நாயக்கரும், தூத்துக்

குடியைத் தாக்கிய விவரத்தைக் தெரிவிக்கிறது. கவர்னருடைய கப்பல் எரிக்கப்பட்டது ; வீடுகள் அழிக்கப்பட்டன ; அவர் தீவுகளில் ஓடி ஒளிந்தார். போர்த்துக்கீசியர் இருந்ததற்கு அடையாளமாக ஒரு கல்லறைக்கல் இருக்கிறது. அதில் 1,618 டிசம்பர் மாதம் 2-உயிட்ட தமிழ்க் கல்வெட்டு உளது. ஓர் ஐரோப்பியரைப்பற்றிய தமிழ்க் கல்வெட்டு இதுதான் முதலாவது. இது கிருத்துவர் கோவிலில் வைக்கப்பெற்றுள்ளது. 1602-ல் முதல் முதலாகத் தச்சுக்காரர்கள் இலங்கையில் வந்து சேர்ந்தனர். அவர்கள் 17-ம் நூற்றுண்டின் முதற் பகுதியில் அடிக்கடி போர்த்துக்கீசியருடன் போர் தொடுத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் 1658-ல் ஒரு கடற்படையோடு தூத்துக் குடித் துறைமுகத்துள் நுழைந்து அதனைக் கைப்பற்றினர். 1784 வரை அவ்வூர் அவர்களிடம் இருந்து வந்தது. அவர்களுக்குச்சொந்த மான ஊர்கள் இந்த மாவட்டத்தில் வேம்பாறு, வைப்பாறு, புன்னைக் காயல், பழைய காயல், காயற்பட்டினம், மணற்பாடு, ஆழ்வார் திருநகரி என்பன. இப்பகுதிக்குத் தலைநகராகிய தூத்துக்குடியில் அவர்கள் ஒரு சிறு கோட்டை கட்டினூர்கள். அது முந்நூறு அடிச் சதுரமானது. அவர்கள் பரவர்களோடு நட்புக் கொண்டு மீண்டும் முத்துப்பண்ணைகளைக் கைப்பற்றி, பாம்பனிலிருந்து கன்னியா குமரி வரை கடற்படையை அமைத்திருந்தார்கள். 1700-ல் மார்ட்டின் பாதிரியார் பின் வருமாறு எழுதுகிறுர் ;—" முழு உரிமை உடையவராக இல்லாதிருந்தும் தச்சுக்காரர் தூத்துக்குடியிலிருந்து ஏராளமான வருவாய் பெற்றுர்கள்." துணி வணிகத்தில் முதன்மை பெற்று அவர்கள் நாளடைவில் அப்பக்கம் வரும் கப்பல்களில் துணிக்குச் சுங்கம் வாங்கத் தலைப்பட்டார்கள். உள் நாட்டில் பல ஊர்களில் அவர்களுக்குத் துணி நெய்து தந்த தொழிலாளர் பலர் இருந்தனர். 1760-ல் ஒரு பெரிய தச்சுப்படை தூத்துக்குடியிலும் மணற்பாட்டிலும் வந்து இறங்கிற்று. மகமது யூசுபூ என்ற மகமதியப் படைத்தலைவர் அது கண்டு சினம் கொண்டு படையுடன் ஆழ்வார் திருநகரியை நோக்கிச் சென்றுர். அப்படைகள் உடன் அவ்வூரை விட்டுப் போய்விட்டன. பாளையங்கோட்டையிலிருந்த ஆங்கிலேயர்படைத் தலைவர் தூத்துக்குடியைப் பிடித்துக் கொண்டார். 1783-ல் சமா தானம் ஏற்பட அதன் பலனுக 1785-ல் தூத்துக்குடி மறுபடி தச்சுக் காரரிடம் போயிற்று. 1792-ல் சென்னை அரசாங்கத்தார் நெல்லை மாவட்டத்தின் ஆளுகையை மேற்கொண்டவுடன் தூத்துக்குடியையும் பிற தச்சுக்காரர் இடங்களையும் தச்சுக்காரரிடமிருந்து ஆங்கிலர்

கைப்பற்றிக் கொண்டனர். 1818-வரை தூத்துக்குடி ஆங்கிலரிடம் தான் இருந்தது. 1801-ல் தச்சுக்காரருடைய தூண்டுதலால் பாஞ்சாலங்குறிச்சியார் தூத்துக்குடியைப் பிடித்து அங்கிருந்த ஆங்கிலேயரைத் துன்புறுத்தினார்கள். ஆனால் ஆங்கிலேயர்கள் விரைவில் அதனை மீட்டுவிட்டனர். தச்சுக் கோட்டை பாழாகி வௌவால்கள் வாழுமிடமாக இருந்து 1810-ல் தரை மட்டமாக்கபட்டது.

1818-ல் ஐரோப்பாவியில் ஏற்பட்ட சில மாறுதல்களின் பயனாகத் தூத்துக்குடி, புன்னைக்காயல், காயற்பட்டினம், ஆழ்வார் திருநகரி, பாண்டித் தீவு, குரோஞ்சித் தீவு இவை தச்சுக்காரரிடம் 1818 மே மீ 11 உ கொடுக்கப்பட்டன. முயல் தீவு எனப்படும் பாண்டித் தீவில் தச்சுக்காரர் கப்பல்களுக்காக ஒரு விளக்குத் தூண் நிறுத்தியிருந்தனர். அவர்கள் அமைத்திருந்த சிறைச்சாலை போன்ற அடையாளங்கள் குரோஞ்சித் தீவில் இப்போதும் காணப்படுகின்றன. அப்போது வந்த உரிமை ஆராய்ச்சிக் கழகத்தினர் தச்சுக்காரர்களுக்கு அவர்களுடைய கோட்டை இருந்த இடம் மட்டுமே சொந்தம் எனவும் அவர்களுக்கு உப்பளங்களில் உரிமை இல்லை என்றும், ஒரு வகைச் சிவப்புச் சாயம் இறக்கக் கூடிய சாய வேர் என்ற செடிகளைச் சேகரிப்பதை எலம் விடும் முறைமை அவர்களுக்குக் கிடையாது என்றும் முடிவு செய்தனர். அப்போது தூத்துக்குடியென்பது பரவர்கள் குடியிருக்கும் இடமும், ஆங்கிலேயர் கோவிலுக்கு வடபுறமுள்ள கீழூருமே ஆகும். 1819-ல் தச்சுக்காரர்கள் பரவர்களுடைய தலைவரைக் கைக்குள்ளேபோட்டுக்கொண்டு மீன் பண்ணைகளைக் கைப்பற்றித் தொல்லை விளைவித்தனர். புன்னைக்காயலிலிருந்த ஆங்கில அதிகாரி மாவட்ட ஆட்சித் தலைவருக்கு எழுதிய கடிதத்திலிருந்து சாதித் தலைவர்கள் நாவிதர்களை ஆங்கிலேயருக்குச் சவரம் செய்வதைக் கூடாதெனக் கட்டுப்படுத்தி இடையூறு செய்தார்கள் என்பது தெரிகிறது. கடைசியாக எல்லாத்தொல்லைகளும் நீங்கி 1825 சூன் மீ 1உ யன்று தூத்துக்குடி ஆங்கிலேயருடைய முழு ஆளுகையில் வந்து சேர்ந்தது. பின் ஓட்டப்பிடாரத்தில் பிறந்து தூத்துக்குடியில் சிறக்க வாழ்ந்திருந்த வீரர், பெருங் கவி வ. உ. சிதம்பரம் பிள்ளை போன்ற மெய் வீரர்கள் உழைப்பினாலும், காந்தி யடிகளுடைய பெரிய தியாகத்தினாலும் இந்தியத்தாய் 15-8-1947-ல் விடுதலைபெற்றுத் தன்னாட்சியுடைந்தாள்,

## தூத்துக்குடி-சங்கரராமேசர்

இங்ஙனமாக வளர்ந்த பெருந் திருநகர் தூத்துக்குடி; இது திருமந்திர நகர் எனவும் பெயர் பெறும். மேலூரின் நடுவே மிகவும் அழகாக விளங்குகின்றது சங்கர இராமேசர் திருக் கோவில். அம்மை பாகம் பிரியாள்; ஆனதால் அவருடைய திருக் கோவிலிலேயே தெற்கே பார்க்க எழுந்தருளி யிருந்து கொண்டு பெருமானை வழிபட வரும் அடியார்களுக்கு வேண்டும் வரங்களெல்லாம் அருளுகின்றாள். மெய்கண்ட தேவர், அருணந்திசிவம், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவம் ஆகிய சைவசமைய சந்தானாசிரியர்கள் நால்வரும் அறுபத்து மூவருடன் காட்சி அருளுகின்றனர். இவர்கள் இந்தக் கோவிலில் இடம் பெற்றிருப்பது இவ்வூரார் செய்த தவமே.

இங்கே பெருந் திருவிழா சித்திரை மாதத்தில் நடைபெறுகின்றது. இராமபிரானாற் பூசிக்கப் பெற்ற சங்கரர் இவர்; ஆதலால் சங்கர இராமேசர் என்ற திருப் பெயர் பெற்றார்.

இதுகாறும் சிவைகுண்டச் சிவன் கோவில்கள் கண்டு கும்பிடப் பெற்றன. இனி, தண் பொருந்தம் திருச்செந்தூர் வட்டத்திற் புகுகின்ற தாகையால் அதன் தென் கரை வழியே சென்று ஆங்காங்குள்ள திருக் கோவில்களை வணங்கித் திருவருளைப் பெறுவோம்.

# ௪. திருச்செந்தூர் வட்டம்

## செந்தில் முருகன் கோவிலுள் சிவபெருமான்

திருச்செந்தூர் வட்டத்தில் மிக்க வருவாயுடைய திருக் கோவில் செந்தில் முருகப் பெருமான் கோவிலே. நெல்லை மாவட்டத்தில் இவ்வளவு பெரிய வருவாயுடைய கோவில் வேறு எதுவும் இல்லை. இக் கோவில் முதலில் சிவன் கோவிலாக இருந்தது. அச் சிவலிங்கப் பெருமான்தான் முருகப் பெருமானால் சூரபதுமனை வென்றவுடன் வழிபடப்பெற்ற பெருமான். இங்கே முருகப் பெருமானுடைய வழிபாடு தலைசிறந்து ஓங்கிவிட்டபடியால் அது அப் பெருமானாலேயே வழிபடப்பெற்ற சிவன் கோவில் என்பது பலருக்குத் தெரிவதில்லை. இன்றும் மூலத்தானத்தில் தீபாராதனை நடைபெறும்போது சுப்பிரமணிய சுவாமியின் பின்புறமிருக்கும் சிவபெருமானுக்கும் தீபாராதனை நடைபெறுவதைக் காணலாம். திருச்செந்தூர் ஊர் நடுவில் சிவக்கொழுந்தீசர் கோவில் அமைந்திருக்கிறது.

ஆறுமுகப் பெருமான் திருவிழாக் காலங்களில் 7, 8-ம் நாள் பெருவிழாக்களில் இங்கு எழுந்தருளி வருவார். அவருக்குத் திரு முழுக்காட்டுச் சிறப்பாக நடைபெறுகிறது. இக் கோவில் முருகப் பெருமான் கோவிலைச் சேர்ந்தது. சுப்பிரமணியர் கோவிலில் சந்நிதி யில் மயில்களுடன் நந்தியும் அமைக்கப்பெற்றிருப்பதைக் காணலாம். இதில் அம்மையும் அம்பலவாணரும் வைரவரும் உள்ளனர்.

## ஆறுமுகனேரி—சோமநாதர்

ஆழ்வார் திருநகரியிலிருந்து கிழக்கே மூன்று மைலில் இருப்பது தென் திருப்பேரை. இங்கே கைலாசநாதர் கோவில்கொண்டு எழுந்தருளி யிருக்கின்றார். இது ஒன்பது (நவ) கைலாசங்களில் ஒன்று; அண்மையிற் புதுப்பிக்கப்பெற்றுக் குடமுழுக்கும் நடை பெற்றது. இங்கிருந்து ஆற்றூருக்கு வழி பிரிகிறது.

தென் திருப்பேரைக்குக் கிழக்கே இரண்டரை மைலில் குறும்பூருக்கு அருகே இருக்கிறது **அங்கமங்கலம்.** மங்கலம்—மங்காத ஊர். அங்கம் என்பது கொன்றை; கொன்றை மரத்தை ஒட்டி எழுந்த ஊர் இது. ஆதலால் அங்கமங்கலம் என்று பெயர் பெற்றது. இது அங்கப்பூ மங்கலம் என்றே அழைக்கப் பெற்று வந்தது. இங்கே எழுந்தருளி யிருக்கின்றார் நரசிங்கத்தினுற் பூசிக்கப்பெற்ற நாதர். அதனுல் இப் பெருமான் **நரசிங்க நாதர்** என அழைக்கப் பெறுகிறார். பிரகலாதனைக் காக்க நரசிங்கமாகத் தூணில் தோன்றி இரணியனைக் கொன்ற திருமால் அவ்வசுரனைக் கொன்ற பாவம் தீர இங்கே வந்து சிவபெருமானை வழிபட்டார்.

இதற்குக் கீழ்புறம் இருப்பது **நல்லூர்.** நல்ல—ஊர் நல்லூர்; அதனுல் அது திருநகர். திருமாலாகிய ஆதிநாதர் எழுந்தருளி யிருக்கின்ற திருக்குருகூர் திருநகரி என்னப்பட்டதுபோல, சிவ பெருமான் எழுந்தருளியிருக்கும் இந் நல்லூர் திருநகர், என்னப் பெற்றது. திருநகரிலுள்ள ஈசர் **திருநகர் ஈசர்.** இவரைக் கும் பிட்டு ஆற்றங்கரையிலிருக்கும் ஆற்றூருக்குப் போவோம்.

**ஆற்றூர்** தென் திருப்பேரையிலிருந்து வடகிழக்கே எழு கல்; குறும்பூரிலிருந்து வடகிழக்கே நான்கு கல்; ஆறுமுகனேரியிலிருந்து வடக்கே மூன்று கல். இது சோமேச்சரம் என்று பெயர் பெறும். சோமன்—சந்திரன், திங்கள். சந்திரனுக்கு ஞானசிரியர்

வியாழ பகவான்; அவருடைய மனைவி தாரையைக் கூடிப் புதன் என்ற பிள்ளையைப் பெற்றமையால் வியாழ பகவான் சந்திரனைச் சபித்தார். அந்தச் சாபம் நீங்கச் சோமன் ஆற்றூரில் வந்து சிவ வழிபாடு செய்தான். அதனால் பெருமான் **சோமேசர்** என்னப் பெற்றார். இக் கோவிலில் உட்கோவில் ஒன்றில் திருமாலுருவம் உள்ளது. மேலே கண்ட கோவில்கள் மூவாயிரத்திற் குறைந்த வருவாயுடையன. ஆற்றூருக்கு மூன்று மைல் தெற்கே இருக்கிறது ஆறுமுகனேரி.

ஆறுமுகனேரிப் பெருமானும் சோமேசரே; சோம நாதர். இந்த ஊர் ஒரு புகைவண்டி நிலையம். செந்திலாண்டவனாகிய ஆறுமுகப் பெருமானுடைய பெயரைப் பெற்ற ஏரியின் கரையிலே தோன்றிய ஊர் ஆதலின் ஆறுமுகன் ஏரி என இது பெயர் பெற்றது.

## சேர்ந்தமங்கலம்-கைலாசநாதர்

தண் பொருந்தப் பேராறு கடலைச் சேர்ந்த இடத்தில் இருக்கும் மங்கலம் சேர்ந்த மங்கலம். இது சேர்ந்தபூ மங்கலம் என்னப் பெறும். அகத்திய முனிவர், கடலரசன் முதலியோர் வந்து பூசித்துப் பேறு பெற்ற பெருமையாளர் கைலாச நாதர். இத் திருப்பதி ஒன்பது கைலாசங்களுள் ஒன்று.

## குலசேகரன்பட்டினம்-காஞ்சி விசய கச்சி கொண்ட பாண்டீசர்

திருச்செந்தூரிலிருந்து தெற்கே எட்டாவது கல்லில் இருப்பது குலசேகரன் பட்டினம். இது சில ஆண்டுகளின் முன் வரை பெரிய துறைமுகமாக இருந்தது. இதற்குத் தெற்கே இருப்பது மணப்பாடு; அங்கே ஒரு கலங்கரை விளக்கம் இருக்கிறது. அது குலசேகரன் பட்டினத்தைக் கருதி அமைக்கப்பெற்றதே.

குலசேகர பாண்டியன் இருந்து அரசாண்ட நகரம் இது; அதனால் இது இப் பெயர் பெற்றது; இப் பெயர் மருவிக் குலசை என்றும் வழங்கும். "குலசைப் பெருமான் பாண்டீசர்" என்று அழைக்கப் பெறுவதால் பெருமான் பாண்டியனால் நிலை பெறுத்தப் பெற்றவர் என்பது புலனாகின்றது. அப் பாண்டியன் யார் என்பதைக் "காஞ்சி விசய கச்சி கொண்ட பாண்டீசர்" என்ற பெருமான் பெயர் விளக்குகின்றது.

ஒரு காலத்தில் கச்சி மன்னன் படையுடன் வந்து பாண்டியனோடு போர் தொடுத்தான். அப் போரில் பாண்டியன் தோற்று ஓடிவந்து குலசையில் மாமரத்தின் அடியில் தானே முளைத் தெழுந்த சிவ லிங்கப் பெருமானைப் பணிந்து தவங்கிடந்தான். பெருமான் திரு வருளால் ஊக்கம் பெற்ற பாண்டியன் முற்றுகை செய்து நின்ற கச்சி மன்னன் மேல் காஞ்சிமாலை சூடி எதிர்த்து விசயம் பெற்றான். அது போதாதென்று காஞ்சி விசய (காஞ்சி மாலை சூடி விசயம் பெற்ற) பாண்டியன் கச்சியானைத் துரத்திச் சென்று கச்சி நகரையும் வென்று கொண்டான். இங்ஙனம் காஞ்சி விசய கச்சி கொண்ட பாண்டியனால் போற்றப் பெற்ற ஈசர் என்ற காரணத்தால் இப் பெயர் பெற்றார் பெருமான். பெருமானுடைய திருப் பெயர் இத்தனை வர லாறுகளைத் தெளிவாக்கியமை காண்க.

அம்மை அறம் வளர்த்த நாயகியை அமைத்தவன் குலசேகரன். இவ்வூரில் "கச்சி கொண்ட பாண்டியர் தெரு" என ஒரு தெரு இருக்கிறது. இங்குள்ள "மலையான் தெரு" என்ற தெரு ஒரு காலத்தில் சேரர் செல்வாக்கு இவ் வூரில் இருந்தது என்பதையும், "மும் முடிச் சோழ விநாயகர் தெரு" என்ற தெரு ஒரு காலத்தில் சோழர் செல்வாக்கு இங்கிருந்தது என்பதையும் நிலைநாட்டுகின்றன.

இதுகாறும் திருச்செந்தூர் வட்டச் சிவன் கோவில்களைக் கும் பிட்டோம். இனி நான்குநேரி வட்டத்திற் புகுந்து வழிபாடு செய்வோம்.

## ரு. நான்குநேரி வட்டம்

நான்குநேரி வட்டத்தில் பச்சையாறு, நம்பியாறு, அநுமநதி என்பன முதன்மையான ஆறுகள், இவைகளின் கரைகளிலும் சிறந்த கோவில்கள் விளங்குகின்றன. ; அவைகளை ஆராய்வோம்.

### களக்காடு-சத்திவாகீசர்

களக்காட்டுமலை என்று சொல்லப்பெறும் வெள்ளி மலையிலே பச்சையாறு தோன்றுகின்றது. பச்சை—இளமை. என்றும் பசுமை யாக, இளமையாக நீர் அறாமல் இருக்கும் உயிராறு இது. அதனால் இது பச்சையாறு என்று பெயர் பெற்றது. மலையடியில் இவ் வாற்றை ஒட்டிய களா மரங்கள் அடர்ந்த காட்டிலே தோன்றிய ஊர்

களக்காடு என்பது. இது களந்தை என்று மருவி வழங்கும். நான்குநேரிக்கு மேற்கே எட்டாவது கல்லில் இவ்வூர் இருக்கிறது. இங்கிருந்து தெற்கே ஆருவது மைலில் திருக்குறுங்குடியும், பன்னிரண்டாவது மைலில் வள்ளியூரும், வடக்கே பதின்மூன்ருவது கல்லில் சேரன்மாதேவிப் புகைவண்டி நிலையமும் உள.

இவ்வூர் களக்காடு வட்டம் என்று பெயர் பெற்றுத் தலை நகராகி அரசிருக்கையாகவும் இருந்தது. அரண்மனைகளும், யானைப் பந்தி, குதிரைப் பந்தி முதலிய கட்டிடங்களும் ஊருக்கு மேற்கும் வடக்குமாக இருந்திருக்கின்றன. ஊரைச் சுற்றிக் கோட்டையும் அகழியும் இருந்ததற்குப் பல அடையாளங்கள் இருக்கின்றன. இன்றும் அவ்விடம் கோட்டை என்றே வழங்கப் பெறுகிறது. கல்வெட்டுக்களிலும் இங்கே இருந்த அரண்மனையிலிருந்து அரசர் கோவில்களுக்கு நிலக் கொடை தந்தது முதலிய செய்திகளும், இவ்வூர் "வானவன் நாடு, பச்சர்ற்றுப் போக்கு, சோழகுல வல்லிபுரம் என்ற களக்காடு" எனப் பெயர் பெற்றிருந்த செய்தியும் காணப் பெறுகின்றன.

ஊருக்கு வடபக்கமாக நூற்று முப்பத்தைந்தடி உயரமுள்ள ஒன்பது தட்டுக் கோபுரத்துடன் சத்திவாகீசர் கோவில் விளங்குகின்றது. கொல்லம் 640-ல் இருந்த வீரமார்த்தாண்டன் என்ற மன்னவனே இக் கோவிலையும் வரதராசப் பெருமாள் கோவிலையும் வீரமார்த்தாண்டப் பிள்ளையார் கோவிலையும் கட்டினன் என்பது தெரிகிறது. மலை வளமும் நில வளமும் இயற்கை வளமும் பொருந்தியது இவ்வூர். ஆதலின் இக்கோவிலில் மிகவும் பாராட்டத் தகுந்த உயர்ந்த சிற்பக் காட்சிகள் அமைந்திருக்கின்றன.

பெருமான் கோவில், அம்மை கோவிலுக்கு முன் பக்கம் பெரிய மணிமண்டபங்கள் அழகாக விளங்குகின்றன. பெருமான் கோவில் முன்பக்கமுள்ள மணிமண்டபம் மிகவும் அழகான பதினாறு தூண்களால் தாங்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு தூணிலும் முப்பத்திரண்டு தூண்கள் ஒரே கல்லிற் செதுக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான நாதம் ஒலிக்கக் கூடியதாக வேலை செய்யப்பட்டிருக்கின்றன. மற்றும் ஒவ்வொரு தூணிலும் வேறு பல விதமான அழகிய சிற்ப வேலைகள் அமைந்த உருவங்கள் பார்ப்பவர் கண்களைக் கவரும். மண்டபத்தில் பெருமானுக்கு முன்பக்கமுள்ள ஒரு தூணில் கோவில் திருப்பணி செய்த வீரமார்த்தாண்ட பாண்டியனுடைய சிலை மிக அழகாகச் செதுக்கப்பட் டிருக்கிறது. அடுத்த

தூணில் சேரமான் பெருமாளும் சுந்தரமூர்த்தி நாயனாரும் முறையே குதிரையிலும் யானையிலும் கைலைக்குச் செல்லும் காட்சியாக இரண்டு சிலைகள் உயரமாயும் மிக்க அழகாயும் செதுக்கப்பட்டிருக்கின்றன. மணிமண்டபத்திற்கு அடுத்த முன் பக்கம் கொலு மண்டபம் ஓவிய வேலைகளிலும் சிற்ப வேலைகளிலும் சிறந்து விளங்குகின்றது. அம்மன் கோவில் மணிமண்டபமும் பெரியதாகவும் சிறந்த சிற்ப வேலைப்பாடுகள் அமைந்தும் தோன்றுகிறது. பெருமான் கோவில் முன்பக்கமுள்ள மாமண்டபம் போல் பெரிய அழகிய மண்டபம் இந்தப் பக்கத்திலேயே வேறு எங்கும் இல்லை என்றே சொல்லலாம். கோவிலில் வடகிழக்கு மூலையில் ஒரு நில வறையுமிருக்கிறது. ஒவ்வொரு விதமாக ஒலிக்கக் கூடிய முப்பத்திரண்டு தூண்கள் ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ளது பெருவியப்பன்றோ ! இங்கே வைகாசி மாதம் பெருவிழா நடைபெறும்.

களக்காட்டில் புன்னை மரத்தடியில் முளைத்தெழுந்தனன் ஆதலின் புன்னைவன நாதன் என்பது பெருமான் பெயர் ; அம்மை கோமதித்தாய். கல்வெட்டில் "புரமெரிச்சு வர முதவிய நயினார்" என்ற பெயர் காணப்பெறுகிறது. புரம்—கோட்டை ; சிவனார் முப்புரங்களை எரித்தருளி வரம் தந்தருளினார் என்பது இவ் வரலாறு. முப்புரங்களை ஆண்ட மூன்று பேரும் தளராத சிவ பூசனை உடையார்; அவர்களிடம் நாரதரும் திருமாலும் சென்று அறிவை மாற்றிப் பூசனையை மறக்கடித்தார்கள். அதனால் மூன்று கோட்டைகளையும் சிரித்து எரித்து அவர்களில் இருவரைத் தன் கோவில் வாயில் காவலர் ஆக்கி ஒருவனைத் தான் திருநடனம் புரியும்போது பக்கத்தில் நின்று மத்தளம் அடிக்கும்படி பெருமான் வரம் உதவினார். சிவ பூசனையை மறக்கும்படி செய்த பாவத்தால் திருமாலும் நாரதரும் கண்ணிழந்து இங்கு வந்து தவம் கிடந்து கண்பெற்று முத்தியம் பலத்தே திரு நடனக் காட்சி காணும் வரமும் பெற்றனர் என்ற வரலாறு இவ் வூர்த் தலபுராணம் கூறுகின்றது. வரமுதவியதனாலேயே சத்திய வாக்கு அருளிய ஈசன், சத்திய வாக்கீசர் என்ற பெயர் வழக்குப் பிற்காலத்தில் ஏற்பட்டது.

## மேலக்கரி வலங்குளம்—சுந்தரபாண்டீசர்

களக்காட்டுக்கு வடக்கே ஒன்றரை மைல் தொலைவில் கரிவலங்குளம் இருக்கிறது. கரி—யானை ; கரி வலம் வந்து விளையாடிய குளம் கரிவலங்குளம். கரிவலம் வந்த நல்லூர் என்பது சங்கரன் கோவி

லின் கிட்ட உள்ளது. களந்தைப் புராணம் "கரிவலம் செய்த நகரத்தை" என்று கரிவலம் குளத்தையே கூறுகின்றது. சுந்தர பாண்டியரால் இத் திருக்கோவில் கட்டப் பெற்றது. அதனால் பெருமான் சுந்தரபாண்டிய ஈசர் ஆனார். சுந்தர பாண்டியர் உருவம் அவர் மனைவி, பெருமான் திருவருளால் ஊமை நீங்கிய அவர் மகள் ஆகிய இருவருடன் கோவிலிற் காணப் பெறுகிறது. இக் கோவிலின் சிற்பங்களும் சிறந்தன. மணிமண்டபத்திலும், மா மண்டபத்திலும் பலவகை ஒலிகளுடன் கூடிய சிறு தூண்கள் இருக் கின்றன. மாமண்டபத்தில் ஒரு சிறு தூண் சுழலுவதும் பாராட்டத் தகுந்தது. ஓர் யாளி வாயில் கல்லுருண்டை சுழலுகிறது. இங்கே மார்கழி மாதம் பெருவிழா நடைபெறுகிறது.

## தேவநல்லூர்-சோமநாதர்

பதுமனேரிக்குக் கிழக்கே இரண்டு மைல் தூரத்தில் பச்சை யாற்றின் கரையில் இருக்கிறது தேவநல்லூர். சிவனுருக்கு எதி ராகச் செய்த தக்கன் வேள்வியிலே கலந்துகொண்ட பாவம் தீரத் தேவர்கள் வந்து பூசித்த நல்லூர் ஆதலின் இது தேவநல்லூர் எனப் பெயர் பெற்றது. சோமநாதர் அம்மை கோமதியுடன் எழுந் தருளியிருக்கின்றார். இங்கே வைகாசி மாதம் திருவிழா நடைபெறு கிறது. களக்காட்டில் அரசாண்ட வீரமார்த்தாண்டன் வேட்டைக்கு வந்தபோது இலந்தை மரத்தடியிற் சிவலிங்கம் கண்டு கோவில் கட்டிக் கும்பிட்டான்.

பச்சையாறு இவ்வூரைத் தாண்டிச் சிங்கிகுளம், ஓமநல்லூர்களிற் பாய்ந்து பாளையங்காலிற் கலக்கின்றது. இனி நம்பியாற்றுப் பதிகளை ஆராய்வோம்.

## ஏர்வாடி—திருவழுதியீசர்

திருக்குறுங்குடிக்குக் கீழ்புறம் நம்பியாற்றங் கரையில் ஏர்வாடி இருக்கிறது. ஏர்-அழகு, கலப்பை, உழுமாடு, வாடி—பூந்தோட்டம், விற்கும் இடம். அழகிய பூந்தோட்டத்தை உடைமையால் ஏர்வாடி என்ற பெயர் அமைந்திருக்கலாம். அல்லது கலப்பை, உழுமாடு இவைகளை விற்கும் இடமாக இருந்தமையால் ஏர்வாடி என்ற பெயர் ஆயிருக்கலாம். "குறுங்கைக்கு வைகுண்டம் கூப்பிடு தூரம், அதற்கு இது ஏறுபடி (குறுங்கை-திருக்குறுங்குடி)" எனச் சிலர்

கூறி, "திருக்குறுங்குடி அடைந்தவர் வைகுண்டம் சேர்வது எளிது, அத்திருக்குறுங்குடியை அடைவதற்கு இவ்வூர் ஏறுபடியாக இருக்கிறது; அதனால் இவ்வூர் ஏறுபடி என்று பெயர் பெற்றது. அதுவே ஏர்வாடியாகியிருக்கிறது" என்று காரணம் கூறுகின்றார்கள். பெரியநாயகியம்மையுடன் எழுந்தருளியிருக்கும் நமது திருவழுதி ஈசரைக் கண்டு கோவிலெடுத்தவர் பெருங் குளத்தில் திரு வழுதியீசருக்குக் கோவில் கட்டிய திருவழுதி என்ற குருகூர்ப் பாண்டியரே. இங்கும் வைகாசியிலேயே பெரு விழா நடைபெறு கிறது.

## பணகுடி—இராமலிங்கர்

நான்குநேரிக்குத் தென்மேற்கில் பதினான்காவது கல்லில் இருக்கும் பணகுடி அநுமனாற்றின் கரையில் இருக்கிறது. பணகுடி அதாவது பணம் நிரம்பிய ஊர் என்று இப்பெயர்க்குக் காரணம் கூறுவார் சிலர். பனையூர் என்பது போல பனையடியில் தோன்றிய ஊர் பனங் குடி என்பது பணகுடி என்றாயிற்று என்பாரும், பண்பொழில் என்பது போலப் பண்பட்ட நிலவளமுடைய பண்குடி என்பது பணகுடி ஆயிற்று என்பாரும் உளர். நான்குநேரிக் கல்வெட்டில் இது "பண்ணங்குடி" எனப் பெறுகிறது. இராமேசுவரம் இராமலிங் கத்தை நினைந்து பெருமான் இராமலிங்கர் என்று பெயர் இடப் பெற்றார்.

இதுவரை பார்த்த கோவில்கள் ஆற்றை ஒட்டியன; இனி வரு வன விலகியிருந்தாலும் ஆற்றுநீர் கால்வழிச் சென்று பாயும் இடங்கள்.

## இராதாபுரம்—வரகுணபாண்டீசர்

வள்ளியூரிலிருந்து கிழக்கே பத்தாவது கல்லில் இராதபுரம் இருக் கிறது. இவ்வூரிலுள்ள குளங்களுக்கு நம்பியாறு அநுமனாற்றுக் கால்கள் வருகின்றன. இராசராசன் என்ற மன்னன் அமைத்ததனை யால் இராசராசபுரம் என்று பெயர் பெற்ற இவ்வூர் நாளடைவில் இராசாபுரம் ஆகி இராதாபுரம் என மருவிவிட்டது. வரகுண பாண்டியரால் அமைக்கப்பெற்ற பெருமான் வரகுண பாண்டீசரானார்; அம்மை கலியாணித்தாய். சித்திரை மாதம் திருநாள் நடைபெறும்.

கல் வெட்டில் இவ்வூர் பூசங்குடி, வரகுண பாண்டியநல்லூர், இராச ராசபுரம் என வழங்கி வந்தமையும், நாடு பாண்டி மண்டலத்தில் புரட்டய நாடு (எல்லை நாடு) எனப் பெற்றமையும் காணலாம். அம்மை கலியாணித்தாய்க்கு அம்மஞ்சள் காணிக்கையாகக் கொடுக்கப் பட்டுப் பல ஆண்டுகள் வரை அம்மஞ்சள் கொஞ்சங்கூடக் கெடாமல் இருப்பதைக் காண்கின்றோம்.

### உவரி—சுயம்புலிங்கர்

உவர் நிறைந்திருப்பதனால் கடல் உவரி எனப் பெயர் பெறும். அது அதன் கரையிலிருக்கும் ஊருக்கும் பெயராயிற்று. இது நான்குநேரியிலிருந்து கிழக்கே பதினெட்டு மைல் தொலைவிலுள்ள திசையன்விளையிலிருந்து மூன்று மைல் தெற்கே கடற் கரையில் இருக்கிறது. தானாக முளைத்தெழுந்த இலிங்கம் சுயம்புலிங்கம்; இங்கே சிவலிங்கத் திருவுருவமாக இருப்பவர் சாத்தனார் என்று அறிந்தார் கூறுகின்றனர்.

இனி, சிற்றாறு முதலிய பல ஆறுகளின் கரைகளிலுள்ள தென் காசி வட்டத் திருக் கோவில்களைக் காணுவோம்.

## கா. தென்காசி வட்டம்

### தென்காசி நகர்

இந்தியாவின் தெற்குக் கோடியிலுள்ள செந்தமிழ் வழங்கும் திருநெல்வேலி மாவட்டத்தின் தென்மேற்குப் பகுதியிலுள்ளது தென்காசி வட்டம். இவ்வட்டத்தின் தலை நகரம் தென்காசி. இவ் வூரிலிருந்து தென் மேற்கே மலையடி வாரத்தில் உள்ளது குற்றாலம். இங்கே தான் சித்திரை ஆறு அதாவது சிற்றாறு மலையிலிருந்து வட அருவியாகத் தரையிலே வந்து சேர்கிறது. இந்த ஆறு இலஞ்சிக் குமாரர் கோவில் வழியாகத் தென்காசிக்கு வருகிறது. இவ்வாற்றின் இடது கரையிலேதான் தென்காசி ஊரும் கோவிலும் இருக்கின்றன. இங்கேதான் தென்காசியிலிருந்து வடகிழக்கே விருதுநகருக்குப் போகும் புகை வண்டியும், கிழக்கே திருநெல்வேலிக்குப் போகும் புகை வண்டியும் பிரிகின்றன. புகை வண்டி நிலையத்திலிருந்து கோவில் ஆறு பர்லாங்கு தூரத்திலிருக்கிறது. இவ்வூருக்கு மேற்கே மூன்று மைல் தூரத்திலிருக்கிறது செங்கோட்டை,

மேற்கே செங்கோட்டை, கொல்லம், திருவனந்தபுரம், கிழக்கே பாவூர், கடையம், அம்பாசமுத்திரம், சேரன்மாதேவி, திருநெல் வேலி, வடக்கே கடையநல்லூர், சங்கரன்கோவில், கருவைநல்லூர், இராசபாளையம், சீவில்லிபுத்தூர் ஆகிய இடங்களுக்கெல்லாம் புகை வண்டியிற் போவதற்கு வசதியிருப்பது போலவே அடிக்கடி வாடகை உந்து வண்டியிலும் போவதற்கு வசதியிருக்கிறது. இவ்வூரிலிருந்து நல்ல சாலைகள் நாலா பக்கங்களிலும் செல்கின்றன. இதன் சுற்றுப் பக்கங்களிலுள்ள ஊர் எதுவும் இதனோடு நல்ல சாலையினால் தொடுக் கப் பெறாமல் இல்லை.

மேற்குத் தொடர்ச்சி மலைக்கு இவ்வூர் மிகவும் அருகில் இருக் கின்றது. அதனால் இதனைச் சூழப் பட்சிப் பொற்றை (பட்சிநாயக் கன் பொற்றை), வாலியம் பொற்றை, திருமலை முதலிய பல குன்றுகள் இருக்கின்றன. பெரிய மலையின் இப்பகுதி திரிகூட மலை யென்று பெயர் பெறும். திரி-மூன்று, கூடம்-சிகரம், மூன்று சிகரங்களை உடைமையினாலே திரிகூடம் என்ற பெயர் ஆயிற்று. திரிகூட மலைமேலிருந்து தொடங்கித் தேனருவி, செண்பகாதேவி அருவி, பொங்குமாகடலருவி, வட அருவியாக வழிந்து திருக்குற்றால நாதருடைய திருக்கோவில் வழியாக வருவதே சிற்றாறு. உள்ளத்தை மகிழச் செய்கின்ற பழைய குற்றாலம் என்ற இடமும், ஐந்தலையருவி யும் கண்டு நீராடி இன்புறத்தக்கன. பழைய குற்றாலத்தில் வரும் கானாறு அழகனாறு என்ற பெயருடன் பல குளங்களிற் பாய்ந்து நிரப்பிச் சிற்றாற்றிற் சேர்கிறது. ஐந்தலையருவி நீர் சிறு ஆறாக ஓடி வந்து திருவிலஞ்சிக் குமாரர் கோவிலருகே சிற்றாற்றிற் கலக்கிறது. தலை மலை ஐயனாறு செங்கோட்டையாற்றின் ஒரு பகுதியிற் கூடுகின் றது. சதாசிவ நதி என்பது புளியறை வழியாக வரும் செங் கோட்டையாறு; இது சிவமது கங்கை எனப் பெறும் சிற்றாற்றில் தென்காசியிலுள்ள முக்கூடலில் சேருகின்றது. முக்கூடலில் தேனா றாகிய செங்கோட்டையாறும், பாலாறாகிய குற்றால ஆறும், ஊற்றாறு ஆகிய பாதல நதியும் ஆகிய மூன்றும் கூடுகின்றன. இது மிகச் சிறந்த திருத்தம் (தீர்த்தம்). பாவத்தைத் தீர்த்து வைப்பதால் தீர்த்தம் என்றும்; உடலிலுள்ள அழுக்கைப்போக்கித் திருத்து வதால் திருத்தம் என்றும் பெயராகும். வடகரையாறு நெல்லீச் சுர நதி எனப்படும். நெல்லி மலை ஊற்று வந்து கூடுதலால் இது இப்பெயர் பெற்றது; இது வீரகேரளன் புதூர்ப் பக்கத்தில் சிற் றாற்றை அடைகின்றது.

சிற்ருறு முக்கூடலிலிருந்து நேரே கிழக்காகச் சிறிது தூரம் ஓடி வந்து ஊரையடைந்தவுடன் நேர் தெற்கே திரும்பி வளைந்து மறுபடி கிழக்காக ஓடுகிறது. முன் காலத்தில் இவ்வாறு இப்படித் திரும்பாமல் நேர் கிழக்காகவே ஓடி ஊரின் கீழைக்கோடியிலுள்ள பொன்னிப் பாறையின் கிட்டத் தெற்கே வளைந்து சென்றது என்று அறிஞர் பலர் கூறுகின்றார்கள். இதற்கு ஆதாரமாக அவர்கள், புலியூர் அணை ஒப்பணைப் பிள்ளையார் கோவிலின் கிட்ட இருந்ததாகவும், அக்காவின் பத்துத்தான் சம்பாப் பத்து எனவும், சம்பாப்பத்து இருந்த இடம் தான் சம்பாத் தெரு எனப் படுகிறதாகவும், இப்போதும் ஊரின் அப்பகுதியில் கீழே தோண்டும்போது பல சிறு சிறு கால்வாய்கள் காணப்படுகின்றதாகவும், புலியூர் அணையென்னும் இப்போதுள்ள புது அணை உண்டானபோது தான் அணைக் கரைப் பிள்ளையார் கோவில் தோன்றியதாகவும் கூறுகின்றார்கள். கோவிலின் வடக்குத் தேர்த் தெருவுக்கு அடுத்தாற் போலுள்ள சிறு தெருவில் வடமுகமாகச் சித்தார்த்தியம்மன் கோவில் இருக்கிறது; இது முன் ஆறு அவ்வழியாக ஓடிய போது அதன் கரையில் இருந்தாகக் கூறப் பெறுகிறது. ஒப்பணைப் பிள்ளையார், புராணத்தில் ஒப்பணைப் பிள்ளையார் என்று கூறப் பெறுகிறார்.

தென்காசியைச் சூழப் பல சிறு சிறு குளங்கள் காணப்படுகின்றன. அவைகளில் முதன்மையானவை சீவலப்பேரி, சாலாப்பேரி, இடைமலைக்குளம் என்பன. மேலகரக்காலும், புலியூர்க்காலும் சிற்ருற்றிலிருந்து பிரிந்து தென்காசி ஊரைச் சேர்ந்த அளவிலா நன்செய் நிலங்களை வளனுறுத்துகின்றன.

தென்காசியை விட்டுக் குற்றுலத்திற்குப் போக வேண்டுமானாலும், திருநெல்வேலிக்குப் போகவேண்டுமானாலும் சிற்ருற்றைத் தாண்டித்தான் போகவேண்டும். குற்றுலச் சாலையில் ஆற்றின் மேல் இருப்பது யானைப்பாலம்; திருநெல்வேலிச் சாலையிலிருப்பது சங்கிலிப்பாலம்; இவை இரண்டும் மிகச் சிறிய அகலமுடையவைகளாக இருந்ததினாலே இப்போது இரண்டு வண்டிகள் போகக் கூடிய அளவில் பலமாகவும் பெரிதாகவும் கட்டி முடிக்கப் பெற்றிருக்கின்றன.

சித்திரை பத்தாம் நாள் முதலாக ஆரியங்காவுத்தொண்டின் வழியே தென் மேற்குக் காற்று வீசுகின்றது. வைகாசி கடைசியில் சாரல் தொடங்கி ஆனி, ஆடி, ஆவணி முற்பகுதி வரை உடலுக்கு

மிக்க இனிமையைத் தருகின்றது. எப்போது பார்த்தாலும் சிறு மழையும், அதன் பயனாகத் திருக்குற்றால அருவியாட நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்திறங்கிச் செல்லும் மக்கள் குழாமும், ஓயாமல் வண்டிகள் ஓட்டமும் நாம் கண்டு மகிழலாம். இவ்வூர் மக்கள் நித்தமும் "கூதல் மாரி நுண் துளி தூங்கும் குற்றாலக்" காட்சியைக் கண்டு சென்று நுகரும் வாய்ப்பு மிக உடையவர்கள்.

## தென்காசி—காசி விசுவநாதர்

காசி விசுவநாதர் கோவில் மிகப் பெரியதாக ஊரின் நடுநாயக மாக விளங்குகின்றது. கோவிலைச் சுற்றி மாட வீதிகளும், தேர் வீதிகளும் இருக்கின்றன. இங்கே தேர் வீதிகள் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு மாசி வீதிகள் எனப் பெயர் பெறுகின்றன; காரணம் இவ்வூரின் பெரிய தேர்த் திருவிழா மாசி மாதத்தில் நடைபெறுவதுதான்.

கோவிலின் தலைப்பில் மொட்டைக் கோபுரம் இருக்கிறது. இது ஒன்பது தட்டுக்களுடன் கி.பி. 1456-ல் பராக்கிரம பாண்டியரால் தொடங்கப்பெற்று, ஆறு ஆண்டுகளில் அரைகுறையாக முடிவு பெற்றது. அவர் தம்பி குலசேகரத் தேவர் கோபுரத்தை முற்றுவித்தார். இச்செய்திகள் இக்கோபுரத்திலுள்ள கல்வெட்டுக்களினால் தெளிவாக விளக்கப்படுகின்றன. இக்கோபுரம் மிகவும் அவசரம் அவசரமாகக் கட்டப்பட்டதென்றும், அதனால் விரைவில் இதில் வெடிப்புக் கண்டு அபாயமான நிலையை அடைந்து நொறுங்கிவிட்டதென்றும் சில அறிஞர் கருதுகின்றனர். ஆனால் இவ்வூரார் சொல்வதாவது :— "150 ஆண்டுகளுக்கு முன்பு இக்கோபுரத்தில் நவாபு பத்திரங்களை யெல்லாம் வைத்திருந்தார் ; அந்த அறையிலேயே முதலில் தீப் பிடிக்கத் தொடங்கிக் கோபுரத்தின் மேல் தட்டுக்களிலெல்லாம் பரவி அழித்து விட்டது ; அது முதல் இது பழுதடைந்த நிலைமையிலிருக்கிறது" என்பது. செனக்கீ என்ற பாதிரியார் எழுதி வைத்த நாட் குறிப்பின்படி 1792-ம் ஆண்டு பிப்ரவரிமீ 12உயில் இந்தக் கோபுரமும் கடிகாரமும் சரியான நிலைமையிலிருந்தன என்பது தெரிய வருகின்றது. கி.பி. 1824–25-ல் உள்ள பழைய நிலம் அளப்பார் குறிப்பினால் இந்தக் கோபுரம் ஒழுங்கற்று மோசமான நிலைமையை அடைந்து விட்டதென்பது விளங்குகின்றது. கோவிலின் ஒரு பகுதியிலே தாண் வட்ட (தாலூகா) அலுவலகம் இருந்து வந்திருக்கிறது. இவை

களை ஆராயுமிடத்து கோபுரத்தில் தீப்பற்றியது 19-ம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருக்க வேண்டும் என நாம் அறியலாம். சங்கரன் கோவில் கோபுரத்தில் இருப்பது போலவே (இதுவும் இப்போது ஓட வில்லை) இக்கோபுரத்தின் மேலும் ஒரு நாழிகைக் கடிகாரம் இருந் திருக்கிறது ; அது கோபுரத்தோடு தீயில் அழிந்து விட்டது.

காசி விசுவநாதர் கோவில் கருவறை, அர்த்த மண்டபம், மணி மண்டபம், பலி மண்டபம், மாமண்டபம், பிரகார மண்டபம் என்ற பகுதிகளையுடையது. இதன் தென்பக்கத்தே உலகம்மை கோவில் உள்ளது. இது கருவறை, அர்த்த மண்டபம், மணி மண்டபம், மாமண்டபம், பிரகார மண்டபங்களோடு திருமுன்பு பக்கப்பத்தி மண்டபங்களுடன் கூடிய திருமண மண்டபத்தையும் உடையது.

இரண்டு கோவில்களையும் சேர்த்துச் சுற்றும் வெளிச்சுற்றும் திரு மதிலும், மாட வீதிகளும், தேர் வீதிகளும் சுற்றுக்களாக உள. இரண்டு கோவில்களுக்கும் நடுவில் நெல் சேர் இருக்கிறது. இது பழைய காலத்தில் பெருமாள் கோவிலாக இருந்திருக்கிறது. இதிலிருந்த பெருமாள் திருவுரு ஆற்றங்கரையிலுள்ள பெருமாள் கோவிலுக்கு மாற்றப்பட்டு விட்டது என்பது தெரிகிறது. தலபுராணத் திலாவது இக்கோவிலிலுள்ள கல்வெட்டுக்களிலாவது பெருமாளைப் பற்றி யாதொரு குறிப்பும் காணப்படவில்லை. "பெரிய கோவில் கட்டப் பெற்ற நூறு ஆண்டுகளில் விசய நகர மன்னன் அச்சுதன் இப்பக்கம் தனது பெரிய படையோடு வந்து திருவிதாங்கோட்டு மன்னரை வென்று தாமிரபரணிக் கரையில் வெற்றித் தூணை நாட்டினன். அவனும் அவனைச் சேர்ந்தவரும் வீரவைணவராதலால் காசி விசுவ நாதர் விசாலாட்சி கோவில்களுக்கிடையே இப்பெருமாள் கோவிலைப் புகுத்தியிருக்க வேண்டும்" எனச் சரித்திர நூலார் கூறுகின்றனர்கள்.

"செண்பக மலர்க்கீழ் மேவும் சிவக்குறி" எனவும், அம்மைக்கு "நீழல் நல்கும் பவள மல்லிகை" எனவும் வருவன கொண்டு தலமரம் செண்பகம் என்பதும் அம்மை பவள மல்லிகைக் கீழ் இருந்தனள் என்பதும் விளங்கும். இவ்வூரில் பலா மரமும் தல மரமாகக் கொள்ளப் பெறுகிறது. இந்தக் கோவிலிலுள்ள பலா மரம் சிவலிங்க உருவாகக் காய்க்கின்றது. "பலாலிங்கம் காய்க்கும் ஊர்" என்று தல புராணமும் கூறுகின்றது. வடகாசியில் இறப்பவருக்குத் தான் முத்தி; தென்காசியிலோ "இறப்பார், பிறப்பார், இருப்பார், காண்பார் எவர்க்குமே முத்தி."

## சிறப்புச் சிற்பங்கள்

தென்காசிக் கோவிலில் உலகத்திலேயே ஒப்புயர்வற்றது என்று சொல்லும்படியான சிறப்புச் சிற்பங்கள் உள்ளன. காசி விசுவநாதர் கோவில் முகப்பு மண்டபத்தில் எட்டுப் பெரிய தூண்கள் நிற்கின்றன. அவைகளில் தெற்கு வரிசையில் மேற்கிலிருந்து கிழக்காகப் பின் வரும் உருவங்களாகிய—1. அகோர வீரபத்திரன், 2. மன்மதன், 3. திருமால், 4. துர்க்கையும் ; வடக்கு வரிசையில் மேற்கிலிருந்து கிழக்காக 1. வீரபத்திரர் சட்டைநாதர், 2. இரதி, 3. பதஞ்சலி வியாக்கிரபாதருடன் மாதாண்டவ மூர்த்தி, 4. திருமால் நான் முகனுடன் ஊர்த்துவதாண்டவ மூர்த்தியும் அமைந்திருக்கின்றனர். கோவிலைப் பார்க்க மேற்கு முகமாகத் தெற்கிலொன்றும், வடக்கி லொன்றுமாக உள்ள தூண்களில் மிக்க பேரழகுடைய இரண்டு பெண்களின் உருவங்கள் அமைந்திருக்கின்றன. இவை ஒவ்வொன் றும் தூணுடன் சேர்த்துத் தனித்தனி ஒரே கல்லில் அமைக்கப் பெற்றுள்ளன. இங்ஙனமே பெருமாள் மண்டபத்தில் பன்னிரண்டு உருவங்கள் காணப்படுகின்றன. இவைகளிலுள்ள சிற்பச் சிறப்பு என்னவென்றால், மரத்திலே கூடச் செய்து முடிக்க முடியாத அவ்வளவு நுட்பமான வேலைப்பாடுடையன இக்கல்லுருவங்கள்.

## புராண வரலாறு

தென்காசித் தலபுராண ஆசிரியர் தென்காசியின் கீழைப் பகுதி யாகிய புலியூரிலுள்ள சைவமடாதீனம் சந்திரசேகரக் குரு பரம்பரையில் நாற்பத்திரண்டாவது தலை முறையில் வந்த அழகிய திருச்சிற்றம்பல தேசிகராவார். இவர், குமார கவிராய தேசிகரென்றும் பெயர் பெறுவார். இவர் திருமடத்தை நிலை நிறுத்தியவர் தில்லை கண்ட குலசேகர பாண்டியர். கொல்லம் 1016-ம் ஆண்டில் பாடப் பெற்ற இப்புராணம் கொல்லம் 1030-ம் ஆண்டு அரங்கேற்றப் பெற் றது. வரலாற்றுக்குப் பொருத்தமான பல பகுதிகள் இதில் உள்ளன. ஆதலின் அவற்றுள் சில கீழே சுருக்கிக் கூறப்பெறுவன.

## குலசேகரமுடையார் திருக்கோவில்

மாறன் மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த குலசேகர பாண்டியர், பிள்ளையில்லாமல் மனம் வாடியிருக்கும்போது சிவனார் அவர் கனவிலே தோன்றி "மலையத்தின் அடியிலுள்ள

செண்பக வனத்தில் எம்மை வழிபடு" என்றருள, அவர் தம் மனைவியோடு அங்கு வந்து சேர்ந்து அங்கிருந்த முனிவர்களை வணங்கி அவர்களின் உதவியினாலே செண்பக நிழலில் வாழும் பெருமானையும், இருவாச்சிக்கீழ் அமரும் பெருமாட்டியையும் கண்டு பணிந்தனர். சிவனார் இலிங்கத்திலே தோன்றி வரம் அருள அதன் பலனாக உலகநாத பாண்டியர் பிறந்தார். உலகநாதருக்குச் சோழன் மகள் பொன்மாலையை மணமுடித்து முடி சூட்டிக் குலசேகரர் அவர்களை அழைத்துக் கொண்டு ஒரு நாள் செண்பக வனத்தை அடைந்து உலகநாதரையும், உலகம்மையையும் பணிந்தார். அது முதல் அவர் அங்கேயே அழகான தவச்சாலையாக ஒரு திருமடம் அமைத்துத் தவம் செய்திருந்து சிவனுலகடைந்தார். அத்தவ இடம்தான் குல சேகரமுடையார் திருக்கோவில்.

## குழல்வாய் மொழியம்மை

உலகநாத பாண்டியரும் பிள்ளையில்லாக் குறையால் வருந்தித் தம்மையருளிய உலகநாதரை அடைந்து பணிந்தார். பெருமான், "உலகம்மையே உனக்கு மகளாக வருவாள்; அவள் திருமணத்தின் பின் உனக்கு ஒரு மகன் பிறப்பான்" என்றருளினார். அங்ஙனமே உலகம்மை ஒரு பெண்ணாகிப் பாண்டியரையும், அவர் மனைவியையும் அணுகி, "அம்மா, அப்பா" என அழைத்தாள். அசரீரிப்படி குழல்வாய்மொழி யம்மை என்ற பெயர் அம்மைக்கு இடப் பெற்றது. எழு முனிவருடைய மனைவிமாரும் எழு கன்னிகைகளாகி அம்மைக்குத் தோழியர் ஆயினர். அம்மை கன்னி மாடத்தில் இருந்தாள். சித் திரையாற்றைத் தன் சோலையின் நடுவே ஓர் ஓடையாய்த் திருப்பி அதன் கரையில் பூசை மடம் அமைத்து அவள் நாடோறும் சென்று பூசனை புரிந்து வந்தாள். ஒரு நாள் பெம்மான் வேலியின்புறத்தே வந்து பெருமாட்டியைக் கண்டு, "நாளை விடைமீது வருவோம். உன் தந்தையிடம் மணம் பேசி ஐப்பசி உத்தரத்தில் உன்னை மணப் போம்" என்றருளினார். களவியல் நடாத்திக் காட்டுவார்போன்று இறைவர் மறுநாள் விடைமேற்கொண்டு காட்சி தந்தார். குழல் வாய்மொழித் தாயும் காதல் கொண்டவள் போல நடித்தாள். பெருமான் ஒரு குறத்தியாகி வந்து அம்மைக்குக் குறி சொல்லு கின்றார். முனிவர் பாண்டியரையடைந்து முழுத்தம் தீர்மானிக்

தின்றனர். குலசேகர பாண்டியர் தவச்சாலையே குலசேகரமுடையா ருக்குத் திருமணச்சாலையாயிற்று. திருமணம் முடிந்தவுடன் பணிந்து நின்ற உலகநாத பாண்டியரை நோக்கி,

" நுந்தையாகிய குல சேகரன் இவ்விடை
நோற்றெமைப் பூசைசெய் திருத்தும்
அந்தநா ளில்குல சேகர முடையவ
ராய்க்குழல் வாய்மொழித் தாயாய்
வந்தருள் செய்ததால் அப்பெயர் கொண்டிவண்
வதிகுவேம் கோயிலொன் றமைத்தி."

எனப்பெருமான் திருவாய் மலர்ந்தருளிக் கோவிலிற் புகுந்தார். அங்ஙனமே பாண்டியர் கோவில் அமைத்து வணங்கி மாறன் மங்கலத் துக்கு வந்திருந்தார். அவருக்குக் குலசேகரன் என ஒரு ஆண் மகன் பிறந்தான்.

## குடிலை உபதேசமும், தரணி பீடமும்.

சிவபெருமான் பதுமாதனத்திலிருந்து உலகம்மைக்குக் குடிலையை உபதேசம் செய்தருளினர். குடிலை என்பது ஓம்.

" மந்திரராச ஓங்காரம், பூவழங்கும் ஒலியில் பொதுவதாயிடி னும் பொறிவடிவினில் தமிழ் ஆமால்."

" ஒலிவரி வடிவம் அனுதியாய்த் தமிழ்க்கே
உள, எழுத்திலா மொழி வடசொல்
மலிபிர ணவம் தான் வடிவிலா தொழியின்
மற்றதைப் பதிட்டை செய்திறைஞ்சிக்
கலிதவிர் வோர்ஆர் ? மயேச்சுர தலத்து
ஓங்காரமே சிவார்ச்சை செய்ததுவாய்
பொலிவுசெய் துரைக்கும் புராணமும் உளதால்
புகலும் ஓம் தமிழக மறையே."

" சிவன் எழுந்தருளும் பிரணவ பீடம்
திகழ்திரு வாசிஎன் றிடப்பட்
டிவர்தரு வழக்கும் தமிழ்எனல் காட்டும்."

(தென்காசித் தலபுராணம்.)

சிவபெருமானுடைய சத்தியின் எந்திரமாம் ஆலயம்தான் நாற்பத்து முக்கோணம்; இது தரணி பீடமாகும். இது அடியார் வேண்டுவன வெல்லாம் சித்திக்கச் செய்வதால் சித்திபீடமென்றும், கலைஞானங்களை யெல்லாம் அருள்கையால் கலைப்பீடம் எனவும், நாற்பத்து முக்கோண மாதலினுல் போக பீடமென்றும், எல்லா உருவும் தரும் சீரினுலே தரணி பீடம் எனவும் பெயர் பெறும்.

## சிரும்பாசுரன்

வச்சிரவாகு நான்முகனிடம் பெற்ற வரத்தால் ஓர் ஆண் குழந்தையைப் பெற்ருன். அப்பிள்ளையின் தாய் தூலகண்ட முனிவன் மேல் கட்டெறும்புகளை வாரிக் கொட்டியதால் அம்முனிவன் எறும்பைப் பெறுவாய் எனச் சபித்துப் பின் வச்சிரவாகு வேண்டுதலுக்கு இரங்கி எறும்புமுகனைப் பெறுவாய் என அருளினன். அம்முனிவன் சொற்படி அப்பிள்ளையாகிய சிரும்பாசுரன் காவிரியின் தென் கரையில் சிவாலயம் கட்டி வணங்கி அழியாவரம் பெற்ருன். அதனுல் அவன் திருமால், நான்முகன் முதலிய தேவர்களை யெல்லாம் போருக்கிழுக்க, அவர்கள் தென்காசிக்கு ஓடிவந்து உலகம்மையைச் சரணடைந்தனர். சிரும்பன் சிறந்த ஞானி. ஆதலின் உலகம்மை கையால் உடலை நீத்து, அவள் திருவடிப்பேறு பெறத் துணிந்து அம்மையோடு போர் தொடுத்தான். அவள் சூலத்தை எவினுள். அதனுல் துளைக்கப்பட்டு அவன் அம்மையின் திருவடியில் விழுந்து வேண்டித் திருவருள் பெற்ருன். போர் முனைந்த உலகம்மை வடக்கு வாய்ச் செல்வியாகி அரசருள் நங்கையாய் இக்காலத்தில் அரசூர்நங்கை எனப்படுகிருள். அரிகேசரி பராக்கிரமன் அவளுடைய கோவிலைக் கட்டியமையால் இடைக்காலத்தில் அம்மை அரிகேசரி நங்கை எனவும் அழைக்கப் பெறுகிருள்.

## வாலி

கிட்கிந்தை மன்னன் வாலி. அவன் தென்காசியிலுள்ள வாலியம் பொற்றையை அடைந்து, அங்குள்ள குகையில் தங்கி முக்கூடலில் முழுகி வாலிநாதனை நிறுவிக் காசிவிசுவநாதரையும் வழிபட்டு ஆறு மாதம் தவமிருந்து "எதிர்த்தவர் பலத்திற்பாதி உனக்கு எய்தும்" எனும் வரமும் பெற்ருன். பின் அவன் பிரமதேசத்தின் வடமேற்கில் கூனையாற்றங் கரையில் வாலீச்சுரம் கண்டு வழிபட்டு,

கடலாட எண்ணி உவரி என்ற ஊரை அடைந்து தான்தோன்றிநாதனை வணங்கி இலங்கேசன் இராவணன் நட்புப் பெற்றுக் கிட்கிந்தையை அடைந்தான். வாலி வரம் பெற்ற படலம் என்ற இந்தப் பகுதியில் புராண ஆசிரியர் வாலியைப்பற்றிக் கூறும் குறிப்புக்கள் அறிஞ ராலே கவனிக்கற்பாலன. "வாலி ஒரு சைவன்; புலாலுண்ணும் வடநாட்டார் அவனைப்புலால் உண்ணாத காரணத்தால் குரங்கென இகழ்ந்தனர்; வாலியின் துணைவனாகிய சாம்புவந்தன் புலால் உண்பவன்; அதனால் அவனைக் கரடி என்றிகழ்ந்தனர். வாலி என்ற பெயரைக் கொண்டு வாலையுடையவன் என்று கூறுவது பொருந் தாது. வாலி என்ற பெயருடைய பலராமனுக்கு வால் உண்டா? வால் என்பது அறிவு, அதையுடையவன் வாலி. வாலிக்குக் கோவிலில் வால் வைத்திருப்பது அறிவீனம்." இங்ஙனம் கூறும் பாடல்கள் நேரில் படித்து அறிந்து கொள்ளும் மேன்மையுடையன. வாலி வழிபட்ட வாலிநாதனே சொக்கநாதன்; சொக்கேசன் கோவில் என்பது அதுதான்.

வாலீச்சுரம் என்னும் கோவில் மிகப் பழமையானது. அங் குள்ள சிற்பங்கள் பழங்காலத்தவை. அரிய வேலைப்பாடுகளுடன் திகழ்வன என்று தொல் பொருளாராய்ச்சி வல்லுநர் கருது கின்றனர்.

## செண்பக பாண்டியர்

முன் மாறன் மங்கலத்தில் உலகநாத பாண்டியருக்குக் குல சேகரன் பிறந்தான் என்று கூறினோம். அவன் வழியில் விந்தன் என்பவன் புகழ்பட வாழ்ந்தான். அதனால் அவ்வூர் விந்தன் நல் லூர் எனவும், விந்தை எனவும் பெயர் பெறும். அவன் பேரனே செண்பக பாண்டியர் என்னும் பராக்கிரம பாண்டியர். அவர் சேரனோடு போர் புரிந்து வென்றார்.

ஒரு நாள் முருகப் பெருமான் முனி உருவங்கொண்டு பாண்டியர் படுக்கையறையிற் புகுந்து படுத்திருந்தார். அருகில் முருகன் கோவி லில் பெருமானையும் வள்ளி தெய்வயானையையும் வழிபட்டிருந்த மன்னருக்கு முருகப்பிரானுடைய உடலிலிருந்து ஒரு புது மணம் வீசியது. அதனைப் பின்பற்றிய பாண்டியர் தூங்குவார்போல இருந்த முருகனை வந்து கண்டவுடன், ஓர் உருண்டை பெருமான்

வாயிலிருந்து வெளி வந்தது." ஆறுமுகன் அக்குளிகையைப் பாண்டியரிடம் தந்து மந்திரமும் அருளி மறைந்தனர். பராக்கிரமர் அதனுதவியால் நாடோறும் பிறரறியாமற் காசி சென்று வழிபட்டு வந்தார். இதையறிந்த அவர் மனைவி வில்லவதி தன்னையும் அழைத்தேக வேண்டினாள். முருகனும் தோன்றி 'அது செய்' என்ன, மன்னவர் மனைவியையும் உடன் அழைத்துச் சென்றார். காசியிலிருந்து வரும் வழியில் மதுரையில் அரசி பூத்தாள். அதனால் இருவரும் நான்கு நாள் மதுரையில் தங்கி ஐந்தாம் நாள் சொக்கரை வணங்கினர். பெருமான், "ஊர்ப்பக்கத்தில் காசி காண்" என அருளினர். மன்னர் ஊரையடைந்து செண்பகவன முனிவரைக் கண்டு **தென்காசி** காட்ட வேண்டினர். அப்போது வானொலி, "சித்தராகி உலகேசன் உனக்கு அருள் செய்வான்" என ஒலித்தது. அன்றிரவு உலகநாயகர் அவர் கனவிலே தோன்றி "உன் முன்னோன் குலசேகரனுக்கு நாம் அருள் செய்தோம். அவன் மகன் உலகநாதனுக்கு மகளாகிய உலகம்மையாம் குழல்வாய் மொழியாளை மணந்தோம். இங்கிருந்து மேற்கே அரைக்காத தூரத்தில் நாம் இருக்கிறோம். அவ்விடமே **தென்காசி**. நாளை இங்கிருந்து ஓர் எறும்பொழுக்கு அவ்விடம் வரையிற் போகும். அதைத் தொடர்ந்து செல். நாமும் விடைமேல் வந்து அருளுவோம்" என்றருளினர். பராக்கிரம பாண்டியர், "இங்கு தென்காசியிலிருந்தும், அப்பிரான் என் குலதெய்வமாக இருந்தும் நான் அவரைக் காணாது இருந்தேனே" என்று மகிழ்ந்து தமது வழிபடு கடவுளாகிய ஆறுமுகனையும் வாழ்த்தினர். விடிந்தவுடன் செண்பக பாண்டியர் எறும்பொழுக்கின் வழியே சென்று சித்திரையாற்றின் கரையிலே நந்தியைக் கண்டு அதனருகில் இருந்த மடுவிலே சிவலிங்கப் பெருமானையும் கண்டார்: பின் கடவுளருளாற் கோவிலும் கட்டி, தென்காசி நகரையும் அமைத்துப் பரம்பொருளை நாடோறும் வழிபட்டு அருள் பெற்றார். இப்பாண்டியர் காசிகண்ட பராக்கிரம பாண்டியர் எனவும் அரிகேசரி தேவர் எனவும் பெயர் பெறுவார்.

## திருக்குற்றாலம்—குற்றாலநாதர்

தென் காசிக்குத் தென் மேற்கே மூன்றரை மைல் தூரத்தில் இருக்கிறது திருக்குற்றாலம். இங்கிருந்து தென்காசி, இலஞ்சி, செங்கோட்டை முதலிய எல்லா ஊர்களுக்கும் நல்ல சாலைகள் இருக்

கின்றன. குற்றாலப் பேரருவி குளிப்பதற்கு இன்பம் தருவது. அதனால் சாரற் காலத்தில் இங்கே பற்பல இடங்களிலிருந்து செல்வர்கள். குடும்பத்துடன் வந்து தங்கி நீராடி மகிழ்கின்றார்கள். இதனாலேயே திருக்குற்றாலம் போக பீடம் என்று புகழப் பெறுகிறது. பாவநாசம் யோகபீடம், சிவசயிலம் ஞானபீடம்.

குற்றாலம் என்பது வரையாத்தி மரமாம்; அதன் நிழலிலே பெருமான் இருத்தலினாலே இவ்விடம் குற்றாலம் எனப் பெற்றது. "குற்றாலத்து அமர்ந்துறையும் கூத்தர்" என்பதனால் "குறு ஆல மரத்தின் கீழ்க் கூத்தாடி நின்றார் பெருமான்; அதனால் குற்றாலம் ஆயிற்று" என்று கூறுவாரும் உளர்.

இப்போது குற்றால நாதராகிய சிவலிங்கப் பெருமான் இருக்கிற இடத்தில் முன் திருமால் இருந்தார். இமைய மலையிலிருந்து தெற்கே சிவபெருமானால் அனுப்பப்பட்ட குறுமுனிவர் அகத்தியனார் இங்கே வந்தார்; கும்பிடக் கோவிலினுள்ளே நுழைந்தார். அங்கிருந்த வைணவப் பூசாரிகள் சிவ வேடத்துடன் வரும் இவரைத் தடுத்தார்கள். அகத்தியரோ விலகிச் சென்று தம் திருமேனியில் பன்னிரண்டு திரு நாமங்களைச் சாத்திக் கொண்டு திரும்ப வந்தார். அப்போது அப்பூசாரிகள் இவரை வணங்கி உள்ளே அழைத்துச் சென்றார்கள். இவர் திருமால் திருமுன்பு சென்று நின்று,

"பாலலோசனப்பரன் எனப் பாவகம் பண்ணி
மாலினார் சிரமீது தன் மலர்க்கரம் பதித்தே
கோல நீடுமெய் குறுகு நீகுறுகு எனக்கூறிச்
சீலமார் சிவலிங்கத்தின் வடிவினைச் செய்தான்."

இங்ஙனமாகத் திருமாலின் திருமேனி சிவலிங்கமாக்கப் பெற்றது அகத்தியரால். கோவில் சங்கின் வடிவில் அமைந்துள்ளது. நன்னகரப் பெருமாள் என்ற பெயருடன் திருமால் உருவமுள்ள உட்கோயிலும் உள்ளது.

அம்மை குழல்வாய் மொழியாள் குற்றாலப் பெருமானுடைய தென்புறம் அழகாகப் புதுப்பணி பெற்ற திருக் கோவிலில் எழுந்தருளி நருக்கின்றாள். கேள்விச் சான்றும் அதனைப் பாடிய திருக்குற்றாலத் தல புராணம், திருநெல்வேலித் தல புராணம் ஆகிய புராணச் சான்றுகளும் தவிரத் திருக் கோவிலில் "அது முன்னர் திருமால் கோவிலாக இருந்தது" என்பதற்கு வேறு சான்றுகள் இல்லை.

இக் கோவிலிற் காணப்படும் கல்வெட்டுக்களினால் இக்கோவிலின் பல பகுதிகள் அமைந்த காலம், சொத்துக்கள் முதலிய உண்மைகள் புலனாகின்றன. பெருமான் ' குற்றாலம் உடையார்,' ' திருக்குற்றாலம் உடைய நாயனார் ' எனவும், அம்மை ' குழல்வாய் மொழி மங்கை யார் ' எனவும் குறிக்கப் பெறுகின்றனர்.

இத்திருக்கோவிலிலுள்ள " தரணிபீடம் " அருள் பழுத்தொழுகும் பெருமை வாய்ந்தது. இங்கே வழிபட்டிருந்து ஊமை நீங்கியோர் சிலர்.

திருஞான சம்பந்தப் பெருமான் " குற்றாலம் குறும்பலாக்கும்பிட் டேத்தி "னார் என்று சேக்கிழார் பெரிய புராணத்திற் பாடினார். சம்பந்தர் முதலில் குற்றாலப் பதிகமும் பின் குறும்பலாப் பதிகமும் பாடினார். அவர் அங்கே நேரிற் கண்டு அனுபவித்த இயற்கை நலன்களை யெல்லாம் அப்பதிகங்களில் அமைத்துப் பாடுகிறார்.

அவர் " நமரங்காள், அடியீர்காள், சிறு தொண்டீர், பெரியீர் காள், தொழுவீர்காள், பணிவீர்காள் " என்றெல்லாம் பக்கல் நின் றாரை விளித்து, " குற்றாலம் நாதன் மேய நன்னகர் போலும் " என்று ஒவ்வொரு பாட்டிலும் பாடுகிறார்.

" செல்வம் மல்குசெண்பகம் வேங்கை சென்று ஏறிக்
கொல்லை முல்லை மெல் அரும்பீனும் குற்றாலம் ; "

" மைம்மா நீலக் கண்ணியர் சாரல் மணி வாரிக்
கொய்ம்மா ஏனல் உண்கிளி ஓப்பும் குற்றாலம் ; "

" போதும் பொன்னும் உந்தி அருவி புடைசூழக்
கூதல் மாரிநுண் துளி தூங்கும் குற்றாலம் ; "

என்பன குற்றாலத் திருப்பதிகத்தில் சம்பந்தர் திருவாக்கு.

குரங்குகள் செய்த விளையாட்டு அவருடைய கவனத்தை ஈர்த் திருக்கின்றது.

" மலையார் சாரல் மகவுடன் வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்தும் குற்றாலம்".

" மந்தி பாய்ந்து உண்டு விண்ட கோட்பலவின்
தீங்கனியை மாக்கடுவன் உண்டுகளும் குறும்பலாவே ".

" நீடுயர் வேய்குனியப் பாய்கடுவன் நீள்கழைமேல் நிருத்தம்
[செய்யக்
கூடிய வேடுவர்கள் கூய்விளியாக் கைமறிக்கும் குறும்ப
[லாவே".

இவை குரங்குகளைப் பற்றிச் சம்பந்தர் கண்டு மகிழ்ந்து கூறுவன. குற்ருலத் திருப்பதிகம் அகத்தியர் ஆக்கிய சிவலிங்கப் பெருமானைக் குறிப்பது. குறும்பலாப் பதிகம் தல மரத்தைப் பற்றியது. தலமரம் குறும்பலா ; நான்கு வேதங்களும் பெருமானை நோக்கித் தவ மிருந்து அருள் பெற்றன ; அவையே குறும்பலா ; குறும்பலா அடியிலும் பெருமான் சிவலிங்கமாக எழுந்தருளி யிருக்கின்ருர். தென்காசியிலிருந்து வரும் வழியில் திருஞானசம்பந்தப் பெருமான் சிவிகை விட்டிறங்கிக் கோபுர வணக்கம் செய்து அடியாருடன் திருக் கோவிலுக்குச் சென்ற இடத்தில் ஒரு விநாயகர் கோவில் அமைந் துள்ளது. இந்தத் திருஞானசம்பந்த விநாயகர் கோவில் அண்மை யில் புதுப்பிக்கப்பெற்றது. இங்கு விநாயகர் உருவத்துடன் சம்பந்தர் உருவமும் திகழ்வது காணலாம்.

" குற்ருலத்துறை கூத்தரை "ப் பற்றிப் பின் ஓரிடத்தில் ஆராய் வோம்.

## கடையநல்லூர்—அண்ணுமலைநாதர்

தென்காசிக்கு வடக்கே சீவில்லிபுத்தூருக்குப் போகும்சாலையில் பத் தாவது மைலில் கடையநல்லூர் இருக்கிறது. இப்போதிருக்கும் இடத் திற்கு மேற்கே இரண்டு மைல் தள்ளி மருதூர் என்ற பெயரோடு இவ்வூர் இருந்தது. மலையடிவார மானதால் விலங்குகளின் தொல்லை மிகுதியாக இருந்துவந்தது. அதனுல் அவ்வூரார் கிழக்கே வந்து குடியேற எண்ணியிருந்தனர்.

ஒருநாள் ஒரு குடியானவன் ஆட்டுப்பாலைக் கடைகாலிற் கறந்து கீழே வைத்தான் ; திரும்ப எடுக்கும்போது அக்கடைகால் தரையில் ஓட்டிக்கொண்டது. கவனித்துப் பார்க்கும்போது அக்கடைகாலின் கீழே ஒரு சிவலிங்கம் இருப்பது புலனுயிற்று. கடைகால்—கடையால் —பால் கறக்கும் மூங்கிற் குழாய். கடைகாலின் கீழே முளைத்திருந்த பெருமான் ஆனதினுலே பெருமான் கடைகாலீசர், கடையாலீசர் என்று பெயர் பெற்ருர். மருதூரார் அனைவரும் இங்கே வந்து

குடியேறினர். அந்த ஊர் "கடைகால் நல்லூர்", "கடையால்நல்லூர்" என்று பெயரிடப்பெற்றது. கடையால் நல்லூர் கடைய நல்லூர் என இன்று வழங்குகின்றது.

"வடவாரிநாடு கடயலூர், கடைக்கால் நல்லூர் என்ற மருதூர்க் கோட்டை, கடைகாலீசுரர்" என்ற பெயர்கள் இக்கோவிலில் உள்ள கல்வெட்டுக்களில் உள்ளன.

திருவண்ணுமலைக் கோவிலை எண்ணிப் புதிதாக இவ்வூரில் அமைந்த கோவிலே அண்ணுமலை நாதர் திருக்கோவில். இது ஒரு தனிக்கோவில். அண்ணுமலைப் பேரேரி என்ற தனிக்குளம் இக் கோவிற் பெருமான் பெயரால் தோன்றியது.

## கிருட்டிணபுரம்—விசுவநாதர், கோபாலகிருட்டினர்

விசுவநாதர் விசாலாட்சியம்மையுடன் கிருட்டிணபுரத்தில் பிராமணர் தெருவில் வடகிழக்கே எழுந்தருளியிருக்கின்றார். அத்தெருவின் மேலோரம் கோபால கிருட்டினர் திருக்கோவில் இருக்கிறது. இந்தக் கிருட்டினர் பெயராலேயே கிருட்டிணபுரம் அமைந்தது. இவ்வூர் கடையநல்லூருக்கு ஒருமைல் வடக்கே இருந்தாலும் கடைய நல்லூரின் ஒரு பகுதியே.

அகரம், சொக்கன்பட்டி, மாருந்தை ஆகிய ஊர்களிலுள்ள சிவன் கோவில்கள் ரூபா மூவாயிரத்துக்குக் குறைந்த வருவாயினவே; இருந்தாலும் அவைகளின் முதன்மை பற்றிக் கீழே சுருங்கக் கூறுவோம்.

## அகரம்—மானகவசேசுவரர்

எழுத்துக்களில் அகரம் போல ஊர்களில் முதன்மை பெற்றிருப்பது அகரம். இது தென்காசி திருநெல்வேலிச் சாலைமேல் உள்ள ஆலங்குளத்திலிருந்து வடக்கே ஐந்து மைல் தூரத்தில் இருக்கிறது. மானத்தைக் கவசமாக உடையவர் அவ்வூர் மக்கள்; அதனுல் அவர்களால் வழிபடப் பெறும் சிவலிங்கப் பெருமான் மானகவசேசுவரர் எனப் புகழப்பெற்ருர்.

இது தென்காசிக் கல்வெட்டில் "சிற்றுற்றங்கரைப் போக்கு, குருமரைநாடு சேந்தனேரியிலுள்ள மானகவச சதுர்வேதி மங்கலம்"

எனவும், "பராக்கிரம பாண்டியர் தந்த அகரம்" எனவும் குறிக்கப் பெற்றுள்ளது. இங்கே அகரம் என்பது பார்ப்பனருக்குத் தானமாகத் தந்த ஊர்.

## சொக்கன்பட்டி—விசுவநாதர்

கிருஷ்ணபுரத்துக்கு மூன்று மைல் வடக்கே இருக்கிறது சொக்கன் பட்டி. மதுரை மன்னன் சொக்கநாத நாயக்கர் பெயரால் அமைந்து ஒரு பெரிய குறுநில மன்னருடைய ஆளுகையில் இருந்தது இவ்வூர். அக்குறுநில மன்னர் பலர் திருக்குற்றாலத்தில் பல அரிய திருப்பணி கள் ஆக்கினர். இவ்வூர்ப் பெருமான் விசுவநாதர் அழகிய சிறு திருக்கோவிலில் விசாலாட்சியம்மையுடன் எழுந்தருளியிருக் கின்றார்.

## மாறுந்தை—கைலாசநாதர்

இவ்வூரை "மாறன்தாயநல்லூர்" என்னும் கல்வெட்டு. இது மாறுந்தை நல்லூர் என வழங்கிப் பின் மாறுந்தை என்றே வழங்கு வதாயிற்று. மாறன்-பாண்டியன்; தாயம்—உரிமை. இது விக்கிரம பாண்டியபுரம் என்றும் பெயர் பெறும். இவ்வூர்ப் பெருமானைக் "கைலாச முடைய நாயனார்" என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

## ஆலடிப்பட்டி—வைத்தியலிங்கர்

ஆலமரத்தடியில் தோன்றிய பட்டி ஆலடிப்பட்டி; இது ஆலங் குளத்திற்கு வடகிழக்கே அரைமைல் தொலைவில் இருக்கிறது. இவ் வூருக்குத் தெற்கேயுள்ள நல்லூர்ச் சந்தை வைத்தியலிங்கர் கோவிலைச் சேர்ந்தது. இக்கோவில் ரூபா பன்னீராயிரத்தின் மேலும் வருவா யுடையது. உடல் நோயும் உயிரைப் பற்றிய பிறவி நோயும் நீங்கச் செய்வதில் ஒப்புயர்வற்ற வைத்தியர் இவ்வூர்ச் சிவலிங்கப் பெருமான் என்பது உலகறிந்த உண்மை.

இனி சங்கர நயினார் கோவிலிலுள்ள சிவபெருமான் திருக் கோவில்களைச் சென்று கும்பிடுவோம்.



நாக சுனையும் திருக்கோபுரமும், சங்கரநயினார் கோயில்.

# எ. சங்கரநயினர் கோவில் வட்டம்

## சங்கரநயினர் கோவில்—சங்கரலிங்கப் பெருமான்

தென் பாண்டி நாடே சிவலோகம். அதன்கண் தென்கோடியிலுள்ள திருநெல்வேலி மாவட்டம் செந்தமிழ் வழங்குஞ் சீர்மையது. அம்பலவாணர் விரும்பிக் கூத்தாடும் சீர் மிகப்பெற்ற இடங்கள் ஐந்து. அவை அரதன அம்பலமாகிய திருவாலங்காடு, பொன்னம்பலமாகிய சிதம்பரம், வெள்ளியம்பலமாகிய மதுரை, செப்பறையாகிய திருநெல்வேலி, சித்திர அம்பலமாகிய திருக்குற்ருலம் என்பன. இந்த ஐந்தில் இரண்டுடைய பெருமையது திருநெல்வேலி மாவட்டம்.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பெரிய கோவில்கள் திருநெல்வேலி, திருச்செந்தூர், சங்கரன் கோவில், திருக்குற்ருலம் என்பன. இவைகளில் சங்கரன்கோவில் இருக்கும் சங்கர நயினர் கோவில் என்ற ஊர் சங்கரநயினர்கோவில் வட்டத்தின் தலைநகர். இதிலிருந்து தெற்கே சிறிது கிழக்கில் சாய்வாக முப்பத்துமூன்று மைல் தூரத்தில் திருநெல்வேலி இருக்கிறது. நேரே கிழக்கே பன்னிரண்டாவது மைலில் கழுகுமலையும், இருபத்துநான்காவது மைலில் கோவிற்பட்டியும் இருக்கின்றன. நேரே வடக்கே ஏழாவது மைலில் கரிவலம் வந்த நல்லூரும், இருபதாவது மைலில் இராசபாளையமும், இருபத்தேழாவது மைலில் சீவில்லிபுத்தூரும் இருக்கின்றன. நேரே மேற்கே பத்தாவது மைலில் புளியங்குடி இருக்கிறது. இவ்வூர்களுக்கெல்லாம் நல்ல சாலைகள் இருப்பதால் அடிக்கடி வாடகை மோட்டார் வண்டிகள் ஓடுகின்றன.

தென்னிந்திய இரயில்வேயின் விருதுநகா—தென்காசிக் குறுக்குப் பாதையில் சங்கரன்கோவில் இருக்கிறது. இதற்கு வடக்கே இராசபாளையம், சீவில்லிபுத்தூரும் தெற்கே கடையநல்லூர், தென்காசியும் உள. சங்கரன்கோவில் இரயிலடியிலிருந்து கோவில் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. இரயிலடியில், ஊருக்குள் வர வாடகைக்கு எப்போதும் வண்டிகள் கிடைக்கும். பெரும்பாலோர் இரயிலடியிலிருந்து ஊர்க்குளத்தின் வழியாகக் குறுக்கே நடந்துவருகின்றனர்; இவ்வழி அரைமைல்தான் இருக்கும். ஊர்க்குளத்தின் உள்வாயின் வடமேற்குப் பகுதியில் இரயிலடி இருக்கிறது. ஊரிலிருந்து இரயிலடி

நெடுந்தூரத்திலிருந்தும் இப்போது ஊர் வளர்ச்சியினாலே கட்டிடங்கள் நெருங்கி வருவதால் இன்னும் சில ஆண்டுகளில் ஊருடன் ஒன்று சேர்ந்து விடுமென்பது உறுதி.

உயரிய அரசியல் அலுவலாளர்கள் தங்குவதற்கு வழிப் போக்கர் விடுதி (Travellers' Bungalow)யும், ஏழைகளும் தங்குவதற்குச் சத்திரம் ஒன்றும் மாவட்ட நாட்டாண்மைக் கழகத் தாரின் ஆளுகையில் இருக்கின்றன. மேலைத் தேர் வீதியிலும் வடக்குத் தேர் வீதியிலும் சத்திரங்கள் பல உள. மேலை வீதியில் திருவாவடுதுறை மடம் இருக்கிறது. இரயிலடியில் விழாக் காலங் களில் மக்கள் தங்குவதற்குப் பெரியதோர் சாவடி கட்டப் பட்டிருக் கிறது. திருவிழாக்காலங்களில் குடியானவர்கள் தங்கள் வீடுகளிற் பல பகுதிகளை அயலூராருக்குத் தங்கும் பொருட்டு வசதி செய்து கொடுத்து வாடகை வாங்குகின்றனர்.

சங்கரன்கோவில் ஐந்து தலங்களில் ஒன்று. இது மண் தலம், தாருகாபுரம் நீர்த்தலம், தென்மலை காற்றுத் தலம், கரிவலம் வந்த நல்லூர் தீத்தலம், தேவதானம் ஆகாயத்தலம். இவ்வைந்தனுள் சங்கரன் கோவிலே முதன்மையானது. சில ஆண்டுகளுக்கு முன் வரை சிவராத்திரியன்று பல அடியார்கள் ஒன்றுகூடி இவ்வைந்து கோவில்களையும் அவ்விரவிலேயே கால் நடையாகச் சென்று வழி பட்டு வந்தார்கள். இப்போதும் சிலர் அங்ஙனம் செய்து வருகிறார் கள்.

சங்கரனார் திருக்கோவிலின் முகப்பில் நூற்று இருபத்தைந்து அடி உயரமுள்ள ஒரு பெரிய கோபுரம் இருக்கிறது. இது ஒன்பது தட்டுக்களை உடையது. மேல் தட்டிலிருந்து உச்சி இருபத்தேழடி; தளத்திலிருந்து முதல் தட்டு இருபத்தொன்பது அடி (கதவு இரு பத்து மூன்றரையடி); இடையிலுள்ள எட்டுத் தட்டுக்களும் அறுபத் தொன்பது அடி உயரமாம். இதன் அடிவாரம் தென்வடல் நூறு அடி, கிழமேல் அறுபத்தைந்தடி. ஒன்பதாவது தட்டு தென்வடல் அறுபத்திரண்டு அடி, கிழமேல் இருபத்தைந்து அடி; இதன் உள் அகலம் பத்தடியாகும். கோபுரத்தின் உச்சி தென் வடல் நீளம் ஐம்பத்தாறு அடி; கிழமேல் அகலம் பதினைந்தடி; நடுப்பகுதி அகலம் ஐந்தடி. உச்சியிலுள்ள குடம் ஏழடி நான்கங்குல உயரம் இருக்கிறது. கோபுரத்தின் ஒன்பதாவது தட்டிலே கீழ்ப்புறமாக ஒரு

பெரிய மணி தொங்குகிறது. இதற்கு அருகில் ஒரு கடிகார இயந் திரம் இருக்கிறது. இது ஐம்பது ஆண்டுகளுக்கு முன் சீர் கேடான நிலையை அடைந்து விட்டது. இது சரியாக இருந்த காலத் தில் (அதாவது ஐம்பது ஆண்டுகளின்முன்) இந்தக் கடிகாரம் இம் மணியை இரண்டு நாழிகைக்கு ஒரு முறை அடித்து வந்ததாம். அதனால் இது நாழிகைக் கடிகாரம் என்று பெயர் பெற்றது. பகல் முப்பதாவது நாழிகையானவுடன் இது பதினைந்து மணி அடிக்கும்; மறுபடி இரவு இரண்டு நாழிகையானவுடன் ஓர் அடி அடிக்குமாம். இம்மணியோசை சுற்றிப் பல மைல்களுக்குக் கேட்டு வந்ததாம். இக் கடிகாரப் பணியாளராகிய ஆசாரிக்கு மானிபம் இருந்து வந்ததாம். கடிகாரம் அடித்து வராத காரணத்தால் இம்மானிபத்தை அரசாங்கத் தார் எடுத்துக்கொண்டனரென்பது தெரிகிறது.

பல மைல்களுக்கு அப்பால் வரும்போதே இக் கோபுரம் தெரி கிறது. அதனால் இவ்வூரை நோக்கி வருபவர் யாவரும் நெடுந் தூரத்திலிருந்தே சங்கரலிங்கப் பெருமானையும் கோமதியம்மையை யும் நினைத்துக்கொண்டு அன்பு நிறைந்த மனத்துடன் வருகிறார்கள். இந்த மாவட்டத்தில் நான்குநேரியிலும், திருநெல்வேலியிலும் உள்ள கோபுரங்களெல்லாம் இதற்குச் சிறியனவே. இதன் உச்சியில் ஏறி நின்றுகொண்டு நாற்புறமும் நோக்கினால் நாம் பல அரிய காட்சிகளைக் கண்டு மகிழலாம். சூழ இருபத்தைந்து முப்பது மைல் வரையுள்ள குன்றுகள், பேரூர்கள், குளங்கள், சாலைகள் யாவும் புலனாகின்றன.

கோபுரத்தின் முன் ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. அதன் முன் நின்று கோவிலைப் பார்த்தால் ஆயிரக்கணக்கான அடியார்கள் நின்று வணங்கப் போதுமான இடமுடைய அம்மண்டபமும், அதற்கப் பால் குடை வருவாசலும், அதற்கும் அப்பால் இறைவனுடைய கோவிலின் இணையில்லாக்காட்சியும் பார்ப்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்வனவாம். கோவில் ஊருக்கு நடுவே நான்குமா . வீதிகளாலும் அவைகளை அடுத்து அப்பாலுள்ள நான்கு தேரோ டும் தெருக்களாலும் சூழப்பெற்று விளங்குகின்றது.

இந்தத் திருக்கோவில், சங்கரலிங்கர் கோவில், கோமதியம்மை கோவில், சங்கரநாராயணர் கோவில் என மூன்று பெரும் பகுதி களாக இருக்கின்றது. கோவிலின் தலை வாயிலுக்கு நேரே இருப்பது

சங்கரலிங்கப்பெருமான் கோவில் ; இது தென்பகுதியில் இருக்கிறது. வட பகுதியில் கோமதியம்மை திருக்கோவில் அமைந்துள்ளது. இவ் விரண்டு கோவில்களுக்கும் தனித்தனி கருவறை, அர்த்தமண்டபம், அந்தராள மண்டபம், மணிமண்டபம், மாமண்டபம், பரிவார மண்ட பம், சுற்று மண்டபங்கள் இருக்கின்றன. இறைவன் இறைவி கோவில் களுக்கு நடுவே சங்கரநாராயணர் கோவில் இருக்கிறது. இதில் கரு வறை, அர்த்தமண்டபம், மாமண்டபம், சுற்று மண்டபம் என்று நான்கு மண்டபங்கள் அமைந்திருக்கின்றன. இதன் முன் பெருங் கூட்டம் கூடி விரிவுரை, இசையரங்கு நடப்பதற்கு ஏற்ற ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. இம் மூன்று கோவில்களையும் சூழப் பலிச் சுற்று மண்டபம் உள்ளது. தலைவாயிலில் அரசகோபுரமும், வெளி மண்டபமும் அங்கங்கே அமைந்து விளங்குகின்றன.

சங்கரலிங்கப் பெருமானுக்கு வன்மீக நாதர் என்ற பெயரும் உண்டு. வன்மீகம் என்பது புற்று. புற்றிலிருந்து தோன்றியபடி யால் அவருக்கு வன்மீக நாதர் என்ற பெயர் உண்டாயிற்று. சங்கர நாராயணர் கோமதியம்மையின் காட்சிக்காக வந்த மூர்த்தியாவார். கோமதியம்மைக்கு ஆவுடையம்மை என்ற பெயரும் உண்டு. ஆ என்பது பசு, ஆக்களை உடையாள் ஆவுடையாள், அவளே கோமதியாள்.

இங்கே ஐந்து தீர்த்தங்கள் உள. அவை அக்கினி தீர்த்தம், அகத்திய தீர்த்தம், சூரிய தீர்த்தம், வைரவ தீர்த்தம், கௌரி தீர்த்தம் என்பன. சங்கரலிங்கத்துக்கு நிருதி திக்கில் சங்கரதீர்த்தம் உள்ளது. ; அது இந்திர தீர்த்தமென்றும் பெயர் பெறும். சங்கன், பதுமன் என்னும் பாம்பரசர்களால் முழுகப்பெற்றதும், அவர்களால் நன்றாகத் தோண்டப் பெற்றதுமாகிய நாகசுனை கோவிலுக்குள்ளே நுழையும் இடத்தில் கோமதியம்மை திருமுன்பு அழகானதோர் நடு மண்டபத்தோடு இருக்கிறது. ஊருக்குத் தென்பக்கம் உள்ளது ஆவு டைப்பொய்கை என்பது ; இதிலேதான் தெப்பத்திருவிழா தைமாதம் கடைசி வெள்ளியன்று மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இவ்வூரின் தலமரம் புன்னை மரமாகும். இவ்வூர் ஆதியில் புன்னை வனமாக இருந்திருக்கிறது.

இக்கோவிலுக்குச் சொந்தமாக நெடுங்காலமாக ஒரு யானை இருந்து வருகிறது. இப்போதிருக்கும் யானை மிகவும் அழகான கொம்பானை உக்கிரபாண்டியருடைய பட்டத்து யானை கொம்பினால் தரையைக்

குத்திக் கீழே விழுந்தமைதான் பெருங்கோட்டூர் என்ற ஊருக்கும், சங்கரனூர் கோவிலுக்கும், சங்கர நயினூர் கோவில் என்ற ஊருக்கும் காரணமாக இருந்ததல்லவா !

### சிற்பச் சிறப்புகள், திருவுருவங்கள், தூண்கள், பழைய உருவச் சிலைகள்

கோமதியம்மை திருவுருவம் பார்க்கப்பார்க்க உள்ளத்தைக்கவரும் காட்சியது. கல்லாலாகிய கூத்துடைப் பெருமான் திருவுருவமும் அவனுடைய அம்பலத்தின் முன் நின்று காண்போர் மனத்தைக் கொள்ளை கொள்ளும் பேரழகுடையது. சங்கரர் கோவிலுக்குள் முகப்பில் வலது புறம் தூணில் உக்கிர பாண்டியர் உருவச்சிலையும், இடது புறம் தூணில் உமாபதி சிவாசாரியாருடைய உருவச்சிலையும் அழகாக அமைந்திருக்கின்றன.

பழங்காலப் பாண்டியர்களால் கட்டப்பட்ட மண்டபங்களும், அவைகளிலுள்ள மன்மதன், இரதி, காப்பறையன் சிலைகளுள்ள தூண்களும், பார்க்கத்தக்கன.

**தேர்கள்.**—சங்கரனூர் தேர் மிகப் பெரியது ; அம்மன் தேர் சற்றுச் சிறியது. இவை சித்திரை விழாவில் ஒன்பதாம் நாளில் இழுக்கப் பெற்றுப் பெரும்பாலும் அன்றே நிலையத்துக்கு வந்து விடும்.

### புராண வரலாறு

**சங்கரநாராயணர்.**—உமாதேவியார் சிவபெருமானிடத்தில், "உமது திருவுருவில் நாராயணர் வடிவத்தைக் காட்டியருளவேண்டு" மென்று வேண்டிக்கொண்டு அவருடைய ஆணைப்படி மண்ணுலகில் புன்னை வனத்தில் வந்து தவமிருந்தார். சிவனூர் ஆடி மாதம் பௌர்ணமியன்று நாராயணரைத் தமது இடப்பாகத்திலே கொண்டு காட்சி கொடுத்தருளினூர். இதனுல் நாராயணர், நான்முகன் முதலிய தேவர்கள் யாவரும் சிவனூர் திருவுருவில் அடங்கினவரே என்ற உண்மையானது நிலை பெறுகின்றது. இச் செய்தியைச் சங்கர நாராயணச் சருக்கத்தில் தென் மொழி வட மொழிப் புராணங்களில் விரிவாகக் காணலாம்.

சங்கன், பதுமன் என்னும் நாகர் இருவர் இருந்தனர். அவர்களில் சங்கன் சிவபெருமானிடத்தும் பதுமன் திருமாலிடத்தும் அன்பு

பூண்டு "அரன் பெரியன், அரி பெரியன்" என வாதிட்டுச் சங்கர நாராயணக் காட்சியைக்கண்டு "அரனின் கூறுதான் அரி" என்ற உண்மையை உணர்ந்தனர்.

"ஐய ! நின் கூறே மாலும் அயன் முதல் தேவும் என்னும்
மெய் உணர்வே எஞ்ஞான்றும் விளைவுறவேண்டும்."

(புராணம்—சங்கரநாராயணச் சருக்கம்—38).

**காவற் பறையன்.**—மணிக்கிரீவன் என்ற தேவன் பார்வதி தேவியின் சாபத்தால் பறையனாகிப் புன்னைவனக் காவலாக இருந்தான். அதனால் அவன் காப்பறையன் என்றும், காவற் பறையன் என்றும் பெயர் பெற்றான். கரிவலம் வந்த நல்லூர்ப் பால்வண்ணநாதருக்குப் புன்னை வனத்திலே ஒரு நந்தவனம் இருந்தது; அதற்கும் அவனே காவல். நந்த வனத்தின் ஒரு பக்கம் புற்றொன்று வளர்ந்தது. அதை ஒரு நாள் அவன் வெட்ட, அதிலிருந்த பாம்பின் வால் வெட்டப் பட்டது. அப்போது அவன் புற்றின் பக்கத்தில் சிவலிங்கம் இருப்பதையும் கண்டான். அதே சமயத்தில் உக்கிர பாண்டியர் அடுத்த வனத்தில் வந்திருப்பதாக அறிந்து செய்தி தெரிவிக்க ஓடினான்.

**உக்கிர பாண்டியர்.**—திருநெல்வேலிக்கு மேலே பொருநையாற்றின் கரையிலுள்ள மணலூரில் அரசாண்டிருந்த உக்கிரபாண்டியர் அடிக்கடி மதுரைசென்று மீனாட்சியம்மையையும் சொக்கப்பெருமானையும் வழிபாடு செய்யும் வழக்கமுடையவர். காவற்பறையன் புற்றை வெட்டிச் சிவ லிங்கத்தைக் கண்ட அன்று பாண்டியருடைய யானை கொம்பினால் தரையைக் குத்திக் கீழே விழுந்து புரண்டது; பாண்டியர் ஒன்றும் செய்ய அறியாது திகைத்திருந்தபோதுதான் காவற் பறையன் ஓடி வந்து அரசரிடம் செய்தி தெரிவித்து உடன் வர அழைத்தான். உக்கிரபாண்டியர் சென்று புற்றினையும், புற்றிடங்கொண்டாரையும், கூழைவாலினதாகிய பாம்பினையும் கண்டார். சங்கரனார் அசரீரியாக ஆணைதரப் பாண்டியர் காடு கெடுத்து நாடாக்கிக் கோவில் கட்டிச் சங்கரன்கோவில் ஊரையும் தோற்றுவித்தார். கோவிலில் கோபுரத்தைத்தாண்டியதும் காவற்பறையனுடைய திருவுருவத்தை இப்போதும் நாம் காணலாம். சங்கரன் கோவிலுள்ளே வலப்பக்கமுள்ள தூணில் உக்கிர பாண்டியரது திருவுருவம் காணப்பெறுகிறது. யானை தனது

பெரிய கொம்பினுற் குத்தியமையினுலே அவ்விடத்தில் உண்டா யிருக்கிற ஊர் பெருங்கோட்டூர் என்று பெயர் பெற்றது. (கோடு-கொம்பு). உக்கிர பாண்டியர் கோவிற் பூசைக்கு மிகுந்த நிலங்களைக் கொடுத்து ஒரு சித்திரை மாதத்திலே யானை மேல் ஏறிக்கொண்டு தான் இறைவனைக் காணக் காரணமாயிருந்த இடமாகிய பெருங்கோட்டூருக்குப் போய், யானை பிடி மண் எடுத்துத்தரக் கொண்டுவந்து பெருந்திருவிழா நடத்தி மகிழ்ந்தார். இத்திருவிளையாடல் இன்றும் நடைபெறுகின்றமை நாம் காணலாம். காவற் பறையனுக்கு ஊரின் தெற்கே ஒரு சிறு கோவில் இருக்கிறது. அது இருக்கும் தெரு காப்பறையன் தெரு என்று இன்றும் வழங்கி வருகிறது.

நாகசுனையிலே மூழ்கிச் சங்கரரையும் கோமதியம்மையையும் வழி படுவோர் குட்டம், குன்மம் முதலிய தீராத நோய்களெல்லாம் தீர்ந்து நலம் பெறுவர். கோமதியம்மையின் புற்று மண்ணே எல்லா விதமான நோய்களுக்கும் மருந்தாக உதவுகின்றது. கடைசி வெள்ளி தோறும் இவ்வூருக்கு மக்கள் பெருங்கூட்டமாக வந்து வழிபடுகிறார் கள். உயிருக்குரிய பிறவி நோயே நீங்குமென்றால் உடலுக்குரிய நோய்கள் நீங்குமென்பது சொல்லவும் வேண்டுமோ ?

சித்திரைத் திருவிழாவே பெரிய திருவிழா. ஆடித்தவசுக்காட்சி விழாவிலேயும், தை மாதம் கடைசி வெள்ளியன்று ஆவுடைப் பொய்கையில் நடைபெறும் தெப்பத் திருவிழாவிலேயும் பெருங் கூட்டம் கூடும்.

**சீவலமாறர்.**—சீவலமாற பாண்டியரே இத்தல புராண ஆசிரியர். அவர் இற்றைக்கு எழுநூற்றெழுபத்தாறு ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தவரென்பதும், அவர் இவ்வூரில் பல காலம் தங்கியிருந்தனர் என்பதும் சாசனத்தாலும், அவர் பெயரால் ஊருக்குத் தென் மேற்கே இப்போது உடைகுளமாக உள்ள சீவலப்பேரி என்ற குளத்தி னூலும், கிழக்கே இரண்டு மைலுக்குள் உள்ள சீவலராயன் ஏந்தல் என்ற குளத்தாலும் ஊராலும் நிலை நாட்டப்பெறும். இவர் பெயர் கங்கைகொண்டான், மானூர், தென்காசி, சீவலப் பேரி ஆகிய தலங் களிலும் சம்பந்தப்படுகிறது.

**சங்கர நாராயணர் களவு.**—இற்றைக்கு இருநூற்று ஐம்பது ஆண்டு களுக்கு முன் கொல்லம் 887, கி.பி. 1711-ல் திருக்குற்றுலம் வந் திருந்த மதுரை நாயகர் திருமலை நாயக்கரால் பெரியசாமித்தேவர்

என்ற செம்புலி சின்னணைஞ்சாத் தேவர் வடகரைப்பட்டம் பெற்று ஆண்டிருந்தபோது அவருக்குத் தானாதிபதியாக இருந்தவர் பொன் னம்பலம் பிள்ளை என்பவர். திருநெல்வேலி மாவட்டத்துக்கு மந்திரி ஆறை அழகப்ப முதலியார். இராமநாதபுரம் சேதுபதி விசயரகு நாதத் தேவர் என்பவர். சங்கர நயினார் கோவிலில் இருந்த சங்கர நாராயணராகிய எழுந்திருத்து நாயகரைச் செண்பகக் கண்ணுப் பட்டர் என்பவர் திருடிக்கொண்டு போய்த் திருவுத்தரகோச மங்கையில் அடகுவைத்து விட்டனர். சேதுபதி அத்திருவுருவை அக்கோவில் மூர்த்திகளுடன் வைத்துப் பூசை புரிய ஆணை தந்தனர். இதனை யறிந்த அழகப்ப முதலியார் அத்திருவுருவை மீட்டுவரும் வல்லமை யுடையவர் பொன்னம்பலம் பிள்ளை ஒருவரே என உணர்ந்து அவரை யழைத்து வேண்டிக்கொண்டனர். இராமநாதபுரம் சென்ற பொன் னம்பலம் பிள்ளை சேதுபதியைப் பார்க்க முடியாமல், காவடியெடுப்பவர் போலச் சென்று கண்டு கவிபாடினார். அவரை அருட் கவியென உணர்ந்த சேதுபதி மிக்க மரியாதை செய்து சம இருப்புக்கொடுத்துத் தம்முடன் சில நாள் வைத்திருந்தனர். அப்போது பொன்னம்பலம் பிள்ளை சேதுபதி மன்னரிடம் இள்ளாக்கப்பெற்றுத் திருவுத்தரகோச மங்கை சென்று சங்கர நாராயணர் திருவுருவைக்கண்டு,

" புற்றெங்கே ? புன்னை வனமெங்கே ? பொற்கோயிற்
சுற்றெங்கே ? நாகசுனை யெங்கே ? —இத்தனையும்
சேரத்தா னங்கிருக்கத் தேவநீ தான்தனித்தித்
தூரத்தே வந்த தென்ன ? சொல் " எனப்பாடினார்.

உடன் அப்பெருமான் தமக்கு மறு மொழி கூறினதாக அவரே பின் வரும் பாடலையும் பாடினார்.

" விள்ளுவமோ சீராசை வீடு விட்டுக் காடுதனில்
நள்ளிருளில் செண்பகக் கண் நம்பியான்—மெள்ளவே
ஆடெடுக்கும் கள்ளரைப் போல் அஞ்சா தெமைக் கரிசற்
காடு தொறு மேயிழுத்தக் கால் ? "

(சீராசை-சங்கரன் கோயில்)

இச் செய்தியறிந்த சேதுபதி மகிழ்ந்து சங்கர நாராயணரைச் சங்கரன் கோவிலிற் சேர்த்து விடுவதாகக் கூறிப் பொன்னம்பலம் பிள்ளைக்கு வேண்டும் வரிசைகள் வழங்கி அத் திருவுருவத்தையும் அனுப்பி யுதவினார்.

**கோமதியம்மை திருமுன்பு சக்கரம்**

இற்றைக்கு நூற்றெண்பது ஆண்டுகளுக்கு முன்னர் கி.பி. **1781**-ல் இறைவர் திருவடியடைந்த பெரியாராகிய மாபாடியம் சிவஞான முனிவர் சிறு பிள்ளையாக இருக்கும்போது திருவாவடுதுறையில் பத்தாவது குருமூர்த்தியாக எழுந்தருளியிருந்த பெரியார் வேலப்ப தேசிகர் ஆவர். அவர் இறைவர் திருவடிக்கு மெய்யன்பராதலி ஞலே அவரிடம் குட்டம், குன்மம் முதலிய நீங்கா நோய்களையும் போக்கும் அருட் சக்தி பதிந்து விளங்கியது. அவர் சங்கரன் கோவிலுக்கு வந்து மேலை வீதியிலுள்ள தமது திருமடத்தில் எழுந்தருளி யிருந்தமையை அறிந்த நெற்கட்டுஞ் செவலின் குறு நில மன்ன ராகிய சிவஞான பூலித்தேவர் குரு மூர்த்தியைக் கண்டு பணிந்து அவர் திருவருளால் தமக்கிருந்த குன்ம நோய் நீங்கப் பெற்று ஞான தேசிகருக்கு விளை நிலம் முதலானவை சிவபூசை, குரு பூசை, மாகேசுர பூசையின் பொருட்டுச் சாசனம் செய்து கொடுத்தார். அவை இன்னும் திருவாவடுதுறைத் திருமடத்துக்கே உரியனவாக உள.

வேலப்ப தேசிகமூர்த்திகள் கோமதி யம்மையின் திரு முன்பு ஒரு மந்திரச் சக்கரத்தைப் பதித்தருளினர். அச்சக்கரத்துக்குக் கோமதியம்மை தந்தருளிய வல்லமையினலே இன்றும் அதனருகில் வரும் •ஆடாத பேயும் ஆடுகின்றது, தீராத நோயும் தீர்ந்து போகின்றது. இந்தத் தேசிக மூர்த்திகள் சங்கரன் கோவிலிலே வழிபாடியற்றி இருக்கும்போது ஒரு புரட்டாசி மாத மூல நாளிலே சங்கரனர் திருவடி யிணைமலர் சேர்ந்து பேரின்பம் எய்தினர்.

இக்கோவில் ஆதரவில் பிள்ளைகளுக்குத் தேவாரப்பயிற்சி நடை பெறுகிறது.

**தாருகாபுரம்—நடுநின்ற நாதர்**

தலைவன்கோட்டைக் குறு நில மன்னரைச் சேர்ந்த தாருகா புரத்தில் இக்கோவில் இருக்கிறது. திரிபுராதியருக்கு முற்பட்ட தாரு கன் பெயரால் உண்டானது இவ்வூர். மாமரத்தடியில் முளைத்தெழுந் தவர் சிவலிங்கப் பெருமான். எப்பொழுதும நீர் ஊறிவரும் இலிங்கத்தைச் சுற்றி வட்ட வடிவமாக மதில் எழுப்பி அதன் மேல் சிவலிங்கம் நாட்டப் பெற்றிருக்கிறது. கல்வெட்டுக்களில் இக்கோவில்

'மலையடிக்குறிச்சிக் கோவில்' என்றும், பெருமான் பெயர் 'மலையடிக் குறிச்சி உடையார்', 'பிணக்கறுக்கும் நாயனார்,' 'பிணக்கறுத்தருளிய நாயனார்,' 'பிணக்கறுத்த நாயனார்', 'பிணக்கறுக்கும் தேவர்' என்றும் குறிக்கப் பெற்றமை காணலாம். பாண்டியனுக்கும் சேர னுக்கும் பிணக்கு உண்டாக அதனைத் தீர்த்து வைத்து இருவருக்கும் இப்பெருமான் நட்புண்டாக்கியருளினார். நடு நின்று பிணக்கறுத்த நாதர் என்பதே வடமொழியில் "மத்தியத்த நாதர்" எனப்படுகிறது. பிணக்குத் தீர்ந்த சேரனும் பாண்டியனும் பெருமானை வணங்கிச் சிறிது வடக்கிலுள்ள கோவிற்பட்டியைச் சேர்ந்து மனம் திருந்தி நட்பாயினர். அதனால் கோவிற்பட்டி நாதர் 'திருத்தியீசுரர்' என்ற பெயரும் உடையவரானார்; அம்மை அகிலாண்ட வல்லி.

## கோவிற்பட்டி—திரிபுராந்தகர்

திருத்தியருளிய நாயனார் திரிபுர அந்தகர் என்றும் பெயர் பெறுகிறார். திரிபுரங்களை அழித்தவர் (அந்தகர்—அந்தம் செய்தவர்; அந்தகன்—எமன்) என்பது அதன் பொருள். சிவகிரிக் குறுநில மன்ன ருடைய பழந் தலைநகராகிய தென் மலையை ஒட்டி மலையடிவாரத்தில் மேற்கே பார்க்க இக்கோவில் இருக்கிறது. கோவிலை ஒட்டி ஊர் தோன்றி யமையால் அது கோவிற்பட்டி எனப் பெயர் பெற்றது. இது காற்றுத் தலம் என்பர்; வடக்கே காற்றுத் தலம் திருக் காளத்தி; நீர்த்தலம் தாருகாபுரம், வடக்கே திருவானைக்கா; மண்தலம் சங்கரன்கோவில், வடக்கே காஞ்சிபுரம்; தீத்தலம் கரிவலம் வந்த நல்லூர், வடக்கே திருவண்ணாமலை; விண் (ஆகாயம்) தலம் இராமநாதபுரம் மாவட்டம் தேவதானம், வடக்கே தில்லைச் சிதம்பரம். கல்வெட்டில் அம்மை "சிவனை முழுது முடைய நாச்சியார்" எனப்பெறுகிறார். ஊர் சுந்தர பாண்டிய சதுர்வேதிமங்கலம் எனப்பெறுகிறது.

## சிந்தாமணி—சொக்கலிங்கர்

சிந்தாமணி புளியங்குடியின் வட கிழக்கில் இருப்பது; புளியங் குடியின் ஒரு பகுதியே இது. தென்காசியிலிருந்து சீவில்லிபுத்தூர் வழியாக மதுரைக்குப்போகும் சாலையில் பத்தொன்பதாவது கல்லில் இருப்பது சிந்தாமணி நகர்; சங்கர நயினார் கோவிலிலிருந்து நேர் மேற்கே ஒன்பதாவது மைலில் இருக்கிறது; பழைய காலத்தில் இவ் வழி காட்டுப் பாதையாக இருந்தது.

ஊரின் கீழைக் கோடியில் இத்திருக்கோவில் மிகவும் அழகான காட்சியுடன் அமைந்திருக்கிறது. இது இரண்டு பெரும் பிரிவுகளா லாகியது. தெற்கே மீனுட்சியம்மை கோவிலும், வடக்கே சொக்க லிங்கர் பெருங்கோவிலும் உள்ளன. இப்பகுதிகள் ஒவ்வொன்றும் தனித்தனி கருவறை, அர்த்த மண்டபம், மாமண்டபம், மணி மண்ட பம், கொடி மர மண்டபம் என ஐந்து பிரிவுகளாக இருக்கின்றன.

மதுரை மாநகரத்திலே கோவில்கொண்டு எழுந்தருளியிருக்கும் சொக்கநாதரையும் மீனுட்சியம்மையையும் சிந்தாமணியில் பாண்டிய ஞெருவன் கோவில் கொண்டு எழுந்தருளச் செய்தான். அதனுல் இக்கோவிலும் மதுரைக் கோவில் மாதிரியில் சிறிய உருவை உடைய தாகி விளங்குகின்றது. அங்கே அம்மை கோவிலுக்கு எதிரே பொற் ருமரை இருப்பது போல இங்கும் தெற்கேயுள்ள அம்மை கோவிலுக்கு எதிராகப் பொற்ருமரைக்குளம் அமைந்திருக்கின்றது.

மீனுட்சி என்ற சொற்றெடர் மீன் + அட்சி என்ற இரு சொற் களினுல் ஆகியது. மின்னுவது மீன்; விண்ணில் மின்னும் நட்சத் திரங்கள் விண்மீன்கள் எனப் பெயர் பெறுவன. அட்சம்—கண்; அதனை உடையவள் அட்சி. மீனைப் போன்ற கண்ணை யுடையாள் என்பது இச்சொற்றெடரின் பொருளாம். சொக்கர் என்ற சொல் அழகர் எனப் பொருள்படும்; அழகினுல் எல்லோருடைய உள்ளத்தையும் கவரும் கள்வர் சொக்கர்; சொக்கு என்பது அழகு, இதனுல் உண்டாகும் மயக்கம்; சொக்கும்படி செய்பவர் சொக்கர்; சொக்கநாதர், சொக்கலிங்கர் என்பன சொக்கும்படி செய்யும் அழகு டைத் தலைவர், இலிங்க வடிவான பெருமான் என விரிவன. உயிர் களெல்லாம் தம்முடைய பேரழகினுலே சொக்கி மெய்ம்மறந்து தமது திருவடியில் வீழும்படி செய்து ஆட்கொள்ளும் பெருமான் தான் சுந்தரப்பெருமான்.

புதுவை (புளியங்குடி)த் தல புராணம் பாடிய முத்து வீருக் கவி ராயர். "மதுரையிலிருந்த பூழியன் என்ற பாண்டியன் வேட்டைக்கு வந்தவன் இவ்விடத்தையடைந்து இங்கிருந்த புளியங்காட்டை அழித்து நகராக்கிப் பூழியன்குடி என ஊருக்குப் பெயர் வைத்து முருகன் கோவிலைக் கட்டி வழிபாடு செய்திருந்தான். அவன் நாடோறும் மதுரைச் சொக்கநாதப் பெருமானை வழிபடும் ஆசை மிகக்கொண்டு கவலைப்பட்டிருக்கும்போது ஒரு நாள் பெருமான் கனவிலே தோன்றி

பூழியன் குடிக்குக் கிழக்கே சிந்தாமணி என்ற ஊரை அமைத்து அதில் சொக்கநாதர் மீனாட்சியம்மை கோவிலையும் கட்டி நாடோறும் கும்பிடும்படி கட்டளையிட்டார். அதன்படி பூழியன் இக்கோவிலையும் ஊரையும் அமைத்தான்" என்று பதினோராவதாகிய பூழியன் நகர் கண்ட சருக்கத்தின் கடைசி நான்கு பாடல்களில் (63, 64, 65, 66) பாடியிருக்கிறார்.

இவ்வூருக்குச் சிந்தாமணி என்ற பெயர் எப்படி வந்தது என்பது திட்டமாகச் சொல்ல முடியவில்லை. வாசுதேவ நல்லூர்க் கோவில் மிகவும் பழமையானது; அதிலுள்ள பெருமான் திருப்பெயர் சிந்தாமணி நாதர்; அவருக்குச் சொந்தமான ஊராக இது ஒரு காலத்தில் இருந்திருந்ததனால் சிந்தாமணி என்ற பெயர் இதற்கு அமைந்திருக்கவேண்டும் என்பதை ஊகித்தறியலாம்.

பண்டைக்காலத்தில் புளியங்குடி, சிந்தாமணி, வாசுதேவ னல்லூர் ஆகிய இவை உள்ள பக்கமெல்லாம் புளியங்காடாக (சிந்தகம்—சிந்தம்—புளி) இருந்ததாகவும் அக்காட்டில் உண்டாகிய ஊர் புளியங்குடி என்பதும், 'சிந்தத்தண் நிழலார் சிந்தாமணி அண்ணல்' (வாசவனூர்ப் புராணம்—மூர்த்தி—3) என வாசனூர்ப் பெருமானுக்குச் சிந்தாமணி என்று பெயர் வந்தது என்பதும் தெரிகின்றபடியால் சிந்த வனத்தில் முளைத்தெழுந்த மணி சிந்தாமணி, அவர் தங்கும் இடம் சிந்தாமணி ஊர் என்பது ஊகித்தறியக்கூடியதாயிருக்கிறது.

## சேர்ந்தமரம்—பிரகலாதீசர், உலகம்மை

பிரகலாதனால் வழிபடப்பெற்ற சிவலிங்கப்பெருமான் பிரகலாதீசர் எனப் பெயர் பெற்றார். பல வகை மரங்கள் சேர்ந்திருந்த இடத்தில் தோன்றிய ஊர் சேர்ந்த மரம் ஆயிற்று. இவ்வூர் கடைய நல்லூர்ப் புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது. இவ்வூருக்கு வாடகை மோட்டார் திருநெல்வேலியிலிருந்து வருகிறது.

இனி வரும் மூன்று சிவன் கோவில்களும் வைப்பாற்றங்கரையில் இருப்பன. வைப்பு—புதையல்; அதாவது புதையல் போல ஊற்றிலிருந்து ஓடி வருவது. வைப்பாறு வாசுதேவநல்லூர்ப் பெரிய குளத்தின் மறு காலில் தோன்றுகிறது.

## வாசுதேவனல்லூர்—சிந்தாமணி நாதர்

குலசேகர பாண்டியனுடைய குட்ட நோயை வாசியாக்கின தேவன் வாசி தேவன்; அப்பெருமான் ஊர் வாசிதேவன் நல்லூர். அது வாசுதேவனல்லூர், வாசி, தேவை என்ற பெயர்களைப் பெற்றது. வாசிதேவனாகிய அர்த்தநாரீசுவரர் (அர்த்தம்—பாதி, நாரி—அம்மை, ஈசுரர்-அப்பர்), சிந்தாமணிநாதர் எனவும் பெயர் பெறுவார். சிந்தம்-புளி. சிந்த மரத்தடியில் தோன்றிய மணி சிந்தாமணி. இவ்வூர் பழைய கணக்குகளில் வாசநல்லூர், வாசிநல்லூர் என வழங்கி வந்தது. வாசவன் ஊர் என்பது வழக்கு. வாசவன்-இந்திரன். வாசவன் வணங்கி வரம் பெற்றதால் வாசவன் நல்லூர் எனப் பேசுகிறது தல புராணம். தாம் சிவலிங்கமாக இருக்கவேண்டிய இடத்தில் அம்மையப்பராக இருந்து அருள் புரிகின்றார் பெருமான். இவ்வூரில் பெரிய கோட்டை இருந்தது. பாண்டிய மன்னர் அதில் இருந்த "நாலிட்டு வென்றான்" என்ற அரண்மனையில் அடிக்கடி தங்கினர் என்பது கல்வெட்டினால் விளங்கும். பிற்காலத்தில் நெற்கட்டுஞ் செவல் மன்னருடைய கோட்டையாக இது இருந்திருக்கிறது.

பெரிய சாலையிலிருந்து இரண்டு பர்லாங்கு தூரத்தில் திருக்கோவில் மிகப் பெரிய தோற்றத்துடன் விளங்குகின்றது. சங்கரன் கோவில் வட்டத்திலுள்ள கோவில்களில் மிகப் பழைய பெரியவைகளில் இதுவும் ஒன்று; இக்கோவில் அடிக்கடி பேணிச் செப்பனிடாத நிலைமையில் உள்ளது. சிற்பச் சிறப்புகள்: திருத் தூண்கள் யாளிகளோடு பெரியனவாயுள்ளன. கொடுங்கைகள் கல்லினாலே மிக அழகாகச் செய்தமைக்கப்பெற்றிருக்கின்றன. இவைகளைப் பார்க்கும் போது சங்கரநயினார் கோவிலுக்கு முன்னதாகவே இது கட்டப் பெற்றிருக்கவேண்டுமென்பது தெரிகிறது. இதிலிருந்த அழகான நிற வேலைகள் அழிந்து உருத்தெரியாமற் காணப்படுகின்றன. மரத்தினாலாகிய அழகிய பெரிய தேர் இருக்கிறது. இது ஆனிப் பெருந்திருவிழாவிலே ஓடும்.

வாசவனூர்ப் புராண ஆசிரியர் வடகரை என்னப் பெறும் சொக்கம்பட்டித் தானாதிபதியாக இருந்த பேரறிவாளர் செந்தமிழ்ப் பெருங்கவி பொன்னம்பலம் பிள்ளையாவர். சொற்சுவை பொருட்சுவை மலிந்த இவருடைய கவிகள் பாராட்டிப் படித்தறிதற்குரியன. இந்நூலாசிரியர் காலம் இற்றைக்கு நூற்று முப்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் என்பது தக்க ஆதாரவுகளினால் வெளியாகின்றது.

ஆற்றுச்சிறப்பு.—பொதிகை மலையின் அடிவாரத்திலுள்ள சிவசயிலத்தின் வடக்கே ஐந்து குரோச தூரத்தில் சம்புகன் என்ற வேடன் தீயின் நடுவே நின்று தவம் புரிய அதனால் அயோத்தியில் ஒரு பிராமணப் பிள்ளை இறந்துபோனான். அது தெரிந்த இராமன் அங்கே வந்து சம்புகனைக் கொன்றவுடன் இறந்த பிள்ளை உயிர் பெற்றான். ஆனால் சம்புகனைக் கொன்ற கொலைப் பாவம் இராமனைப் பற்ற, அதனைத் தீர்க்க இராமன் அச்சிவமலையின் ஐந்து குரோச தூரத்திலுள்ள கடையத்தில் சிவனாரை நிலை பெறுத்தி வணங்கித் தவம் செய்து தீர்த்த பின்னர் படையுடன் புளிய வனத்தின் தென் மேற்கெல்லைக்கு வந்தனன். மாலைக்கடன் முடிக்கத் தண்ணீர் வேண்ட, சாம்புவன் என்ற கரடி முன் அகத்தியர் புதைத்த நீர்க் குடம் அங்கே, இருப்பது கூற, இராமன் அம்பெய்து அக்கலசத்தை உடைத்தான். அதிலிருந்து ஆறு புறப்பட்டது. அது புதையல் ஆறு. அதாவது வைப்பு + ஆறு = வைப்பாறு, கருப்பையாறு, நிட்சேபநதி என்று பெயர் பெற்றது. இவ்வாற்றின் வடமேற்கில் தீர்த்தவாரி ஆறு இருக்கிறது. அதில் சிந்தாமணி நாதரும் அம்மையாரும் நீராடுவர்.

அம்மையப்பர் திருவுருவம்.

"நெற்றிமீதரைக்கண் உண்டு நெடிய கூந்தல் ஓர் புறம்
கற்றை மேவு சடைகளாம் ஓர் காதின் மின்னுசங்கமே
துற்றும் ஓர்கை வளைகள் ஒன்று சூலம் ஏந்தும் இதுவலால்
மற்று முற்ற தனமிரண்டில் ஒன்று பின் மறைந்திடும்."

"கச்ச மற்ற சிலம்ப கன்றோர் கால் கழல் புனைந்திடும்
பச்சை வண்ண மற்றோர் பாதி பவள வண்ண மேனியாம்
இச்செயல் பொருந்து மாதை ஈன்றெடுத்த நின்னை நேர்
மூச்ச கத்தில் உள்ள பேரில் எவர் தவங்கள் முற்றினார்."

(தலபுராணம்)

## கரிவலம் வந்த நல்லூர்—பால்வண்ண நாதர்

கரி-யானை ; கரி வலம்வந்து வணங்கிய நல்ல ஊர் கரிவலம்வந்த நல்லூர். கரி சூழ்ந்த மங்கலம், கரிவலங் குளம் என்ற தலங்கள் கூத்தர் கோவில்களைப் பற்றிய பகுதியில் விளக்கப்பெறும். இவ்வூர் கரிவரநல்லூர் என்று கல்வெட்டிற் கூறப்பெறுகிறது. பால் போன்ற

நிறமுடைய இயற்கையின் முளைத்த இலிங்கம் ஆதலால் பெருமான் பால்வண்ணநாதர் என்று பேர் பெற்றார். இவர் உடையார் திருக் களாவூர்நாயனார் எனப் பெறுகின்றார் களாமரத்தின் அடியில் முளைத்த பெருமான் ஆதலினால்; ஊர் களாவூர் எனவும் பெயர் பெறுகிறது. இங்கே வரகுண ராமபாண்டியர் திருப்பணிபுரிந்து **கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி** முதலிய பல நூல்களைப் பாடினார். இக் கோவிலுக்குரிய திருநந்தவனத்திலே தான் புன்னை மரத்தடியில் தோன்றினார் சங்கரலிங்கப் பெருமானார். கரி வரம்பெற்ற நல்லூர் கருவை எனவும் மரூஉப் பெயருடையது.

### மரத்தோணி—தோணீசர்

இராமன் சீதையுடன் வந்தபோது வைப்பாற்றில் வெள்ளம் வர அதன் தென் கரையிலிருந்து வேப்பமரம் தோணி போல வளைந்து ஆற்றைக் கடக்க உதவிற்று. அவ்விடத்தில் உண்டான ஊர் தான் மரத்தோணி. பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்குத் தோணி போல உதவும் பெருமான் திருத்தோணிநாதர்.

இனி, நாம் கடைசியாக, திருநெல்வேலி மாவட்டத்தில் கோவிற் பட்டி வட்டத்திலுள்ள சிவன் கோவில்களைக் காண்போம்.

## அ. கோவிற்பட்டி வட்டம்

### கோவிற்பட்டி—பூவனநாதர்

திருநெல்வேலி மாவட்டம் தான் செந்தமிழ் வழக்குக்குத் தாயிட மாக இருப்பது. சிறிது கிழக்கே சாய்வாக வடக்கிருந்து அதன் நுழை விடமாக இருப்பது கோவிற்பட்டி வட்டம். இவ்வட்டத்தின் தலைநகரமே கோவிற்பட்டி ஊர். 1910-ல் இவ்வூர் சாத்தூர் வட்டத் தைச் சேர்ந்திருந்தது. இராமநாதபுரம் மாவட்டம் புதிதாக அமைக் கப்பட்டபோது சாத்தூர் வட்டத்தைச் சேர்ந்திருந்த இச்சிறு பகுதி ஒட்டப்பிடாரம் வட்டத்தைச் சேர்ந்தது. ஆனால், ஒட்டப்பிடாரம் என்ற பெயர் மாறிக் கோவிற்பட்டி வட்டம் ஆயிற்று.

கோவிற்பட்டி என்பது கோவிலைச் சேர்ந்த பட்டி, அதாவது கோவில் காரணமாகத் தோன்றிய ஊர் என்று பொருள்படும். இது மிகச் சிறிய ஊராக இருந்தது. கோவிலைச் சுற்றிச் சில வீடுகளே

இருந்தன. 1876-ல் தென்னிந்தியப் புகை வண்டி இவ்வூருக்கு வந்தது. அதனால் சில கடைகள் தோன்றின. 1891-ல் நூல் ஆலை உண்டாயிற்று. அதிலிருந்து ஊர் சிறிது வளர்வதாயிற்று. 1911-ல் இது வட்டத் தலைநகரானவுடன் தாசில்தார், குற்றத்தண்டனை நீதிபதி, பத்திரப் பதிவாளர், பொருள் நீதிபதி (District Munsif) முதலியவர்களுடைய வேலை நிலையங்கள் இங்கே வந்தன. கோவிற் பட்டி, சங்கரநயினார் கோவில் வட்டங்களை ஆளும் துணை மாவட்ட ஆட்சித் தலைவர் (Revenue Divisional Officer) வேலை நிலையமும் இவ்வூரில் அமைவதாயிற்று. ஆதலின் மிக்க பொருட்செலவில் அவை களுக்குறிய கட்டிடங்கள் கோவிலுக்குக் கிழக்கே மேட்டின் மேல் கட்டப் பெற்றன. பெரிய வைத்தியசாலையும், பல ஆரம்பப் பள்ளிக்கூடங் களும், 1920-ல் கழக உயர் பள்ளிக்கூடமும் அமைந்தன. அதனால் பெரிய கடைத் தெருவும், பல பல புதிய மாளிகைகளும், ஓட்டடுக்கு வீடுகளும் நாலா பக்கங்களிலும் தோன்றின. அதனால் இவ்வூர் நாளுக்கு நாள் வளர்வதாயிற்று.

கோவில் இருக்கும் இடம் கோவில்மேடு என்றும், பழைய மில் இருக்கும் இடம் மில்மேடு என்றும் அழைக்கப்பட்டன. ஊரின் பெரும்பகுதி இருக்கும் பள்ளத்தில் நல்ல தண்ணீர் காணு வது அருமை. மேட்டில் இருப்பதெல்லாம் நல்ல தண்ணீரே. இது மேட்டுப்பாங்கான இடமானதால் வெள்ளத்தால் இதற்கு ஒரு நாளும் அச்சம் கிடையாது. இதற்குத் தெற்கே நான்கு மைல் தூரத் தில் குருமலை இருக்கிறது. இதில் அருமையான பல மருந்து மூலிகைகள் இருப்பதால், இதிலிருந்து வீசும் காற்று பல நோய்களை நீக்கி உடலுக்கு மிகவும் நன்மையைத் தருகிறது. அதனால் இவ்வூர் குடியிருப்பதற்கு மிக நல்ல இடம்.

## பூவனநாதர் கோவில்

கோவில் மேட்டில் நடுநாயகமாக அரசியலார் அலுவல் நிலையங் களுக்கு மேற்கே விளங்குவது பூவனநாதர் திருக்கோயில். திருநெல்வேலியிலிருந்து சென்னைக்குப் போகும் பெரியசாலையிலிருந்து பிரிந்து மேட்டில் ஏறி எட்டையபுரத்திற்குப் போகும் பாதையின் கிழக்கிலும், வடக்கிலுமாக மாட வீதிகளாலும், தேரோடும் தெருக் களாலும் சூழப்பெற்றுப் பெரிய திருமதில்களின் நடுவே கிழக்கே பார்க்க இத்திருக்கோவில் அமைந்திருப்பது காண்போருக்குக் கண் கொள்ளாக்காட்சியாகும்.

கோவில் இரண்டு பெரும்பகுதிகளையுடையது. தென் பகுதியில் இருப்பது அம்மை செண்பகவல்லித் தாய் திருக்கோவில்; வட பகுதியில் அப்பன் பூவனநாதர் திருத்தளி. இவ்விரண்டுக்கும் இடையே அமைந்து திகழ்வது திருவிழா மூர்த்திகளின் இருப்பிடம். அப்பர், அம்மை இருவர் திருக்கோவில்களிலும் தனித்தனி கருவறை, அர்த்தமண்டபம், மணிமண்டபம், மாமண்டபம் இருக்கின்றன.

பூவனநாதர், களாவன இறைவர் என்பன இறைவர் திருப்பெயர்கள். களாமரங்கள் அடர்ந்து பூத்திருந்த காட்டிடையே தோன்றியவர் இச் சிவலிங்கப் பெருமான்; ஆனதால் அவர் இப்பெயர்கள் பெற்றார். செண்பக பாண்டியராலே நிலை நிறுத்தப் பெற்றார் அம்மை; ஆதலாலே செண்பகவல்லி என்ற பெயர் பெற்றார். பெருமான் கோவிலினுள்ளே அம்பலவாணராகிய நடராசப் பெருமான் தெற்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றார். திருவிழா மூர்த்திகள் கோவிலின் முன்பு இறைவர் தோன்றிய களா மரம் மிகவும் பேணி வைக்கப்பெற்றுள்ளது.

திருக்குளமே தீர்த்தம். இது கோவிலின் வடக்கே பள்ளத்தில் இருக்கிறது. அகத்தியரால் தோற்றுவிக்கப்பெற்று இடைவிடாது தண்ணீர் விழுந்து கொண்டிருக்கும் அகத்திய அருவி இக்குளத்தில் விழுகிறது. இவ்வருவி விழுவது கெண்டியிலிருந்து தண்ணீர் விழுவது போலிருப்பதால் கெண்டித் தீர்த்தமென்றும் பெயர் பெறும். முழுகும் அடியார்களுடைய பாவத்தையெல்லாம் இது தீர்க்கிறது. பல நோயாளிகள் இதில் வந்து முழுகி முழு நலமடைகின்றனர். சித்திரை விசுவில் எண்ணற்றவர்கள் இதில் வந்து தீர்த்தமாடுகின்றனர். சித்திரை விசுத் திருவிழாவே பெரிய திருவிழா.

இங்கே அழகான சிறு தேர்கள் இரண்டு இருக்கின்றன. இவை சித்திரை விசுவுக்கு முந்திய நாள் இழுக்கப் பெறும்.

## புராண வரலாறு

கோயிற் புரிப் புராணத்தைத் தமிழில் இயற்றியவர் சாமி விருதை சிவஞானயோகிகள் என்பவர். இப்புராணம் பதினெட்டுப் படலங்களால் ஆகியது. பதினெட்டாவது படலம் "திருஞான முரைத்தது." அதாவது சிவஞான போதத்தின் வரலாறும், பெருமையும், கருத்துக்

களும் மிகவும் விரிவாக, வினு விடையாகக் கூறப் பெற்றுள்ளன. இது கற்றவராலும், மற்றவராலும் விரும்பிப் படித்தறியத் தகுந்த சிறந்த நூல்.

## கோவிற்புரி தோன்றியது—(படலம் 13)

ஒரு நாள் பெருமான் கனவிலுரைத்த ஆணைப்படி செண்பக வேந்தன் இங்கே வந்து ஊரமைக்க முயன்றான். பெருமான் சித்தர் உருவெடுத்து வந்து "வடக்கே மதுரை, மேற்கே புன்னைவனம், கிழக்கிலும், தெற்கிலும் கடல். இக்கோவிலுக்கருகில் தானே ஒளிர் குகை உள்ளது. அதில் இராமர் வழிபாடு செய்தார். அவருடன் வந்த மந்திகள் தங்கிய இடமே மந்தித்தோப்பு. அவ்வானரங்கள் தங்கிய பட்டியே வானரம்பட்டி. பாண்டவர்கள் சிவ வழிபாட்டால் மங்கலம் பெற்ற ஊரே பாண்டவர்மங்கலம். இதன் மேற்கே கழுகுமலை முருகன் கோவில் உள்ளது. இவைகளின் நடுவே கோவிற் புரியை ஆக்குவாயாக" என்றுரைத்து மறைந்தனர். காடு கெடுத்து மன்னவனால் கோவிற்புரி ஆக்கப்பெற்றது. மன்னன் சிவக் குழுத் தலைவணுகிக் கயிலை சென்றான். அது முதல் முனிவர் ஆணைப்படி கோவிலின் தென் கிழக்கில் செண்பக வேந்தனுக்குப் பீடம் அமைத்துப் பூசனை நடைபெற்று வருகிறது.

இவ்வூருக்குப் பன்னிரண்டு மைல் தூரத்திலுள்ள வெம்பக் கோட்டையில் அரசாண்ட செண்பக வேந்தன் அதன் முன் களாக் காடாக இருந்த இடத்தை வெட்டித் திருத்திக் கோவிலும், ஊரும் எடுத்தான் என்பது தல புராணத்தினால் தெரிய வருகிறது. இவனு டைய காலம் இதுவென்பது திட்டமாகத் தெரியவில்லை. இவ்வூருக்குத் தெற்கே மூன்று மைல் தூரத்திலிருக்கும் மந்தித் தோப்பிலுள்ள சங்கர பாரதி திருமடத்தில் ஒரு செப்புப் பட்டையம் இருக்கிறது. அது குலசேகரப் பாண்டியனால் கலி. 4131, சாலிவாகன சகாப்தம் 952-ல் கொடுக்கப்பெற்றது. அதில் கோவிற்பட்டியாகிய ஊர் குறிக்கப்பெறு வதால் இவ்வூர் கலி. 4131, கி.பி. 1029-க்கு முற்பட்டதென்பது தெரிகிறது.

## பசுவந்தனை—கைலாசநாதர்

காட்டில் இருந்த ஒரு சிவலிங்கத்தின் மேல் ஒரு பசு நாடோறும் வந்து மடுவினால் அணைத்துப் பால் சொரிந்து வந்தனை செய்து பேறு பெற்றது. பசு மடுவால் அணைத்த அடையாளம் கைலாச

நாதராகிய சிவலிங்கத்தின் மேல் இன்றும் காணப்பெறுகிறது. அத ஞல் இவ்வூர் பசுவந்தனை என்று பெயர்பெற்றது என்று தல புராணம் கூறும். பசு வந்தனை செய்ததால் பசுவந்தனை என்பதும் பொருந்தும்.

## ஓட்டப்பிடாரம்—விசுவநாதர்

இவ்வூர் திருநெல்வேலியிலிருந்து இராமீச்சுரம் போகும் மங்கம்மாள் சாலை மேல் இருக்கிறது. உலகம்மை தொத்து நோய்களை ஓட்டும் பிடாரியாக விளங்குகிருள்; ஓட்டும் பிடாரி எழுந்தருளியிருக்கும் ஊர் ஓட்டும் பிடாரம் என வழங்கத் தொடங்கி, ஓட்டப்பிடாரம் ஆயிற்று. அம்மை பெயர் பெரியநாச்சியார் என்பது கல்வெட்டில் காணப் பெறுகிறது; இது அகிலாண்டநாயகி என மாறி வழங்கி வருகிறது. வீரபாண்டியன் இங்கே கோட்டை கட்டி அரசாண்டிருந்தமையால் இது அக்காலம் வீரபாண்டியபுரம் எனப் பெயர் பெற்றிருந்தது. சீவலப்பேரியில் காசியின் நினைவாக விசுவநாதர் கோயில் கட்டிய பிள்ளையனே அதிலிருந்து பதினெட்டு மைல் தூரத்திலிருக்கும் இவ்வூரிலும் விசுவநாதருக்குக் கோவில் கட்டி வணங்கிஞர். இங்கே சித்திரைத் திருவிழா சிறப்பாக நடைபெறும்.

## குலசேகரன்நல்லூர்—விசுவநாதர்

குலசேகர பாண்டிய மன்னரால் எழுந்த நல்ல ஊர் குலசேகரனல்லூர். அம்மன்னவன் கட்டிய கோவிலே இவ்வூர் **விசுவநாதர்** கோவில். இது மிகவும் பழமையானது.

## முத்தலாபுரம்—பவானீசர்

காவிரியாற்றின் துணையாறு ஆகிய பவானி மிகவும் புண்ணிய தீர்த்தம்; அதனை எண்ணி இந்த இடத்தில் வைப்பாறு பவானி தீர்த்தம் எனப் பெறுகிறது. அம்மை பெயரும் பவானி. அதஞல் பவானிநாதர் என்பது இங்கே சிவலிங்கப் பெருமான் பெயராயிற்று. சேர, சோழர், பாண்டியர் மூவரும் தமக்குரிய தலமாகக் கொண்டு வழிபட்டமையால் முத்தலாபுரம் என்ற பெயர் வழங்கப் பெறுகின்றது. முத்து உலாவும் புரம் முத்துலாபுரம் என ஆராய்ச்சியாளர் சிலர் கூறுகின்றனர். இங்கே ஆனி மாதம் திருவிழா நடைபெறும்; அதை ஒட்டி ஒரு பெரிய மாட்டுத் தாவணி ஆற்றங்கரையிற் கூடும்.

## விளாத்திகுளம்—மீனுட்சிசுந்தரர்

விளாத்தி என்பது விளாமரம்; விளாத்தி மரம் நின்ற குளம் விளாத்திகுளம். அக்குளத்தின் கரையில் எழுந்த ஊர் விளாத்தி குளம். வைப்பாற்றில் வெள்ளம் வரும்போது அதனைத் தாண்டிவருவ தில் இடையூறு மிகவுண்டு. மதுரை மீனுட்சியையும் சோமசுந்தரப் பெருமானையும் எண்ணி எழுந்த பெயர் பெற்றவர் இவ்வூர் மீனுட்சி சுந்தரர்.

## வைப்பாறு—விசுவநாதர்

வைப்பு என்பது புதையல்; மண்ணுள் புதையலாக விளங்கும் ஊற்று நீரே பெரும்பாலும் இவ்வாற்றில் ஓடிவருவது; அதனு லேயே இவ்வாறு வைப்பாறு எனப் பெயர் பெற்றது என முன்னரே கூறினேம். வைப்பாறு கடலிலே விழும் இடத்திலே எழுந்த ஊரும் வைப்பாறு ஆயிற்று. காசி விசுவநாதர் பெயரைப் பெற்ருர் இவ்வூர்ச் சிவலிங்கப் பெருமான்; அம்மை விசாலாட்சித்தாய்.

இதுகாறும் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சிவன்கோவில் கள் வழிபடப் பெற்றன. இனி, தனிச் சிறப்பு வாய்ந்த சில கூத்தர் கோவில்களை வணங்குவோம்.

## கூ. கூத்தர் கோவில்கள்

கூத்தாடுபவர் கூத்தர். சிவபெருமான் திருக் கூத்தாடுகின்றான். தாருகா வனத்து முனிவர்களுடைய அகந்தையை அடக்கும் பொருட்டுச் சிவபெருமான் கங்காள நாதராகிச் சென்று அம்முனிவர் மனைவியரைக் காமுறும்படி செய்தான். அப்போது அம்முனிவர்கள் மாரண வேள்வி செய்து அவ்வேள்வித் தீயில் தோன்றியவற்றைச் சிவபெருமானை அழிக்கும்படி அனுப்பினர். முதலில் வந்தது புலி; அதனை உரித்துத் தோலை ஆடையாக உடுத்தனன் சிவபெருமான் ; இரண்டாவது வந்த மழுவை ஆயுதமாகக் கையில் ஏந்தினன்; மூன்றாவது தோன்றிய மானை இடது கையில் ஏந்தினான், அடுத்து எழுந்த பாம்பை அணிகலனாக அணிந்தருளினன் ; பின்னர்த் தோன்றிய பூத கணங்களைத் தன்னைச் சூழ நிற்கும் மெய்காவற் படையாக அமைத்தான் ; அதன் பின்பு தோன்றிய சிரிக்கும் தலையினைத் தன் முடிமிசைக் கொண்டான்; அதன் மேல் மந்திரம் ஒலித்துத் தோன்றிய துடியினை ஒரு கையில் ஏந்தினான்; அதன்பின் வந்த வேள்வித் தீயை ஒரு கையிற் கொண்டான்; கடைசியாக வந்த முயலகன் என்ற பூதத்தைக் கீழே தள்ளி அதன் மேல் நின்றான்.

> "கடுக்கையும் நதியும் பாம்பும் கலைமதிக் கொழுந்தும் சென்னி
> முடித்தவன் பதத்தில் ஊன்றும் முயலகன் மெல்ல மெல்ல
> எடுத்தெடுத்து அசைத்தலோடும் ஏது அங்கு அதனை நோக்கி
> நடித்தனன் என்றும் நீங்கா நடம் புரிகின்ற தேபோல்."

அந்தக் கூத்தினை அருளின் நோக்கி அருகே நின்றனர் அயனும் மாலும். அதனைக் கண்ட தாருகாவனத்து முனிவர்கள் தம் அறியாமையை உணர்ந்து "எங்கள் பிழையைப் பொறுத்தருள் செய்தி" என்று கண்ணீர் வடித்து நடனமாடும் பெருமான் திருவடியில் அடைக்கலம் என்று வீழ்ந்தார்கள். தன்னை அடையாதார்க்கும் பேரருள் புரியும் ஆண்டவன் அடைக்கலம் என்று பணிந்த அவர்களை மன்னித்து ஆட்கொண்டருளினான்.

பெருமான் திருநடம் புரி பெரும்பதிகள் ஐந்து; அவை **1.** அரதன அம்பலம் (திருவாலங்காடு), **2.** பொன்னம்பலம்(சிதம்பரம்), **3.** வெள்ளியம்பலம் (மதுரை), **4.** தாமிர அம்பலம் (திருநெல்வேலி), **5.** சித்திர அம்பலம் (திருக்குற்றாலம்) என்பன; இவற்றுள் கடைசி இரண்டினை உடையது நெல்லை மாவட்டம்.

திருவாலங்காட்டில் காளிமாதேவி பெருமானேடு போட்டியிட்டுப் பெருங்கூத்தாடினுள்; அவ்வம்மையின் பெருமிதத்தை அடக்கி ஆளப் பெருமான் அண்டபகிரண்டங்களுக்கும் அப்பாற் செல்லும்படி ஒரு காலை உயரத்தூக்கி ஆடியருளினன்; அம்மை அப்படி ஆட முடியாது தோற்றுப் பெருமானுடைய அந்நடனத் தோற்றத்தைக் கண்குளிரக் கண்டு நின்ருள். சிதம்பரத்திலும் இங்ஙனம் தில்லை மாகாளி ஆடித் தோற்றமை புராணம் கூறுகின்றது.

மண், நீர், தீ, காற்று, விண் என்னும் ஐம்பெரும் பூதங்களினுல் ஆகியது உலகம். இப்பூதங்கள் ஒவ்வொன்றும் பலப்பல அணுக்கள், எண்ணற்ற அணுக்களால் ஆனவை ; அவ்வணுக்களை ஆராய்ந்த அறிஞர்கள் அவை ஒவ்வொன்றும் காண முடியாத வேகத்தில் ஆடுகின்றன என்பதைக் கண்டு கூறுகின்றனர். இறைவன் ஒவ்வொரு பொருளிலும் கலந்து நின்று கூத்தாடுவதோடு அவைகளையும் கூத்தாடும்படி செய்கின்ருன் என்னும் உண்மை இதனுல் நிலைபெறுகின்றமை காண்க.

கூத்துடைக் கடவுளுடைய திருவுருவைப் போலப் பேரழகுடைய திருவுருவம் வேறு எதுவும் இல்லை. இத்திருவுருவம் இல்லாத சிவன் கோவிலே இல்லை. அம்பலவாணன் தெற்கே பார்க்க நின்று அம்மை சிவகாமி அருகே இருந்து திருநடம் கண்டு களிக்கத் திருக் கூத்தாடு கின்ருன். பக்கத்தில் மாணிக்கவாசகப் பெருமானும், காரைக்கால் அம்மையும் இருந்து திரு நடம் கண்டு மகிழ்கின்றனர். சிவலிங்கப் பெருமான் திருக்கோவிலின் மாமண்டபத்தில் கூத்தர் திருவுரு எழுந்தருளியிருந்து காட்சி யருள்கின்றது.

கூத்து ஒரு பெருங்கலையாக வளர்க்கப் பெற்றிருக்கிறது. முப்ப தாண்டுகளின்முன் திருநெல்வேலியில் ஒரு கூத்தரங்கு நடைபெற்றது. விரித்திருந்த வெள்ளிய குருமணல் மேல் நின்று இரண்டு பெண்கள் ஆடினுர்கள். ஆட்டம் முடிந்தவுடன் இரண்டு சிங்க உருவங்கள் ஒன்றையொன்று எதிர்த்து நிற்பது போன்ற உருவம் மணலிலே காணப்பெற்றது. இத் திருக்கூத்துக் கலையை வளர்த்தன திருக்கோவில்களே.

சிவன் கோவில்களில் நடைபெறும் பெருந் திருவிழாக்களில் ஏழாம் திருநாளன்று கூத்துடைப் பெருமான் திருவுலா வருவான் மூன்று முறை. அவன் எழுவது அயனுகிப் படைத்தலையும், சப்பரத்

தில் எழுந்தருளி முதல் மண்டபம் வருவது அரியாகிக் காத்தலையும் உணர்த்தி, பின் முதன்முறை அரனாகி அழித்தலை உணர்த்தும் சிவப்புப்பூச்சாத்தியும், இரண்டாம் முறை மகேசன் ஆகி மறைத்தலை உணர்த்தும் வெண்பூச் சாத்தியும், மூன்றாம் முறை சதாசிவனாகி அருள் தலை யுணர்த்தும் பச்சை சாத்தியும் காட்சியருள்கின்றான்.

## திருநெல்வேலி—தாமிர அம்பலம்

ஐந்து பேரம்பலங்களில் ஒன்று திருநெல்வேலியில் நெல்லையப்பர் கோவிலினுள்ளே வடமேற்குப் பகுதியில் செப்போடு வேயப்பெற்று இருக்கின்றது. இதுதான் தாமிர சபை. இதில் அம்பலவாணன் மார்கழித் திருவாதிரையில் திருநடனக் காட்சி யருள்வான். காந்திமதியம்மை திருக்கோவிலின் முன்பு கீழைத் தேர்த்தெருவைப் பார்க்க இருக்கிறது சௌந்திர சபை; இதில் பெருமான் தைப் பெருவிழாவில் தெப்ப விழாவுக்கு மறுநாள் ஆனந்தக் கூத்தாடுவான். இதற்கு வடக்கே பத்தாவது மைலில் இருக்கிறது மானூர் அம்பலம்; அங்கே பெருமான் கருவூர்ச் சித்தருக்கு ஆவணிமூலத்தன்று கூத்துக் காட்சி யருளினன். இத்திருக்கோவிலினுள்ளே வடகிழக்குப் பகுதியில் இருப்பது பெரிய திருக்கூத்தர் திருவுரு; இது காண்பவருக்கெல்லாம் உண்மையில் ஆடுவது போலவே காட்சியளிக்கின்றது.

## திருக்குற்றாலம்—சித்திரசபை

திருக்குற்றாலத்தில் குற்றால நாதருடைய திருக்கோவிலுக்கு வடக்கே இருப்பது சித்திரசபை. இதன் முன் ஓர் அழகிய தெப்பக் குளம் இருக்கின்றது. இந்தச் சபையில் பெருமான் திருவுருவம் தெற்கே பார்க்கச் சித்திர உருவில் அமைந்திருக்கின்றது; இதனை அழகு செய்வன சிறந்த சித்திரங்கள். அதனாலேயே இது சித்திர சபை எனப் பெயர் பெற்றது. சித்திரங்கள் அண்மையில் புதுப்பிக்கப் பெற்று விளங்குகின்றன.

இதனை ஒட்டித் தென்கிழக்காகவும் குற்றாலநாதர் கோவிலுக்கு வடகிழக்காகவும் ஒரு திருக்கோவில் இருக்கிறது. அது தான் கூத்தர்கோவில் என அழைக்கப் பெறுவது. இதுவே

இங்கே ஆதிக் கோவில் என்று அறிந்தார் கூறுகின்றனர். இங்கே பெருமான் சிவலிங்கமாகக் காட்சியருள்கின்றனன். இப் பெருமானைத் திருநாவுக்கரசர் பின்வருமாறு போற்றுகின்றார் :—

“ உற்றார் யார் உளரோ ? உயிர்கொண்டுபோம் பொழுது
குற்றாலத்து உறை கூத்தன் அல்லால் நமக்கு
உற்றார் யார் உளரோ ?”.

மாணிக்கவாசக அடிகள் திருவாசகம் திருப்புலம்பற் பகுதியில்

“ உற்றாரை யான் வேண்டேன் ஊர்வேண்டேன்
பேர் வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவுமினியமையும்
குற்றாலத்து அமர்ந்துறையும் கூத்தா உன்குரை கழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. ”

என்று அருளுகின்றார்.

பின் வருவது பட்டினத்துப் பிள்ளையார் திருவாக்கு :—

“ காலன் வருமுன்னே கண் பஞ்சடை முன்னே
பாலுண் கடைவாய்ப் படுமுன்னே—மேல் விழுந்தே
உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத்தானையே கூறு.”

## செப்பறை—அழகியகூத்தர்

செப்புத் தகட்டினால் முகடு வேயப்பெற்ற அறை செப்பறை (செம்பு அறை). அழகிய கூத்தர் எழுந்தருளி யிருக்கும் மண்டபம் செப்பறை. மணப்படை வீட்டுக்கு எதிரே தண் பொருநைக் கரையில் இக்கோவில் இருக்கிறது. ஆற்றங்கரை . வழியாக வந்தால் இவ்விடம் திருநெல்வேலியிலிருந்து வடகிழக்கே நான்கு மைல்; இராசவல்லிபுரம் வந்து சாலை வழியாக வந்தால் ஏழு மைல்; இராசவல்லிபுரத்திலிருந்து தெற்கே இது ஒரு மைல். இராசவல்லிபுரம் திருநெல்வேலியிலிருந்து வடகிழக்கே ஆறு மைல். செப்பறையிலிருக்கும் சிவலிங்கம் நெல்லையப்பர் ; அம்மை காந்தி மதி. கொல்லம் ஆண்டு 896-ல் வெள்ளத்தால் பழையகோவில் அழிந்து விட்டது ; அப்போது தளவாய் ஆறை அழகப்ப முதலியார் இப்புதுக் கோவிலைக் கட்டினார்.

## ஐந்து திருக்கூத்தர்கள்

திருநெல்வேலி வட்டம் செப்பறையிலிருக்கும் அழகிய திருக் கூத்தர் திருமேனியை ஆக்கினன் ஒரு சிற்பக் கலைஞன்; அவனுடைய ஊர் கருவேலங்குளம் என்பது. அவனே இன்று சிதம்பரத்திலும், செப்பறையிலும், கரிசூழ்ந்த மங்கலத்திலும், கட்டாரி மங்கலத்திலும், கருவேலங் குளத்திலும் உள்ள அழகிய திருக்கூத்தர் திருமேனிகளை அமைத்தான். இன்றும் இவை ஐந்தும் ஒரே அச்சாக இருப்பதை யாவரும் கண்டு களித்துத் திருவருள் பெறுதல் கூடும். இவை ஐந்தில் சிதம்பரம் தவிர ஏனைய நான்கும் நெல்லைமா வட்டத்தைச் சேர்ந்தன. செப்பறை திருநெல்வேலி வட்டத்தைச் சேர்ந்தது. இங்கும் சிதம்பரத்திற்போல ஆனித் திருமஞ்சன விழாவும், மார்கழித் திருவாதிரைத் திருவிழாவும் சிறப்பாக நடைபெறு கின்றன.

### கரிசூழ்ந்தமங்கலம்—கனகசபாபதி

அம்பாசமுத்திரம் வட்டம் சேரன்மாதேவிப் புகைவண்டி நிலையத்திலிருந்து நேர் கிழக்கே இரண்டரை மைல் தூரத்தில் பத்தமடை இருக்கிறது. பத்தமடையில் மிக்க புகழ் பெற்ற உமையம்மையோடு கூடிய வில்வ வனநாதப் பெருமான் கீழோ ரத்தில் கன்னடியன் காற்கரையில் எழுந்தருளியிருக்கின்றார். இந்தத் திருக்கோவிலிலிருந்து சிறிது கிழக்கே சரிவாக வடக்கே ஒரு மைல் தொலைவில் இருக்கிறது தண்பொருநைத் தென் கரையில் கரிசூழ்ந்த மங்கலம். இங்கிருக்கும் கனகசபாபதிப் பெருமானைக் காணக் கண் கோடி வேண்டும்; அவ்வளவு திருவழகுத் திருமேனி.

### கட்டாரிமங்கலம்—அழகியகூத்தர்

திருச்செந்தூர் வட்டத்தைச் சேர்ந்தது கட்டாரி மங்கலம். செப்பறைப் பெருமானைப் போலவே இவரும் அழகிய கூத்தர். இவ்வூர் அழகிய கூத்தரை ஆக்கியவுடன் சில பொறாமையாளர் சிற்பியின் வலக்கை நுனியை வெட்டி விட்டார்கள்.

ஆண்டவனுடைய ஐந்தொழிலையும் உணர்த்துவது திருக் கூத்து.

"தோற்றம் துடியதனில் ; தோயும் திதி அமைப்பில் ;
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு." (உண்மை விளக்கம்).

துடி-உடுக்கு—உலகைப்படைத்தலையும், அமைத்த கையில் காத்தலையும், தீயினில் அழித்தலையும், ஊன்றிய திருவடியில் மறைத்தலையும், தூக்கிய திருவடியில் அருளுதலையும் காண்க.

## கருவேலங்குளம்—திருக்கூத்தர்

நான்குநேரி வட்டத்தைச் சேர்ந்த இவ்வூர் களக்காட்டுக்கு வடக்கே ஒன்றரை மைல் தொலைவில் இருக்கிறது. திருக்கூத்தர் சுந்தர பாண்டீசர் திருக்கோவிலிலே இருக்கிறார். வலக்கையிற் சிறிது ஊனம் பெற்ற சிற்பத் தலைவன் அக்கையில் ஓர் அகப்பையைக் கட்டிக் கொண்டு இக் கூத்தர் திருமேனியை வார்த்தான். மிக மிகப் பேரழகுடன் கூத்தர் திருமேனி அமைந்தது. சிற்பியின் குறைந்த கையும் கூடிற்று. அவன் மட்டில் அடங்காத மகிழ்ச்சி கொண்டு கூத்தனுருடைய வலக் கன்னத்தைக் கிள்ளி முத்தமிட்டு, ஆடிப்பாடினான். அந்த அடையாளத்தை நாம் இன்றும் கூத்தனார் வலது கன்னத்திற் காணலாம்.

**இனி, பெருமாள் கோவில்களைக் கண்டு வணங்குவோம்.**

# ௬. பெருமாள் கோவில்கள்

பெருமாள் என்ற சொல் பெருமை மிக்கவன் என்று பொருள் படும்; எல்லாப் பெருமையும் தருபவன் என்றும் ஆகும். திருமால் என்பதும் பெருமாள். மால்—பெருமை, மயக்கம்; பார்த் தவர் யாவரும் மயங்கும் பேரழகுத் திருமேனி உடையவன் திருமால்.

" திருவுக்கும் திருவாகிய செல்வா !
தெய்வத்துக்கு அரசே ! செய்யகண்ணா !
உருவச் செஞ்சுடர் ஆழி வல்லானே !
உலகு உண்ட ஒருவா ! திருமார்பா !
ஒருவற்கு ஆற்றி உய்யும் வகை இன்றால்
உடன் நின்று ஐவர் என் உள்புகுந்து ஒழியாது
அருவித் தின்றிட அஞ்சிநின் அடைந்தேன்
அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே ! "

நாலாயிர திவ்வியப்பிரபந்தம்.

திருமால் பத்துப் பிறப்புக்கள் உலகம் உய்ய எடுத்திருக்கிறான். அவை (1) மச்சம், (2) கூர்மம், (3) வராகம், (4) நரசிங்கம், (5) வாமனன், (6) பரசுராமன், (7) இராமன், (8) பலபத்திரன், (9) கண்ணன், (10) கற்கி.

(1) நான்கு வேதங்களையும் திருடிக்கொண்டு கடலில் ஒளித்திருந்த சோமுகாசுரனைக் கொல்லத் திருமால் மச்சாவதாரம் எடுத்தான். மச்சம்—மீன், அவதாரம்—பிறப்பு.

(2) திருப்பாற்கடலைக் கடையும் மத்தாக இருந்த மந்தர மலை யைத் தாங்கும் பொருட்டு எடுக்கப்பட்டது கூர்மாவதாரம். கூர்மம்— ஆமை.

(3) பூமியைப் பாயாகச் சுருட்டிய இரணியாக்கனைக் கொன்று அதனைப் பழையபடி விரிக்க எடுத்தது வராகாவதாரம். வராகம்— பன்றி.

(4) பிரகலாதனுக்கு இரங்கி அவன் காட்டிய தூணில் தோன்றி அவன் தந்தை இரணியனைக் கொல்ல எடுத்தது நரசிங்காவதாரம். நரசிங்கம்—சிங்க முகம் கொண்ட நரன்; நரன்—மனிதன். இந் நான்கு பிறப்புக்கும் தாய் தந்தையர் இல்லை.

(5) காசிப முனிவனுக்கும், திதிக்கும் மகனாகி மாபலி என்ற மன்னனை அடக்க எடுத்தது வாமனாவதாரம். வாமனன்—குள்ளன். குள்ள வடிவோடு வந்து மாபலி மன்னனிடம் மூன்றடி மண் இரந்து பெற்று, வளர்ந்து திருவிக்கிரமனாகி ஓரடியால் கீழ் ஏழு உலகங்களையும் ஓரடியால் மேல் ஏழு உலகங்களையும் அளந்து மற்றும் ஓரடியால் மாபலி முடிமிசை வைத்து அவனைப் பாதலத்துக்கு அமிழ்த்தின தோற்றம் இது.

(6) சமதக்கினி முனிவனுக்கும், இரேணுகைக்கும் மகனாகிப் பரசுராமன் என்ற பெயர் தாங்கி அரசர் கருவறுத்த பிறப்பு இது. பரசு—கோடரி. பரசுராமனுடைய வன்மையை இராமன் கவர்ந்தான்.

(7) தசரதன், கோசலை ஆகிய இருவருக்கும் மகனாகி இராவணனைக் கொன்றான் இராமன்.

(8) வசுதேவனுக்கும் உரோகிணிக்கும் மகனாகப் பிறந்து பிரலம்பன் முதலிய அசுரரை அழிக்க எடுத்தது பலபத்திர அவதாரம். பலபத்திரன்—பலராமன்; கண்ணனுக்கு அண்ணன் பலராமன்.

(9) வசுதேவனுக்கும் தேவகிக்கும் மகனாகிப் பாரதப் போர் கண்டு பூபாரம் தீர்க்க எடுத்தது கண்ணன் பிறப்பு.

(10) திருமாலின் கடைசிப் பிறப்பு கற்கி அவதாரம். கற்கி—குதிரை. கலியுக முடிவில் அறங்கள் மாறிக்கிடக்க அவைகளை நிலை நாட்டுவதற்காகச் சம்பளக் கிராமத்தில் ஓர் அந்தணனுக்கு மகனாகிக் குதிரை முகத்துடன் திருமால் தோன்றப்போவதாக நூல்கள் கூறும். பின் வந்த ஆறும் தாய் தந்தையரையுடைய பிறப்புக்கள்.

திருமால் உலகமாகிய திரு வைகுந்தத்தில் திருவாயில் காவலராகிய இருவர் துர்வாச முனிவர் சாபத்தால் மண்ணிற் பிறந்தனர். அவர்கள் மூன்று பிறவிகளில் திரும்பத் திருவாயில் காவலராகும் அருளைத் திருமாலிடம் பெற்றனர். அவர்கள் இருவருடைய முதற் பிறப்பு இரணியாக்கன், இரணியன். இரணியாக்கனுக்காக ஆமையாகவும், இரணியனுக்காக நரசிங்கமாகவும், திருமால் தோன்றினன். இரண்டாவது பிறப்பு இராவணன், கும்பகர்ணன்; இவர்களை ஆட்கொள்ள எடுத்தது இராமாவதாரம். மூன்றாவது பிறப்பு சிசுபாலன், தந்தவக்கிரன்; இவர்களை ஆட்கொள்ள எடுத்தது கண்ணாவ

தாரம். இம்மூன்று பிறப்புக்களின்பின் இவர்கள் மறுபடி திருவைகுந்தம் சென்று திருவாயிற் காவலை ஏற்று விளங்கு கின்றனர்.

திருமாலின் திருமகனே நான்முகன். திருமால் மோகினியாக அம்மோகினிக்கும் சிவபெருமானுக்கும் பிறந்த பிள்ளையே ஐயனார். ஐயனாருக்கு அரிகரபுத்திரன் என்ற பெயர் உண்டு. சிவபெருமானுக்கு அரி ஒரு சத்தியாகவும் அந்தச் சத்திக்கு ஒரு பாகம் சிவபெருமான் அருளினன். அந்தத் திருவுருவமே சங்கரநாராயணத் திருவடிவம் என்று நூல்கள் கூறுவன. பார்வதி தேவிக்குத் திருமால் தமைய னாகக் கருதப்படுகிறான். அதனால் சிவபெருமான் பார்வதியைத் திருமணம் செய்தபோது பக்கத்தில் நின்று தாரைவார்த்துக்கொடுத் தான் திருமால் ஆகிய பெருமாள். திருமால் திருவைகுந்தத்தில் எழுந் தருளியிருப்பதுபோலவே திருப்பாற்கடலில் ஆதிசேடனாகிய பாயலின் மேற் பள்ளிக்கொண்டிருக்கிறான் பூதேவி, சீதேவியருடன்.

## பெருமாள் கோவில்கள்

கணக்கில் வந்துள்ள பெருமாள் கோவில்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒரு நூற்றைம்பத்தொன்பது உள. அவை தம் முள் ஆண்டுக்கு ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய் வருவன பதினெட்டுத்தான். அவைகளை நாம் சென்று பணிவோம். அவை வருமாறு :—

(1) அம்பாசமுத்திர வட்டம்.—1. அம்பை—கிருட்டிணசாமி, 2. சாட்டுப் பத்து–சுந்தரராசர், 3. வீரவனல்லூர்–சுந்தரராசர்;

(2) திருநெல்வேலி வட்டம்.—4. கிருட்டிணபுரம்-வேங்கடாசல பதி, 5. மேல வீரராகவபுரம்- வரதராசர், 6. பாளையங்கோட்டை-அழகியமன்னார், 7. பாளையங்கோட்டை-இராமசாமி, 8. திருவண்ணாத புரம்–வேங்கடாசலபதி ;

(3) சீவைகுண்ட வட்டம்.—9. பெருங்குளம்-மாயக் கூத்தர், 10. சீவைகுண்டம்—கள்ளப்பிரான், 11. தூத்துக்குடி–வைகுண்டபதி;

(4) திருச்செந்தூர் வட்டம்.—12. ஆழ்வார் திருநகரி—ஆதி நாத ஆழ்வார், 13. ஆழ்வார் திருநகரி–எம்பெருமானார், 14. தென் திருப்பேரை-மகர நெடுங்குழைக்காதர்;

(5) நான்குநேரி வட்டம்.—15. நான்குநேரி—வானமாமலைப் பெருமாள், 16. திருக்குறுங்குடி—அழகிய நம்பிராயர் ;

(6) தென்காசி வட்டம்.—17. வீரகேரளன்புதூர்–நவநீத கிருட்டினர்;

(7) சங்கரன்கோவில் வட்டம்.—18. புளியங்குடி—இலட்சுமி நரசிங்கப் பெருமாள்.

இந்தப் பதினெட்டுக் கோவில்களுடன் வேறு சில முதன்மை யான கோவில்களையும் சென்று வழிபடுவோம்.

முதற்கண் அம்பாசமுத்திரம் வட்டத்திற் புகுவோம்.

## (க) அம்பாசமுத்திர வட்டம்

### அம்பாசமுத்திரம்—கிருட்டிணசாமி

இத்தலைப்பில் அடங்கிய கோவில்கள் (1) கிழக்கே உள்ள வேணு கோபால கிருட்டினன் கோவில், (2) தெற்கே உள்ள புருடோத்தமப் பெருமாள் கோவில், (3) ஊருக்கு வடக்கே ஒரு மைல் தொலைவி லுள்ள கோவிற்குளம் தென்னழகர் கோவில், (4) ஊர் நடுவே உள்ள இலட்சுமி நாராயணப் பெருமாள் கோவில் என்பன. கோவி லுக்கு உரிமையானது குளம். அதை ஒட்டி அமைந்த ஊர் கோவிற் குளம் என்று பெயர் பெற்றது. கிருட்டிணன் கோவிலைத் தவிர ஏனைய மூன்று கோவில்களிலும் கல்வெட்டுக்கள் காணப்பெறுகின்றன. இலட்சுமிநாராயணர் கோவிலிலுள்ள கல்வெட்டு அது சிவன் கோவி லாயிருந்தபோது வெட்டப்பட்டது என்பது விளங்குகின்றது. இக் கோவிலின் கருவறை மதிலின் நாற்புறமும் சிவலிங்க உருவமும், பிள்ளையார் உருவமும் அமைந்திருப்பதும் விமானத்தின் தென்புறம் தெற்கணுமூர்த்தியிருப்பதும் இதனை வலியுறுத்தும்.

தென்னழகர் கோவில் மிகப் பழமையானது ; புருடோத்தமர் கோவிலும் அதற்கடுத்தபடி பழமையானதுதான். கிருட்டிணன் கோவில் இவைகளுக்குப் பிற்பட்டது ; இதில் வைகாசி மாதம் பெரு விழா நடைபெறுகின்றது. தென்னழகர் கோவிலில் ஆடிப்பூர விழா வும், புருடோத்தமர் கோவிலில் சித்திரைப் பூரணை விழாவும் சிறப் புடையன. கல்வெட்டுக்களினால் இவ்வூருக்கு "வேளா குறிச்சி" என்ற பெயர் இருந்தது தெரியவருகிறது. "திருச்சாலைத் துறை, கருமாணிக்கத் தேவர்" என்ற குறிப்பு ஆராயத்தக்கது. கிருட்டிணன்

கோவில் இருக்கும் இடம் இன்று சோலைப்புறம் என்று வழங்கப் பெறுகிறது ; சாலைத்துறை என்பது சாலைப்புறம் ஆகி, பின் சோலைப் புறம் ஆயிருக்கலாம் என எண்ணவும் இடமுண்டு. தென்னழகர் கோவில் கல்வெட்டுக்களில் கோவில் இருக்கும் இடம் 'முள்ளிநாட்டுக் குளம்' என்பது தெரிகிறது. பெருமாள் பெயர்கள் 'சீபதி விண்ண கர் எம்பெருமான்', 'திருப்பொதியில் விண்ணகரத் தேவர்', 'சுந்தரத் தோள் எம்பெருமான்' என்று குறிக்கப் பெற்றுள்ளன.

## மன்னார்கோவில்—இராசகோபாலர், குலசேகர ஆழ்வார்

அம்பாசமுத்திரம் இரயிலடியிலிருந்து சிறிது வடமேற்கே இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது மன்னார்கோவில். இக்கோவிற் பெரு மாள் பெயர் அழகிய மன்னனார் என்பது இக்கோவிலிற் காணப் பெறும் பல கல்வெட்டுக்களிலிருந்து தெரியவருகிறது. அழகிய மன்ன னார் கோவிலை ஒட்டி எழுந்த ஊர் அழகிய மன்னனார் கோவில் என்றே பெயர் பெற்று நாளடைவில் மன்னனார்கோவில் ஆகி, இப்போது மன்னார்கோவிலாக வழங்கப் பெறுகிறது. சோழ அரசர் இராசசிங்கத் தேவரால் கட்டப்பெற்று, இராசேந்திரச் சோழன் பெயரால் கோவி லுக்கு 'இராசேந்திர விண்ணகர்' என்றும், பெருமாளுக்கு 'இரா சேந்திர விண்ணகர்த் தேவர்,' 'விண்ணகரத் தெம்பெருமான்' என வும் பெயர்கள் அமைந்தன. இருந்தாலும் ஊர் இராசராச சதுர் வேதிமங்கலத்தின் ஒரு பகுதியானதே. கல்வெட்டொன்றில் கைலாச முடையார் கோவில் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வூர் 'மானாபரண சதுர்வேதிமங்கலம்' என்ற பெயரையும் உடையதாயிருந்தது. இராச கோபாலர், கோபாலசாமி என்ற பெயர்கள் பிற்காலத்தில் முளைத் தன. அழகிய மன்னார்கோவிலில் தெற்கே பார்க்க ஒரு சிறிய கோவில் இருக்கிறது. அதில் குலசேகர ஆழ்வார் இருக்கிறார். கொல் லம் 722-ல் சேந்தலங்காரதாசர் என்பார் ஆழ்வார் பூசையை ஏற்றார் என்ற செய்தி தெரியவருகிறது. அவர் சேந்தலங்கார மாமுனி மடம் என்பதைத் தொடங்கினார். குலசேகர ஆழ்வார் பன்னிரண்டு ஆழ் வார்களில் ஒருவர் ; கொல்லி நகரத்தில் அவதரித்த மன்னர் இவர் பாடிய உள்ளம் உருக்கும் பாடல்கள் நாலாயிரப் பிரபந்தத்தில் பெருமாள் திருமொழி என வழங்கும் 105 பாடல்கள் இருக்கின்றன. இவர் இத்திருக்கோவிலில் வந்திருந்து அழகிய மன்னனார் திருவடி அடைந்தார். அதனால் இவருக்கு இங்கே தனிக் கோவில் ஏற் பட்டது.

இவ்வூர்த் தெப்பக்குளக் கரையில் ஒரு கல்வெட்டு இருக்கிறது; அதில் அழகிய மன்னனார் தெப்பத் திருவிழாவுக்குப் போத்தி நாயக்கர் என்பவர் நிலங் கொடுத்தமை குறிக்கப் பெற்றுள்ளது. தெப்ப விழா நடைபெறும் குளமே தெப்பக்குளமாம்.

கொல்லம் 688-ல் சீவலதேவ பாண்டியர் வேளாகுறிச்சியில் புது அரண்மனையில் இருந்ததும், அரசர் கல்லிடைக்குறிச்சித் தங்கலில் தங்கியதும், சோழகுல வல்லிபுரம் என்ற களக்காட்டில் அகரச் சீர்மை என்ற அரண்மனையில் அரசர் தங்கியிருந்ததும் ஆகிய செய்திகள் இங்கே கல்வெட்டுக்களிற் காணப்பெறுகின்றன.

## சாட்டுப்பத்து—சுந்தரராசப் பெருமாள்

பத்து என்பது வயல். பற்று என்ற சொல்லே பத்து என மருவி நின்றது. வயலில் விளையும் உணவுப் பொருளைப் பற்றுக் கோடாக உடையதே மனிதர் வாழ்க்கை. அதனாலேயே பற்று எனப் பெற்றது வயல். சாட்டு என்பது பெரிய எனப் பொருள்படும். பெரும் பற்று, பெரும்பத்து, சாட்டுப் பத்து என ஆயினமை காண்க. பெரும் பத்து என்றே ஓர் ஊர் இருக்கிறது. சாட்டுதல் பிறனிடம் சார்த்து தல்; பிறனிடம் சார்த்தப்பட்ட வயல் எனவும் பொருள் கொள்ள லாம். அவ்வயலை ஒட்டி எழுந்த ஊர் சாட்டுப்பத்து எனப் பெயர் பெற்றது. இவ்வூரில் சுந்தரராசப் பெருமாள் கோவில் திகழ்கின் றது. சுந்தரராசர் என்ற பெயர்தான் அழகிய மன்னனார் என்பது.

இதுவரை நாம் பார்த்த ஊர்கள் அம்பாசமுத்திரத்தை ஒட்டித் தண் பொருநையாற்றின் வடகரையில் (இடது கரையில்) உள்ளவை; இனி, தென்கரையில் (வலது கரையில்) உள்ளவற்றைக் கவனிப் போம்.

## அத்தாளநல்லூர்—கசேந்திரவரதப் பெருமாள்

வீரவனல்லூர் இரயிலடியிலிருந்து வட மேற்கே நான்கு மைல் தூரத்தில் இருக்கிறது அத்தாளநல்லூர். இதுவும் இராசராச சதுர்வேதி மங்கலத்தின் கிழக்குப் பகுதியே என்று கல்வெட்டுக் கூறுகிறது. தனிப்பட்ட அளவில் இது குலசேகர சதுர்வேதி மங்கலம் எனப் பெறுகிறது. யானையரசு "ஆதி முதலே" என அழைப்ப, பெரு மான் "என்ன" என்று வந்து அதனைக் கடித்துத் துன்புறுத்திய முதலையை அழித்து அந்த யானைக்கரசைப் பாதுகாத்தருளிய இடம்

இது எனப் புராணம் கூறும். கல்வெட்டு "ஆனை காத்தருள் செய்த பிரான்", "ஆனைக்கருள் செய்த பிரான்" என்று கூறுகின்றது; மேலும் அது இந்த இடத்தை "மெய்ம்மாம் பூம்பொழில்" என்று குறிக்கின்றது.

இக்கதையை மனதிலே கொண்டு அத்தாளநல்லூர் என்ற ஊர்ப் பெயரை ஆராய்வார் சிலர் அத்தி+ஆள்+நல்லூர் எனப் பிரித்து அத்தியை (யானையை) ஆளும் நல்லூர் என்று கூறுகின்றனர்கள். சிலர், "வழிப்போக்கருக்கு இராப் பட்டினியாக இராமல் அத்தாளம் அருளும் நல்லூர்" எனப் புகழ்கின்றனர்கள். அத்தாளம்—இரவு உணவு. ஆனால், கல்வெட்டினை ஆராயும்போது இவ்வூர் "ஆத்தணி நல்லூர்" எனப் பெயர் பெறுவது காணலாம். ஆற்றுக்கு அணித் தாக (இட்ட) உள்ள ஊர் ஆற்றணி நல்லூர் ஆயிற்று. கசம்—யானை +இந்திரன்—அரசன்=கசேந்திரன், யானைக்கு அரசன்; கசம் என் பது கயம். கையை உடைய மாவே கயம் (கையம்). அதுவே கைம்மா.

## வீரவநல்லூர்—சுந்தரராசப் பெருமாள்

சுந்தரராசன் என்ற சொல் அழகிய மன்னன் எனப் பொருள் படும். சுந்தரராசப் பெருமாள் திருவுருவம் கண்ணைக் கவரும் அழ கினது.

## வடக்குக் காரைக்குறிச்சி—வரதராசப் பெருமாள்

இப்பெருமாள் கல்வெட்டில், 'சுந்தரபாண்டிய விண்ணகர் ஆழ் வார் எனப் பெறுகிறார். விண்ணகர் என்பது பெருமாள் கோவி லைக் குறிக்கும் சொல்லாக வழங்கப் பெற்றது. சுந்தரபாண்டியரால் அமைந்தமையின் இவ்வூர்ப் பெருமாள் இப்பெயர் பெற்றனர் போலும்! இவருக்கு அருள் அரசர் எனப் பொருள்படும் வரதராசர் என்ற பெயர் இப்போது வழங்கி வருகிறது.

## கூனியூர்—வேங்கடாசலபதி

இன்று பத்தமடை என்னப் பெறும் ஊர் பத்தல்மடை என்று முன் வழங்கி வந்தமை கல் வெட்டுக் கூறும். பத்தல் என்பது மரத் தாலான நீர் இறைக்கும் கருவி. கூனை என்பதும் நீர் இறைக்கும் கருவியே. பத்தல் கொண்டு நீர் இறைக்கும் மடையருகே தோன்றிய

ஊர் பத்தல் மடையானது போலக் கூனை கொண்டு நீர் இறைக்கும் இடத்தில் தோன்றிய ஊர் கூனையூர் ஆயிற்று. அது இன்று கூனியூர் என மருவி வழங்கி வருகிறது. அப்பக்கத்தில், " கூனியூருக்குப் போக வேண்டுமானால் இங்கிருந்தே கூனிக் கொண்டா போக வேண்டும் ?" என்ற பழமொழி வழங்குகின்றது. பத்தமடைக்கு மேற்கே இரண்டாவது மைலில் இவ்வூர் சேரன்மாதேவி இரயிலடி அருகே இருக்கிறது. வேங்கடாசலபதிப் பெருமாள் மிக அழகிய காட்சியினர். வேங்கட + அசலம் = வேங்கடமலை. சலித்தல் அல்லாதது அசலம். பதி—தலைவர். திருப்பதி வேங்கடாசலபதியை நினைந்து அமைந்த பெயர் இது.

## சேரன்மாதேவி—ஆதிநாராயணர் என்ற இராமசாமி

இராமசாமி கோவில் ஊரின் வடபகுதியில் அழகான தோற்றத்துடன் காணப்படுகிறது.

கருப்பக் கிரகத்தினுள்ளே ஆதிநாராயணப் பெருமாள் சீதேவி, பூதேவி முறையே வலப்புறத்தும் இடப்புறத்தும் இருக்க, பிருகு முனிவரும் மார்க்கண்டேயரும் தொழுதுகொண்டு நிற்க எழுந்தருளி யிருக்கின்றார். இவர் திருவுருவம் படா சாதனம்; அதாவது சிலை உருவில்லை ; தண்ணீர் படாத அமைப்பு. இவருக்கு முன்னால் எழுந்தருள் திருவுருவில் ஆதிநாராயணரும் சீதேவி, பூதேவியரும், சக்கரத்தாழ்வாரும் இருக்கின்றார்கள். இவருக்கு மேலே உள்ள விமானம் இரண்டடுக்கு மாடிகளையுடையது. அதற்கு ஏறிப்போகும் வழி மாமண்டபத்தில் உள்ளது. முதன் மாடியில் இருப்பவர் வீற்றிருந்த பெருமாள் ; சீதேவியும், பூதேவியும் அருகில் இருக்கின்றனர் ; பிருகு மார்க்கண்டேயர் தொழுதுகொண்டு நிற்கின்றனர். மாடியிலேயே இவரைச் சூழ்ந்து வர உட் சுற்று வெளிச் சுற்றுக்கள் இருக்கின்றன. இரண்டாவது மாடியில் திருப்பாற்கடலிற் பள்ளிகொண்ட பெருமாள் காட்சியருளுகின்றார் ; சீதேவி பூதேவி, பிருகு, மார்க்கண்டர் அருகில் உள்ளார்கள். இவரைச் சூழ ஒரே சுற்றுத்தான் உண்டு. இந்த விமானம் மிகப் பழையதேனும் கண்டு பாராட்டும் அழகு வாய்ந்தது. இது போன்ற மூன்றடுக்கு விமானம் மதுரைக் கூடலழகர் கோவிலிலும், திருக்கோட்டியூரிலும், உத்தரமேரூரிலும் இருக்கிறது. இது அட்டாங்க விமானம் என்ற பெயருடன் மிகவும் தெய்வத் தன்மை வாய்ந்து கொண்டாடப் பெறுகிறது.

ஆதிநாராயணப் பெருமாள் கோவில் பிற்காலத்தில் இராமசாமி கோவிலாகப் பெயர் மாறிற்று. இங்கே சித்திரைப் பெருவிழா சிறப்பாக நடைபெறும். மார்கழி மாதம் மா வியதீபாதத்தன்று ஆற்றிற் பெருங்கூட்டம் கூடி முழுகும். "நிகரிலி சோழ சதுர்வேதிமங்கலம், நிகரிலி சோழ விண்ணகர் ஆழ்வார்" என்பது இக்கோவிற் கல்வெட்டு. நிகரிலி சோழரால் ஆக்கப் பெற்ற விண்ணகர் என்பது கோவிலின் பெயர்.

## ஆழ்வார்குறிச்சி–நாராயணசாமி

ஆழ்வார்குறிச்சி ஆவுடையம்மன் கோவிற் கல்வெட்டினுல் இவ்வூர் "கொல்லம் கொண்ட பாண்டிய சதுர்வேதி மங்கலம்" என்பது அறியலாம். இப் பெருமாள் கோவில் ஊர் முகப்பில் உள்ளது. இதற்குப் பெரும் பகுதி காணிக்கை வருவாயே.

## பாப்பான்குளம்—இராமசாமி

பார்ப்பு இளம் பறவைக் குஞ்சுகளையும், தவளை, ஆமை இவற்றின் குஞ்சுகளையும் உணர்த்தும். பார்ப்பு ஆர் குளம் என்பது பார்ப்பார் குளம், பார்ப்பான் குளம் ஆயிற்று; (ஆர்—கூடி ஒலித்தல்.) பார்ப்பார் குடி என்பது போலப் பார்ப்பனருடைய குளம் பார்ப்பான் குளம்; அது பாப்பான் குளம் ஆயிற்று என்றும் சிலர் கூறுவர். இவ்வூருக்கு ஆழ்வார்குறிச்சியிலிருந்தும் போகலாம்; ஆம்பூரிலிருந்தும் போகலாம். இதன் அருகில் வராகநதி கருணையாற்றிற் கலக்கிறது.

"இராசராச சதுர்வேதி மங்கலத்தின் வடமேற்கே வேளார் குறிச்சியில் பகவதி விண்ணகர் ஆழ்வார்" எனக் கல்வெட்டுக் கூறுகின்றது. இவ்வூரிலுள்ள சிவன் கோவில் ஆகிய சித்த ஞானேசர் கோவில் இருக்கும் இடம் முள்ளி நாடு. ஊர் "சேரனை வென்ருன் திருமடை விளாகம்" என்றும், பெருமான் பெயர் "கருத்தறிந்து முடித்த பாண்டீசுர நாயனர்" எனவும் கல்வெட்டுக் கூறுகின்றது.

புராண வரலாறு.—சம்பகன் என்ற வேட்டுவர் தலைவன் ஞான பீடமாகிய சிவசயில மலையின் அடிவாரத்திலே சிவபூசனை செய்து தவம் செய்துகொண்டிருந்தான். அந்நாளையில் ஒரு நாள் அயோத்தியிலே ஒரு பார்ப்பனப் பிள்ளை இறந்து விட்டது; அதற்குக் காரணம் சம்பகன் தவம் செய்ததுதான் என்று கூறப்படுவதை அறிந்த

இராமபிரான் சம்பகனை வதைப்பதற்காகத் தென்னாட்டுக்கு வந்தனன்; அப்போது இங்கே கருணையாற்றின் நடுவிலுள்ள ஒரு பாறை மேல் நின்றுகொண்டு சம்பகனைத் தேடினான். அப்போது மடவார் வளாகத்திலே ஒரு சோதி தோன்றியது. உடனே இராமபிரான் அதனிடம் சென்று வணங்க அச்சோதி சம்பகன் இருந்த இடத்தைக் காட்டிய போது இராமன் "சோதியாக விளங்கும் சிவலிங்கப் பெருமானே! நீர் என் கருத்தை அறிந்து அருளியபடியினாலே திருக்கருத்தீசர் நீர்" என்று போற்றியபடியால் அச் சிவபெருமான் திருக்கருத்தீசர் என்று பெயர் பெற்றார்.

ஆற்றின் நடுவிலே இராமபிரான் நின்ற பாறை இன்றும் திருவடியும் சக்கரமும் பொறிக்கப்பட்டுச் சக்கரப்பாறை என்ற பெயருடன் விளங்குகின்றது. ஆற்றின் கரையிலே இராமபிரான் வந்து நின்ற புளியமரத்தின் அடியிலே உள்ள சிறு கோவிலே ஆதிக்கோவில். அதன் பின் இப்போதுள்ள இராமசாமி கோவில் பல மன்னர்களாலே கட்டப்பெற்று விளங்குகின்றது.

## 2. திருநெல்வேலி வட்டம்

### மேலத்திருவேங்கடநாதபுரம்—வேங்கடாசலபதி

திருவேங்கடம் என்பது திருப்பதி. இது தமிழ்நாட்டின் வடக்கெல்லை. அதனால் இது வடவேங்கடம் என்னப் பெறும். திருமால் அடியார்கள் தாங்கள் இருக்கும் ஊரிலுள்ள திருமாலைத் திருவேங்கடநாதன், வேங்கடாசலபதி என்று அழைத்து வணங்குகின்றார்கள். வேங்கட+அசலம்=வேங்கடமலை. திருவேங்கடநாதன் இருக்கும் ஊர் திருவேங்கடநாதபுரம் ஆயிற்று. இம் மேலத் திருவேங்கடநாதபுரம் பேட்டைப் புகை வண்டி நிலையத்திற்கு நேர் தெற்கே ஒரு மைல் தொலைவில் ஆற்றங்கரையில் இருக்கிறது.

### திருநெல்வேலி, மேலவீரராகவபுரம்—வரதராசப் பெருமாள்

குறுக்குத்துறைக்கும், சிந்துபூந்துறைக்கும் இடையில் இருப்பது வீரராகவபுரம். மதுரை மன்னர் கிருட்டிணப்ப நாயக்கர் காலத்தில் அவருடைய தளவாயாகத் திருநெல்வேலியில் விளங்கிய வீரராகவ

முதலியார் பெயரால் இவ்விடம் அமைந்துள்ளது. வரதம்—அருள் அளித்தல். வரதராசர் அருள் அரசர். இவர் திருக்கோவில் மேல வீரராகவபுரத்தில் இருக்கிறது.

## பாளையங்கோட்டை—அழகிய மன்னார்

கோட்டை இருந்த அடையாளங்கள் இன்றும் காணப்படுகின்றன. நாயக்க மன்னர் காலத்திலும் ஆங்கிலக் கும்பினிக்காரர் ஆட்சியிலும் இக்கோட்டை பேருதவியாக இருந்திருக்கிறது. இவ்வூர் நடுவில் விளங்குவதாகிய மன்னார் கோவில், கோபாலசாமி கோவில் என்றே வழங்கப் பெறுகிறது. கோவில் பழமையானது. அழகிய மன்னார் திருவுரு கண்ணுக்கு ஏற்ற விருந்து.

## பாளையங்கோட்டை—இராமசாமி

திருநெல்வேலிப் பாலமே இவ்வூருக்குப் பெரிய புகை வண்டி நிலையம். திருச்செந்தூர் வழியில் இவ்வூரும் ஒரு சிறிய புகை வண்டி நிலையமே. கோபாலசாமி கோவிலுக்குத் தென் மேற்கே சிறிது தூரத்தில் முன்னால் ஓர் அழகிய தெப்பக்குளத்துடன் இராமசாமி கோவில் விளங்குகின்றது.

இராமபிரான் இங்கே எழுந்தருளி வந்தமையை நினைந்து இத் திருக் கோவில் எழுந்ததாகும்.

## திருவண்ணாதபுரம்—வேங்கடாசலபதி

வடதிருவேங்கடநாதன் பெயரால் விளங்கும் இக்கோவில் பாளையங்கோட்டைக்கு வடக்கே இரண்டு மைலுக்குள் இருக்கிறது. திருவண்ணாதபுரம் என்பதில் வண் என்பது வளப்பத்தைக் குறிக்கும். திருவண் புருடோத்தமம் என்பது காவிரியாற்றின் வடகரையில் உள்ளது. திருவண்வண்டூர் மலை நாட்டில் உள்ளது. திருவண் என்பது திருமகள்; திருமகள்நாதன் திருவண்நாதன்; அவன் ஊர் திருவண்ணாதபுரம் எனக் கொள்ளுதலும் பொருத்தமே.

## சீவலப்பேரி—அழகர்

மதுரைக்கு வடக்கே உள்ள திருமாலிருஞ் சோலை என்னும் அழகர் கோவிலை நினைந்து ஆக்கப் பெற்ற கோவில் இது. அதனாலே கல் வெட்டில் பெயர்கள் பின்வருமாறு காணப்பெறுகின்றன:

"இராசராச பாண்டிய நாட்டுப்பகுதியாகிய முடிகொண்ட சோழ வளநாட்டின் பாகமான கீழ்வேம்ப நாட்டின் திருநெல்வேலிக் கருகிலுள்ள தென் திருமாலிருஞ்சோலை; தண்பொருந்த நாடு, ஆற்றின் வடகரை, கீழ்க்கரைக்கூற்றம், தென் திருமாலிருஞ் சோலை, நின்றருளின கருமாணிக்க ஆழ்வார், கருமாணிக்கத் தேவர்."

## கிருட்டிணபுரம்—வேங்கடாசலபதி கோவில்

"வட திருவேங்கட நாதன்" பெயராலாகியது இத்திருக் கோவில். இவ்வூர் கீழ்வேம்பு நாட்டுச் சீவல்ல மங்கலத்தைச் சேர்ந்தது என்று கல் வெட்டுக் கூறுகிறது. தெய்வச்சிலையார் விறலி விடு தூதில் மயிலேறும் பெருமாள் முதலியார் கிருட்டிணபுரத்தை அமைத்துக் கோவில், திருமதில், கோபுரம், தேர் ஆக்கினர் என்ற செய்தி காணப்பெறுகிறது. கல் வெட்டு ஒன்றில் காணப்பெறும் "அரியநாயக முதலியார் சோழ வந்தானில் இருக்கும் போது அரியநாயகிபுரம் குடியேற்றிக் கோவில் திருப்பணிகள் செய்தார். அவருடைய மருகர் தெய்வச் சிலை முதலியார் கிருட்டினன் கோவிலுக்கு முன்பாகக் கற் பணிகள், தெப்பம், புதுத்தேர் செய்து தங்கியிருந்தார். இவர் தமது அரசர் கிருட்டிணப்பர் பெயரை அவ்வூருக்கு வைத்தார்" என்பது உண்மை வரலாறு. இக்கோவிலிற் காணப்பெறும் சிற்பங் களெல்லாம் உலகிலேயே ஒப்பற்றவைகளுள் சேர்க்கப் பெறும் உயிர் ஒவியங்கள்.

## சிற்பச் சிறப்புக்கள்

அருமையான கருங்கல் வேலைகள், உருவங்கள், தூண்கள்.— இக்கோவிலிற் காணப்பெறும் சிற்பச் சிறப்புக்களுக்கு ஒப்பாக உலகி லேயே வேறிடங்களில் ஒன்றும் இல்லை யென்று துணிந்து கூறலாம். அவ்வளவு இயற்கை உண்மையும், நுட்பமும் பொருந்தியன அவை. மேலும் அவை யாவும் இன்னிசை ஒலிக்கும் கற்களிலே செய்யப் பெற்றவை. அக்கற்கள் ஊருக்குத் தென் மேற்கே இரண்டு கல் தொலைவிலுள்ள பாறையிலிருந்து பெயர்த்தெடுக்கப் பெற்றவை என்பது அவைகளின் இசை ஒப்புமையாற் புலனாகிறது. அக்கற்கள் எடுத்த பள்ளங்கள் அங்கே இன்றும் காணப்பெறுகின்றன. இக்கோவிலின் சிற்பச் சிறப்புக்களெல்லாம் இரண்டு மண்டபங்களிலே அடங்கியுள்ளன.

அவைகளில் ஒன்று அரச கோபுரத்தைத் தாண்டியவுடனிருக்கும் திருமண மண்டபம்; இரண்டாவது நடுவாசலைத் தாண்டியவுடனுள்ள அரங்க மண்டபம். ஒவ்வொரு மண்டபத்தையும் தனித்தனி எடுத்து விவரிப்போம்.

**திருமண மண்டபம்.**—கோபுரத்தைத் தாண்டிக் கோவிலின் வெளிச்சுற்றினுள்ளே நுழைந்தவுடன் வடபுறம் இருப்பது இம் மண்டபம். இது வீரப்ப நாயக்கராலே கட்டப் பெற்றபடியால் வீரப்ப நாயக்கர் மண்டபம் என்று பெயர் பெறுகிறது. இது இரண்டு வரிசையாக வரிசைக்கு ஒன்பது யாளித் தூண்களால் தாங்கப் பெற்றுத் தெற்கே பார்க்க இருக்கிறது. முகப்பில் இரண்டு யானைகள், மேற்கே இருப்பது ஒருவனை மிதிப்பது போலவும், கிழக்கே இருப்பது பெண்ணொருத்தி அதன் துதிக்கை யருகில் நிற்பது போலவும் அமைத்து வைக்கப்பெற்றிருக்கின்றன. இந்த யானைகளுக்கு நடுவே மண்டபத்திற்கு ஏறும் படிகள் உள்ளன. இவைகளின் கிழக்கே மூன்றும், மேற்கே மூன்றுமாக ஆறு தூண்கள் உள்ளன. இவைகளில் அருமையான சிற்ப நுட்பங்களமைந்த சிலைகள் காணப்படுகின்றன. அச்சிலை கள் யாவர் உள்ளத்தையும் கவரும் அருமைப்பாடுடையவை. அவைகளை வரிசையாகக் கிழக்கிலிருந்து விரித்துரைப்போம்.

முதல் தூணில் தெய்வப் பெண்ணொருத்தி நாட்டியமாடும் கோலத்துடன் நிற்கிறாள்; காதில் ஓலையணிந்திருக்கிறாள். இரண் டாவது தூணில் தெற்கே பார்க்க முதன்மையாக இருப்பது குறத்தி யொருத்தியின் சிலை; அவள் அரசகுமாரன் ஒருவனைத் தோளில் தூக்கிக் கொண்டு ஓடுகிறாள். தூணின் கீழ்புறம் அரசி அன்னத்தின் மேல் ஏறிக் கையிற் கிலுகிலுப்பையை வைத்து அப் பையனுக்குக் காட்டி அவனது கவனத்தை இழுக்க முயல் கிறாள்; முடியவில்லை. குறத்தி பையனுடன் ஓடிவிடுகிறாள். தூணின் வடபுறம் அரசி குறத்தியிடம் குறி கேட்பது போலவும், குறத்தி "உன் தலைவிதி; உன் மகன் வாரான்" என்று குறி சொல்வது போலவும் சிலைகள் அமைந்திருக்கின்றன. தூணின் மேற்குப் பக்கம் அரசன் குதிரையின் மேல் ஏறி வேகமாக மகனைத் தேடி வருவது போலவும் இடையில் வழிமறித்த வீரனொருவன் மேல் குதிரை முன்னங்கால்களைப் போட்டு நசுக்குவது

போலவும், வீரன் இரண்டு கைகளையும் தரை மேல் ஊன்றிக் கொண்டு மூச்சடக்கித் தாங்கி நிற்பது போலவும் இது காணப் படுகிறது.

மூன்றாவது தூணில் முதன்மையான சிலை அருச்சுன னுடையது. அவன் நீண்ட தாடியுடன் கைலையில் சிவ பெருமானை நோக்கித் தவம் புரிந்து பாசுபதம் பெற்று வலது கையில் அதனைத்தாங்கி இடது கையில் காண்டீபம் என்னும் வில்லுடன் நிற்கின்றான். முகத்தில் வீரம் விளங்குகின்றது. நகங்கள் வளர்ந்து தெளிவாக உள்ளன. அருச்சுனன் தவக் கோலத்துடன் இருந்தாலும் சிற்றின்பத்திலும் எளியன் என்பதை உணர்த்துதற்குப் போலும் சில உருவங்கள் அத்தூணிலே செதுக்கப் பட்டுள்ளன. முனிவன் ஒருவன் அழகிய பெண் ஒருத்தியின் முடியில் ஒரு கையும் மார்பில் ஒரு கையுமாக நிற்க, அப்பெண் அவன் தாடியைப் பிடித்து இழுக்கிறாள். கையில் வாளும் முறுக்கிய மீசையுமுடைய அரச குமாரனை ஒருத்தி தூக்கி ஓடுகிறாள். கிழவி யொருத்தி கையில் வாளுடன் வீரன் ஒருவனைக் கீழே தள்ளி மிதித்து நிற்க அவன் இடக் கையால் அவளைச் சுட்டிக் காட்டுகின்றான்.

நான்காவது தூணில் முதன்மையான உருவம் கருண னுடையது. மணி மண்டபத்தில் நுழையும்போது வலது புறம் பாசுபதம் தாங்கிய அருச்சுனனும் இடது புறம் நாகக் கணை தாங்கிய கருணனும் இருக்கும்படி சிலைகளை அமைத்திருப்பது மிக மிகப் பொருத்தமல்லவா ? கருணன் முகத்தில் அருள் ஒழுகு கின்றது. இத் தூணில் குரங்காட்டி தோளில் குரங்குடன் விளையாடு கிறான். குரங்காட்டி போன்ற தாய் தந்தை தெரியாத கருணன் விளையாட்டுப் புத்தியுடையவன், துரியோதனனுடைய மனைவியுடன் தாயம் ஆடியவன் என்பதை அறிவுறுத்தப்போலும். மற்றொரு புறம் கையிற் கிளியுடன் பெண்ணொருத்தி காணப்படுகிறாள். இது கடைசிக் காலத்தில் அவன் முன் தோன்றிய குந்திமாதேவியை உணர்த் தவோ ?

ஐந்தாவது தூணில் முதன்மையான உருவம் குறவனுடையது. இரண்டாவதில் அரசகுமாரனைக் குறத்தி தூக்கி ஓடுவது போலக் காட்டிய சிற்பி இத்தூணில் குறவனொருவன் அரசகுமாரியைத் தூக்கி ஓடுவது

போலக் காட்டுகின்றான். அவன் வலது கையில் வாளுடன், தலையிலி ருக்கும் உயிர்ச் சுமையைத் தாங்கமாட்டாமலும் ஏதோ ஒரு கொடிய வலியைப் பொறுக்கமாட்டாமலும் துடி துடித்து வீரனுகையால் சுமை யைத் தூக்கிக்கொண்டே கழுத்தின் நரம்புகள் தெரிய வளைத்திருப்பது போலக் காணப்படுகிறான். அவனுடைய இடது புறம் விலாவிலே குத்து விழுந்து விலா எலும்புகள் கணுக்கணுவாகத் தெரிய நெளிக்கின்றான். புண்ணிலிருந்து இரத்தம் பீறிட்டுத் தொப்புள் வரை ஓடி வந்திருக் கிறது. இங்ஙனம் உயிரோவியம் சிலையிலே வகுத்த இச்சிற்பியின் திறமைக்கு ஈடும் எடுப்பும் இம் மண்ணுலகில் இல்லவே இல்லை. இவ்வுயிர்ச்சிலையை நேரிற் கண்டு மகிழ்ந்தாற்றான் இதன் அருமை பெருமையெல்லாம் தெளிவாக விளங்குவனவாகும். இரத்த அடையா ளம் காணும் அருமையைப் பாராட்டாதார் யார்? இரத்தக்கறை போன்ற நிறம் அமைந்த இக்கல்லைக் கண்ட சிற்பி உள்ளத்திலே இக் கதையை வகுத்துக்கொண்டு இச்சிலையை செதுக்கியிருக்கிறான். என்னே இச் சிற்பியின் நுண்ணறிவும் நுண்கலை வன்மையும்! அரசகுமாரி மூக மூடாக்குடன் ஒரு கையில் வேடன் குடும்பியைப் பிடித்து இழுக் கிறாள். அவள் வருந்திய முகத்தில் மகிழ்ச்சிக்குறி துள்ளுகிறது. அவன் தன்னைத் தூக்கியோடியது கண்டு அழுது புலம்பிய அவளுக்கு அரச குமரனும் மந்திரி குமரனும் குதிரையேறித் துரத்தித் துணை வருவது கண்டு சிறிது ஆறுதலடைந்தவள் அரசகுமரன் ஈட்டியால் வேடனுடைய இடது விலாவில் குத்திய உடனே வேடன் துள்ளிக் குதிக்க அவன் குடும்பியிற் கைபோட்டுப் பிடித்து அப்பெண் அகமும் முகமும் மலர்கின்றாள். அரசகுமரன் வேடனுடைய இடது புறம் குதிரைமேல் இடது கையினால் கடிவாளத்தை இழுத்துப் பிடித்து வலது கையிலே ஈட்டியை ஓங்கி நிற்கிறான்; வலது புறம் அதாவது மேற்குப் பக்கம் மந்திரி மகன் குதிரை மேல் இருப்புக்கவசம் அணிந்து பற்களைக் கடித்துச் சினத்துடன் வலக்கையில் வாளேந்திப் பாய்கிறான். இவர்களுக்கு முன்னால் அரசனைச் சேர்ந்த மல்லன் ஒருவனும் வேடனைச் சேர்ந்த மல்லன் ஒருவனுமாகக் குத்துச்சண்டை தொடங்கி, ஒருவன் இடக்காலை ஊன்றி வலக்காலை மற்றவன் காலிடையிலே கொடுத்திருப் பதும், மற்றவன் அவன் குடும்பியை வலக்கையால் பிடித்து வளைத்து இடக்கையால் எதிரியின் ஒரு கையைப் பற்றிக்கொண்டிருப்பதும் இங் ஙனமாக அவர்கள் ஒருவரைஒருவர் வெல்லமாட்டாது சரிசண்டையிடுவது மிக்க நுட்பமான அருங்காட்சி. இங்ஙனமாக வேடனிடமிருந்து அரசிளங் குமரன் அரசகுமாரியை மீட்ட வெற்றியை விளக்கிச் சிற்பி தூணின்

வடபுறம் தென்னை மரம் ஒன்றைச் செதுக்கி அதில் ஒரு வீரன் ஏறிக் குலை பறித்து வலது கையில் வாளும் இடது கையில் தென்னங்குலையு மாக இருப்பது போலச் சித்திரித்திருப்பது அறிவுக் கொரு பெரு விருந்து.

ஆருவது தூணுகிய மேற்குச் கடைசித் தூணில் முதன்மையான உருவம் ஒரு நடனப் பெண்ணுடையது. அவள் வலக்கையிற் பூச் செண்டும் இடது உள்ளங்கையில் மாதுளம் பழமும் கொண்டு அப்பழம் கீழே விழாதபடி ஆடுகின்றுள். அவள் காலடிக் கீழே வீரனெருவன் ஒரு கையில் வாளும் மற்றெரு கையிற் கேடயமும் தாங்கி நிற்கின்றுன். கீழ்புறம் பாம்பாட்டிக் குறவன் காணப்படுகிறுன். மேல் புறம் அமைந் திருப்பது இவைகளுக்கெல்லாம் கண் திருட்டிக் கழிப்பாகச் செதுக்கியது போல உள்ளது. ஒருவன் ஒருத்தியின் வலது தொடையில் இடது கையை வைத்துக் காம விகார முகத்துடன் நிற்பதும் அவள் தன் வலது கையால் அவன் குடும்பியைப் பிடித்து இழுப்பதும் கண்டு மகிழும் இயல்பின.

**அரங்க மண்டபம்.**—இதுவே மாமண்டபம். இது ஆடரங்கமாகவும் பாடரங்கமாகவும் பயன் பெற்றிருத்தல் வேண்டும். தென்புறம் ஏழு தூண்களும் வட புறம் ஏழு தூண்களுமாகப் பதினுன்கு அணி ஒட்டுக்கால் தூண்களினுலே இம்மண்டபம் அமைந்து விளங்குகின்றது. முதல், மூன்று, ஐந்து, ஏழு ஆகிய நான்கு தூண்களிலும் பெரிய யாளிகள் அமைந்தன. இரண்டு, நான்கு, ஆறு ஆகிய மூன்று தூண்களிலும் ஒப்பற்ற திருவுருவங்கள் காணப் பெறுகின்றன. இவை களில் மிக மிகச் சிறந்தது தென்புறம் இரண்டாவதாக உள்ள வீர பத்திரர் திருவுருவமே.

வீரபத்திரர் பார்வை நடுத் திருவாயிலைப் பார்க்க மிக்க வீரத்தோடு பகைவர்களை வென்று அறை கூவி நிற்கும் தன்மையில் உள்ளது. கோபத்தில் வீரப்பல் வெளியே வந்திருக்கிறது. நீண்ட மீசைகளும், கன்னம் வரை இறங்கிய கோராவும், நீண்டமுடி முடிச்சும், இரட்டை நாடியும், அதற்கேற்ற துடியான முகமும், விரிந்த மூக்கும், சுருங்கிய கன்னமும், வலக்கையில் ஈட்டியும், இடக்கையில் நீண்ட சதுரக் கேடயமும், தூக்கிய கால்வரை தொங்கும் தலை மாலையும் காண்போர் உள்ளத்தே அச்சமும் அன்பும் ஒருங்கே தோன்றும்படி செய்வன. தூக்கிய வலது கால் குழைந்து உருண்டு நரம்புகளும் நகங்களும் இயற்கையான முறையில் தெளிவாகத் திகழச் சிறிது வளைந்து

காணும் அடியுடன் இருப்பது கலைஞர் கண்ணைக் கவர்வது. வலது இடுப்பில் மடிப்பும் தொப்புளும் காட்டப்பெற்றுள்ள அருமை பார்த்து மகிழும் தன்மையது. இத்திருவுருவம் சரியாது நிற்றற்கு ஏணுக அமைந்திருப்பன ஊன்றிய ஈட்டியின் நுனியும் தூக்கிய காலின் முட்டுமேயாம். வலதுகாற் கட்டை விரல் நகம் சிறிது சிதைக்கப்பட்டிருக்கிறது. அதற்குப் பின் வரும் காரணம் கூறப்படுகிறது.

முன் காலத்தில் வீரபத்திரர் இரவெல்லாம் கோவிலினுள்ளே காவல் புரிந்து வந்தார். உட் பூட்டுக்களின் திறவுகோல்களையெல்லாம் அவரிடம் ஒப்புவித்து நடுவாயிற் கதவையும் பூட்டி அதன் திறவுகோலை ஓட்டை வழியாக உள்ளே போட்டு விட்டு வருவது பூசாரியின் வழக்கம். ஒரு நாள் பூசாரி தன் குழந்தை உள்ளே தூங்கியிருந்ததை மறந்து காப்பிட்டுச் சென்ருர். பின் வந்து கதவைத் திறக்க முயல, முடியாது வீரபத்திரரிடம் தன் குழந்தையைக் கொடுக்கும்படி மன்ருடி வேண்டிஞர்; அவர், "விடியட்டும் உன் குழந்தை முழுநலத்துடனேயே இருக்கிருன்" என்று எவ்வளவோ சொல்லியும் பூசாரி கேட்காமையிஞல் குழந்தையைக் கொன்று வெளியில் எறிந்து விட்டார்; அதனுல் அப் பூசாரி வெகுண்டு மறுநாள் வீரபத்திரர் வேகத்தைக் குறைக்க இச் சிலையில் இச்சிறு ஊறு விளைத்தார். அது முதல் இச் சிலையின் வேகம் குறைந்து விட்டதாம்.

வீரபத்திரருடைய வேலைக்காரன் தூணின் கீழ்ப்புறம் நிற்கிருன். மேல்புறம் படைத் தலைவன் காணப்பெறுகிருன்; படைத் தலைவன் உருவம் மிக அருமையானது. அவன் வலது மீசையை முறுக்கும் இடது கையும், இறக்கிய கேராவும், முடித்த பெரிய கொண்டையும், வலக்கையில் வாளுடன் வலது புறம் சிறிது சரிந்து நிற்றலால் இடது புறம் விலா எலும்புகள் ஆறு எண்ணும் தன்மையில் தெளிவாக வகிர்ந்து காணும் காட்சியும் நுண்கலையின் நுட்பமே.

வீரபத்திரருக்கு நேர் எதிரே வடபுறம் இருப்பது இடக்கையிற் கொம்பும், வலக்கையிற் கத்தியும் கொண்டு மீசையுடனும் கொண்டையுடனும் உள்ள ஆதித் திராவிடன் உருவம்; அத்தூணின் கீழ்ப்புறம் முடித்த கொண்டையுடனும் வலக்கையிற் கிளியுடனும் அவன் மனைவி காணப்படுகிருள். இப்பெண்ணின் மூக்கில் இடது பக்கம் மூக்குத்தி அணிய ஓட்டையிட்டிருப்பது பாராட்டிற்குரியது. இவ்வடக்கு வரிசையில் பெண்ணுருவங்களே முதன்மையாக அமைந்துள. அவைகளின் மூக்கு

களிலும், இடது புறம் ஓட்டையிட்டிருப்பதும் காண்கிறோம். வடக்கு வரிசையில் நடுநாயகமாக இருப்பது இரதியின் திருவுருவம். அவள் இடக்கையிற் கண்ணாடியும் வலக்கையிற் பூச்செண்டும்கொண்டு அன்னத்தின் மேல் இருக்கிறாள். தூணின் கீழ்புறம் சேடி நடனமாடுகிறாள்; இரதியின் கழுத்தில் சுத்துருவில்பிணைத்த மூன்று உருவமாம் தாலி தொங்குகிறது. அவள் கணவன் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணின் தீயினால் எரிந்து அழிந்து போனாலும் அவளுடைய வேண்டுதலுக்கிரங்கிய சிவபெருமான் அவளுக்கு மட்டும் தோன்றுவான், கணவனாயிருப்பான் என்று வரந்தந்தபடியால் தாலியுடன் காணப்படுகிறாள். அங்கமில்லாதவனாகி விட்டாலும் மன்மதன் அவ்வரத்தின் பயனாக அவள் கண்ணுக்கு மட்டும் தோன்றுவானன்றோ ! அதனால் மன்மதனுருவம் அவளுக்கெதிரே தெற்கு வரிசையில் நடுநாயகமாக அமைக்கப்பெற்றுள்ளது.

கணுக்கள் தோன்றும்படி வகுக்கப்பெற்றுள்ள கரும்பு வில் இடது கையிலும், பூ அம்பு வலது கையிலுமாக வலது புறம் தோழி குடை பிடிக்க இடது புறம் இரதி வலக்கையில் தாமரைப் பூச்செண்டுடன் அவனைக் கண்டு மகிழ்ந்து நிற்கப் பேரழகுடன் விளங்கும் மன்மதனுடைய திருவுருவம் பார்க்கப் பார்க்கத் திகட்டாப் பெருமையுடையது. தென்புறம் மேற்கோரம் நிற்கும் உருவம் வீமனுடையது. வீமனைப் புருடா மிருகம் பின் தொடர்ந்து வந்து இடக்கையால் அவன் இடுப்பைப் பிடித்துக்கொண்டு ஓங்கி மடிந்திருக்கும் வலக்கையுடன் காணப்படுகிறது. வீமன் தடியுடன் இடது கால் தன் நாட்டிலும் வலது கால் பின் தங்கப் புருடா மிருகத்தின் காட்டெல்லையிலுமாக ஓடிவரும் கோலத்தில் அச்சம் விளங்கும் முகத்துடன் இருக்கிறான். கீழ்புறம் தூணின் மேலே பெண் ஒருத்தி பால் கறந்து கிண்ணத்திற் கொடுக்கிறாள். "இராச சூய யாக சமயத்தில் இங்ஙனமாக வீமனைப் பின் தொடர்ந்து பிடித்துக்கொண்ட புருடா மிருகம் (இடுப்புக்கு மேல் மனித உரு, இடுப்புக்குக் கீழ் வாலுடன் விலங்கு) வீமனைத் தனக்கு உணவாகக் கொடுக்கவேண்டுமென்று கேட்க, வீமனுடைய தமையனை தருமன் அது பிடிக்கும்போது ஒரு காலே தன் நாட்டில் இருந்தபடியால் பாதியுடல் அம்மிருகத்துக்கு உரியது என்று தீர்ப்புக் கூறின போது அவனது நேர்மை கண்டு இரங்கி மகிழ்ந்து வேண்டிய துணை புரிந்தது அம்மிருகம்" என்பது கேள்வி வரலாறு. பாரதத்தில் இவ்வரலாறு காணப்பெறவில்லை. இவ்வரலாற்றுக்கேற்பத் தரும புத்திரன் திருவுரு மடித்த வல்ல வாட்டுடன் இரட்டை நாடியும்

பொறுமை ததும்பும் திரிபுண்டரமணிந்த அழகிய முகமும், நீண்ட கைகளும், இடக்கையில் இலங்கும் மோதிரமும் கொண்டு அத் தூணின் மேல்புறம் காணப்பெறுகின்றது.

வீமனுக்கெதிரே வடபுறம் மேலோரம் இருப்பது சுத்துருவும் தாலியும் அணிந்த சிங்களப் பெண்ணொருத்தியின் அருமையான சிலை. குளிக்கப்போகும் போது அப்பெண் தவம் செய்திருந்த பேரழகுடைய முனிவர் ஒருவரைக் கண்டு காதல் கொள்கிறாள். அதனையறிந்த முனிவர் இடக்கையிற் கிளியும் வலக்கையில் தடியும் கொண்டு மேலெல்லாம் சொறி படர்ந்த அருவருக்கத்தக்க உருவுடன் அவள் முன் தோன்றுகிறார். இவ்விகார உரு தூணின் மேல்புறம் உள்ளது. இதனைப் பல குறிகளால் அறிந்த அப்பெண் "நீர் தாம் அவர்" என்று ஆட்காட்டி விரலால் காட்டுவது போல இருப்பது பாராட்டிற்குரியது. தூணின் கீழ் புறம் வாத்தியத்தோடு ஒரு பெண் நிற்கிறாள். திருமண மண்டபத்தின் மேற்கோரம் காமக் கிறுக்கன் கோலமும், அரங்க மண்டபத்தின் மேற்கோரம் காமம் கடிந்த முனிவன் கோலமும் அமைந்திருப்பது போற்றற்குரியது.

வடபுறம் கிழக்கிலிருந்து இரண்டாவது தூணிலுள்ள யாளியின் உள்வாய் வளைவுளப்புடன் ஆக்கப்பெற்றிருக்கிறது. தென்புறம் மேற்குக் கடைசித் தூணின் உச்சியில் மேல்புறம் வடக்கிலிருந்து பார்த்தால் கொம்பானையாகவும் தெற்கிலிருந்து பார்த்தால் கோவிற்காளையாகவும் தோன்றுமாறு ஓர் உரு இருக்கிறது. இதில் யானைக்கண்ணே காளையின் கொம்பு, யானை மண்டையே மாட்டின் வாய், யானை உதடுதான் மாட்டுக்காது, துதிக்கை நுனி திமில் ஆக உள்ளன. இவ்வரிய உருவின் கீழ் "புள்ளின் வாய் கீண்டானை" என்ற திருவிளையாடலை விளக்கும் உருவம் அமைந்துள்ளது. இவை போலும் அரிய காட்சிகளை யாளித் தூண்களில் கண்டு பாராட்டிக் கண் படைத்த பயனைப் பெறலாம்!

**திருவிழா.**—புரட்டாசி மாதம் திருவோணத்தில் கொடியேறிப் பதினொரு நாள் திருவிழா நடைபெறும். பத்தாம் நாள் திருத்தேர். நவராத்திரி முதலிய மாத விழாக்களெல்லாம் ஒழுங்காக நடைபெறுகின்றன.

## ௩. சீவைகுண்டம், ௪. திருச்செந்தூர் வட்டங்கள்

இவ்விரண்டு வட்டங்களிலும் உள்ள பெருமாள் திருக்கோவில்களை ஆராயும் போது சீவைகுண்டத்தில் மூன்றும் திருச்செந்தூரில் மூன்றும் ஆக ஆறு கோவில்களே ஆண்டுக்கு ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய் வருவன. அவை தம்முள் சீவைகுண்ட வட்டத்தில் தூத்துக்குடி வைகுண்டபதி கோவில் திருச்செந்தூர் வட்டத்தில் ஆழ்வார் திருநகரி எம்பெருமானுர் கோவில் ஆகிய இரண்டு திருக்கோவில்களைத் தவிர ஏனைய நான்கும் நவ திருப்பதிகளுள் (நவ-ஒன்பது) அடங்கும். அவை நான்காவன.—சீவைகுண்டம்,பெருங்குளம், ஆழ்வார் திருநகரி ஆதிநாதர், தென் திருப்பேரைக் கோவில்கள் ; ஏனைய ஐந்து (1) நத்தம் என்னும் வரகுண மங்கை, (2) திருப்புளிங்குடி, (3) இரட்டைத் திருப்பதி என்னும் துலைவில்லி மங்கலத்தில் தேவர்பிரான் கோவிலும், (4) அரவிந்த லோசனர் கோவிலும் ஆகச் சீவைகுண்டம் வட்டத்தில் நான்கு கோவில்களும், திருச்செந்தூர் வட்டத்தில் (5) திருக்கோளூர் வைத்த மாநிதிப் பெருமான் கோவிலும் ஆகும். ஆதலின் இவ்வைந்து கோவில்களிலும் சென்று வழிபடுவது இன்றியமையாததாகின்றது. இத் தொகுப்பிற் சேராத இரண்டு திருக்கோவில்களையும் ஈற்றிற் காணுவோம்.

### ஒன்பது திருப்பதிகள்.

### சீவைகுண்டம் கள்ளப்பிரான்

ஏறத்தாழ நூற்றுப்பத்தடி உயரமுள்ள பெரிய கோபுரத்துடன் கள்ளப்பிரான் திருக்கோயில் திகழ்கின்றது.

தங்க முடியோடு கூடிய பேரழகினதாகிய இந்திர விமானத்தின் கீழே பாற்பாண்டியன் என்று புகழப் பெறும் வைகுந்தநாதன் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி இருக்கிறுர். இவருடைய திருமேனி சாளக்கிராமத்தால் ஆனது. இவருக்கு நாடோறும் காலையில் பால் திருமஞ்சனம் நடைபெறுவதனுலேயே பெருமாள் பாற்பாண்டியன் என்று சிறப்புப்பெயர் பெற்றுர். "வைகுந்தத்துள் நின்று" என்பது நம்மாழ்வார் திருவாக்கு.

சோமுகாசுரன் என்பவன் நான்முகனிடத்திலிருந்து நான்கு மறைகளையும் பிடுங்கிச் சென்று விட்டான். அதனை மீண்டும் பெறும் பொருட்டு நான்முகன் இங்கே வந்து தவம் புரிந்து நின்றுன் ;



கள்ளப்பிரான் திருக்கோயில், சீவைகுண்டம்.

அவனுடைய தவத்திற்கு இரங்கிய வைகுந்தநாதன் தனியே கருடன் மீதேறி வந்து நான்முகனுக்குக் காட்சியருளிச் சோமுக னிடம் மறைகளைப் பெற்றுத் தந்தான். நான்முகனைக் காக்க வந்த விரைவில் வைகுந்த நாதன் தேவியரை விடுத்துத் தன்னந்தனியே வந்தருளியதுதான் கருவறையில் வைகுந்த நாதனுடன் சீதேவி பூதேவிகளில் ஒருவரேனும் இல்லாமல் தன்னந்தனியே இருப்ப தற்குக்காரணம்.

அந்நிலையில் நான்முகன் பூசித்த பெருமான் மண்ணுக்குள் மறைந்திருந்தான் ; அவனுடைய உச்சி மேலே ஒரு துவாரம் மேலே தரை மட்டம் வரை இருந்தது. அத்துவாரத்தில் நாடோறும் பசுக்கள் பால் சுரந்து திருப்பாற்கடல் நாதனை முழுக்காட்டி வந்தன. ஒரு நாள் பசுக்கள் பால் சுரப்பதைக் கண்ட மேய்ப்பாளன் ஊராருக்கும் அரசனுக்கும் அந் நிகழ்ச்சியை அறிவித்தான். உடனே மன்னவன் அங்கே வந்து பார்த்துத் துவாரத்தைக் கிளரிக் கீழே இருக்கும் பெருமானைக் கண்டு திருக்கோவில் எடுத்து நாடோறும் பால் முழுக் காட்டும் திட்டம் செய்து உய்ந்தான். இவ் வரலாற்றினாலேதான் வைகுந்தநாதன் இன்றும் பாற்பாண்டியன் என்று புகழப்பெறு கின்றான். இவ்வூர் திருவைகுந்தம் என்றே திவ்வியப்பிரபந்தத்திற் கூறப்பெற்றுள்ளது.

கருவறை நெடுந்தூரம் உள்ளே தள்ளியிருக்கிறது ; இருந்தாலும் ஒவ்வொராண்டிலும் சித்திரை மாதம் ஆறும் நாளும், ஐப்பசி மாதம் ஆறும் நாளும் இளஞ்சூரியனுடைய பேரொளி வைகுந்த நாதனுடைய திரு முகத்தில் வீசித் திகழ்கின்றது. இதனைப் போலவே சங்கர நயினார் கோவில் போன்ற சில கோவில்களிலே யும் ஆண்டுக்கு இரண்டு முறை சூரியனுடைய ஒளி காலையில் கரு வறையில் நுழைந்து பெருமான் மீது படுகின்றது. அக்காலம் சூரியபூசை என்று சிறப்புப்பூசனை பெருமானுக்கு நடைபெறும். இங் ஙனமாகிய திருக்கோவில் அமைப்பது அருமையினும் அருமையே.

**கள்ளப்பிரான்** :—அடியார் உள்ளங்கவர் கள்ளப்பிரானுக்கு அப் பெயர் வந்தமைக்கு ஒரு புராணக்கதையும் கூறப் பெறுகிறது. அது வருமாறு:—

திருவைகுந்தத்தை அடுத்துள்ள காட்டில் காலதூடகன் என்ற கள்வர்தலைவன் இருந்தான். அவன் சோமசன்மன் என்ற முனி வனுடைய மகன் ; இரக்கமுடையவன் ; பேரழகு படைத்தவன்.

முன்னை வினைப்பயனுகத் திருடும் தொழிலை மேற்கொண்டு பல வீரர்களைத் துணையாகக் கூட்டிக் கொண்டு வாழ்ந்து வந்தான். அவனுக்கு நல்வினைத் தொடர்பு இருந்தமையால் நல்லவர்கள் வீட்டிற் சென்று திருடுவதில்லை. அறம் செய்யாத தீயவரிடமே சென்று திருடிவந்தான். அவன் திருடப் போகும் போதெல்லாம் திருவைகுந்தப் பெருமான் திருமுன்பு தோழர்களோடு வந்து நின்று கீழே பல முறை விழுந்து பணிந்து கைகூப்பி, "பெருமானே, உமது திருவருளால் அடியேனுக்குத் திருட்டுத் தொழில் வாய்த்தது. அடியேனுக்குக் கிடைக்கும் கொள்ளைப் பொருள்களிற் பாதியை உமக்கே தந்து விடுவேன் ; மீதிப் பாதியையும் எங்கள் வயிற்றுக்குத் தருவது போக மீதியுள்ள பொருள்களையெல்லாம் ஏழை மக்களுக்குத் தந்து அறஞ் செய்வேன். தொல்லையில்லாது திருட்டுக் கிடைக்கும்படி அருள்புரியும்" என்று வேண்டிக் கண்ணீர்ததும்ப விடை பெற்றுச் செல்லுவான். தீயோர் பலர் அவனுல் துன்புறுத்தப்பட்டுப் பொருள் இழந்தனர். அவருள்ளும் நல்லன செய்வோம் என்று திருந்தியவர் களுக்கு அவர்களுடைய பொருளை அவர்களிடமே காலதூடகன் திரும்பத் தந்து வந்தான். ஏழை மக்கள் யாவரும் அவனைத் தெய்வத் திருவருளால் தோன்றிய வள்ளலாகவே வாழ்த்தி வாழ்வு பெற்று வந்தார்கள்.

அவ்வூர் அரசன் நாடோறும் திருட்டுச் செய்தியைக் கேட்டுத் திருடனைத் தேடுவானுயினுன். அரசனுக்குத் திருடனுடைய நல்ல செயல்களும் தெரிவிக்கப்பெற்றன. திருடனைத்தேடிக்காணு வது அரசனுடைய கடமையல்லவா? திருவைகுந்தநாதன் திரு வருள் முன்நின்று பாது காத்து வந்தமையினுல் காலதூடகனை எவராலும் கண்டு பிடிக்க முடியவில்லை. திருவைகுந்த நாதனுக் குத் திருட்டுப் பொருளில் செம்பாகம் கிடைத்து வந்தது.

காலதூடகன் ஒருநாள் அரண்மனையிலேயே சென்று திருடத் துணிந்தான். "அரசன் ஏழை மக்களைப் பல வகையிலும் ஆதரித்துக் காக்கும் கடமையுடையவன் படித்து வல்ல புலவனுக இருந்தாலும் அரசன் அறம் பல புரியான். அவனுடைய பெரும் பொருளைக் கவர்ந்து ஆண்டவனுக்குப் பாதியைப் பகிர்ந்து கொடுத்துப் பாதியை ஏழைகளுக்கு உதவுவோம்" என்று ஆராய்ந்து முடிவு செய்த காலதூடகன் அரண்மனையினுள்ளே சென்று திருடினுன். திரு வைகுந்த நாதன் திருவருளால் அன்று காவலர் விழித்துக்கொண்டு

திருடர்களைத் துரத்திப் பிடித்து விட்டார்கள். ஆனால் காலதூடகன் தப்பி ஓடி வந்து திருவைகுந்தநாதன் திருவடிகளிலே அடைக்கலம் புகுந்து மெய்ம் மறந்து கிடந்தான்.

காவலர், அகப்பட்ட திருடர்களைத் துன்புறுத்தினார்கள். துன்பம் பொறுக்க முடியாமல் திருடர்கள் தம் தலைவனைக் காட்டிக் கொடுக்க இசைந்தார்கள். காவலர் கள்வர்களை நடத்திக்கொண்டு வந்தார்கள். அப்போது அடியார்களைக் காப்பதில் ஒப்புயர்வற்ற ஆண்டவன் காலதூடகனாகத் திருமேனி தாங்கி அவர்கள் முன் பெருமிதத்துடன் நடந்து வந்தான்; திருட்டுத் தோழர்கள் அவனைக் காவலருக்குக் காட்டிக் கொடுத்தார்கள். காவலர் ஆண்டவனை நெருங்கினார்கள். அப்போது பெருமான், "காவலரே! நான்தான் காலதூடகன். உங்களுக்குத் தொல்லை கொடுக்கக் கூடாதென்று நானே உங்களைத் தேடி வலிய வந்து விட்டேன். ஒருவரும் என்னைத் தொடாதீர்கள்; வாருங்கள்; அரசர்பெருமானை அடைவோம்" என்று அன்புடன் கூறி அவர்களுடன் அரசனுடைய பேரவைக் களத்தை அடைந்தனன்.

அரசன் கள்வர் தலைவனாகிய காலதூடகன் போலத் திருமேனி தாங்கித் தன் முன் வரும் ஆண்டவனைக் கண்ணாரக் கண்டவுடன் தன்னை அறியாமலே மெய்ம் மறந்து அவனுடைய பேரழகில் ஈடுபட்டு எழுந்து முன் வந்து வரவேற்றான். பின் உலக அறிவு வந்து மயக்கிட அவனை நோக்கி, அரசன், "நல்ல கட்டழகனாக இருக்கிறாய், உனக்கு என் இந்தத் திருட்டுத் தொழில்?" என்று வினவினான்.

ஆண்டவன் மிக்க அருள் சுரந்து அரசனை நோக்கி, "அன்பனே! தருமம் செய்யப் பெறாத பொருள் தீயால் அழியும், அரசர் கைப் பற்றுவர், திருடர் கவர்வர். இதனை அறிவிக்கவே காலதூடகனைத் தோற்றுவித்தோம். உனக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தவே காலதூடகனைப்போல உன் முன் வந்திருக்கிறோம்" என்று கூறியருளினான். அரசனுடைய அறிவுக்கண் திறந்தது; கீழே விழுந்து பணிந்து எழுந்து நின்று கைகூப்பி அரசன், "கள்ளப் பிரானே! காக்குங்கடவுளே! திருவருள் வழியே நிற்பேன்" என்று கும்பிட்டுக் கூத்தாடிக் கள்ளப்பிரான் பேரழகில் ஈடுபட்டுக் கன்னத்தைத் தொட்டுக் கொஞ்சி நின்றான். அரசனுடைய விரல் பதிவினை இன்றும்

கள்ளப்பிரான் கன்னத்திலே காணலாம். இது சிற்பியின் கொஞ்சுதலால் விளைந்தது என்றும் அறிஞர் கூறுகின்றனர். இதுவே திருவைகுந்த நாதன் கள்ளப்பிரான் ஆன வரலாறு. காலதூடகன் சேர்த்து வைத்திருந்த பெரும் பொருளையும் தன் கைப்பொருளையும் கொண்டு அரசன் திருவைகுந்தப் பிரானும் கள்ளப்பிரானுக்குத் திருக்கோவில் கட்டிப் பெருவிழாக்களும் நடத்தித் திருவருள் பெற்றான்.

அர்த்த மண்டபத்திலே தங்கச் சப்பரத்திலே திருமகளும் நிலமகளும் இருபுறமும் இருக்கக் கள்ளப்பிரான் கையிற் கதையுடன் எழுந்தருளி நிற்கின்றார். "காடுடைய சுடலைப்பொடி பூசி என் உள்ளம் கவர் கள்வன்" என்றார் சிவபெருமானைத் திருஞான சம்பந்தர். "கரிய மேனி மிசை வெளிய நீறு சிறிதே யணிந்து கண் குளிரக்காணும் அடியார்களுடைய உள்ளத்தைக் கவரும் கள்வனே கள்ளப்பிரான்" என்று கூறுவது மிகையாகாது. விலை மதிக்க முடியாத தங்கக் கவசத்துடன் விளங்கும் பெருமான் திருமேனிப் பேரழகில் ஈடுபடாதார் யாவர்? அவருடைய திருமேனியைச் சமைத்த சிற்பி திருமேனி அழகினால் நெஞ்சம் கொள்ளை கொள்ளப்பட்டு மெய்ம்மறந்து பெருமானுடைய கன்னத்தினைக் கையினால் தொட்டுக் கொஞ்சினான் என்பது வரலாறு. இங்ஙனமே கருவேலங் குளத்திலே பொன்னம்பல வாணனுடைய திருவுருவைச்சமைத்த சிற்பியும் செய்து மகிழ்ந்தான் என்று மேலே கூறினோம். சிற்பி கன்னத்தில் தொட்ட இடம் சிறிது பதிந்து திருவுருவின் பேரழகினை மேலும் வளர்த்துத் திகழ்வது என்றும் கண்கூடு நம் கள்ளப்பிரான் கன்னத்திலும் கருவேலங்குளக் கூத்தப்பிரான் கன்னத்திலும் அப் பதிவு இன்றும் காணப்பெறுகின்றது.

மாமண்டபத்தின் மேற்கோரத்தில் அர்த்த மண்டபத்திருவாயில் இருக்கிறது; அதன் வலது புறம் சண்டனும் இடது புறம் பிரசண்டனும் ஆகிய வாயில் காவலர் நிற்கின்றனர். இவர்களில் சண்டன் என்பவனே இரணியனாகவும், இராவணனாகவும், சிசுபாலனாகவும் தோன்றினவன்; பிரசண்டனே இரணியாட்சனாகவும், கும்பகர்ணனாகவும், தந்தவக்கிரனாகவும் தோன்றி முறையே இரணியன் தம்பியாகவும், இராவணன் தம்பியாகவும் சிசுபாலன் துணைவனாகவும் இருந்து துணை புரிந்தவன். இது துருவாச முனிவர் சாபத்தால் விளைந்த வினை.

மாமண்டபத்தின் மேற்கோரத்தில் தென் மேற்கே உள்ள வாயில் வழியே திரு உள் நாழிக்குச் சென்று கருவறையினையும் அர்த்த மண்டபத்தையும் சுற்றி வரலாம். திரு உள் நாழி என்பது உள்ளே உள்ள சுற்றுத்தான். இத் திரு உள் நாழி மண்டபத்தின் சுவர் களிலே நூற்றெட்டுத் திருப்பதிகளைப் பற்றிய சித்திரங்களும் உயரே பாகவத விளக்கச் சித்திரங்களும் நல்ல நிறங்களிலே தீட்டப் பெற்றிருக்கின்றன. இவ்வுட்சுற்று வந்து வடமேற்குப் பகுதியிலுள்ள வாயில் வழியே பழையபடி மாமண்டபத் திற்குள் வந்தால் சேனை முதல்வர் திரு முன்பு சேரலாம். அவரை அடுத்துக் கிழக்கே நான்கு அறைகள் உள. வட கிழக்கில் தங்கத் தோளுக் கினியான் அறையும், தென் மேற்கே பட்டு அறையும், தென் கிழக்கே இரண்டு கருவூல அறைகளும் இருக்கின்றன.

இம் மண்டபம் சிங்கம் சுமந்த வாழைப் பூப் போதிகைகளையுடைய அழகான மண்டபம். இதன் வாயிற் கதவில் மணிகள் பல தொங்கி ஒலிக்கின்றன. அதனால் அக்கதவு "மணிவாயிற் கதவு" என்று பெயர் பெறும். அதனால் இம் மாமண்டபத்தை "மணி வாயில் மண்டபம்" என்றும் அழைக்கின்றார்கள்.

திருமொழி மண்டபத்தின் மேற் கோரம் திருக்கோலக் குறடு இருக்கிறது. இது பேரழகினையும் பெருஞ் சிறபச் சிறப்பினையும் உடையது; வாழைப் பூக் கால்கள் நான்கினால் ஆகியது. ஒவ் வொரு காலின் சிறப்பையும் கண்டு மகிழ்வோம். தென் கிழக்குக் காலின் உச்சியில் தெற்கே கிளியின் வால் போன்ற சிறகினைப் பிடித்துக்கொண்டு குரங்கு இருக்கிறது. மேற்கிலும், கிழக்கிலும் கிளி பூவைக் கொத்துகிறது. தென் மேற்குத் தூணின் உச்சியில் வடபுறம், தாய்க் கிளி தன் குஞ்சினுக்கு உணவூட்டுவதும், மேற்கே கிளியும் குரங்கும் இருப்பதும், கிழக்கிலும், தெற்கிலும், கிளி இருப்பதும் கண்டு மகிழும் பெருமையின. வடமேற்குக் காலில் தென் புறம் வாழைப்பூவை அணில் உண்ணும் காட்சியும் வடபுறமும் மேல்புறமும் கிளி உண்ணும் காட்சியும், கீழ்புறம் வெறும் பூ மட்டும் இருப்பதும் இம் மண்டபத்தின் சிறப்பை மேலும் வளர்க் கின்றன. வடகிழக்குக் காலின் உச்சியில் கிழக்கே கிளியும், குரங்கும், தெற்கிலும் மேற்கிலும் கிளி பூவை உண்ணுவதும், வடபுறம் கிளிமேல் அணில் இருப்பதும் மிக்குயர்ந்த சிறபச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாவன.

வடக்குச் சுவரின் நடுவே பரமபத வாயில் இருக்கிறது. இதன் கீழ்புறம் மண்டபத்தின் மேல் ஒரு கல்லினால் பல உருவங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. பூனை ஒன்று கோழியையும், வெருகு அதன் கணவனாகிய சேவலையும் பற்றிக்கொள்ள அவைகளின் அருகே மகிழ்ந்து வந்த இரண்டு கோழிக் குஞ்சுகள் கலங்கித் தவிக்கும் நிலையில் அமைந்துள்ளன. குரங்காட்டியொருவன் குழல் வாசித்துப் பாம்பை ஆட்டுகிறான்; அவனுடைய குரங்கு அது கண்டு அஞ்சி நடுங்கி அவனுக்குப் பின்னால் நிற்கின்றது. நடுவில் குரங்கு ஒன்று கிழக்கே பார்த்தும், மற்றொன்று மேற்கே பார்த்தும் இருக்க இவைகளுக்கு மேலேயிருந்து ஒரு குரங்கு குதிக்கிறது. இம் மூன்று குரங்குகளுக்கும் முகம் ஒன்றேதான். வடகிழக்கே மணவாளமாமுனி மண்டபத்தின் மேற்குச் சுவரின் வெளிப்புறம் தெற்கோரம் குறவனும் குறத்தியும் ஆடுவதும் குறத்தியின் சேலையைப் பிடித்துக் குறவன் இழுப்பதும் ஆகிய காட்சி கல்லினால் காட்டப் பெற்றிருப்பது மிக மிகப் பாராட்டுதற்கு உரியது.

திருவிழா நாயகர் இலட்சுமி நரசிங்கர். இதனையடுத்து நிலைக் கண்ணாடி வடக்கே பார்க்க வைக்கப்பெற்றிருக்கிறது. கண்ணாடிக்கு மேலே உயர அரச குமாரியை வேடன் தூக்கிப் போவதும் அவனை விடாது முன்னும் பின்னும் காவலர் வழி மறிப்பதும் ஆகிய சிற்பச் சிறப்பை நாம் காணலாம்.

வடக்கு வாயிலாகிய பரம பத வாயிலில் மூன்று தட்டுக்களோடு கூடிய சிறு கோபுரம் இருக்கிறது. இங்கே நரசிங்க மூர்த்தி இரணியனுடைய வயிற்றைக் கிழிப்பது போலவும், குடலை மாலை போடுவது போலவும் ஆகிய பலப்பல சிற்பச் சிறப்புகளை நாம் காணலாம்.

கிழக்கு வெளிச் சுற்றில் வடபுறம் தெற்கே பார்க்க இருப்பது திருவேங்கடமுடையான் மண்டபம். இதிலுள்ள சிற்பச் சிறப்புகள் நேரிற் கண்டு மகிழும் பெருமை படைத்தன. வரிசைக்கு சிங்கப் போதிகையோடு கூடிய ஒன்பது யாளித் தூண்கள் இருக்கின்றன. யானை மேல் யாளியும், யானையின் மேல் சிங்கமும், அதன்மேல் யாளியும் உள்ள தூண்கள் அவை. மேல்புறம் தெற்கிருந்து மூன்றாவது தூணில் யாளியின் வாயில் அனுமார் நிற்கிறார்.

இருபுறமும் மூன்று வரிசையுடைய பெரிய மண்டபம் இது ஒவ்வொரு தூணிலும் அனுமார் பலப்பல உருவத்தில் உள்ளதோடு ஆழ்வாராதியர் திருவுருவங்களும் உள்ளன. சிங்கப்போதிகை

வரிசையில் மேலே வரிசையாக நூற்றெட்டுத் திருப்பதிச் சித்திரங்கள் கல்லினுல் அமைந்து திகழ்கின்றன. மண்டபத்தின் உள்ளே தெற்கே பார்க்கத் திருவேங்கடம் உடையான் எழுந்தருளியிருக்கின்ருன். அக்கோவிலின் முகப்பில் உயர மேற்கோரம் எம்மிடர் கடிவார் விசயா சனர் வரகுண மங்கையிலும் நடுவே காசினி வேந்தர் திருப்புளிங் குடியிலும், கீழோரம் திருவைகுந்தநாதன் வைகுந்தத்திலும், எழுந் தருளியிருக்கும் காட்சியினைக் காணலாம்.

மண்டபத்தின் முகப்பில் தூண்களில் தெற்கே பார்க்க ஒன்ப தடியில் பெரிய திருவுருவங்கள் இருக்கின்றன. மேற்குப் பகுதியில் ஒரு தூணில் அகோர வீரபத்திரர் திருவுருவம் உள்ளது. அதன் கீழ்புறம் முன்னடித் தூணில் இராமபிரான் சீதாப்பிராட்டியாரோடு சுக்கிரீவனுக்கு அருள் பாலிக்கும் காட்சியும், கீழ்புறம் இலட்சுமணப் பெருமாள் அனுமாருக்கும் அங்கதனுக்கும் அருள்புரி காட்சியும் அமைந்து நிற்கும் கோலம் மிக மிக வியக்கும் தன்மையுடையன. இலட்சுமணப் பெருமாள் இருக்கும் தூணுக்கு அடுத்த கிழக்குத் தூணில் வேடுவன் சிலை அமைந்து திகழ்கின்றது. மண்டபத்தின் குறட்டில் நாற்புறமும் விளிம்பில் பாராட்டிற்குரிய கல்லுருவங்கள் கண்களுக்கு விருந்தாகச் சமைந்துள்ளன.

வெளிச்சுற்றைச்சூழ வானளாவிய பெரிய திருமதில்கள் இருக்கின்றன. மேற்குத் திருமதிலை ஒட்டிப் பொருநைப் பேராறு ஓடுகிறது. திருக் கோவிலின் தலைவாயிலிலே நூற்றுப்பத்தடி உயர முள்ள ஒன்பது தட்டுக்களுடன் கூடிய பெரிய கோபுரம் திகழ் கின்றது. கோபுரத்தின் உச்சியில் ஒன்பது குடங்கள் காணப்பெறு கின்றன.

**சிற்பச் சிறப்புகள்.**—கள்ளப்பிரான் திருவுருவும் கண்ணைக் கவரும் பேரழகுடையது. பெரிய அரச கோபுரம் ஒன்பது தட்டுக்களுடன் இருக்கிறது. கருவறையின் மேல் உள்ள இந்திர விமானம் தங்கக் கலசத்தோடு பற்பல சித்திரங்களுடன் விளங்குகின்றது. இரு தாயார் சன்னிதிகளிலும் திருவேங்கடமுடையான் சன்னிதியிலும் நல்ல விமானங்கள் உள்ளன. நடுக் குடைவருவாயிலிலும், பரமபத வாயி லிலும் சிறு கோபுரங்கள் பலப்பல அரிய வேலைப்பாடுகளுடன் விளங்கு கின்றன. இந்திர விமானம் நாற்பத்திரண்டடி உயரம்; பதினைந்தடிக்கு மேல் உள்ள தட்டட்டியின் மேல் இருபத்து மூன்றடிச் சவுக்கத்தில்

உள்ளது. கோவிலில்,உள்ள சிற்பச் சிறப்புக்களெல்லாம் ஆங்காங்கே விவரித்து கூறியிருக்கிறோம். திருக்கோபுரத்திற் பலப்பல அரிய சிற்பச் சிறப்புக்கள் உள.

கோபுரத்தின் தென் பகுதியில் ஒரு குதிரையும், யானையும் தெரிகின்றன. அவைகளைக் கூர்ந்து நோக்கினால் குதிரையிலே ஐந்து பெண்களைப் பார்க்கிறோம்; யானையில் எழு பெண்களைப் பார்க்கிறோம். ஐந்து பெண்கள் சேர்ந்து குதிரை உருவில் இருப்பதும், அக் குதிரை மேலே ஒரு மன்னன் நிற்பதும், எழு பெண்கள் சேர்ந்து யானை உருவில் இருப்பதும், யானையின் மேல் ஒரு பெண் அஞ்சாது நிற்பதும் சிற்பக் கலையின் உச்சியிற் பழுத்த பழங்கள், நம் கள்ளப்பிரான் கோவிலிற் காணப்படும் சிற்பச் சிறப்புக்களை எழுதினால் அது ஒரு பெரிய நூலாக விரியும்.

சித்திரை மாதம் பெருந் திருவிழா நடைபெறும்; இதில் பத்தாம் திருநாளன்று அசுபதி காலை ஆறு நாழிகை வரை இருத்தல் வேண்டும்.

## உ. சீவைகுண்டம், நத்தம்—விசயர்சனப் பெருமாள்

சீவைகுண்ட ஊர் பெருகி வளர்ந்தது; வடபுறம் வீடு கட்டுவதற்கென ஒதுக்கியிருந்த நத்தத்திலும் வீடுகளாகி அப்பகுதி நத்தம் என்ற பெயரையும் பெற்றது. இங்கே எழுந்தது ஒரு பெருமாள் கோவில். அதற்கு "வரகுணமங்கை" என்பது பெயராயிற்று. வரகுணவல்லித் தாயாரோடு இங்கே விசயாசனப் பெருமாள் எழுந்தருளியிருக்கின்றார்.

"வரகுணமங்கை இருந்து" என்பது நம்மாழ்வார் திருவாக்கு. இங்கே பெருமான் இருந்த திருக்கோலம் உடையவர். இங்குள்ள விமானத்தின் பெயர் "விசயகோடி விமானம்."

இவ்வூரிலே உரோமச முனிவரும் அக்கினி பகவானும் மெய்யன்போடு வழிபட்டு நின்றார்கள். அவர்களுக்கு விசயாசனப் பெருமான் காட்சி கொடுத்து அவர்கள் வேண்டிய வரங்களை அருளினார்.

## ௩. திருப்புளிங்குடி—காய்சின வேந்தப் பெருமாள்

"புளிங்குடிக் கிடந்து" என்பது நம்மாழ்வார் திருவாக்கு. கிழக்கே திருமுகமாக ஆதிசேடன்மேல் பள்ளி கொண்டருள்கின்றான் பெருமான். பெருமான் எழுந்தருளியிருக்கும் கருவறைமேல் இருப்பது வேதசார விமானம்.

திருநகரியிலுள்ள புளிய மரத்தை எண்ணி இவ்வூருக்குத் திருப்புளிங்குடி எனப் பெயர் அமைத்தனர் போலும்! சங்கரநயினார் கோவிலுக்கு மேற்கே இருப்பது புளியங்குடி; அது புளியங்காட்டில் எழுந்த ஊர். அதுபோல இதுவும் புளியங்காட்டிடைத் தோன்றிய நகரமாக இருப்பினும் அமையும்.

"மாசினமாலி மாலிமான் என்று அங்கு அவர் படக் கனன்று முன்நின்ற காய்சினவேந்தே" என்ற திருப்பாசுரத்தால் காய்சின வேந்தர் என்ற பெயர் இவ்வூர்ப் பெருமானுக்கு வந்த காரணம் விளங்குகின்றது. இப் பெருமான் "பூமிபாலன்" என்றும் பெயர் பெறுவான். அதற்குக் காரணம் பின்வருவது :—

பெருமான் கமலா தேவியுடன் நீராடிக்கொண்டிருப்பதைக்கண்ட பூமாதேவி பொறுமையாற் சினம் கொண்டு பாதாளத்திற் சென்றாள். பூமி வரண்டது. அது கண்டு பெருமான் பாதாளத்துக்குச் சென்று பூதேவியை ஊடல் தீர்த்து அழைத்து வந்து கமலாதேவியுடன் நட்புச் செய்து வைத்தான்; அதனால் பூமி செழித்தது. அதனால் பெருமான் பூமிபாலன் என்று பெயர் பெற்றான்.

## ச, ரு. இரட்டைத் திருப்பதி—தேவர் பிரான் அரவிந்த லோசனர்

"தண்பொருநல் வடகரை வண் துலை வில்லிமங்கலம்" என்று நம்மாழ்வார் அருளினார். "தண் பொருநல்" என்பது தண் பொருநை. துலை வில்லி மங்கலம்—இரட்டைத் திருப்பதி. தேவர் பிரான் கோவிலும், அரவிந்தலோசனர் கோவிலும் ஆகிய இரண்டு பெருமாள் கோவில்கள் இவ்வூரில் அடுத்தடுத்து இருக்கின்றன. இரண்டு கோவில்களாகிய திருப்பதிகளை உடைமையினாலே இவ்வூர் இரட்டைத் திருப்பதி எனப் பெயர் பெற்றது. இது திருப்புளிங்குடிக்குத் தென் கிழக்கே இருக்கிறது. இதற்கு மேற்கே இரண்டு மைலில் காந்தீசுவரம் இருக்கிறது. இது கேதார நிலையம் என்றும் பெயர் பெறும்.

இவ்விடத்தில் சுப்பிரபர் என்ற முனிவர் ஒரு வேள்வி செய்தார். பூமியை உழும்போது கீழே தராசும் வில்லும் கிடந்தன. அவைகளை முனிவர் எடுத்தார். தராசு பெண்ணாகவும் வில் ஆணாகவும் ஆயின. அப்போது ஆண் மகன் "நான் ஒரு வித்தியாதரன்; இவள் என் மனைவி. நான் உடையில்லாமல் இவளுடன் இருப்பதைக் கண்ட குபேரன் சாபத்தால் இந்நிலை அடைந்தோம். இப்போது உம்முடைய திருக்கரம் பட்டதும் பழைய உருப்பெற்றோம்" என்று கூறித் தன் மனைவியுடன் மேலே பறந்து சென்றான். இங்ஙனம் துலையும் வில்லும் கிடந்த மங்கலமாகிய இடம் ஆனதால் இவ்விடம் துலைவில்லி மங்கலம் என்று பெயர் பெற்றது. முனிவர் வேள்வி முற்றியபோது தேவர்கள் யாவரும் கூடிப் பெருமானை வாழ்த்தினார்கள்; அதனால் பெருமான் தேவர்பிரான் என்ற பெயரை அடைந்தனன்.

அந்தச் சுப்பிரப முனிவர் தேவர்பிரான் கோவிலுக்கு வட பக்கத்தில் இருக்கும் தாமரைக் குளத்தில் பூக்களை எடுத்துவந்து பூசை செய்துவந்தார். ஒரு நாள் தேவர்பிரான் அவருடன் குளத்துக் கரைக்குச் சென்று "இங்கே நான் 'அரவிந்தலோசனன்' என்ற பெயரோடு இருப்பேன். பூசனை புரிவாயாக" என்று அவருக்குக் கட்டளையிட்டான். முனிவர் அங்ஙனமே பூசிக்க அவ்விடத்தில் அரவிந்தலோசனர் கோவில் தோன்றியது.

## ௬. பெருங்குளம்—மாயக்கூத்தர்

பெரிய குளத்தை உடைமையினாலே இவ்வூர் பெருங்குளம் என்று பெயர் படைத்தது. குளந்தை என்பது மரூஉ. அதனால் இது திருக்குளந்தை என்றும் அழைக்கப்பெறும். "தென் குளந்தை வண் குடபால் நின்ற மாயக்கூத்தனை" என்பது ஆழ்வார் திருவாக்கு. இது இரட்டைத் திருப்பதிக்கு வடகிழக்கே உள்ளது.

பெருமான் கிழக்கே பார்க்க நின்ற திருக்கோலம். அம்மை குளந்தை வல்லித் தாயார். ஆனந்த நிலைய விமானத்தின் கீழே பெருமான் எழுந்தருளியிருக்கின்றான்.

அவ்வூரில் வேதசாரன் என்ற அந்தணன் குமுத வல்லியை மணந்து கமலாவதி என்ற பெண்ணைப் பெற்றான். கமலாவதி பெருமானை .நோக்கித் தவம் செய்தாள்; அவளுக்குக் காட்சியருளி அவளை மார்போடு தழுவிக்கொண்டு பெருமான் அவளைத் திருமணம்

புரிந்து கொண்டான். குமுதவல்லியை ஓர் அசுரன் தூக்கிச் சென்று இமையமலைக் குகை ஒன்றிற் சிறை வைத்தான்; பெருமான் அசுமசாரன் என்ற அந்த அசுரனோடு போரிட்டு வென்று குமுத வல்லியை மீட்டுத்தந்தான். அசுரன் மாயப் போர் புரிந்தான். அவனைக் காலைப்பிடித்து அடித்துத் தள்ளி அவனுடைய தலைமேல் நின்று பெருமான் ஆடினான்; அதனால் பெருமான் மாயக் கூத் தன், சோர நாட்டியன் என்ற பெயரை அடைந்தான்.

இது வரை பொருநையாற்றின் வடகரைப் பதிகள் வழிபடப் பெற்றன; அவை சீவைகுண்ட வட்டத்தின. இனி, தென்கரைப் பதிகளைக் காணுவோம். அவை திருச்செந்தூர் வட்டத்தின.

## எ. திருக்கோளூர்—வைத்த மாநிதிப் பெருமான்

ஆழ்வார் திருநகரிக்குத் தென்கிழக்கே ஒரு மைல் தொலைவில் இருக்கிறது திருக்கோளூர். அடியார் ஆரவைத்த மாநிதியாவான் பெருமான். "வைத்த மாநிதியாம் மது சூதன்" என்பதும், "கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும் மடியாது இன்னே நீ துயில் மேவி மகிழ்ந்தது தான்" என்பதும் நம்மாழ் வார் திருவாக்கு. இங்கே பெருமான் சீதர விமானத்தின் கீழே கிழக்கே பார்க்கப் பாம் பணையில் பள்ளியமர்கின்றான்.

கோள்-கொள்கை, புறங்கூறல். புறங்கூறிப் பகை கொண்டிருந்த சேர சோழ பாண்டியர் "ஒன்று பட்டு வாழ்வதே சிறந்த கொள்கை" என்று சிவபெருமான் திருவருளால் உணர்ந்து ஒன்று கூடிச் சிவ பெருமானை வழிபட்ட இடம் இது. அதனால் இது கோள் ஊர் எனப் பெயர் பெற்றது. இவ்வூர்ச் சிவலிங்கப் பெருமான் பெயர் "சேர சோழ பாண்டீசர்" என்று இருப்பது இந்த உண்மையை வலி யுறுத்தும்.

ஒரு சமயம் குபேரனுக்குப் பார்வதி தேவியார் சாபம் வந்தது. அதனால் அவனுடைய நிதிகள் இங்கே வந்து மறைந்து கிடந்தன. குபேரன் தவம் செய்து பெருமானுடைய திருவருளால் அந்த நிதி களைப் பெற்றான். அதனால் பெருமான் வைத்த மாநிதி அருளிய பெருமான் ஆயினான். இங்ஙனம் குபேரனுக்குப் பெருமான் அருளி யது ஒரு மாசி மாத வளர் துவாதசியிலேயாம். மதுர கவியாழ்வார் பிறந்தருளிய திருப்பதி இது.

## அ. தென் திருப்பேரை-மகர நெடுங்குழைக்காதர்

பெரிய எயில் பேரெயில்; எயில்-கோட்டை. பேரெயிலை உடைய ஊர் பேரெயில் ஊர்; அது பேரை. இங்ஙனம் ஒரு பேரூர் திருவாரூருக்கு அருகே உள்ளது. இப்பெயரை உடையதாக வடக்கே சோழ நாட்டில் திருப்பேர் நகர் என்ற திருமால் திருப்பதியும் உண்டு. அதனால் இது தென்னாட்டுத் திருப்பேரை தென் திருப்பேரை ஆயிற்று. "தென்திருப் பேரெயில் மாநகரே" என்று நம்மாழ்வார் அருள்கின்றமையால் "திருப்பேரெயில் மாநகர்" தான் திருப்பேரை என்னப் பெற்றது. மகர நெடுங்குழைக்காதினர் என்பது பெருமானுடைய திருப்பெயர். இங்கே பெருமான் பத்திர விமானத்தின் கீழ் கிழக்கே பார்க்க வீற்றிருந் தருள்கின்றான். நிகரில் முகில் வண்ணன் பெருமான். அம்மை குழைக்காதவல்லி.

ஒரு நாள் பூமிதேவியைப் பெருமான் மடியில் வைத்திருந்தான். அப்போது துருவாச முனிவன் அங்கே வந்தான். அவனைக் கண்டும் பூமாதேவி மடியிலிருந்து இறங்கவில்லை; அதனால் முனிவன் சபித்தான். பூமாதேவி திருப்பேரை என்ற பெயருடன் இங்கே வந்து பொருநையிற் குளித்தாள். அப்போது தண்ணீருக்குள் மீன் போன்ற இரண்டு சிறந்த குண்டலங்கள் கிடக்கக் கண்டு அவைகளை விருப்புடன் எடுத்துப் பெருமான் திருக்காதுகளில் சாத்திச் சாபம் நீங்கினாள். அது முதல் பெருமான் மகர நெடுங்குழைக் காதினனாகக் காட்சியருள்கின்றான்.

## க. ஆழ்வார்திருநகரி—ஆதிநாதர், ஆழ்வார்

பொருநையாற்றின் தென்கரையில் இருத்தலினாலே ஆழ்வார் திருநகரி "தென்கரை" என்றும் பெயர் பெறும். குருகு என்பது குருக்கத்தி மரம்; அம்மரச் சோலையை ஒட்டித் தோன்றிய ஊராதலின் இவ்வூர் குருகூர் என்றும் பெயர் பெற்றது. குருகு-பறவை; குருகுகள் கூடி ஒலிக்கும் ஊர் குருகூர் என்றும் சிலர் கூறுவர். குருகு-அன்னப் பறவை; குருகு வழிபட்ட ஊர் குருகூர்.

நம்மாழ்வார் பிறந்தருளிய பின் இவ்வூர் "திருநகரி" என அழைக்கப் பெற்றது. பின் இது ஆழ்வார் பெயரையும் சேர்த்து "ஆழ்வார் திருநகரி" என அழைக்கப் பெறுவதாயிற்று. வடக்கே திருமங்கை ஆழ்வார் பிறந்த ஊர் "திருவாலி திருநகரி" என்று

பெயர் பெற்றுள்ளது. ஆதிநாதப் பெருமானை அடைதற் பொருட்டுத் திருமகள் இந்நகரியில் வந்து தவங்கிடந்தாள். அதனால் திரு வழிபட்ட நகரி திருநகரி ஆயிற்று; அதனுடன் ஆழ்வார் பெயரும் சேர ஆழ்வார் திருநகரி ஆயிற்று என்பதும் பொருந்தும்.

சீவைகுண்டம் புதுக்குடிக்குக் கிழக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது திருநகரி. இது ஒரு புகை வண்டி நிலயம். திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் போகும் சாலை இவ்வூர் நடுவே புகுந்து செல்கின்றது; இருபுறமும் பெரும்பாலும் சிறு வீடுகளே உள்ளன. இவ்வூர் நடுவே ஆதிநாதர் திருக்கோவில் இருக்கிறது; இப்பெருமான் "பொலிந்து நின்ற ஆதிப்பிரான்" என்று நம்மாழ்வாரால் புகழப் பெறுகிறார்; பெருமான் பெயருக்கேற்பத் திருநகரியும் பொலிந்து நின்ற திருநகரியாதல் வேண்டும்.

ஆழ்வார் திருநகரியைச் சூழ உள்ள நாடு திரு வழுதி வளநாடு எனப் பெயர் பெறும்; இந்நாட்டில் உள்ளனவே ஒன்பது திருப்பதிகள். பொருநையாற்றை ஆழ்வார் "தண்பொருநல்" என்று பாடுகிறார். இதன் கரையிலேதான் ஆதிநாதர் கோவில் இருந்தது. பெருமானுக்குத் திருத்தேரும் அத்தேரோடும் தெருக்களும் அமைந்த போது ஆற்றை வடக்கே தள்ளிக்கொண்டு போய் அலைக்கல்லும் படித்துறையும் அமைக்கப்பட்டன.

தாந்தன் என்ற பறையன் இவ்வூரில் வந்து ஆதிநாதரைப் பணிந்து பத்தி நிலையில் தலை சிறந்து நின்றான். அவனை இந்திரனும் விண்ணவரும் வெறுத்தனர். அதனால் தாந்தன் வடகிழக்கே கூப்பிடு தூரத்தில் ஆதிநாதரை எழுந்தருளச் செய்து வழிபட்டான்; தாந்தன் வழிபட்ட இக்கோவில் ஆற்றின் வடகரையிலுள்ள அப்பன் கோவில். தாந்தனைத் துரத்திய பாவத்தால் கண் குருடாயினர் விண்ணவர். ஆதிநாதர் அவர்களை நோக்கி "தாழ்ந்த பிறப்பினன் எனத் தாந்தனை இகழ்ந்து நோக்கினீர்; அதனால் கண் இழந்தீர். தாந்தனைப் பணிந்து கண்ணைப் பெறுவீராக" என்று அருள்பாலித்தார். தாந்தன் தன்னைப் பணிந்து மன்னிப்புக்கேட்ட தேவர்களுக்குக் கண் அருளுமாறு ஆதிநாதரை வேண்ட அவர் அருள்பாலித்தார். தாந்தன் வழிபட்ட ஊர் "தாந்தன் ஊர்" எனப்பெயர் பெற்றது. தாந்தனுடைய திருவுருவம் ஆதிநாதர் கோவில் அர்த்த மண்டபம் முதற்படிக்கட்டில் பொறிக்கப்பெற்றுள்ளது.

இரணியாக்கன் (இரணியம்-தங்கம் ; அக்கன்-கண்ணன்) பூமா தேவியைத் தூக்கிக் கொண்டு ஓடினான்; திருமால் ஆதிவராகமாகி அவனைக்கொன்று பூமாதேவியை மீட்டு இந்த இடத்தில் எழுந்தருளி யிருக்கின்றான். பெருமான் நான்முகனுக்குக் குருவாக இருந்து ஞானமொழி அருளினமையால் இது குருவூர் ஆகிக் குருகூர் என மருவிற்று என்பர்.

காசிப முனிவனும் அதிதியும் விண்ணோரைப் பெற்றவர்கள். அவர்கள் ஒரு சமயம் இந்திரன் மாளிகைக்கு வர, இந்திரன் இந்தி ராணியுடன் மதுபான வெறியால் அவர்களை மதியாதிருந்தனன் ; உடனே காசிபன் சபித்தான் ; இந்திரன் கிழவனாகி உழன்று இங்கே வந்து திருமாலைப் பணிந்து மூப்பு நீங்கப்பெற்றான்.

சீதையைக் கவர்ந்து சென்று இராவணன் பத்து மாதம் சிறை வைத்திருந்தான். அது காரணமாக அவளைக் காட்டுக்கனுப்பி 11111 ஆண்டுகள் இராமன் நாடாண்டிருந்தான். இராமன் வைகுந்தத் துக்கு எழுந்தருளுவதற்கு மூன்று நாட்களுக்கு முன் எமன் அவன் முன் வந்தான் ; துர்வாச முனியும் வந்தான். இலக்குவன் சாவுக்கு அஞ்சினவனாய்ச் சரயு நதிக்கரையில் உலவிக் கொண்டு நின்றான். இராமன் அவனைக் காணாமல் குசலவருக்கு முடிசூட்டிச் சரயு நதிக்கரைக்கு வந்தான். அங்கே இலக்குவனைக் கண்டு கடுங் கோபம் கொண்டு "முன் நம் தந்தை தசரத மன்னரையும் தரு மத்தையும் இகழ்ந்தாய். இப்போது மரம் போல நிற்கின்றாய் ; அதனால் என் மனத்தைப் புளிக்க வைத்தாய். ஆகையால் குரு கூரில் புளிய மரமாகி நில்" எனச் சபித்தான் ; தொடர்ந்து இராமன், "குற்றமற்ற நிறைசூலியாகிய சீதையைக் காட்டுக்கனுப் பியது அறக்கொடும் பாவம். அதனைத் தீர்க்க நான் அக்குருகூரிற் பிறந்து திருமணம் புரியாது ஐம்புலன்களையும்வென்று ஞான முத் திரை தரித்துச் சடகோபன் என்ற பெயருடன் புளிய மரமாகி நிற் கும் உன் அருகே இருப்பேன்" என்று கூறினான். (சடம்-உடல், கோபன்-வெறுத்தவன்) அங்ஙனமே ஆதிசேடனுடைய கூறாகிய இலக் குவன் ஆதிநாதர் கோவில் வடக்குச் சுற்றில் புளிய மரமாகி ஆயிரம் தலைகளும் ஆயிரம் கிளைகளாக விரிந்து பல பொந்துகளுடன் நின் றான். அம்மரம் திருப்புளி ஆழ்வார், உறங்காப்புளி என்று பெயர் பெற்றது. காட்டிலிருந்த பதினான்கு ஆண்டுகளும் இலக்குவன் உறங் காது இராமனைக் காத்தவன் ; அதனால் இப்புளி உறங்காப்புளி

எனப் பெயர் பெறுகிறது. இது இப்போது எழு பிரிவாகி விமானத் தின் மேல் விரிந்துள்ளது. இது பழுப்பதில்லை ; பிஞ்சுகள் உதிர்ந்து போகின்றன.

வசுதேவன் காரி மன்னனுகித் தேவகியின் தோற்றமாகிய ஆத்ம வதி (உடைய நங்கை)யை மணந்து குருகா வனத்தில் தவம் புரிந் திருந்தான். திருக்குறுங்குடிப் பெருமான் அவனுக்கு மகனுகப் பிறந்தார். அவரே ஆழ்வார், சடகோபர். சடம்-உடம்பு. உடம்புக்கு உரிய இச்சைகளைக் கோபித்து வென்றமையால் இவர் " சடகோபர் " எனப் பெயர் பெற்ருர்.

ஆதிநாதன் கோவிந்த விமானத்தின் கீழ் கிழக்கே பார்க்க நின்ற திருக்கோலமாகக் கருவறையில் திருமகள் மண் மகளுடன் காட்சி யருள்கின்ருர்; திருமேனிகள் சுதையால் ஆனவை. இவர்களுக்கு முன்கட்டில் எழுந்தருள் திருமேனி " பொலிந்து நின்ற பெரு மான் " நிற்கின்ருர். பெருமானுக்கு வலது புறம் ஆதிநாயகி கோவிலும், இடது புறம் குருகூர் நாயகி கோவிலும் மேற்குச் சுற்றில் இருக்கின்றன. இக்கோவிலினருகிலுள்ள சில புளிய மரங்களும் பழுப்பதில்லையாம்.

ஆழ்வார் பிறந்தவுடன் பேசாமலும் உடல் அசையாமலும் இருந் தார். ஒரு நாள் பெற்ருேர் அவரை ஆதிநாதர் திருமுன் கொண்டு வந்து வழிபட அவர் புளிய மரத்தடியில் தவழ்ந்து சென்று பதுமா சனத்தில் இருந்து கொண்டார். அங்கேயே அவர் பதினுறுண்டுகள் வரை தவம் செய்திருந்தார். அப்போது மதுரகவியாழ்வார் வந்து அவரைக் கும்பிட்டு அவர் பெருமையை அறிந்து " கண்ணி நுண் சிறுத்தாம்பு ". என்று தொடங்கிப் பதினெரு பாடல்கள் பாடிப் புகழ்ந்தார். அவருடைய வேண்டுதலுக்கு இரங்கி ஆழ்வார் பெரு மான் மேல் " திருவாய் மொழி," " திரு விருத்தம்," " திரு வாசிரியம்," " பெரிய திருவந்தாதி " ஆகிய இவைகளைத் திருவாய் மலர்ந்தருளினுர். ஆழ்வாருடைய ஆயிரம் பாடல்களும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் இடம் பெற்று மிளிர்கின்றன. ஆழ்வார் முப்பத்து மூன்று திருப்பதிகளைப் பற்றிப் பாடியிருக்கிருர் ; அந்த முப்பத்து மூன்று பெருமான்களின் திருவுருவங்கள் திருப்புளியைச் சுற்றிக் கட்டியிருக்கும் கற் சுவர்களிற் பொறிக்கப்பெற்று விளங்கு கின்றன.

ஆழ்வார் முப்பத்தைந்து வயதில் பெருமான் திருவடி நிழலை அடைந்தார். அவருடைய திருமேனி புளிய மரத்தின் அருகே அமைக்கப்பெற்றது. அங்கு தெற்கே பார்க்க ஆழ்வார் திருக்கோவில் எழுந்தது. ஆழ்வாருக்குத் திருத்தேர்த்திருவிழா வைகாசி விசாகத்தில் நடைபெறுகிறது. அவருக்கு மார்கழி மாதத்தில் இருபது நாட்கள் முன் பத்து, பின் பத்து அத்தியயனத் திருவிழாவும், மாசி மாதத்தில் பன்னிரண்டு நாள் பெரு விழாவும் நடைபெறுகின்றன. ஆதி நாதருக்கு ஒரு பெரிய தேர் இருக்கிறது. பங்குனித் திருவிழாவும், சித்திரைத் திருவிழாவும் திரு ஆதி நாதருடையன. வைகாசித் திருவிழாவில் ஐந்தாம் திருநாளன்று ஒன்பது திருப்பதிகளிலுள்ள பெருமாள்களும் திருநகரிக்கு எழுந்தருளி இரவில் ஒன்பது கருடவாகனங்களில் காட்சியருளுகின்றார்கள்.

இத் திருக்கோவிலிலுள்ள சிற்பங்கள் மிக அருமையானவை ஆழ்வாருடைய கோவிலும் ஆதி நாதர் கோவிலும் திருமாமணி மண்டபமும் திருமஞ்சன மண்டபமும் கண்ணாடி மண்டபமும் மிக அழகானவை. மொட்டைக் கோபுரமும் அதன் உருவங்களும் அரிய வேலைப்பாடுடையன. பெருமான் திரு முன்பு மூன்று மாடங்களுடன் அழகிய கோபுரம் உள்ளது. அந்த மூன்று தட்டுக்களிலும் உள்ள மரத்தூண், யாளி, சாளரம், சிங்கப் போதிகை, உத்தரம், கொட்டு விதானம் இவையெல்லாம் மிகமிக நுட்பமான வேலைத் திறம் அமைந்தவை.

மிகவும் அருமையான வேலைப்பாடமைந்த கல்லினலாகிய குழல் (நாதசுரம்) ஒன்று இக்கோவிலில் இருக்கிறது. இக்கற்கருவி மரத்தினல் ஆனது போலவே தோன்றுகின்றது. இதன் நீளம் ஓரடி ; இதன் குறுக்களவு நுனியில் கால் அங்குலம் ; கீழே ஓரங்குலம். அதன் அடியிலே பித்தளைப் பூண் இருக்கிறது. இது முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் கிருட்டினப்ப நாயக்கரால் கொடுக்கப்பெற்று பரத நாட்டியம் நடைபெறும் காலங்களில் ஊதப்பெற்று வந்தது.

ஆழ்வார் இவ்வூரைப்பற்றி, “ குன்றம் போல் மணி மாடம் நீடும் திருக்குருகூர், ” “ செறுவில் செந்நெல் கரும்போடோங்கும் திருக்குருகூர் ” என்றெல்லாம் புகழ்ந்து பாடுகிறார். “ செறிந்து செந்நெல் கவரி வீசும் திருக்குருகூர் ” என்று ஆழ்வார் அருளியது

மிக்க சிறப்புடையதாய்ப் புலவர் நெஞ்சை அள்ளுவது. இது காறும் ஒன்பது திருப்பதிகளையும் வணங்கினோம்; இனி, மற்ற இரண்டு திருக்கோவில்களையும் சென்று வணங்குவோம்.

## ஆழ்வார் திருநகரி—எம்பெருமானர்

"எம்பெருமான்" என்று திருமால் அடியாரால் போற்றப்பெறும் இராமானுசர் திருக்கோவிலே இது. மேலைத் தெருவிற்கு மேற்கே உள்ள இது "உடையவர் கோவில்" என்றும் பெயர் பெறும். இராமானுசர் எழுந்தருளியிருக்கும் இப்பகுதி "இராமானுசர் சதுர் வேதி மங்கலம்" என்று இக்கோவிலைக் கட்டிய திருவாய் மொழிப் பிள்ளையால் பெயரிடப்பெற்றது.

## தூத்துக்குடி—வைகுண்டபதிப் பெருமாள்

இப்பெருமாள் கோவில் சங்கர ராமேசர் கோவிலுக்குத் தென் பால் இருக்கிறது. இப் பெருமாள் வேங்கடாசலபதி என்றும் பெயர் பெறுவார். இக்கோவில் இப்போது சிறப்படையத் தொடங்கி யிருக்கிறது.

# ரு. நான்குநேரி வட்டம்

## நான்குநேரி—வானமாமலைப் பெருமாள்

திருநெல்வேலிக்குத் தெற்கே இருபதாவது மைலில் இருக்கும் இவ்வூர் நான்குநேரி, நாங்கூநேரி, நாகன சேரி என்றெல்லாம் வழங்கப்படுகிறது. இது நான்கன் சேரி என்று பழைய காலப் பதிவு களில் குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வூரின் வடபுறம் இருக்கும் பெரியகுளம் நாகன் என்பவனால் வெட்டப்பெற்றது. அதனால் நாகன் ஏரி என்று பெயர் பெற்றது. இதற்குத் தக்க சான்றாக இருப்பது அவ்வூரிலுள்ள சிவலிங்கப்பெருமானுடைய திருப்பெயராகிய நாகன் நாதர் என்பதுவே. நாகனால் பூசிக்கப்பெற்ற நாதர் நாகன் நாதர்; ஆதலின் நாகன் ஏரி என்பதுவே இதற்குச் சரியான பெயர். பெருமாள் கோவிலும் சிவன் கோவிலும் வானமாமலை மடாதிபதி ஆட்சியிலேயே உள்ளன.

நாகனேரி வட்டத்திற்குத் தலைமையிடமாக 1819 வரை இருந்தது களக்காடு. அடுத்த ஆண்டில் கொடுங்காய்ச்சல் அப்பக்க மக்களை அலைக்கழித்ததால் களக்காடு தலைமை இழந்து நாகனேரி வட்டத்

தலை நகராயிற்று. 1839-ல் நாகனேரி வட்டம் இரண்டாகப் பிரிக்கப் பெற்று, தென் பகுதி வள்ளியூர் வட்டம் ஆயிற்று. ஆனால் 1860-ல் வள்ளியூர் வட்டம் பழையபடி நாகனேரி வட்டத்துடன் சேர்க்கப்பெற்றது.

கல்வெட்டில் நாகனேரி "பச்சாற்றுப் போக்கு வான நாடு சீவர மங்கை சதுர்வேதி மங்கலம்" என்று கூறப்படுகிறது. இவ்வூரிலிருக்கும் வானமாமலை சீயர்மடம் கொல்லம் 622-ல் (கி.பி. 1447) தோன்றியதாகச் செப்புப் பட்டயம் கூறுகிறது. வானமாமலை என்பதும் சீவரமங்கை என்பதும் தோத்தாத்திரி என்பதும் இவ்வூரின் வேறு பெயர்கள்.

மேலைத் தேர்த் தெருவில் கோவில் வாசலில் ஒரு பெரிய தேர் நிற்கிறது. இது சித்திரைப் பெருவிழாவில் ஓடும். பங்குனித் திருவிழாவும் இங்கு நடை பெறும். அதில் பங்குனி உத்தரத்தன்று தங்கத் தேர் ஓடும். அதனைக் கண்டு வணங்கப் பெருந்திரள் கூடும். கோவிலின் முன்புள்ள பந்தல் மண்டபத்தின் வட பகுதியில்தான் திருமடம் இருக்கிறது. பெரிய கோபுர வாயிலைத் தாண்டிச் சென்றால் இருப்பது செவந்தி மண்டபம். இது செவந்தியப்ப நாயக்கர் என்ற நாயக்க மன்னரால் கட்டப்பெற்றது. உள்ளே இருக்கும் வீரப்ப நாயக்கர் மண்டபம் வீரப்பநாயக்கரால் கட்டப் பெற்றது. இதில் ஒவ்வொரு தூணிலும் நான்கைந்து வடிவங்கள் உள. ஒரு தூணில் இராமபிரான் அனுமானை அரவணைத்து நிற்கிறார். மற்றொன்றில் புருடா மிருகம் வீம சேனனைத் துரத்தி வருகிறது. இவ்வுருவங்கள் சிற்பச் சிறப்பு மிக உடையன.

கருவறையில் இருக்கிறார் வானமாமலைப் பெருமாள்; சீதேவி பூதேவி ஆகிய தேவிமார் இருமருங்கும் இருக்கின்றனர். இந்தப் பெருமானைத் தோத்தாத்திரி நாதர் என்று வட நாட்டினர் புகழ்ந்து கும்பிடுகின்றனர். நம் தேசத் தலைவர் இராசேந்திரப் பிரசாதருக்கு இவரே குல தெய்வம். இந்த மூலவருக்கு நாடோறும் ஆறுபடி நல்லெண்ணெய் சந்தன எண்ணெயுடன் கலந்து திருமுழுக்கு நடைபெறுகிறது. சிறப்பு வழிபாடுகளில் ஒரு கோட்டை (112 படி), அரைக் கோட்டை (56 படி) எண்ணெய்க் காப்பு முழுக்கு நடைபெறுகிறது. இந்த எண்ணெய் ஒரு கிணற்றிற் சேமித்து வைக்கப்பெறுகிறது. நடுப் பகலில் இக்கிணற்றினுள் சூரியனுடைய ஒளியும் வெயிலும்

பட்டுச் சூரிய புடமிடப்பட்டு இந்த எண்ணெய் அருமையான மருந் தாகிறது. இந்த எண்ணெய் குட்டம் முதலிய கொடு நோய்களைத் தீர்க்கும் அருமையான அமிழ்தம். இங்ஙனம் திரு முழுக்கு நடைபெறுவதனாலும், வெள்ளிக் கிழமை அதிலும் கடைசி வெள்ளிக் கிழமை சிறப்பு நாளாகக் கொண்டாடப் பெறுவதனாலும் இத் திருக்கோவில் பண்டை நாளில் முருகன் கோவிலாக இருந்திருக் கலாம் என்று சிலர் கூறுகின்றனர்.

அர்த்த மண்டபத்தில் தெய்வ நாயகப் பெருமான் எழுந்தருள் திருமேனியில் சீவர மங்கைத்தாயார், சீதேவி, பூதேவி, ஆண்டாள் முதலியோர் அருகிருக்க எழுந்தருளியிருக்கின்றான்.

இவ்வூர்க் கோவில் வானத்தை அளாவிய மாமலை போல் உயர்ந்த கோபுரத்துடன் இருப்பதால் இவ்வூர் வானமாமலை எனப் பெயர் பெற்றது. வானவன் என்ற பாண்டியன் மாமலை போலக் கட்டிய மையால் வானவன் மாமலை என்று பெயர் பெற்று வானமாமலை என மருவியது என்றும் சிலர் கூறுவர். அடியார்கள் கேட்ட வரமெல்லாம் அருளும் மங்கையாகத் தாயார் எழுந்தருளியிருப்பதால் அம்மை பெயர் சீவர மங்கை எனப் பெற்றது. வானவப் பாண்டி யருக்குப் பின்னால் செவந்தியப்ப நாயக்கர், வீரப்ப நாயக்கர் முதலிய நாயக்க மன்னர்கள் இத் திருக் கோவிலை வளர்த்திருக்கின்றார்கள்.

நம்மாழ்வார் "நோற்ற நோன்பு" என்று தொடங்கும் பத்துத் திருவாய் மொழிப் பாடல்களை வானமாமலைத் தெய்வ நாயகப் பெருமான் மீது பாடியிருக்கிறார்.

"ஏனமாய் நிலங்கீண்ட என் அப்பனே கண்ணா என்றும் என்னை ஆளுடை
வான நாயகனே மணி மாணிக்கச் சுடரே
தேனமாம் பொழில் தண் சிரீவர மங்கலத்தவர் கை தொழ உறை
வானமா மலையே அடியேன் தொழ வந்தருளே." (6)

"ஆறெனக்கு நின்பதமே சரணாகத்தந்தொழிந்தாய் உனக்கு ஓர் கைம்
மாறுநான் ஒன்றிலேன் என தாவியும் உனதே
சேறு கொள் கரும்பும் பெரும் செந்நெலும் மலிதண் சிரீவர மங்கை
நாறு பூந்தண் துழாய் முடியாய் தெய்வ நாயகனே." (10)

## செண்பகராமனல்லூர்—செகநாதப் பெருமாள்

செண்பக ராம பாண்டியன் பெயரால் ஆகிய நல்லூர் இது; நான்கு நேரிக்குக் கிழக்கே ஐந்தாவது மைலில் இருக்கிறது. வட நாட்டிலுள்ள செகநாதர் பெயரைக் கொண்டவர் இங்குள்ள செகநாதப் பெருமாள். திருவாயில் காவலர் இருவருடைய சிலைகள் கைகால்களிலுள்ள நரம்புகள்கூட நன்றாகத் தெரியும்படி மிக நுட்பமாக அமைக்கப்பட்ட கலைச் செல்வம் பொருந்தியன. இவ்வூரி லுள்ள சிவன் கோவில் அம்மை திருவுருவம் காணப்பதிணாயிரம் கண்களும் போதாதபடி பேரழகு நிரம்பியது.

இங்கே செண்பக ராம பாண்டியர் கோட்டையும் அதனுள் அரண் மனையும் கட்டி அரசாண்டார்; அவைகளின் அடையாளங்கள் இன்றும் காணக்கிடக்கின்றன.

## விசய நாராயணம் (வடக்கு)—அழகியமன்னர்

நம்பியாறு விசயன் கால்வழி இவ்வூரைச் சேர்கிறது. நாகனேரி யிலிருந்து கிழக்கே பன்னிரண்டாவது கல்லில் இருக்கிறது இவ்வூர். இவ்வூரைப் பற்றிக் கல்வெட்டு " இராசராச சோழ வள நாடு, உத்தம சோழ வளநாடு, நட்டாற்றுப் போக்கு விசய நாராயணம்," என்றும் " சயங் கொண்ட சோழ சதுர் வேதி மங்கலம் " எனவும், " விசய நாராயண சதுர் வேதி மங்கலம் " எனவும் கூறுகின்றது. மதுரோதய வள நாட்டுத் திருப்புவனம் பள்ளி கொண்டான் உய்யவந்தான் என்ற உத்தம சித்த பல்லவராயர் இவ்வூரிலுள்ள மனோமய ஈசுவர முடை யார் கோவில் என்ற கோவிலில் கூத்தாடும் தேவரை அமைத்த செய்தியும் கல் வெட்டிற் காணப் பெறுகிறது. " மனோமயன் ஏரி," " வாசுதேவப் பெருங்கரை", "வாசுதேவப் பேராறு என்ற கால்வாய் " என்பதும் கல் வெட்டிற் கண்டவை.

விசயன் பூசித்த நாராயணன் கோவில் " விசய நாராயணம் " என்று பெயர் பெற்றது; அதனால் அக்கோவிலையுடைய ஊரும் விசய நாராயணபுரம் என்று அழைக்கப் பெற்றது. இவ்வூருக்கு வரும்கால் விசயன்கால். பெருமாள் பல பெயர்களால் அழைக்கப் பெறுகிறார். அவை " ஆதி நாதர், அழகிய மன்னார், பக்தப் பிரியத்துக் குலசேகர விண்ணகர் ஆழ்வார், யாதவ நாராயண விண் ணகர் எம் பெருமான் " என்பன. இவ்வூர் அரசருக்கு இருப்பிடமாக இருந்திருக்கிறது.

இக் கோவிலிலுள்ள மூலவரே செப்புத் திருமேனி உடையவர். அது மிக மிக அழகிய திருமேனி.

## திருக்குறுங்குடி—அழகிய நம்பிராயர்

குறிஞ்சி நிலத்து ஊர் குறிச்சி, குறும் பொறை, சீறூர், சிறு குடி என்றெல்லாம் அழைக்கப்பெறும். சிறுகுடியே குறுங்குடி. அழகிய நம்பி அரசர் என்பதே அழகிய நம்பிராயர் என்று வழங்கு கின்றது. இதன் அருகிலேயுள்ள நம்பிமலையிலே தோன்றி நம்பி யாறு என்று பெயர் பெற்று வருகின்ற ஆற்றங்கரைமேல் இத் திருக்கோவில் இருக்கிறது. இங்கிருந்து நாகனேரி வடகிழக்கே ஆறு மைல், ஏர்வாடி கிழக்கே இரண்டு மைல், களக்காடு வடக்கே எட்டு மைல். இவ்வூரில் ஒரு பெரிய மடமும் பெரிய சத்திரமும் இருக் கின்றன: திருமடத்தின் தலைவர் சீயர் என்று அழைக்கப் பெறுகிறார். இவ் வூர்க் கல்வெட்டில் "நட்டாற்றுப் போக்கு வைகுண்ட வளநாடு திருக்குறுங்குடி, அழகிய நம்பி" என்ற குறிப்புக் காணப்பெறுகின்றது.

இவ்வூரில் திருமால் குறுகிய உருவினனாய் வாமனனாகத் தோன்றிய தால் இவ்வூர் குறுங்குடி எனப் பெயர் பெற்றது என்பாரும் உளர். இவ்வூர்த் திருமடத்தின் தலைவாயிலிலுள்ள இரதி மண்டபம் அழகாய சிற்ப வடிவங்களை உடையது. இரதிதேவி, அருச்சுனன், கர்ணன் முதலியவர் திருவுருவங்கள் பேரழகு படைத்தவை.

திருக்கோவிலின் முன்பு ஓர் அழகான கோபுரம் இருக்கிறது. இதில் மதிக்க முடியாத எண்ணற்ற சிற்பங்கள் இருத்தலினாலே இது சிற்பக் கோபுரம் என்றே பெயர் பெறுகிறது. கொடி மர மண்டபத் தின் வடபுறத்திலே மணவாளமாமுனி கோவில் கொண்டிருக்கிறார். இவர் திருமுன்புள்ள தூண்களில் நரசிங்கப் பெருமான், குறவன் குறத்தி, அனுமான் முதலியவர்களுடைய உருவங்கள் நுட்பமாகச் செதுக்கப் பெற்று விளங்குகின்றன.

இதிலுள்ள கொடிமரம் சிறிது வடக்கே ஒதுங்கியிருக்கிறது. அதற்குக் காரணம் "நம்பாடுவான் என்ற பாணர் குலத் தலைவன் திரு வீதியிலே நின்றுகொண்டு பெருமானை யாழை மீட்டி உள்ளம் கசிந்துருகப் பாடி இன்புற்றான். அவனுக்குப் பெருமானுடைய அழகிய திருமேனி தெரியாது கொடிமரம் மறைத்தது. அதுகண்டு மேலும் உள்ளம் கசிந்து கசிந்து இரங்கி நின்றான் அப் பாணர்

தலைவன். அவன் அன்புக் குரல் பெருமானுக்குக் கேட்டது. உடனே பெருமான் அக் கொடிமரத்தைச் சற்று வடபுறம் விலகியிருக்கும் படி திருவருள் பாலித்தான். உடனே கொடிமரம் சற்று விலகி நின்றது. பாணன் பெருமானைக் கண் குளிரக்கண்டு மெய்ம்மறந்து நின்றான். அப்போது அழகிய நம்பி அவனுக்கு "நம்மைப் பாடுவான், நம்பாடுவான் என்ற சிறந்த பெயரை அருளினார்" என்பதுவே.

இரண்டு நாச்சியார்களுடன் அழகிய நம்பிராயர் கருவறையில் பேருக்கேற்ற அழகிய திருவுருவத்துடன் எழுந்தருளி யிருக்கின்றார். அர்த்த மண்டபத்தில் வைணவ நம்பி, இரு நாச்சியார்கள், குறுங்குடி வல்லித்தாயார் முதலியோர் எழுந்தருள் திருமேனியில் காட்சி யருள்கின்றனர். நம்பி மாணவராகி இராமானுசரிடம் மறை மொழி கேட்டார் என்பதும், இராமானுசர் இட்ட பெயரே வைணவ நம்பி என்பதும் புராண வரலாறு. வடக்குச் சுற்றிற் தெற்குப் பக்கத்தில் பக்க நின்றார் கோவில் இருக்கிறது. அது பக்கத்தில் நின்ற சிவ லிங்கப் பெருமான் கோவில். இவரே மகேந் திரமலை நாதர். இவருடன் கூத்துடைக் கடவுள், சிவகாமித்தாய், முருகக் கடவுள், பிள்ளையார் முதலிய எழுந்தருள் திருமேனிகள் செம்புருவில் உள்ளன. அவ்விடத்தில் வீற்றிருந்த நம்பியும், பள்ளி கொண்ட நம்பியும் தனித்தனிக் கோவில்களில் இருக்கின்றனர். இவர்களுக்கு அருகே மாபலியும் பூமியுள் அழுத்தப்பட்ட நிலையில் தலைமட்டும் வெளியே தெரியும்படி இருக்கின்றான். மாபலியை அழுத்திய வாமனப் பெருமான் இவ்வூர்ச் சத்திரத்தில் கோவில் கொண்டிருக்கின்றார்.

இத் திருக் கோவிலில் பக்க நின்றாராகிய சிவலிங்கப் பெருமானுக் குத்தான் முதலிற் பூசனை நடைபெறும்; அதன்பின் அழகிய நம்பிரா யருக்கு வழிபாடு தொடங்கும். அழகிய நம்பிராயர் திருமுன்பு குல சேகரன் மண்டபத்துக்கும் அப்பால் ஒரு பெரிய மணி தொங்கு கின்றது. அந்த மணியின்மேல் ஒரு பாட்டிருக்கிறது.

" செய்துங்க நாட்டுச் சிறை வாய்மன் ஆதித்தன் தென்வஞ்சியாண்
வியலொன்று சிலகலையாளன் கன்னி விசாகம் வந்தோன்
நய மொன்று கொல்லம் அறுநூற்று நாற்பத்து நாலில்
அன்பால்
அயனும் பணிய மணியளித்தான் நம்பிக்கு அன்பு கொண்டே. "

இதனால் விசாகத் திருநாள் என்ற மலையாள மன்னன் கொல்லம் 644 (கி.பி. 1468)-ல் இம் மணியை இங்குக் கொண்டுவந்து கட்டினான் என்பது புலனாகிறது. இவ்வூரில் பெரிய திருவிழா வைகாசி மாதம் நடைபெறுகிறது.

இவ்வூரிலிருந்து ஐந்து மைல் தொலைவில் " மலைமேல் நம்பி " கோவில் இருக்கிறது. இங்குள்ள திருமேனி பெரிய உருவுடன் பேரழகும் படைத்தது. இந்தத் திருக்குறுங்குடியில் வள்ளி நாச்சியார் தோன்றி இந்த நம்பி மன்னரால் வளர்க்கப் பெற்று வள்ளியூரில் முருகப் பெருமானைத் திருமணம் செய்துகொண்டார் என இங்கே வழங்கும் வரலாறு மிகவும் பொருத்தமானது. இந்த ஊரில் தான் திருமங்கை மன்னன் என்ற ஆழ்வார் பெருமானைப் பாடியிருந்து திருநாட்டுக்கு எழுந்தருளினார். வயல்வெளியில் அவருக்குத் தனிக் கோவில் உள்ளது. இந்தத் திருமங்கையாழ்வாருடன் நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமழிசையாழ்வார் என்ற ஆழ்வார்கள் நம்பியை நம்பிப் பாடிப் பெரும்பேறு பெற்றவராவார்.

" நின்றிடும் திசைக்கும் நையும் என்று அன்னையரும் முனிதிர்
குன்ற மாடத் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்
வென்றி வில்லும் தண்டும் வாளும் சக்கரமும் சங்கமும்
நின்று தோன்றிக் கண்ணுள் நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே. "

நம்மாழ்வார்—திருவாய்மொழி.

" செங்கண் நெடிய கரிய மேனித் தேவரொருவர் இங்கே புகுந்து என்
அங்க மெலிய வளைகழல ஆது கொலோ என்று சொன்ன பின்னை
ஐங்கணை வில்லிதன் ஆண்மை என்னோடு ஆடும் அதனை அறிய மாட்டேன்
கொங்கணை தண்பணை சூழ்புறவில் குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின்."

திருமங்கையாழ்வார்—பெரியதிருமொழி.

இனி, தென்காசி, சங்கர நயினார் கோவில் வட்டங்களுக்குச் செல்வோம்.

## சா. தென்காசி வட்டம்

### வீரகேரளன்புதூர்—நவநீத கிருட்டினன்

வீர கேரளன் என்ற சேர மன்னனால் புதிதாக அமைக்கப்பெற்ற ஊர் இது. இது ஒரு குறு நில மன்னர் தலை நகர். நவநீதம்—புது வெண்ணெய். வெண்ணெயில் மிகப் பற்றுடைய கண்ணன் என்பது பெருமான் திருப்பெயர். புது வெண்ணெய்க் கண்ணன் திருமேனி காண இனியது.

இவ்வூர் பாவூருக்குக் கிழக்கே ஆறு மைல் தூரத்திலுள்ள அத்தி யூற்றிலிருந்து வடக்கே நான்கு மைல் தொலைவில் சிற்றாற்றங் கரையில் இருக்கிறது. பாவூரிலிருந்து வடக்கே ஆறு கல் தொலைவிலுள்ள வெள்ளக்காலிலிருந்து கிழக்கே மூன்று மைல் சென்றாலும் வீரகேரளன் புதூரைச் சேரலாம்.

இவ்வூரிலிருந்த மன்னர்கள் தமிழ்ப் புலவர்களாகவும் திகழ்ந் தனர். காவடிச் சிந்து பாடிய அண்ணாமலை ரெட்டியார் முதலிய பெரும் புலவர்கள் இம் மன்னர்கள் ஆதரவில் வாழ்ந்து பெரும் புலமை பெற்றார்கள். அப் புலவர்கள் பலர் இப் பெருமான் மேல் பாடிய வாகனக் கவிகள் பல ஒன்றாகச் சேர்த்து ஒரு நூலாக வெளியிடப்பட்டுள்ளன.

## ஏ. சங்கர நயினார் கோவில் வட்டம்

### புளியங்குடி—இலட்சுமி நரசிங்கப் பெருமாள்

புளியங்குடி சங்கர நயினார் கோவிலுக்கு மேற்கே பத்து மைல் தூரத்தில் இருக்கிறது. இதிலுள்ள பாலசுப்பிரமணிய சாமி கோவிலுக்குத் தெற்கே அண்மையில் ஊருக்கு மேலோரத்தில் திருவாவடுதுறை மடத்தின் அருகே நரசிங்கப் பெருமாள் இலட்சுமி தேவியுடன் எழுந்தருளியிருக்கின்றார். இவர் மிகவும் அருள் வள்ள லாகத் திகழ்கின்றார்.

இதுகாறும் நெல்லை மாவட்டப் பெருமாள் கோவில்கள் வழிபடப் பெற்றன. இனி திருமுருகப் பெருமான் திருக் கோவில்களைக் கண்டு வழிபட்டுத் திருவருள் பெற்றுய்வோம்.

## ரு. திருமுருகன் திருக்கோவில்கள்.

திருநெல்வேலி மாவட்டத்தில் திருமுருகப் பெருமானுக்கு இருப் பன எண்ணற்ற திருக்கோவில்கள். ஒவ்வொரு சிவன் கோவிலிலும் திருக் கோவிலினுள் வட மேற்குப் பகுதியில் முருகப் பெருமான் வள்ளி, தேவயானையுடன் எழுந்தருளியிருக்கின்றான் ; சிறுபான்மை பெரிய கோவில்களில் கோவில் நுழைவில் வடபுறத்திலும் இருக்கின்றான்.

கோவில் ஆட்சித் துறையினர் கணக்கில் வந்துள்ள முருகன் தனிக் கோவில்கள் முப்பத் தொன்று ; அவை தம்முள் ஆண்டுக்கு ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய்பெறுவன பத்து. அவை யாவன :—

1. திருச்செந்தூர் வட்டம் :—திருச்செந்தூர்-சுப்பிரமணியர்.

2. திருநெல்வேலி வட்டம் :—திருநெல்வேலி, குறுக்குத்துறை-சுப்பிரமணியர்.

3. சிந்துபூந்துறை-பாளையம் சாலைக் குமரர்.

4. தென்காசி வட்டம் :—இலஞ்சி-குமரர்.

5. பண்புளி-திருமலைக் குமாரசாமி.

6. அம்பா சமுத்திரம் வட்டம் :—கல்லிடைக் குறிச்சி-சுப்பிர மணியர்.

7. சங்கரநயினார் கோவில் வட்டம் :—புளியங்குடி—பால சுப்பிர மணியர்.

8. விசுவநாதப்பேரி-பால சுப்பிரமணியர்.

9. நான்குநேரி வட்டம் :—வள்ளியூர்-சுப்பிரமணியர்.

10. கோவிற்பட்டி வட்டம் :—கழுகுமலை-சுப்பிரமணியர்-என்பன.

திருமுருகப் பெருமானுடைய வரலாற்றை விவரமாகக் கூறும் கந்தபுராணம். அதன் ஆசிரியர் காஞ்சிபுரம் கச்சியப்ப சிவாச்சாரியார். முதலில் முருகப் பெருமானுடைய வரலாற்றைச் சுருக்கமாக அறிந்துகொள்வது இன்றியமையாதது. அதனைக் கந்தபுராணம் கூறுமாறு காண்போம்.

**கந்த புராணம்**

நான்முகனுக்கு மகன் காசிப முனிவன் ; அம்முனிவன் மாயை என்பவளை மணந்து சூரபன்மா, ஆயிரம் தலைகளோடு கூடிய சிங்கமாமுகன், நான்கு கொம்புடைய யானை முகனும் தாரகா சுரன் என்ற மூன்று ஆண் மக்களையும், அசமுகி என்ற மகளையும் மேலும் எண்ணற்ற அசுரர்களையும் பெற்றான். சூரபன்மா தம்பி மாருடன் சிவபெருமானை நோக்கித் தவம்புரிந்தான் ; நெடுங்காலம் கடுந்தவம் புரிந்தும் பெருமான் வாராமை கண்டு சூரபன்மா வேள் வித்தீயிடையிருந்த வச்சிர கம்பத்திற் குதித்து உயிரை விட்டு எரிந்து போனான். சிங்கமுகன் அது கண்டு மேலும் நெடு நாள் தவம் கிடப்பப் பெருமான் வாராமை கண்டு வச்சிர கம்பத்தில் தானும் குதிக்கத் துணிந்தெழுந்தான். அப்போது சிவ பெருமான் வந்து தோன்றிச் சூரனையும் எழுப்பிப் பற்பல வரங்கள் அருளினான்.

" ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் ஆளுமாறும் அந்த அண்டங்களிற் சென்று வர இந்திரஞாலத் தேரும், சிங்க ஊர்தியும், சக்கரமும், பெருந்திறனும், பாசுபத முதலிய தெய்வப்படைகளும், எந்நாளும் தொலைந்திடாமல் ஏற்றமிகும் வச் சிரமாகிய மேனியும் " பெற்று நீடு வாழுமாறு வரங்களைச் சூரனுக் குப் பெருமான் அருளினன். பின் சிங்க முகனுக்கும் தாருகனுக்கும் தேவர்களால் தொழப்பட்டு நூற்றெட்டு யுகம் சூரபன்மனுடன் வாழும் ஆயுளை நல்கி, " எமது சத்தி ஒன்றுதான் உங்களை வெல்லும் " என்று கூறி மறைந்தருளினன். முன்னர் நான்முகன் செய்த வேள்வியில் வந்திருந்த அவன் மகன் தக்கன் சிவபெருமானை இகழ்ந்தமை கண்ட நந்தியெம்பெருமான் தக்கனை நோக்கி, " சிவ பெருமானை இகழ்ந்த வாயையுடைய உன்தலை அற்று வேறொரு தலையினை அடைவாய். உன்னைச் சேர்ந்த விண்ணவர் அளப்பிலா யுகங்கள் சூரன் எனும் அவுணனால் துயரின் மூழ்குவர் " என்று சபித்தான்.

தேவரேயாயினும், அசுரரேயாயினும், யாவரேயாயினும் தவறு செய்வரேல் ஆண்டவன் சிவபெருமான் ஒறுப்பது திண்ணம். தேவர் யாவரும் ஏவல் புரிய, சூரன் நூற்றெட்டு யுகங்கள் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அடக்கியாண்டனன். இந்திரன் தன் மனைவியுடன் சீர்காழிக் காட்டில் மூங்கிலாக மறைந்து தங்கிச் சிவபூசை செய்து வந்தான். நூற்றெட்டு யுகங்களும் கழிந்தன. விண்ணவர் சிவ

பெருமானைப் பணிய, பார்வதியுடன் ஆறு முகங்களுடன் எழுந்தருளி யிருந்த சிவபெருமானுடைய ஆறு நெற்றிக் கண்களிலிருந்து ஆறு தீப்பொறிகள் தோன்றின. அவைகளை அங்கியும் வருணனும் சுமந்து சென்று கங்கையில் விட அவை சரவணப் பொய்கையிற் சேர்ந்து ஆறு குழந்தைகள் ஆயின. ஆறு கார்த்திகைப் பெண்களும் ஆளுக் கொரு பிள்ளையாக அக் குழந்தைகளை வளர்த்தனர். சிவபெரு மான் பார்வதியுடன் அக் குழந்தைகளைப் பார்க்க வந்தனன். பார் வதி அக் குழந்தைகளை ஒருசேரத் தழுவினள். உடனே அக் குழந்தைகள் ஆறும் ஆறு முகங்களும் பன்னிரண்டு கைகளும் ஒருடலும் இரண்டு திருவடிகளுமாக ஆறுமுகக் கடவுளாயின.

அப்போது சிவபெருமான் அப் பிள்ளை ஒரு புறம், பார்வதி ஒரு புறமாக எழுந்தருளியிருந்தனன். அம்மையால் ஒரு சேரத்தழுவப் பெற்று ஒருருவாகி உயிர்களுக்குப் பற்றுக்கோடாக விளங்குகின்றமை யால் ஆறுமுகன் கந்தன் எனப் பெயர் பெற்றான். அவன் சரவ வணப் பொய்கையில் தோன்றியமையால் சரவணபவன் என்றும், கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப் பெற்றமையால் கார்த்திகேயன் எனவும், கங்கையில் தோன்றியமையால் காங்கேயன் என்றும், வைகாசி விசாகத்திற் பிறந்தவன் ஆதலால் விசாகன் என்றும் பெயர் உடையவனாயினான். வேள் என்பது விருப்பம்; யாவரும் விரும்பு மாறு பேரழகுடையவன் வேள்; அவன் மன்மதன்; மன்மதன் திருமாலுக்கு மகன் ஆனதால் கரிய நிறமுடைய வேள் கருவேள்; ஆறுமுகன் சிவபெருமானுக்குத் திருமகன் செவ்வேள். மாறாத இளமையுடையவன் முருகன்; முருகன் தமிழ்நாட்டு மலைக்கடவுள். சிவபெருமான் பார்வதியிடம் பின் வருமாறு கூறுகிறான்: (கந்த புராணம்—உற்பத்திக் காண்டம்—திரு விளையாட்டுப் படலம் 18, 19.)

"நன் முகம் இரு மூன்று உண்டால் நமக்கு; அவைதாமே [கந்தன்
தன்முகமாகி உற்ற; தாரகப் பிரம மாகி
முன்மொழிகின்ற நந்தம் மூவிரண்டு எழுத்தும் ஒன்றாய்
உன் மகன் நாமத்து ஓராறு எழுத்தென உற்ற வென்றே."

(முருகனுக்குரிய ஆறெழுத்து மந்திரம் "ஓம் சிவாய நம"; "சிவாய நம" என்பது ஐந்தெழுத்து மந்திரம்.)

> " ஆதலின் நமது சத்தி அறுமுகன் ; அவனும் யாமும்
> பேதகம் அன்றால் ; நம்போல் பிரிவிலன் யாண்டும் நின்றான்;
> ஏதமில் குழவி போல்வான், யாவையும் உணர்ந்தான், சீரும்
> போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்கு அருளவல்லான். "

முருகப் பெருமான் சூரனை வெல்லுமாறு புறப்பட்டான். பதினொரு உருத்திரர்களையும் 1. தோமரம், 2. கொடி, 3. வாள், 4. வச்சிராயுதம், 5. அம்பு, 6. அங்குசம், 7. மணி, 8, தாமரை மலர், 9. தண்டம், 10. வில், 11. மழு ஆகிய ஆயுதங்களாக்கித் தந்து, சிவ பெருமான் முருகப் பிரானிடம் சத்தி வேலையும் தந்தருளினான். தாயும் தந்தையும் முருகனை மார்புறத் தழுவி உச்சி மோந்து வழியனுப்பினார்கள்.

வழியிடையே இருந்த மாயாபுரியில் தாருகனையும் கிரௌஞ்ச மலையையும் அழித்து மயன்செய் தேவகிரியில் தேவரனைவரும் தொழ முருகப்பிரான் எழுந்தருளியிருந்தனன். காசி, திருப்பருப்பதம், வேங்கடமலை, திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சி, திருவண்ணாமலை, திருவெண்ணெய் நல்லூர், திருமுது குன்றம், தில்லை மூதூர் வணங்கி முருகன் மண்ணியாற்றங்கரையினை அடைந்து அங்கே தங்கிச் சிவபூசை புரிந்தான் ; சிவ பெருமான் அம்மையோடு தோன்றிப் பாசுபதம் தந்தருளினன். சேய்—முருகன் ; சேய் ஆக்கிய நல்லூர் சேய் நலூர் எனப் பெயர் பெற்றது. அங்கிருந்து புறப்பட்டுத் திருவிடைமருதூர், திருக்கருப்பறியலூர், திருவாரூர், திருச்செங்குன்றூர் தாண்டிப் பெருமான் திருச்செந்திமா நகரஞ் சேர்ந்தான். அலைவாயருகே தனக்கொரு கோவில் அமைத்துச் சூரபன்மன் முதலியோர் வரலாறு விண்ணவர் ஆசிரியர் வியாழன் கூறக்கேட்டு, வீரவாகு தேவரைத் தூதனுப்பி இசையாத சூரனோடு போர்தொடுத்தான். சிங்க முகன் " அண்ணலே நமக்கு ஐயன் அருளிய நூற்றெட்டு யுக ஆயுள் கழிந்தது. அதற்கு அடையாளம் தாருகன் அழிவு. அதனால் பெருமான் சத்தியே முருகன். ஆதலின் தேவரை விடுத்து முருகனைப் பணிதலே நலம் " என்று கூறினான். சூரன் கேட்கவில்லை. சிங்க முகன் போரிட்டு அழிந்தான். சூரனோ அழியா உடல் பெற்றவன். முருகப் பிரானோடு போரிட்டு உடைந்து தலை கீழாகக் கடலிலே மாமரமாக நின்றான் ; அதனை முருகன் விட்ட வேல் இருகூறாகப் பிளந்தது. சூர பதுமன் சூரனும் பதுமனும் ஆகிய இருவர் சேர்ந்த உருவம் ; அதனால் மாமரத்தில்

ஒரு கூருகிய சூரன் மயிலாகவும், மற்ெருரு கூருகிய பதுமன் சேவலாகவும் நின்றனர். திருமுருகப் பெருமான் மயிலை ஊர்தியாகவும், சேவலைக் கொடியாகவும் கொண்டு திருவருள் புரிந்தான். வளர்பிறைத் தலைநாளில் தொடங்கிய போர் ஆறு நாள் நடந்தது ; ஆருவது நாளில் சூரன் உருக்கொண்டு நின்ற மா பட்டது. மா-மாமரம். மா பட்ட இடமே மாப்பாடு என்று பெயர் பெற்றது ; அது இன்று மணப்பாடு என்று மருவி வழங்குகின்றது.

இவ்வாறு சூரன் பட்டது ஐப்பசி மாதம் வளர்பிறை ஆரும் நாள். திருக்குற்ருலக் குறவஞ்சியில் கவிப் பெருமான் திரிகூட ராசப்பக் கவிராயர் இந்நிகழ்ச்சி பற்றி நகைச்சுவை ததும்பப் பின் வருமாறு பாடுகின்றர்.

" மீறும் இலஞ்சிக் குறத்தியைக் கொண்ட செவ்
 வேட் குறவன் முதல் வேட்டைக்குப் போன நாள்
ஆறு நாட் கூடி ஒரு கொக்குப்பட்டது
 அகப்பட்ட கொக்கை அவித்து ஒரு சட்டியில்
சாருக வைத்தபின் வேதப்பிராமணர் தாமும் கொண்டார்
 சைவர் தாமும் கொண்டார் தவப்
பேரு முனி வரும் ஏற்றுக் கொண்டார் இதை."

இலஞ்சி திருக்குற்ருலத்தின் அருகிலுள்ள ஓர் ஊர் ; இலஞ்சிக் குறத்தி—இலஞ்சியில் கோவில் கொண்டிருக்கும் வள்ளியம்மை. கொண்ட-மனைவியாகக்கொண்ட; செவ்வேள்—குறவன்-முருகப்பெருமாளுகிய குறவன். குறத்தியை மணந்தவன் குறவன். முருகன் ஆடிய முதல் வேட்டையில் ஆறுநாட் கூடி ஒரு கொக்குப் பட்டது ; அதை ஒரு சட்டியில் அவித்துச் சாருக வைத்தான் ; அக்கொக்குச் சாற்றைப் பிராமணர் உண்டனர் ; புலாலுணவே அறியாத சைவரும் உண்டனர் ; முனிவர் தம் தவப் பயனுக ஏற்றுக்கொண்டனர் என்பது நகைச்சுவை ததும்பும் ஒரு நிகழ்ச்சியாக இருக்கின்றதல்லவா ? இது ஒரு சிலேடை—இரு பொருள் தருவது. பாருங்கள், மெய்ப்பொருளை !

வேட்டை—திருமணம் ; ஆறு நாள்—சட்டி ; கொக்கு—மாமரம் ; சாறு—திருநாள் ; சட்டியில் சாறு—சட்டித் திருநாள் ; முதல் வேட்டை —முதல் திருமணம் ; தேவயானை திருமணம். ஐப்பசி வளர் பிறைச் சட்டியன்று சூரன் மாமரமாக நின்றதும் அதனை

முருகன் வேலால் இரு கூறாக்கி மயிலும் சேவலுமாக ஆக்கி மாயா வச்சிர உடம்பினன் சூரபதுமனை ஆட்கொண்டதும், அந்த நாளைப் பிராமணரும் சைவரும் முனிவரும் திரு நாளாகக் கொண்டாடுவதும் இங்கே குறிக்கப் பெற்றுள்ள நிகழ்ச்சி.

மாப்பாடு என்ற மணப்பாடு என்ற ஊரில் இன்னும் மாமரம் உண்டாவதில்லை ; சுற்று ஊர்களில் உண்டானாலும் சிறிது வளர்ந்த பின் பட்டுப் போகின்றது.

சூரனை ஆட்கொண்ட மயிலோன் திருச்செந்திலுக்கு வந்தான். மாலயன் முதலோர் முருகனை வழிபட்டேத்தினர். முருகப் பெருமான் சிவபெருமானை நிறுவி வழிபட்டேத்தினன். இது பற்றிய கந்த புராணச் செய்யுட்கள் மூன்று பின்வருவன :

“ அப்பொழுது அவ்விடை அமரர் கம்மியன்
கைப்படு செய்கையால் கந்தவேள் ஒரு
செப்பரு நிகேதனம் செய்வித்து ஈசனை
வைப்புறு தாணுவில் வருவித்தானரோ.
(கம்மியன்—தச்சன்; நிகேதனம்—கோவில்.)

“ ஆமயம் முதலிய ஐந்து கந்திகள்
மாமலர் மஞ்சனம் அமிர்தம் வான்துகில்
தூமணி விளக்கொடு தூபம் கண்ணடி
சாமரை ஆதிகள் அமரர் தந்திட
(கந்திகள்—மணப்பொருள்கள்.)

“ முழுதொருங் குணர்ந்திடு முருகன் யாவரும்
தொழுதரும் இறைவன் நூல் தொடர்பு நாடியே
விழுமிய கண்ணுதல் விமலன் தாள் மலர்
வழிபடல் புரிந்தனன் மனங்கொள் காதலால்.
(நூல்—ஆகமம் ; கண்ணுதல்—சிவபெருமான்.)

(மீட்சிப் படலம் 31, 32, 33.)

## திருச்செந்தூர்—சுப்பிரமணியர்

சூரபதுமனை வெல்லுவதற்காக முருகன் படையுடன் வந்து தங்கியிருந்த தலைமையிடமே திருச்செந்தூர். இது ஒன்றுதான் படை வீடு. படை வீடு என்பது பாசறை, ஆயுதசாலை, அரசிருக்கை என்று பொருள்

படும். ஆனால் நக்கீரர் அருளிய திருமுருகு ஆற்றுப்படையில் திருப் பரங்குன்றம், திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), திருவாவினன்குடி (பழநிமலை), திருவேரகம் (சாமி மலை), குன்றுகள் தோறும் ஆடல், பழமுதிர்சோலை (அழகர் கோவில்) என்ற ஆறும் ஆற்றுப்படை வீடுகள் ; ஆற்றுப்படுத்தப்பட்ட இடங்கள் என்று பொருள்படும்.

திருச்செந்தூரிலுள்ள கோவிலில் முருகப் பெருமான் சிவலிங்கம் அமைத்து வழிபட்டனன் ; சிறந்த சிவன் கோவில் இது ; இது இப்போது முருகன் கோவிலாக மாறிவிட்டது ; என்றாலும் கருவறையி லுள்ள முருகப் பெருமானுக்குப் பக்கத்தில் அந்தச் சிவலிங்கம் இன்றும் பேணி வைக்கப்பெற்றிருப்பதோடு முருகனுக்கு வழிபாடு நடக்கும் ஒவ்வொரு காலத்திலும் இச்சிவலிங்க வழிபாடும் நடக்கின்றது. சூரனைத் தடிந்து தம்மைக் காத்தருளிய முருகப் பெருமானைத் தேவர் கள் வழிபட்டமைக்கு அறிகுறியாக முதலில் முருகப்பெருமானுக்கு வழிபாடு நடக்கின்றது ; உடனே பூசாரி முருகப்பெருமானுக்குப் பின்னாலே போய்ச் சிவலிங்கத்துக்கு வழிபாடு ஒவ்வொரு காலத்திலும் செய்கிறார். அதன் கருத்து செந்திலாண்டவன் சிவலிங்க வழிபாடு செய்கின்றமையைக் காட்டுவதாம். முன்புறம் மயில்மண்டபத்தில் மயில்களுடன் நந்தியும் இருப்பது காணலாம்.

திருச்செந்தூரில்தான் முதல் முதல் முருகப் பெருமானுக்குத் திருக்கோவில் அமைந்தது. பின்னர் திருப்பரங்குன்றம், திருவே ரகம் முதலிய பிற இடங்களிலெல்லாம் திருக்கோவில்கள் அமைந்து முருக வழிபாடு நடைபெறுகின்றது. யானைமுகப்பெருமான்தான் சிவ பெருமானுடைய மூத்த பிள்ளையார் ; இளைய பிள்ளையார் முருகப் பிரான். ஆனால் இரு பிள்ளையார்களும் சிவபெருமான் எடுத்த வேறு திருமேனிகளே ஆதலின் இவர்கள் இருவரும் சிவபெருமானின் வேறல்லர்.

" நம் செந்தின் மேய வள்ளி மணாளர்க்குத் தாதை கண்டாய் " என்று திருமறைக்காட்டுத் தேவாரத்திற் செந்திற் பெருமானைப் பாடி யிருக்கின்றார் திருநாவுக்கரசு நாயனார்.

திருநெல்வேலியிலிருந்து தென்கிழக்காக முப்பத்துநான்கு மைல் தூரத்தில் கடற்கரையில் இருக்கும் நகரம் திருச்செந்தூர் ; புகை வண்டி வழியாக இது முப்பத்தெட்டு மைல் தூரம். இவ்வூர் பண்டைக் காலத்தில் அலைவாய்ச்செந்தில் என்று பெயர்

பெற்றிருந்தது. இது கடற்கரை மேல் அலைவாயில் இருத்தலினாலே அலைவாய், சீர் அலைவாய் என்று பெயர் இடப்பெற்றது.. முருகன் சேந்த நிறம் உடைமையால் சேந்தன் எனப் பெறுகிறான். சிவந்த நிறமுடைய சேந்தனுக்கு இக் கோவில் இல்லாக இருத்தலினாலே இது சேந்தில், செந்தில் என்று பெயர் பெறுவதாயிற்று. தேவாரக் காலம்வரை இது அலைவாய், செந்தில் என்று வழங்கப்பெற்று, பின் செந்தில் ஊர் என்றும் பெயர் பெற்றது. செந்தில் ஊர் செந்தூர், திருச்செந்தூர் ஆகி அருணகிரிநாதர் காலத்தில் திருச் செந்தூர் என்று திருப்புகழில் வழங்கவும் பெற்றது. சே-சிவந்த நிறம் ; சேந்தன், சேய் என்பன இதன் அடியாக வந்தனவே.

பெருமானைச் செந்திலாண்டவன், முருகன் என்ற பெயர்களால் அடியார்கள் வாய் குளிரப் புகழ்ந்து மகிழ்கின்றார்கள். சுப்பிரமணியன் என்ற பெயர் பிற்காலத்தில் வழங்கப்பெற்றுவருகிறது. ஆண்டவன் முன்சென்று மனம் உருகி வாயார வாழ்த்துவார் யாவரும் " முருகா, முருகா " என்றே வாழ்த்துகின்றனர். இந்தக் கலியுகத்திலே கண்கண்ட தெய்வமாக இப்பெருமான் இருத்தலினாலே " கலியுகவரதன் " என்றும் புகழப்பெறுகின்றனன். குன்றுதோறும் திருவிளையாடல் புரிபவன் திருமுருகன். இங்கும் இக் கோவில் இருப்பது ஒரு மணற் குன்றின்மேலேதான்.

திருமுருகாற்றுப்படையைப் பாடியருளிய நக்கீரதேவ நாயனாருடைய திருவுருவம் இன்றைக்கு அறு நூறு ஆண்டுகளின் முன்னர் பராக்கிரம பாண்டியனால் இக் கோவிலில் எழுந்தருளச் செய்யப் பெற்றது என்ற செய்தியைக் கல்வெட்டுக் கூறுகின்றது. கல்வெட்டுக்கள் சிலவற்றில் " சுப்பிரமணியப் பிள்ளையார், சுப்பிரமணியப் பட்டாரகர் " என்று பெருமான் குறிப்பிடப்பெறுகிறான். சங்க இலக்கியங்களில் இத் திருக்கோவில் குறிப்பிடப்பெற்றிருப்பதால், இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இது புகழ் பெற்றிருத்தல் வேண்டும். முருகப் பெருமான் செந்திலாண்டவனாக எழுந்தருளி வந்து சூரனை வென்ற காலம் கணக்குக்கு எட்டாதது என்ப.

கடலைப் பார்க்கக் கடற்கரையிலே கருவறையில் கிழக்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றார் சுப்பிரமணியப் பெருமான். இவருடைய இடது கைப் புறமாகப் " பஞ்ச முகச் சிவலிங்கப் பெருமான் "

எழுந்தருளியிருக்கின்றார். கருவறைக்கு அடுத்திருப்பது திரு இடை நாழி. இதிலே அருச்சகர்கள் தாம் இருப்பார்கள். பெருமானுக்கு இரு காவலர் வீரபாகு தேவர், வீர மார்த்தாண்டர் என்ற வீரர். இவர்கள் இருக்கும் இடம் மணி இருத்தலால் மணியடி என்று பெயர் பெறும். இதற்கடுத்த மா மண்டபம் மயில் மண்டபம் என்று பெயருடையது. இதிலே இரண்டு மயில்கள், இடையே நந்தியுடன் அமைந்துள்ளன. இக் கோவிலில் அம்மையும் அம்பலவாணரும் வயிரவரும் உள்ளனர்.

இந்த மயில் மண்டபத்துக்கு நடுவே வடபுறமாகத் தெற்கே பார்க்க ஆறுமுக நயினார் எழுந்தருளியிருக்கின்றார்; வலப்புறம் வள்ளியம்மையும் இடப்புறம் தேவயானையம்மையும் இருக்கின்றனர். சிவன் கோவில்களில் கூத்தப்பிரான் தெற்கே பார்க்க எழுந்தருளி யிருப்பது போல ஆறுமுக நயினார் முருகன் கோவில்களில் இருக் கின்றார். சிவன் கோவில் திருநாட்களில் ஏழாந் திருநாளன்று கூத்தப்பிரானாகிய நடராசர் சிவப்புச் சாத்தி, வெள்ளை சாத்தி, பச்சை சாத்தி, மூன்று முறை அழித்தல், மறைத்தல், அருளலை உணர்த்தி எழுந்தருளிவருவதுபோல ஆறுமுக நயினார் முருகப்பெருமான் திருவிழாக்களில் ஏழாந் திருநாளன்று எழுந்தருளி வருவார். கருவறையிலிருந்து அதிகாலை உருகு சட்டத்தில் வருவது தோற்றத் தையும், காலையில் அலங்காரத்துடன் பவனி வருவது காத்தல் தொழிலையும் குறிக்கும். திருச்செந்தூரில் மாசிமாதத்திலும், ஆவணி மாதத்திலும் ஆக இரண்டு பெரு விழாக்கள் நடைபெறுகின்றன. நடராசாவேதான் ஆறுமுக நயினார் என்பது திருமூலர் திருமந்திரத் தால் புலனாகின்றது.—

> " ஆறுமுகத்தில் அதிபதி நான் என்றும்
> கூறு சமையக் குருபரன் நான் என்றும்
> தேறினர் தெற்குத் திரு அம்பலத்துள்ளே
> வேறின்றி அண்ணல் விளங்கி நின்றானே."

வைகாசி விசாகத்தன்று விசாகனை நாடெல்லாம் கூடிவந்து கடலாடி வழிபட்டு உய்யும். சூரசம்மாரம் நடந்த ஊர் இது, ஆதலினால் இங்கே கந்தர்சட்டித் திருவிழாவே உயிர் போன்றது; உண்மையான முருகன் அடியார்கள் இங்குவந்து கூடிப் பெருமான் சூரனுக்கு அருள்வது கண்டு திருவருள் பெறுவர்.

ஆறுமுக நயினர் பொற்பணியமைந்த நாற்கால் மணி மாடத்தில் எழுந்தருளியிருக்கின்றார். உள் முதற் சுற்றில் தென் மேற்குப் பகுதியில் வள்ளியம்மை திருக்கோவிலும், வடமேற்குப் பகுதியில் தெய்வயானை திருக்கோவிலும் இருக்கின்றன ; இது வள்ளியம்மை பிரகாரம். இதற்கடுத்துள்ள இரண்டாம் சுற்று பெருமாள் கோவில் பிரகாரம். ஆறுமுக நயினருக்கு எதிரேயுள்ள வெளி மண்டபம் " சண்முக விலாசம் " எனப் பெறும். இங்கேதான் பலவகைப்பட்ட தீராத நோயாளிகள் வந்திருந்து நோய்தீரப் பெற்றுப் பெருமானுடைய திருவருளையும் கொண்டு போகின்றார்கள். பெருமான் திருவருளைப்போல இங்கே எப்போதும் கடற் காற்று வீசிக்கொண்டே இருக்கும்.

சண்முக விலாசத்துக்கு நேர்தெற்கே நாழிக் கிணறும் கந்த புட்கரணியும் இருக்கின்றன. இது இருபத்துநான்கடி ஆழமுடையது ; நடுவே பதினைங்கடிச் சதுரமாக இருக்கும் நீர் நிலையே கந்தப் பெருமான் பெயரால் அமைந்த கந்தபுட்கரணி. இதிலுள்ள நீர் கந்தக மணமாக இருக்கிறது. இதற்குக் கீழ் பக்கம் உள்ளது ஒரு திரணை ; அதில் வடக்கோரத்தில் இருக்கிறது நாழிக் கிணறு. இது நாழி உருவில் நாண்கைந்தடி ஆழம் உள்ளது. இதில் எத்தனையாயிரம் பேர் மோந்து மோந்து குளித்தாலும் தண்ணீர் குறைவதில்லை. இது முருகப் பெருமான் வேலாயுதத்தை ஊன்றியமையால் எழுந்த நல்ல தண்ணீர் ஊற்று. கந்தபுட்கரணி, நாழிக் கிணற்று நீரில் குளித்துப் பின்னரே கடலாடுவது விதி முறை. மக்கள் நலத்தை முன்னிட்டு இந்நீர் குழாய் வழியே மேலே ஏற்றப் பெற்று, குளிப்பதற்கு வசதி செய்யப்பட்டுள்ளது.

கொற்கைப் பாண்டியர்கள் ஆட்சியிலேயே இக் கோவில் இருந்து வந்திருக்கிறது. அக்காலத்தில் தண்பொருநைத்துறையிலிருந்து பட்டத்து யானைமேல் திருமஞ்சனம் முருகப் பெருமானுக்கு நாடோறும் வந்திருப்பது தெரிகிறது. இன்றும் அப்படித்துறை " திருச்செந்தூர்த் திருமஞ்சனப்படித்துறை " என்று பெயர் வழங்கி வருகிறது. இன்றும் விழாக் கொடியேற்றுக்கு முந்திய நாள் கொற்கை மண் எடுத்துவரும் பழக்கம் இருந்துவருகிறது.

இன்றைக்கு முந்நூற்றுப் பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் கி.பி. 1648-ல் ஆறுமுக நயினர் திருவுருவைத் தங்கத் திருவுரு என்று மயங்கிச் சில டச்சுக் கொள்ளைக்காரர் கப்பலில் தூக்கிச்

செல்வாராயினர். ஆண்டவன் அருளால் அச்சிலையின் கனம் மிகுதி யாகிக் கப்பலை ஆழ்த்திவிடும் போன்ற நிலை ஏற்பட்டுவிட்டது. அத் துடன் பெரும் புயற்காற்று வீசிக் கப்பலை அலைத்தது. அதனால் கொள்ளைக்காரர் மிகவும் அஞ்சி ஆறுமுக நயினாரைக் கடலிலேயே தள்ளிவிட்டுப் போய் விட்டனர். அதே கொள்ளைக்காரர் கற்சிலையா லாகிய மூலவரையும் உடைத்து விட்டுப் போயிருந்தனர். இச்செய்தி களை அறிந்த அக்கால ஆட்சித் தலைவர் வடமலையப்ப பிள்ளையன் மூலவருக்கும் ஆறுமுக நயினாருக்கும் புதுத் திருவுருவங்கள் சமைக்கச் செய்து அவற்றை மேளதாளத்துடன் திருச்செந்தூருக்கு எழுந் தருளப் பண்ணிக்கொண்டு வரச் செய்தார். ஒரு நாள் பாளையம் சாலையில் அவை தங்கின; அந்த இடத்தில் தோன்றிய திருக் கோவிலே சாலைக் குமரர் கோவில். மறுநாள் புறப்பட்டுப் பாளையங் கோட்டைக்கு வர, ஆறுமுகநயினார் கடலிலே கிடைத்துவிட்ட செய்தி வந்து விட்டது. அந்த இடம்தான் இப்போது "முருகன் குறிச்சி" என்ற பெயருடன் விளங்குகின்றது. ஆண்டவன் கனவில் அருளிய கட்டளைப்படி பிள்ளையன் கடலிலே சென்று எலுமிச்சம்பழம் மிதந்த இடத்தில் இறங்கித் தாமே ஆறுமுகப் பெருமானை எடுத்து வந்தனர். ஆதலின் அவர் கட்டளைப்படி ஆறுமுகப் பெருமானுடைய புதுத் திருவுருவம் பாளையங் கோட்டைச் சிவன் கோவிலில் வைக்கப்பெற்று இன்றும் காட்சியருள்கின்றது. மூலவர் திருவுருவம் மட்டும் திருச் செந்தூருக்குக் கொண்டுபோகப் பெற்றுக் கொல்லம் 829 (கி. பி. 1653) தை மாதம் 29-ம் நாளன்று கடலிற் கிடைத்த ஆறுமுக நயினாருடன் உரிய இடங்களில் அமைக்கப் பெற்றுக் குடமுழுக்கு விழாவும் நடைபெற்றது. இதனால் ஆறுமுகநயினார் கடலினுள் ஐந் தாண்டுகள் இருந்தார் என்பது புலனாகின்றது. அதற்குரிய தேய்வு கள் அவர் திருமேனியில் இன்றும் காணக்கிடக்கின்றன.

மேலக்கோபுரம் நூற்றிருபத்தேழு அடி உயரமானது. இது சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன் அடிகளார் தேசிக மூர்த்தித் தம்பி ரான் என்ற பெரியாரால் ஒன்பது தட்டுக்களுடன் கட்டி அமைக்கப் பெற்றது. பழைய பாறையைக் குடைந்து அமைந்த இத் திருக் கோவில் இப்போது அழகான உறுதியான கருங்கற் பணியுடன் திகழ் கின்றது. இக் கருங்கற் பணியைத் தொடங்கிய பெரியார் மோனச் சாமிகள்; பணி தொடங்கியது கி.பி. 1868-ல்; இப்பணியை 1939-ல் முடித்த பெருமை ஆறுமுகச் சாமிக்கு உரியது. கோபுரம் இதன் பின்னர் புதுப்பிக்கப்பட்டது.

இங்கே கோவிலருகே தங்குவதற்கு மிக்க வசதியான பெரிய பெரிய கட்டிடங்களைக் கோவிலார் கட்டியிருக்கின்றனர். அரசினர் வழிப்போக்கர் விடுதியும் கோவிலருகே இருக்கிறது. பலப்பல மடங்களும் மண்டபங்களும் பல சாதியினர் தத்தமக்கெனக் கட்டியிருக்கின்றார்கள். இக்கோவில் ஆதரவில் ஓர் ஆகமப் பாடசாலையும் ஏழை விடுதியும் நிறுவப் பெற்றுள்ளன. இனி, திருநெல்வேலி வட்டத்திலுள்ள இரண்டு கோவில்களையும் கும்பிடுவோம்.

## திருநெல்வேலி வட்டம்

### குறுக்குத்துறை—சுப்பிரமணியர்

சிந்துபூந்துறையிலிருந்துதான் முன்னர் நெல்லையப்பருக்கு நாடோறும் திருமஞ்சன நீர் கொண்டு போகப் பெற்றது. சிந்து பூந்துறைக்குத் தெற்கே ஒரு மைல் தூரத்தில் ஆற்றின் நடுவே நல்ல பாறை இருக்கிறது. அது மிகவும் விளைந்து திருவுருவங்கள் சமைப்பதற்கு நல்ல தகுதியுடன் இருந்து வருகிறது. அதனால் அது திருவுருமாமலை என்றும் பெயர் பெற்றுவிட்டது.

இப்பாறையிலிருந்துதான் திருச்செந்தூர் மூலவர் முருகப்பெருமானுடைய திருவுருவம் 1653-ல் சமைக்கப் பெற்றது. அதனை ஆக்கிக் கொண்டிருந்த சிற்பி அப்பாறையிலும் முருகப் பெருமான் திருவுரு ஒன்று ஆக்கினான். வடமலையப்ப பிள்ளையினுடைய தாயார் அந்தத் திருவுருவை நாடோறும் பூசித்து வந்ததனால் அப்பாறை ஆச்சிப்பாறை என்ற பெயரும் பெற்றிருந்தது. பாறையில் அமைந்த முருகப்பெருமானைத் திருநெல்வேலியிலிருந்து நாடோறும் பலர் வந்து வழிபடத் தொடங்கினர். நாளடைவில் அப்பெருமானுக்குத் திருக்கோவிலும் எழுந்தது. திருநெல்வேலியிலிருந்து ஆற்றுக்கு அது சிந்து பூந்துறையை விடக் குறுகிய வழியுடைமையால் குறுக்குத் துறை எனப் பெயர் பெற்றது. இத்திருக் கோவிலில் சித்திரை மாதத்திலும் ஆவணியிலும் பெருவிழாக்கள் நடைபெறுகின்றன. இக்கோவில் திருவாவடுதுறை யாதீன ஆட்சியில் உள்ளது. இது குறுக்குத்துறை ஆனபடியால் சிறிது மிகுதியான தூரமாகிய சிந்து பூந்துறையிலிருந்து திருமஞ்சனம் வருவது நின்று குறுக்குத்துறையிலிருந்து வரத் தொடங்கி நடைபெற்று வருகிறது. அதிலிருந்து குறுக்குத் துறைக்கும்

நெல்லையப்பர் கோவிலுக்கும் ஆகக் கற்படித்தளம் மூன்றடி அகலத்தில் அமைக்கப் பெற்றது. இக் கற்படித்தளம் நல்லதோர் சாலை ஏற்பட்டபின் அதன்கீழ் அழுந்திப் போய்விட்டது. 1923-ம் ஆண்டில் வெள்ளத்தில் சாலைகள் அடித்துக்கொண்டு போகப் பட்டபோது இக் கற்றளம் யாவரும் அறியச் சிற்சில இடங்களில் வெளிப்பட்டிருந்தது. இக்கோவிலுக்குச் சிறிது வடக்கே இருப்பது திருச்செந்தூர் செல்லும் புகைவண்டிப் பாலம்; தெற்கே அண்மையில் புதிதாக அமைந்திருக்கிறது ஒரு வண்டிப் பாலம்.

### சிந்துபூந்துறை—பாளையம்சாலைக் குமாரசாமி

திருநெல்வேலியிலிருந்து பாளையங்கோட்டைக்குப் போகும் சாலை பாளையம்சாலை. இது சிந்து பூந்துறையில் புகும் இடத்தில் குமரர் கோவில் ஒன்று அமைந்து பாளையம் சாலைக்குமரர் கோவில் என்று அழைக்கப் பெறுவதாயிற்று. கி.பி. 1653-ல் திருச்செந்தூர்க் கோவிலுக்கு அமைக்கப் பெற்ற மூலவரும் ஆறுமுக நயினரும் தங்கிய இடம் இது. அதனால் இங்கே உள்ள மூலவர் ஆறுமுகராகவே இருக்கின்றனர். இக்கோவில் நாளடைவில் சிறிது பெரிதாகிப் பொருள் தரத்திலும் வளர்ந்து இன்று மிக்க சிறப்புடன் விளங்குகின்றது. நாடோறும் எண்ணற்ற மக்கள் கூடி வழிபட்டுத் திருவருள் பெறுகின்றனர். இதற்கு எதிரிலே ஒரு சத்திரமும் இருக்கிறது.

இனி, தென்காசி வட்டத்திற் சென்று முருகப் பெருமானை வழிபடுவோம்.

## தென்காசி வட்டம்

### இலஞ்சி—குமரர்

தென்காசியிலிருந்து இலஞ்சி ஊர் வழியாகவும், குற்றாலம் சாலையிலிருந்து விலகி நேராகவும் குமரர் கோவிலுக்கு நல்ல சாலைகள் வருகின்றன. இலஞ்சி என்பது மகிழ மரம். மகிழின் கீழ்ப் பெருமான் தோன்றியதனாலே இவ்விடம் இலஞ்சி எனப் பெயர் பெற்றது. இலஞ்சி என்பது ஏரி; ஏரிகள் சூழ்ந்த இடம் இலஞ்சி என்று கூறுதலும் உண்டு. பார்வதி திருமணத்தின்போது

வடநாடு தாழ்ந்து தென்னாடு உயர்ந்ததாகச் சிவபெருமானால் அதனைச் சரிசெய்ய அனுப்பப்பெற்ற அகத்திய முனிவர் இங்கே வந்து சிற்றாற்றின் கரையில் வெண் மணலைச் சிவலிங்கமாகப் பிடித்து வைத்துப் பூசனை ஆற்றினார் ; அவர் முதல் நாள் மாலையிலும் மறு நாட் காலையிலும் பூசை செய்த இரண்டு வெண் மணற் சிவலிங்கங்களையும் ஒன்றாக்கினார். அதனால் "இரு வாலுக நாயகர்" என்று சிவலிங்கப் பெருமான் பெயர் பெற்றார். வாலுகம்-வெண் மணல்.

இப்போதுள்ள திருக்கோவிலின் வட பகுதியில் இருவாலுக நாயகர் கிழக்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றார். அம்மை "இருவாலுகர்க் கினியாள்" தென் முகமாக அமர்ந்திருக்கின்றாள். குமரப் பெருமான் கோவிலின் தென்பகுதியில் எழுந்தருளியிருக்கின்றான். குமரன் திரு முன்பு மயிலும், இருவாலுக நாயகர் திரு முன்பு நந்தியும் உள. இருவாலுக நாயகர் குவளை சாத்தியே இருக்கின்றார் ; இவருக்குத் திரு முழுக்காட்டு உண்டு ; ஆனால் எண்ணெய் முழுக்காட்டு மட்டும் இல்லை.

குமரப் பெருமான் ஒரு திரு முகத்துடனும் வலது புறமுள்ள இரண்டு கைகளில் வரதமும் வேலும், இடக்கைகளிரண்டில் அபயமும் குக்குடமும் பொருந்த இளமையுடன் எழுந்தருளியிருக்கின்றார். குக்குடம்-சேவல். முருகப்பெருமானுக்கு வேல் ஞானசத்தி, வள்ளியம்மை இச்சா சத்தி, தெய்வயானையம்மை இரியா சத்தி. முருகனுக்கு உள்ள பல மூர்த்தங்களுள் குமார மேனியுடன் இங்கே எழுந்தருளியிருத்தலால் பெருமான் குமரர் என்று பெயர் பெற்றார். குமரருடைய கோவில் குமரர் கோவில்.

ஐப்பசி மாதம் கந்தர்சட்டித் திருவிழாவில் குமரப் பெருமான் அயன், அரி, அரன், மகேசன், சதாசிவன் ஆகிய ஐந்து மூர்த்திகளாக முறையே முதல் ஐந்து நாட்களில் காட்சியருளி ஆறும் நாள் சிவ பெருமானாக நின்று சூரனை வென்று மயிலும் சேவலுமாக ஆக்கியருள்கின்றான்.

இலஞ்சிக் குமரர் கோவிலிலே எண்ணற்ற திருமணங்கள் அடிக்கடி நடைபெறுகின்றன.

## பண்புளி—திருமலைக்குமாரசாமி

புளிய மரமே இங்கே தல மரம். அதனால் இது பண் புளி என்ற பெயர் பெற்றது. இது பண்புளிப் பட்டணம் என்றும் பெயர் பெறும். இதற்கு வட மேற்கே இரண்டு மைல் தொலைவில் உள்ள சிறு மலையே இத்திருமலை. முந்நூறு அடி உயரமுள்ள இத்திருமலை மேல் குமரப் பெருமான் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கின்றார். இம்மலை மேல் ஏற 546 படிகள் அமைந்துள்ளன. மலை உச்சியில் புளிய மரம் ஒன்று தல மரமாக நிற்கிறது; அதன் அடியில் வேலும் மயிலும் கொண்ட கற்சிலை இருக்கிறது. திருச்செந்தூரிற் போல இங்கும் கோவில் முகப்பில் "சண்முக விலாசம்" என்ற மண்டபம் இருக்கின்றது. இம்மலைக்குத் தென்கிழக்கில் அரை மைல் தூரத்தில் அனுமநற்றின் தென் கரையில் கோட்டைத்திரடு என்று வழங்கும் இடத்தில் பழைய கோட்டை ஒன்று இருந்தது. அதிலிருந்த குமரன் திருவுருவமே பெருமான் கட்டளைப்படி இங்கே கொண்டு வரப்பெற்றுள்ளது. இம்மலைக் கோவில் அண்மையிலே வளர்ச்சி பெற்றது.

பண்புளி ஊரின் வடகிழக்குப் பகுதியில் சிவன் கோவில் ஒன்று இருக்கிறது; திரு நகரீசுரமுடையார், அம்மை அறம் வளர்த்த நாயகி. திருமலைக் குமாரசாமிக்குத் தைப்பூசத் திருவிழாவும் அதில் ஒன்பதாம் நாள் திருத்தேரும், கார்த்திகை மாதம் கடைசித் திங்களன்று தெப்ப விழாவும் பண்புளியில் நடைபெறுவன. கல்வெட்டுக்களில் "தண்டைக்கு நல்லான், திருமலைச் செல்வன், கலியுக மெய்யன்" என்று பெருமான் கூறப் பெறுகிறார். ஊர் "வடவாரி நாடு-காங்கேய குலகாலபுரம்" என்னப் பெறுகிறது. சிவபெருமான் "நகரீச்சரமுடைய நாயனார்" என்னப் பெறுகிறார்.

இங்கே இத்திருக்கோவிலிலிருந்து ஒரு "சித்த வைத்திய ஆராய்ச்சி மன்றம்" தொடங்கப்பெற்று மூன்றாண்டுகள் ஆகின்றன. இம்மன்றம் மிகவும் சிறப்பாகப் பயன் தருகிறது. தீராத நோய்களெல்லாம் இம்மன்ற மருந்துகளினால் திருமலைக் கலியுக மெய்யன் திருவருளாற் குணமாகின்றன. இனி, அம்பாசமுத்திர வட்டத்திற் செல்வோம்.

## அம்பாசமுத்திர வட்டம்

### கல்லிடைக்குறிச்சி—குமரன்

கல்லிடைக்குறிச்சியில் சுப்பிரமணியப் பெருமான் பெரிய கோவிலிலே எழுந்தருளியிருக்கின்றார். ஆனால் தலைவாசலுக்கு நேரேயிருப்பது மூத்தகுமாரன் விநாயகர் திருமுன். சிறப்பு வழிபாடெல்லாம் முருகனுக்கே நடைபெறும். இதை ஒட்டிய தலைச்சேரியில் திருவாவடுதுறைத் திருமடம் ஒன்று பெரியதாக இருக்கிறது. அண்மைக்காலம் வரை ஆதீனத்தின் சின்னப் பட்டத்தின் தலைமையிடமாக இருந்து வந்திருக்கிறது தலைச்சேரியிலுள்ள திருமடம்.

இனி, சங்கரநயினார் கோவில் வட்டத்திற் புகுவோம்.

## சங்கரநயினார் கோவில் வட்டம்

### புளியங்குடி—பாலசுப்பிரமணியர்

சங்கரநயினார் கோவிலுக்கு மேற்கே பத்தாவது மைலில் உள்ளது புளியங்குடி நகர். இதன் வடமேற்கு மூலையில் இத் திருக்கோவில் இருக்கிறது. இளமுருகப் பெருமான் கண் கவர் வனப்பினர்.

### விசுவநாதப்பேரி—பாலசுப்பிரமணியர்

விசுவநாத நாயக்கர் பேரால் அமைந்த பேர் ஏரியே விசுவநாதப் பேரி. சிவகிரி மலை மேல் இருக்கும் பால சுப்பிரமணியர், ஆறுமுக நயினார், சொக்கலிங்கப் பெருமான், மீனாட்சியம்மை கோவில்கள் விசுவநாதப்பேரி ஊர் எல்லையுள் இருக்கின்றன. ரூபாய் முப்பதினாயிரத்தின் மேல் வருவாய் வரும் கருப்பாயி நாச்சியார் கட்டளைகள் இங்கே இருக்கின்றன. அவைகளின் சார்பில் ஓர் உயர்நிலைப் பள்ளிக்கூடம் சிவகிரியில் நடைபெற்று வருகிறது.

இனி, கோவிற்பட்டி வட்டத்திலுள்ள கழுகுமலைக் கந்தநாதனை வழிபடுவோம்.

## கோவிற்பட்டி வட்டம்

### கழுகுமலை—சுப்பிரமணியர்

திருக்கழுக்குன்றத்தில் இன்றும் உச்சி வேளையில் கழுகுகள் வந்து படைப்பினை உண்ணுகின்றமை கண்கூடு. கழுகு வந்து வழிபட்ட ஊர் கழுகுமலை.

மூந்நூறு அடி உயரமுள்ள இம் மலை கழுகு போன்ற உருவம் உடையது ; அதனால் இது கழுகுமலை என்று பெயர் பெற்றது என்பது அறிஞர் கூற்று. இது ஒரு குகைக் கோவில். குகையிலேயே முருகப் பெருமான் போழக்குத் திருமேனியுடன் காட்சியருள்கின்றார். இங்ஙனமாகிய கோவில்களே திருச்செந்தூரும் வள்ளியூரும்- குகையை அப்படியே வைத்துக் கொண்டு மேலே திருக்கோவில் விரிவாகக் கட்டப் பெற்றுள்ளது. ஆறுமுகப் பெருமான் திருவுருவம் பாறையிலேயே ஒரே வரிசையில் ஆறுமுகங்களுடன் செதுக்கப்பெற்றது; ஆறு கைகளே காணப்படுகின்றன. மற்றவை மறைந்துள்ளன; "கழுகுமலைக் கந்தநாதனைக் காணாத கண் என்ன கண்" என்று இப்பக்கத்தார் அடிக்கடி சென்று கண்டு மகிழ்ந்து கருதிய நல னெல்லாம் பெற்றுக் காணிக்கை செலுத்தி வருகின்றனர். தைப் பூசத்திலும் பங்குனி உத்திரத்திலும் இங்கே பெரு விழா நடை பெறும் ; அதை ஒட்டிப் பெரிய மாட்டுத் தாவணியும் இங்கே கூடும்.

கழுகுமலை மேலே கீழ்புறம் "கல்வெட்டாங் கோவில்" என ஒரு கோவில் மிக மிக நுட்பமான வேலைப்பாட்டுடன் மலையிலேயே வெட்டப்பட்டு உலகப் பெருஞ் சிற்பிகள் அனைவராலும் ஒப்புயர் வற்றது என்று புகழப் பெற்று விளங்குகின்றது. மலை மேலே செதுக்கப்பட்டுள்ள உருவங்களும் கல் வெட்டுக்களும் இங்கே சமண முனிவர் வாழ்ந்தமையை விளக்குவன.

இனி, நான்குநேரி வட்டத்திற் புகுந்து வள்ளியம்மை திருமணக் கோலத்தை வணங்குவோம்.

## நான்குநேரி வட்டம்

### வள்ளியூர்—சுப்பிரமணியர்

நான்குநேரிக்குப் பத்து மைல் தெற்கே இருப்பது இவ்வூர். பாறையில் உள்ள ஒரு குகையிலே முருகப் பெருமான் வள்ளி நாயகி யாருடன் எழுந்தருளியிருக்கின்றார். வள்ளி திருமணம் நடந்த ஊர் வள்ளியூர். நம்பிராயன் என்ற வேடர் தலைவனே வள்ளி யம்மையின் தந்தை. திருக்குறுங்குடியில் திருமாலாகிய அழகிய நம்பிராயர் திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருப்பதும் இத்

திருமணம் இங்கேதான் நடந்தது என்பதற்குத் தக்க சான்ருகும். திருமாலின் பெண்களே வள்ளியம்மையும் தெய்வயானையும்; அவர்களை மணந்து கொண்டபடியால் முருகன் திருமாலுக்கு மருகனுயினுன். இத் திருமணம் தொண்டை நாட்டின் மேற்பாடி நகரருகே உள்ள வள்ளிமலையிலே நடந்தது என்று கந்த புராண ஆசிரியர் கூறுகிருர்.

வள்ளியூரிலும் அரசன் அரண்மனை இருந்திருக்கிறது என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இங்கே கந்தர் சட்டி விழா மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றது.

### திருமுருகனைப் பாடிய புலவர்

அருணகிரிநாதர் திருச்செந்தூர் முருகனைப் பற்றித் தொண்ணூற்றெண்பது திருப்புகழ்ப் பாக்கள் பாடியிருக்கின்ருர். இப் பெரியார் பொதிகை மலை, இலஞ்சி, கழுகுமலை, வள்ளியூர்களுக்கு எழுந்தருளி முருகப் பெருமான்மீது திருப்புகழ்ப் பாமாலை பாடிச் சூட்டித் திருவருள் பெற்ருர். ஊமை நீங்கிய குமர குருபர முனிவர் திருச்செந்தூர்ப் பெருமான் மீது கந்தர் கலி வெண்பாப் பாடினுர்; சிவப்பிரகாச முனிவர், பகழிக் கூத்தர், வென்றி மாலைக் கவிராயர் முதலிய பெரியோர்கள் முருகப்பெருமான் மீது பலப்பல பிரபந்தங்கள் பாடியிருக்கின்றனர். கழுகுமலைக் கந்தநாதன் மேல் அண்ணுமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்து நெஞ்சை அள்ளுவது; கழுகுமலைச் சிவபெருமான்மீது கவி முத்துசாமிப் பிள்ளை இரட்டை மணி மாலை முதலிய பிரபந்தங்கள் பாடியிருக்கின்றனர்.

## பொதிகை மலை(பழைய பாவநாசம்)-முருகப் பெருமான்

பழைய பாவநாசத்திலே அருமையாக அருவி விழுகின்றது. அருவிக் கரையிலே அகத்திய முனிவர் வழிபட்ட முருகப் பெருமான் திருக்கோவில் இருக்கிறது. அக் கோவிலினுள் அகத்திய முனிவர் திருவுருவமும் இருக்கிறது. இப் பொதிகை முருகனை அருணகிரிநாதர் திருப்புகழ் பாடி வழிபட்டு அருள் பெற்றுய்ந்தார்.

இனி, பல திறப்பட்ட திருக்கோவில்களை ஆராய்வோம்.

## ௧. பல வகையின திருக்கோவில்கள்

இதுகாறும் ஐந்து தலைப்புக்களில் திருக்கோவில்களை ஆராய்ந்தோம். அவை க. பிள்ளையார் கோவில்கள், உ. சிவன் கோவில்கள், ௩. கூத்தர் கோவில்கள், ச. பெருமாள் கோவில்கள், ரு. திருமுருகன் திருக்கோவில்கள். இனி, இவைகளோடு தொடர்புடையனவாகிய பல வகைப்பட்ட திருக்கோவில்களை ஆராய்வோம்.

இப் பலவகைப்பட்ட கோவில்களை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை க. சாத்தனுர் கோவில்கள், உ. அம்மை கோவில்கள், ௩. அடியார் கோவில்கள். முதலில் சாத்தனுர் கோவில்களை ஆராய்வோம்.

### க. சாத்தனுர் கோவில்கள்

திருப்பாற்கடலிலிருந்து அமுதத்தைப் பெற வேண்டித் தேவர் ஒரு புறமும் அசுரர் ஒரு புறமுமாக நின்று கடலைக் கடைந்தார்கள். சிவபெருமானைத் தொழுது விடை பெருமல் இச் செயல் புரிந்ததால் முதலில் ஆலாலம் என்ற நஞ்சு கடைகயிருகிய பாம்பு கக்க எழுந்தது. தங்கள் தவறு கண்டு வருந்திச் சிவபெருமானைத் தொழுத தேவர்களுக்கு இரங்கிப் பெருமான் அந் நஞ்சினை உண்டு கண்டத்தே வைத்தருளித் திருநீலகண்டன் என்ற பெயரையும் பெற்ருன். பின் சிவபெருமான் திருவருளால் அமுது எழுந்தது. அதனைப் பங்கிடற்கு நினைத்த திருமால் அசுரர்களை வஞ்சிக்க எண்ணி மோகினியாக அவர்கள் முன் தோன்றினன். அம் மோகினியை அடைவது காரணமாக அசுரர் தம்முள் போரிட்டு அழிந்தனர். அப்போது கடற்கரையில் ஒதுங்கி நின்று கொண்டிருந்த மோகினியைச் சிவபெருமான் அணுகினுன். அணுகி மோகினிப் பெண்ணுய் நின்ற திருமாலை நோக்கி, “நீ கொண்ட வேடம் அழகிது ; ஆதலின் உன்னைச் சேரும் காதலுடையேன். அன்று உன்னேடு சேர்ந்தேன் ; நீ உன் உந்தி வழியாகப் பிரமனைப் பெற்ருய். நீயும் என் சத்தியே. அன்று தாருகாவனத்து முனிவருடைய அகந்தையை ஒழிக்கும் பொருட்டு நீ இம்மோகினி உருத்தாங்கிச் சென்ருய்.

" முன்னை வேதன் முடிந்தனன் போதலும்
உன்னோடே வந்து உவப்பொடு கூடினோம்
பின்னர் இந்தப் பிரமனை உந்தியால்
அன்னையாகி அளித்தனை அல்லையோ ?

" ஆகையால் உன் அணி நலம் துய்த்திட
ஓகையோடு இவண் உற்றனன் செய்க. "

என்று கூறி நாராயணன் கையைப்பற்றிச் சென்று ஒரு மரத்து நிழலை நண்ணினான்.

" நண்ணியே தனி நாயகன் அவ்விடைப்
பெண்ணின் நீர்மையைப் பெற்றிடு நாரணன்
உண்ணெகிழ்ந்து மயக்குற்று உருகியே
எண்ணில் இன்புறக் கூடினன் என்பவே."

" மைக்கருங் கடல் மேனியும் வானுலாம்
செக்கர் வேணியும் செண்டு உறுகையுமாய்
உக்கிரத்துடன் ஓர் மகன் சேர்தலும்
முக்கண் எந்தை முயக்கினை நீங்கினான்."

—கந்த புராணம்

அந்தத் திருமகனே அரிகர புத்திரன். " அரியலால் தேவி இல்லை ஐயன் ஐயாறனார்க்கே." என்பது அப்ப மூர்த்திகள் தேவாரம். சாத்தன் என்பதும் அரிகர புத்திரன் பெயர். இப்பெருமானுடைய திருக்கோவில்கள் குளக்கரை ஆற்றங்கரைகளிலெல்லாம் காணப் பெறுவன. குளத்துக்குக் கேடு வராமல் பாதுகாப்பவன் சாத்தன். இப்பெருமானை ஐயனார் என்றும் கூறுப. இப் பெருமானுக்குப் பூரணை, புட்கலை என்ற இரண்டு பேர் சத்திகள் ; யானை அவருக்கு வாகனம்.

இந்திராணியைச் சூரபன்மனுடைய தங்கை அசமுகி தூக்கிச் செல்ல முயன்றபோது இந்திராணியின் புலம்பலாகிய பின் வரும் கந்த புராணப் பாடல்கள் ஐயனார் திருவுருவை விளக்குவன :

" பையரா அமளியானும் பரம் பொருள் முதலும் நல்கும்
ஐயனே ஓலம் விண்ணோர்க்கு ஆதியே ஓலம் செண்டு ஆர்
கையனே ஓலம் எங்கள் கடவுளே ஓலம் மெய்யர்
மெய்யனே ஓலம் தொல்சீர் வீரனே ஓலம் ஓலம்

"ஆரணச் சுருதி ஓர் சார் அடலுருத்திரனென்று ஏத்தும்
காரணக் கடவுள் ஓலம் கடல் நிறத்து எந்தாய் ஓலம்
பூரணைக்கு இறைவா ஓலம் புட்கலை கணவா ஓலம்
வாரணத்து இறைமேற் கொண்டு வரும் பிரான் ஓலம்"

என்றாள்.

(வாரணம்-யானை ; இது வெள்ளையானை.)

ஐயனாருடைய படைத்தலைவன் வீரமாகாளன். ஐயனார் ஏவலால் இவன் தோன்றி அசமுகியின் கையை வெட்டி இந்திராணியை விடுவித்தான்.

குளத்தில் தண்ணீர் குறைந்து போனால் ஊரெல்லாம் கூடி ஐயனாருக்குப் பெருங்கொடை நடத்திப் படைத்த பெரும்படைப்பை ஏழை மக்களோடு உண்டு மகிழ்வர் ; உடன் மழை பொழியும் என்பது உறுதி.

ஐயனார் சில இடங்களில் சிவலிங்கத் திருமேனியராகவும் கோவில் கொண்டிருப்பார். திருநெல்வேலி மாவட்டத்தில் அறநிலையத் துறையார் கணக்கில் வந்தன முப்பத்தொரு ஐயனார் கோவில்கள். அவை தம்முள் இரண்டுதான் ரூபாய் மூவாயிரத்தின் மேல் வருவாய் பெறுவன. அவை மாநாட்டிலும் உவரியிலும் இருப்பன.

## திருச்செந்தூர் வட்டம்-மாநாடு—கலியுக வரதராசர்

கலியுகம் என்பது இப்போது நடந்து கொண்டிருக்கும் காலம். கலி-துன்பம். துன்பம் மிகுந்த காலம் இது. கலியுகத்தில் மக்களுக்குத் தோன்றும் துன்பங்களை நீக்கி அருள் வரம் தரும் அரசராகிய இப்பெருமான் சாத்தனார். மாநாடு-பெரிய நாடு. நாடி வந்து சேரும் இடம் நாடு. இது இங்கே ஓர்ஊரை உணர்த்துகின்றது. இது திருச்செந்தூரிலிருந்து தென் மேற்கே எட்டு மைல் தூரத்தில் இருக்கிறது ; சாத்தனார் மனைவியர் பூரணை, புட்கலை என்பவர்.

# நான்குநேரி வட்டம்

## சித்தூர்—தென்கரை மாராசர்

நான்குநேரி வட்டத்திலுள்ள உவரிச் சுயம்புலிங்கப் பெருமானைப் பற்றி முன் சிவன் கோவில்கள் என்ற தலைப்பில் கூறினோம். இந் நான்குநேரி வட்டத்தில் நான்குநேரிக்குத் தென் கிழக்கே ஆறுவது

மைலிலுள்ள சித்தூரில் தென்கரை மாராசர் என்ற சாத்தனார் அப்பகுதியில் மிக்க புகழுடன் அருள் வரதராக விளங்குகின்றார். இவ் வட்டத்திலே ஒருமன் குளத்தில் சீதளச் சிவலிங்கேசர் என்ற ஐயனார் கோவிலும் புகழ் படைத்தது.

சாத்தனாருக்குப் பலவூர் மக்கள் இட்டு வழங்கும் பெயர்களிற் சில வற்றைக் கீழே தருகின்றோம்; படித்து இன்புற்று அன்பு கூருங்கள்.

தலைக்காவுடையார், பூலாவுடையார், கல்லணைச் சாத்தா, வேயீன்ற முத்தையன், அரி கர புத்திரர், குளத்தூர் ஐயன், ஐயப்ப நயினார், சுயம்புலிங்கர், சீதள சிவலிங்கேசர், மாராசர், பெரும் வேம் புடையார், காவல் தலை ஐயனார், கற் குளம் உடையார், பச்சைப் பெருமாள் ஐயன், பெரும் படையார், அடைக்கலம் உடையார், பொய் சொல்லா மெய்யன், திருவேட்ட ஐயனார், கருங்குளத்து ஐயர், பெரிய குளம் சாத்தனார், காவேரி ஐயன் சாத்தா, பெரியசாமி ஐயனார், மருதாவுடையார், பசுங்கிளி ஐயன், சூச்சமுடையார், எட்டு டையார், சடையுடையார், வீர சாத்தா, குலசேகர நாதர், களக்கோடி சாத்தா.

இனி, பாபநாசம் மலைமேலே சென்று சொரிமுத்தையனை வழி படுவோம்.

## அம்பாசமுத்திரம் வட்டம்

### சிங்கம்பட்டி—சொரிமுத்தையன்

வாண தீர்த்தத்தின் அருகே சொரிமுத்தையன் கோவில் இருக்கிறது. இது சிங்கம்பட்டிக் குறு நில மன்னரைச் சேர்ந்தது. ஆடித்திங்கள் இருள்மதியன்று (ஆடி அமாவாசை) இக் கோவி லுக்கு ஆண்களும் பெண்களுமாக எண்ணில்லாத மக்கள் வந்து வாண தீர்த்தத்தில் முழுகிச் சொரி முத்தையனை வழிபடுகின்றனர். பச்சிளங்குழந்தைகளையும் இடுப்பிலும் தோளிலும் ஏற்றிச் சுமந்து கொண்டு எல்லாவிதமான துன்பங்களையும் பொருட்படுத்தாமல் பெண்கள், குடுகுடு கிழவர், பல்லோர் மலைமேலே சாரல் மழையில் நனைந்து ஏறிப் போவது அவர்கள் சொரி முத்தையன் பால் கொண்டுள்ள உண்மையான பத்தியையே உணர்த்துவதாகும்.

ஐயன் ஐயனுர் ; பண்டை நாளில் ஐயன் பாழி என்னப்பெற்ற இவரது திருக் கோவில் இன்று ஐயன் கோவில், ஐயனுர் கோவில், சாத்தன் கோவில் என்று பெயர் பெறுகின்றது. இவரது திருமேனி சிவலிங்க வடிவினதாகவும் இருக்கும். சிறுபான்மை ஆற்றங் கரை களிலும், பெரும்பான்மை குளத்தின் கரைகளிலும் பாதுகாப்பாள ராக வைத்து வணங்கப் பெறும் தெய்வம் இவர். காலத்திலே மழை பெய்யாது தாமதிக்குமேயானுல் ஊரார் கூடிச் சிறப்பாகப் பூசனை புரிந்து ஏழைகளுக்கும் உணவு கொடுத்துப் பெருமானை வேண்டிக் கொள்வர் ; அதன் பயனுகப் பெரும்பாலும் அன்றே மழை பொழிவதையும் காண்கின்றனர். இங்ஙனமாக மழை பொழிந்து அருள் சொரிவதனுலேதான் இவர் சொரிமுத்து ஐயன் என்று பெயர் பெற்றனர் போலும் ! சொரிதல்—பொழிதல். முத்து என்பது விலை மதிக்க முடியாத அரும் பொருள் ; அதுபோல இவர் திருவருளும் விலைமதிக்க முடியாததே. மழையில்லாது வாடி வதங் கும் பயிர்களைப் பாதுகாத்து மக்களை வாழ்விக்கத் தக்க காலத்தினுல் இவர் மழை சொரிந்து செய்யும் நன்றிக்கு வையகமும் வானகமும் மாற்றல் அரிது.

ஐ அழகு, வியப்பு, தலைமை எனப் பொருள் படும். உண்மையில் அழகுதரும் அருளையுடையவனும், வேண்டாதாரும் வியக்கும்படி தண்ணருள்புரியும் தலைமையுடையவனும் ஐயன் எனப் பெறுவான். நமது ஐயனுர் சாத்தன், சாத்தனுர் என்றும் பெயர் உடையார். சாத்து என்பது கூட்டம் ; கூட்டம் கூட்டமாகக் கூடி வாழும் மக்க ளுக்கு அருள் புரி தலைவரானதால் இவர் சாத்தனுர் என்னப் பெற்ருர் போலும் ! இவருக்கு ஊர்தி வெள்ளை யானை. (ஊர்தி— வாகனம்) இவர் அரி அர புத்திரன் என்றும் அழைக்கப்படுகிருர்.

ஆற்றின் கீழைக் கரையிலே இருக்கிறது சொரி முத்தையர் திருக் கோவில். தண் பொருநை இறங்கி ஓடிவரும் இப் பள்ளத் தாக்குக் குச் சொரிமுத்தையர் பாதுகாவலாக இருப்பது போலவே செங்கோட் டைக்கு மேல்புறம் இருக்கும் பள்ளத் தாக்காகிய ஆரியன் காவுக்குப் பாதுகாவலாக ஆரிய முதலையர் அமர்ந்து அருள் புரிகின்ருர். ஐயனு ருக்கு வேருெரு பெயர் ஐயப்பன் என்பது.

இத் திருக் கோவிலை ஒட்டிப் பேச்சியம்மன், சங்கிலி மாடன், முதலிய பல சிறு தெய்வங்களும் இருக்கின்றன. அவைகளை வழி

படுவோரும் எண்ணற்ற பேர் வருகின்றனர். இங்கே இரவில் தங்குவதற்குப் பல குடிசைகள் புல்லால் வேய்ந்து அமைக்கப்படுகின்றன.

இனி, அம்மை திருக் கோவில்களை வழிபடுவோம்.

# உ. அம்மை திருக்கோவில்கள்

அம்மை—அன்னை, அம்மன். இவை அம்மன் கோவில்கள் என்றே வழங்கப் பெறும். தக்கன் வேள்வியை அழிக்கும் பொருட்டுச் சிவபெருமான் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியவர் வீரபத்திரர். உமாதேவியாருடைய வெகுளித் தீயில் வந்து பிறந்தவள் பத்திரகாளி. இருவரும் கணவனும் மனைவியுமாகச் சென்று தக்கன் வேள்வியைத் தகர்த்தருள்புரிந்தனர். பத்திரகாளி எண்ணற்ற காளிகளைப் படைத்தாள். இந்த அம்மைகளே ஊர்கள் தவறாமல் கோவில்கொண்டிருக்கின்றனர்.

கணக்கில் வந்துள்ள அம்மை கோவில்கள் தொண்ணூற்றொன்றில் ஐந்தே ரூபா மூவாயிரத்தின் மேல் வருவாய் உடையன.

## திருநெல்வேலி வட்டம்

### மேல வீரராகவபுரம்—கண்ணம்மன் புதம்மன்.

சிந்துபூந்துறைக்கு மிக அருகே வரதராசப் பெருமாள் கோவிலுக்குச் சிறிது வடகிழக்காக இருப்பது கண்ணம்மன் புதம்மன் கோவில். புது அம்மன் என்ற பெயரே இக் கோவில் அண்மையில் ஏற்பட்டது என்பதைக் காட்டும். இவ்வம்மை இருக்கும் தெரு அம்மை பெயரால் கண்ணம்மன் கோவில் தெரு என்று பெயர் பெற்றது. பொதுவாக எல்லா அம்மன் கோவில்களையும் போல இதுவும் வடக்கே பார்க்க இருக்கிறது. அம்மன் பெயர் பல இடங்களில் வடபத்திரகாளி என்றே இருக்கும்.

## சீவைகுண்டம் வட்டம்

### ஏறல்—முத்து மாலையம்மன்

ஏறல் என்பது மேட்டு நிலம். ஆற்றங்கரையில் இருந்த மக்கள் கி.பி. 1827-ல் வந்த மிகப் பெரிய வெள்ளத்தால் அழிந்து வாடி இங்கே குடியேறலைச் செய்தனர். அதனால் இவ்வூர் ஏறல் என்று பெயர் பெற்றது. சீதாதேவியின் முத்து மாலையாகக் கருதப்படும் ஒரு மாலையே அம்மனாக வணங்கப்படுகிறது.

### வாழவல்லான்—நட்டாற்றைக்கொண்ட அம்மன்

ஏறலுக்கு ஒன்றரை மைல் கிழக்கே வாழ வல்லான் ஒருவன் வாழ்ந்த வாழவல்லான் என்ற ஊர் இருக்கிறது. நடு ஆறு நட்டாறு. நட்டாற்றைத் தன் குடியிருப்பாகக் கொண்டிருக்கும் அம்மன் இவ் வம்மை.

## திருச்செந்தூர் வட்டம்

### குரங்கணி—முத்துமாலையம்மன்

தென் திருப் பேரைக்குக் கிழக்கே ஒன்றரை மைல் தூரத்தில் ஆற்றங் கரைமேல் இருக்கிறது இவ்வூர். குரங்குகள் அணிவகுத்து நின்ற ஊர் ஆதலால் குரங்கணி என்று பெயர் பெற்றது. குரங்கு அணி அதாவது குரங்குகள் சீதையின் அணியாகிய முத்து மாலையைப் பெற்ற இடம் இது; அதனால் இப் பெயர் பெற்றது என்பர் சிலர். இவர்கள் கூற்று ஒரே வரலாற்றை ஒட்டியது. “இராவணன் சீதை யைத் தூக்கிச் சென்ற போது கீழே குரங்குகள் நிற்பது கண்டு அவ் வம்மை தன் கழுத்திலிருந்த முத்து மாலையைக் கழற்றிக் கீழே போட்டாள். குரங்குகள் அம் மாலையைப் பெற்று மகிழ்ந்தன” என்பதே வரலாறு. அந்த முத்து மாலையே இன்று ஒரு சட்டியிலிடப் பட்டுக் கும்பிடப் படுகிறது. அதனாலேதான் முத்துமாலையம்மன் என்ற பெயர் வந்தது. இங்கும் ஏறலிலும் இருப்பது போல முத்துமாலை யம்மன் கோவில் முக்கூடலிலும் இருக்கிறது.

## கோவிற்பட்டி வட்டம்

### புதூர்—சாமுண்டீசுவரியம்மன்

விளாத்தி குளத்தின் பக்கத்திலிருக்கும் ஊர் புதூர். சாமுண்டி யாகிய ஈசுவரி சத்தமாதருள் ஒருத்தியாகிய காளி.

சத்த (ஏழு) கன்னிகைகள் பின்வருவோர் :—பிராமணி, நாரா யணி, மாகேசுவரி, கௌமாரி, வராகி, உருத்திராணி, இந்திராணி; இங்ஙனம் கூறும் பிங்கலந்தை நிகண்டு. சூடாமணி நிகண்டு பின்வருமாறு கூறுகிறது :—பிராமி, வயிசுவானி, மாகேசுவரி, கௌமாரி, வராகி, மாகாளி, மாகேந்திரி. இந்த ஏழு மாதர்கள்

சிவ சத்தியின் மூர்த்த பேதங்கள் கந்த புராணம் சிவ சத்திகள் நான்கு என்று கூறுகிறது; தக்க காண்டம் யாக சங்கார படலம் 134-வது பாட்டு,

"இறுதி செய்திடலே சீற்றம் இன்பமே ஆண்மை என்ன
அறைதரு சத்தி நான்காம் அரன் தனக்கு; ஐயை காளி
முறைதரு கவுரி இன்னோர் மும்மையும் பெற்றோர்; எனைப்
பெறலரும் சத்தி யான்; இப் பெற்றியும் மறைகள் பேசும்."

யான் என்பது திருமால்; இறுதி செய்திடல்-துர்க்கை, சீற்றம்-காளி, இன்பம்-கௌரி, ஆண்மை-திருமால். சிவபெருமான் காளிகாதேவியை நடனமாடி அடக்கினன் என்பது கந்த புராாணம் சயந்தன் புலம்புறு படலம் அறுபத்தாறுவது பாட்டுக் கூறுவது:

"மோடி தர வந்த முக்கண் உடைக்காளி
ஓடி உலகுயிர்கள் உண்ணும்படி யெழலும்
நாடி அவள் வெருவி நாணிச் செருக்ககல
ஆடி அருள் செய்த அருள் இங்கு அணுகாதோ?"

திருநெல்வேலி மாவட்டதிலுள்ள அம்மை திருக்கோவில்களில் அடியார் அம்மைக்கு வைத்து வாயார வாழ்த்தும் திருப் பெயர்களுட் சில வருமாறு.—

கங்கையம்மன், கங்கா பரமேசுவரி, கங்கா தேவி, இசக்கி, செல்லாயி, பேச்சி, முப்பிடாரி, ஆயிரத் தம்மன், வடக்கு வாய்ச் செல்வி, துரௌபதி, காந்தாரி, கன்னிகா பரமேசுவரி, இராசேசுவரி, பத்திரகாளி, வட பத்திரகாளி, சுந்தர நாச்சியார், முத்து மாலையம்மன், முத்தாரம்மன், உலகமுத்தாரம்மன், அழகம்மன், முத்து லட்சுமி, ஆதிபரமேசுவரி, துர்க்கா பரமேசுவரி, பெரியநாயகி, நங்கை முத்தம்மன், காளியம்மன், பெத்தம்மன், மாரியம்மன், சந்தன மாரியம்மன், அங்கம்மன், தம்பிராட்டி, வண்டி மலைச்சி, செண்பகவல்லியம்மை.

இனி, அடியார் திருக்கோவில்களை அணுகி வணங்குவோம்.

## ஏ. அடியார் திருக்கோவில்கள்

அடியாராவார் சிவபெருமானுடைய திருவடிக்கு அடிமை செய்வார். அவருள் அகத்தியனார், திருஞான சம்பந்தர், குமரகுருபரர், சிவஞான முனிவர் என்பவரே நாம் இங்கே கும்பிடவேண்டியவர். சைவசமையாசிரியராகிய திருஞானசம்பந்தரைப் பற்றித் திருநெல்வேலிச் சிவன் கோவில்களின் இடையே கூறினோம். குமரகுருபர முனிவர் சீவைகுண்டமாகிய கைலாச புரத்தில் பிறந்து திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளால் ஊமை நீங்கிக் கந்தர் கலிவெண்பாப் பாடி, மதுரை சென்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களைப்பாடி மன்னர் திருமலை நாயகரால் வணங்கிப் போற்றப் பெற்றுத் திருத் தருமபுரமடத்தில் துறவு நிலை அடைந்து, காசிக்குப் போய் குமாரசாமி மடம் என்ற மிகப் பெரிய திருமடத்தைக் கட்டி வடநாட்டில் சைவத்தை நிலை நாட்டிய பெரியார். இவருடைய தனித் திருமடத்தின் தலைமையிடம் திருப்பனந்தாளில் இருக்கிறது இவர் தாம் பிறந்து வளர்ந்து விளையாடிய சீவைகுண்டத்தில் விளையாடிய தம் வீட்டிலேயே திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கின்றார். தருமபுர மடத்துக்கு இருக்கும் கல்விப் பெருமையெல்லாம் இவரால் வந்தனவே. இவரைப் போலவே மாதவச் சிவஞான முனிவர் என்னும் பெரியார் காஞ்சிப்புராணம் பாடிப் பல பிரபந்தங்களை அருளி, சிவஞான போதத்துக்கு மாபாடியம் வகுத்தருளித் தாம் பிறந்து விளையாடிய விக்கிரம சிங்கபுரத்தில் தம் வீட்டிலேயே திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கின்றார். இவரால் வந்த கல்விப் புகழே இன்றும் திருவாவடுதுறை மடத்துக்கு இருப்பது.

### அம்பாசமுத்திரம் வட்டம்–அகத்தியனார் கோவில்கள்

சிவபெருமானால் தமிழ் நாட்டுக்கு அனுப்பப் பெற்ற தமிழ் முனிவர் அகத்தியனார். அவர் கைலாச மலையிலிருந்து பொதிகை மலைக்கு வரும் வழியில் வளர்ந்து தம்மைத் தடுத்து நின்ற விந்த மலையை அடக்கினார்; சோழநாட்டுக்குக் காவிரிப் பேராற்றைத் தந்தார்; வில்வலன் வாதாவி என்ற அசுரர்களை யழித்தார்; அப்பாவம் தீரக் கோவிற்பட்டியில் வந்து செண்பகவல்லி யம்மையோடு எழுந

தருளியிருக்கும் பூவன நாதரைப் பூசை செய்து அகத்திய தீர்த் தத்தை ஆக்கியருளினார்; திருக்குற்றாலம் வந்து திருமாலைக் குற் றால நாதராக்கி வழிபட்டுப் பொதிகை மலையை அடைந்திருந்தார்.

இவரைத் தென்னாட்டுக்கு அனுப்பிய சிவபெருமான் தமது திருமணக் காட்சியைக் காட்டுவதாக வாக்கருளியிருந்தார். அத் திருக்காட்சியைக் காணாமல் நாடோறும் ஏங்கியிருந்தார் அகத்தியனார் ;

“ கண்ணுதால் உன்னைக் காணாக் கண்களும் வாழ்த்தா வாயும்
வண்ண நீள் புகழ்கேளாத செவிகளும் வணங்காக் கையும்
உண்ணெகிழ்ந் துருகா நெஞ்சும் உற்றவர் தம்மை நீர்சூழ்
மண்ணிலம் சுமத்தல் அந்தோ வம்பினும் வம்பேயன்றோ? ”

என்று சிந்தித்து எரி வளர்த்து அதன் நடுவே நின்று தவம் புரியத் தொடங்கினார்.

அப்போது அம்பாசமுத்திரத்தில் மசுமன மன்னர் பங்குனி மாதம் திருவிழா நடத்திக்கொண்டிருந்தார். காசியபேசரும் மர கதவல்லியும் நாடோறும் அன்பருக்குத் திருவீதியில் எழுந்தருளிக் காட்சியருளினர். ஏழாம் திருநாளில் கூத்துடைப்பெருமான் இர வில் இரண்டு காலம் திருவீதிகளில் எழுந்தருளிக் காட்சியருளினார். எட்டாம் நாளன்று காலையில் திருமேனி முழுவதும் பச்சை சாத்திக் கூத்துடைப் பெருமான் எழுந்தருளித் தெற்குத் தேர்த்தெருவில் உலா வந்து கொண்டிருந்தார்.

அவ்வேளை அகத்தியனார் தமது மனைவியாரும் மாணவரும் புடை சூழ, ஆண்டவன் உணர்த்த உணர்ந்து, பொதிகையின் நீங்கி அம்பை மாநகரின் புற நகரத்தையும் இடை நகரத்தையும் தாண்டி நடுநகரிற் புகுந்து தெற்குத் திருவீதியில் கூத்தப் பெருமானைக் காண ஓடோடியும் வந்து சேர்ந்தார். அப்போது பெருமான் தமது கூத் துடைத்திருமேனியை மறைத்துத் திருமணக் கோலத்துடன் அகத் தியனாருக்குக் காட்சியருள்வாராயினார்.

‘‘ விண்ணாரும் இமாலயமும் விளங்குமணிப் பந்தருழி விரிந்து நின்ற
எண்ணாத உயிர்த்தொகையும் எம்பெருமான் பிராட்டிகரம் இனிது பற்றிப்
பண்ணாரும் கொலுவிருந்தங்கு அருள் சுரந்த காட்சிகளும் பரமயோகி
கண்ணார அந்த விமானத்திடத்திற் கண்டின்பக் கடலுள் ஆழ்ந்தான்.”

குறுமுனிவருக்குத் திருமணத்தின் காட்சியெலாம் தந்து உடன் வினையாவும் துடைத்தருளும் பெருமான் திருநடனத் திருவுருவம் காட்டி யருளினார். முனிவர் பெருமான் அக்காட்சியினைக் கண்டு மெய்ம்மறந்து நின்றார். அவரை ஆண்டவனார் அருகழைத்து "வேண்டும் வரம் கேள்" என்றார்.

"ஐயன் அருள் மொழிகேட்ட முனிமகிழ்ந்து மீட்டுமவன் அலர்த்தாள் போற்றிச்
செய்யவனே நின்னருளாற் பெறுதனவொன் றிலையெனினும் செப்பு கின்றேன்
வையமெலாம் புகழிந்த அம்பையிலே ஆண்டுதொறும் வரும் இந்நாளில்
உய்ய உனது அருட்காட்சி தந்தருள வேண்டுமென்றான் உணர்வின் மிக்கான்."

அங்ஙனமே பெருமான் வரந்தந்தருளினார். அகத்தியனார் தமது திருமனைவியாருடன் பொதிகைக்கு எழுந்தருளும் போது புறநகரில் செங்குந்தர் சிலர் நின்றிருந்தனர்; இவர் பசித்தவர்போல அவர்களிடம் உணவு கேட்டார். அவர்கள் உணவு கொண்டுவருவது சிறிது தாழ்த்தது; அதனால் அவர் தமது மனைவியாருடன் பொதிகைக்குச் சென்று எழுந்தருளியிருந்தார்.

உணவு கொண்டு வந்தவர்கள் முனிவரைக் காணாது வருந்தித் தவங்கிடந்தனர். அப்போது உள்ளம் இரங்கிய முனிவர் அங்கெழுந்தருளி அவர்கள் படைத்திருந்த உணவின் மேல் தமது திருவடித்தடம் காட்டி மறைந்தருளினார். இத்திருவிழா இன்றும் அம்பையில் நடந்து வருகின்றது.

"கடை நகரில் இருப்பவரைப் பசித்தவன் போல் அமுதுதவக் கடைக் கணிப்ப
அடையிலமு தெடுத்தவர்கள் வரத்தாழ்த்தல் கண்டு அனகன் அப்பாற் சென்றான்
உடைந்தவர்கள் தவஞ்செயலுக்கு இரங்கியவன் உற்றவர்கள் உதவும் அன்னத்
திடை தனது பதங்காட்டி வரமளித்துப் பொதிகையிற் சென்று இனிது வாழ்ந்தான்."

(அம்பைத்தலபுராணம்.)

அம்பாசமுத்திரத்தின் ஒரு பகுதியாகிய திருமூல நகரில் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருமூல நாதரை அகத்தியனார் பூசனையாற்றிக் கண்களில் நீர் மல்கத் தொழுது நின்றார். அப்போது திருமூலநாதர் அவர்முன் காட்சி யருளி,

“ கும்பகேள் நின்றன் பூசனைக் குவந்தோம் கூறுதி . விழைவன என்ன
நம்பனே நின்றன் பத்தியும் செய்ய நறுந்தமிழ் வளர்ச்சியும் இமையத்து
எம்பிரான் புனையும் திருமணக் கோலத் தெரிசனமும் கடை முடிவில்
வெம்பிடா நினது கதியுமே நாயேன் விரும்பினேன் எனமுனி புகன்றான்.”

அகத்தியனாருக்குப் பொதிகை மலையில் பழைய பாவநாசத்திலும், அம்பாசமுத்திரத்திலும் திருக்கோவில்கள் இருப்பன போலவே கல்லிடைக்குறிச்சியிலும் திருக்கோவில் ஒன்று சிறந்து விளங்குகின்றது.

# செங்கோட்டை வட்டத் திருக்கோவில்கள்

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருக்கோவில்களை வழிபட்டு இன்புற்று நற்பேறு பெற்ளும். இம் மாவட்டத்தை விட்டு 1910-ல் சீவில்லிபுத்தூர், சாத்தூர் என்ற இரண்டு வட்டங்களும் பிரிக்கப் பட்டுப் புதிதாக அமைக்கப் பெற்ற இராமநாதபுரம் மாவட்டத்திற் சேர்க்கப்பெற்றன. இப்போது 1954-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 1-ந் தேதி செங்கோட்டை வட்டம் புதிதாக நெல்லை மாவட்டத் தில் இணைக்கப்பெற்றுள்ளது. இது தென்காசியை ஒட்டி இருக்கிறது; திருவிதாங்கூர் மன்னர் ஆட்சியிலிருந்தது. இதன் மலைவளப் பகுதிகள் யாவும் இதைவிட்டுப் பிரித்துக் கேரள நாட்டிற் சேர்க் கப்பட்டு ஒரு சிறு பகுதி மட்டும் திருநெல்வேலியுடன் இணைக்கப் பட்டுள்ளது. திருவிதாங்கூர், கொச்சி ஆகிய இரண்டு மன்னர் நாடுகளை ஒன்ருக்கி அமைக்கப்பட்டது கேரளநாடு. இது பண்டைக் காலத்தில் சேரநாடு என்று பெயர் பெற்று விளங்கிற்று. ஐம் பெருங்காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்துக்கு ஆசிரியர் சேர இளவரசர், இளங்கோ அடிகள்.

முற்காலத்தில் சேரர்களுடைய ஆட்சி திருநெல்வேலி வரை பெருகியிருந்தது என்பதற்குச் சேரன்மாதேவி என்ற ஊரே தக்க சான்று பகரும். இப்போதுள்ள செங்கோட்டை வட்டத்திற் பெரும் பகுதி தென்காசி வட்டத்தினுள்ளேயே அமைந்திருக்கிறது. செங் கோட்டையிலிருந்து தென்காசி வட்டப்பகுதிகளைத் தாண்டியே அப் பகுதியை அடைதல் முடியும். அப்பகுதியில் அமைந்தன இலத் தூர், கிளாங்காடு, ஆய்க்குடி, சாம்பவர் வடகரை என்பன. செங் கோட்டையும், புளியறையும் தான் தென்காசி வட்டத்திற்கு மேற்கே இருப்பன. தென்காசிக்கு மேற்கே ஐந்து மைல் தொலைவிலிருக் கிறது செங்கோட்டை; அதற்கு மேற்கே ஐந்து மைல் தூரத்தி லிருக்கிறது புளியறை.

செங்கோட்டை ஒரு பெரிய புகை வண்டி நிலையம். அதற்கு மேற்கே ஐந்து மைல் தொலைவிலிருக்கிறது பகவதிபுரம் என்ற புகை வண்டி நிலையம். செங்கோட்டைக்கு மேற்கே புளியறைக்குப் போகும் சாலையில் இரண்டாவது மைலில் இருப்பது கட்டளைக்குடி யிருப்பு. அதன் மேற்கே அரை மைலில் இருப்பது கேசவபுரம். அதற்கு மேற்கே இரண்டரை மைலில் புளியறை; புளியறைக்கும்

கேசவபுரத்துக்கும் இடையே இரவிவர்மபுரம் இருக்கிறது. கட்டளைக் குடியிருப்புக்கு வடக்கே கிட்டக்கிட்டப் பூலான் குடியிருப்பு, இலாலா குடியிருப்பு, கலங்காத கண்டி என்ற சிற்றூர்களும், தெற்கே தவணை, கற்குடி என்பனவும் இருக்கின்றன.

செங்கோட்டைக்கு வடகிழக்கே மூன்று மைலில் இருப்பது இலத்தூர். அதன் வடக்கே இரண்டு மைலில் இருப்பது அச்சன்புதூர் (நெடுவயல்), நெடுவயலின் வடக்குத் தெருவின் வடபகுதி செங்கோட்டை வட்டம், தென்பகுதி தென்காசி வட்டம். இலத்தூருக்குக் கிழக்கே மூன்று மைல் ஆய்க்குடி; அதன் வடக்கே ஒரு மைல் இளாங்காடு. ஆய்க்குடிக்குக் கிழக்கே ஒரு மைல் கம்புளி; அதற்குக் கிழக்கே மூன்று மைல் சாம்பவர் வடகரை. இவைகளுக்கு இடையே நல்ல சாலைகள் போக்குவரத்துக்கு வாய்ப்பாக இருக்கின்றன. இந்த ஊர்களுக்கு அண்மையிலிருக்கும் புகைவண்டி நிலையம் நயினரகரம்; இது இளாங்காட்டுக்கு மேற்கே அரை மைல்.

செங்கோட்டை வட்டத்தில் கணக்கில் வந்துள்ள கோவில்கள் எண்பத்தேழு; அவைதம்முள் மிகமிகச் சிறுகோவில்கள் அறுபத்தெட்டு; போக இருக்கும் பத்தொன்பது கோவில்களில் பன்னிரண்டு சிறுகோவில்கள்; இவை போக இருப்பன ஏழு பெரிய திருக்கோவில்கள். இந்த ஏழு கோவில்களையே நாம் சென்று கும்பிடப் போகிறோம். இவை ஏழும் ஆறு ஊர்களில் இருக்கின்றன. முதற்கண் தலைமை நகரமாகிய செங்கோட்டைக்குச் செல்லுவோம். இங்கேதான் ஏழில் இரண்டு கோவில்கள் இருக்கின்றன.

## செங்கோட்டை

செங்கோட்டை ஒரு நகராட்சி. இதில் இரண்டு ஆறுகள் ஓடி வருகின்றன. வடக்கில் வருவது அரிகரன் ஆறு; தெற்கே வருவது குண்டாறு. இவை இரண்டும் ஊருக்குக் கிழக்கே ஒன்று சேர்ந்து குற்றாலத்திலிருந்து வரும் சிற்றாற்றிற் சேர்கின்றன.

செங்கோட்டைக்கு அருகே மூன்று வாய்க்கால்கள் பிரியும் இடத்தில் பண்டைக் காலத்திலிருந்த நல்லூரில் செங்கள மரபினனாகிய ஒரு சிற்றரசன் அரசாண்டிருந்தான். அவனுக்குக் குழந்தையில்லாத வருத்தம் மீதூர்ந்து கடவுளை எண்ணி எண்ணி மனம் கசிந்து உருகியிருந்தான். ஒரு நாள் கடவுள் அவனுக்குக் கனவில் காட்சியருளி ஒரு புளிய மரத்தடியில் ஒரு சிலை இருப்பது காட்டி,

அதனை எடுத்து வந்து கோவில்கட்டி எழுந்தருளச் செய்து வழி பட்டு வந்தால் குழந்தை பிறக்கும் என அருள் செய்தார். அம்மன்னன் கனவிற்கிடைத்த ஆணைப்படியே தேடிச் சென்று புளிய மரத்தடியில் நான்கு கைகளுடன் இருந்த கற்சிலையைக் கண்டெடுத்து வந்து அரிகரநுற்றின் தென்கரையில் ஒரு திருக்கோவில் அமைத்து அதில் எழுந்தருளச் செய்தான். இற்றைக்கு ஏறத்தாழ ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது இந்நிகழ்ச்சி என்ப.

செங்கள மன்னன் அங்கே செங்கற்களால் ஒரு கோட்டை கட்டினன். அங்கே தோன்றிய ஊர் செங்கற்கோட்டை எனப் பெயர் பெறுவதாயிற்று. செங்கற்கோட்டையே செங்கோட்டை என வழங்கப் பெறுகிறது. செங்கற்பட்டு என்ற பெயர்த் தோற்றமும் இங்கே ஒப்பு நோக்கத்தக்கது. செங்கள மன்னன் கோட்டை செங்கோட்டையாயிற்று என்பாரும் உளர். இந்தியத் தலைநகரமாகிய புது தில்லிமா நகரிலும் ஒரு செங்கோட்டை (Red Fort) இருக்கிறது.

## 1. அழகிய மணவாளப் பெருமாள்

அந்தக் கற்சிலை பெருமாளுடைய கற்சிலை. அது பேரழகுடையது. அதனால் அதற்கு அழகிய மணவாளப் பெருமாள் என்ற திருப் பெயர் அமைந்தது. சங்கு ஒரு கையில், சக்கரம் ஒரு கையில்; அபயம் அளிப்பது வலக்கை, வரம் அருள்வது இடக்கை. பெருமாள் அருகே திருமகள் ஒரு புறமும் பூமகள் ஒரு புறமும் ஆக எழுந் தருளியிருக்கின்றனர். இவர்களை வழிபட்டு வந்த செங்கள மன்ன வனுக்கு ஆண் குழந்தை பிறந்து அவனுக்குப்பின் அரசெய்தும் இளவரசாகியது.

அழகிய மணவாளப் பெருமாளுக்கு ஆடிமாதம் உத்தரத்திற் கொடியேறித் திருவோணத்தில் ஆராட்டு நிகழும் பெருவிழா நடை பெறுகிறது. திருக்கோவிலுக்கு வடக்கேயிருக்கும் அரிகரநுற்றில் ஆராட்டு விழாவுக்காக ஓர் அழகிய மண்டபம் கட்டப்பெற்றிருக் கிறது. செங்கோட்டை வட்டத்தில் இந்தப் பெருமாள் கோவில்தான் பெரிய பெருமாள் கோவில்; இதில் வைகானச ஆகமப்படி பூசை நடக்கிறது.

## 2. குலசேகரநாதர்

தெற்காற்றங் கரையிலே குலசேகரநாதர் திருக்கோவில் இருக் கிறது. அம்மை அறம் வளர்த்தநாயகி (தருமசம்வர்த்தனி) தெற்கே பார்க்க எழுந்தருளியிருக்கிருள். முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்

குலசேகர மன்னவராலே கட்டப்பெற்ற கோவில் இது. அவரால் நிலை நிறுத்தப்பட்ட பெருமான் குலசேகரநாதர் எனப் பெற்றார். இங்கே இரண்டு சிறு தேர்கள் இருக்கின்றன. தைப்பூசத்தில் பெருவிழா சிறப்பாக நடைபெறுகின்றது. தீர்த்தம் அருளப் பெருமான் கோவிலுக்கு அருகே உள்ள அரிகரனாற்றுக்கு எழுந்தருள்கின்றார். ஐப்பசி மாதம் திருமண விழாவும் இங்கே நடைபெறுகிறது.

இதுகாறும் வட்டத் தலைநகர் செங்கோட்டையிலுள்ள இரண்டு பெரிய திருக்கோவில்களையும் கண்டு வழிபட்டோம். இனி இதற்கு மேற்கேயுள்ள புளியறை என்ற ஊரையடைந்து சதாசிவமூர்த்தியைக் கும்பிடுவோம்.

## 3. புளியறை—சதாசிவமூர்த்தி

புளியறை ஒரு சிற்றூர். அதன் தென்மேற்குப் பக்கத்தில் கிழக்கே பார்க்க எழுந்தருளியிருக்கிறார் சதாசிவமூர்த்தி. திருக்கோவிலின் முன் ஓர் அழகான தீர்த்தக்குளம் இருக்கிறது. மூன்று புறமும் நஞ்சை நிலங்களும், தென்புறத்தில் தெற்கு மேட்டுக் குளமும் சூழ இருக்கிறது இத்திருக்கோவில். சதாசிவமூர்த்தி தாமே முளைத் தெழுந்த சுயம்பு மூர்த்தி. இவருக்குத் தென்புறம் தனிக் கோவிலில் எழுந்தருளியிருக்கின்றாள் அம்மை சிவகாமி.

சிவலிங்கப் பெருமான் திருமுன்பு வெளியே நந்தி இருக்க வேண்டிய இடத்தில் தென்முகக்கடவுள் (தட்சணாமூர்த்தி) தெற்கே பார்க்க எழுந்தருளியிருக்கின்றார். ஆதியில் இது தட்சணாமூர்த்தி திருக்கோவிலாகவே இருந்திருக்கிறது; சிவலிங்கப் பெருமான் தோன்றியது எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்புதான். ஆதலின் இன்றும் இக்கோவில் தட்சணாமூர்த்தி கோவில் என்றே இவ் வூரவரால் அழைக்கப் பெறுகிறது.

கொட்டாரக்கரை என்ற ஊரில் எண்ணூறு ஆண்டுகளுக்குமுன் அரசாண்டிருந்த மன்னர் ஒருவர் குழந்தை இல்லாது சிவபெருமானை நோக்கி வருந்தித் தவங்கிடந்தார்; அவருக்குக் கனவிலே பெருமான் தோன்றி, இந்தத் தட்சணாமூர்த்தியைக் காட்டி அவருக்கு மேற்குப் புறம் இருந்த புளிய மரப்பொந்தில் தாம் சுயம்பு லிங்கமாக இருப் பதனையும் காட்டி அங்கே சென்று திருக்கோவில் எடுக்குமாறு கட்டளையிட்டார். உடனே அரசர் இங்கே வந்து புளியமரத்தின் அடியில் அறைபோல இருந்த பொந்தில் சுயம்புலிங்கப் பெருமானைக் கண்டு மகிழ்ந்து கொண்டாடித் திருக்கோவில் கட்டிச் சிவகாமி

அம்மையையும் எழுந்தருளச் செய்து வணங்கிப் பிள்ளைப் பேறு பெற்று உய்ந்தார் என்ப. புளியமரத்து அடியில் அறையில் தாமாக முளைத்தெழுந்தார் சிவலிங்கப் பெருமானுர்; அதனுல் அவ்விடமும் அதைஒட்டி எழுந்த ஊரும் **புளியறை** எனப் பெயர் பெற்றன. இங்கே கொடி மரம் இல்லை. தை மாதம் உத்தரத்தில் வரும் ஆறும் திருநாளில் திருமணத் திருவிழா நடைபெறுகிறது; இவ்விழா புணர் பூசத்தில் தொடங்கும்.

தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று புறங்களிலும் மேற்குத் தொடர்ச்சி மலையினுற் சூழப்பெற்று விளங்கும் புளியறை ஊரையும் தட்சணுமூர்த்தி திருக்கோவிலையும் விட்டுப் பிரிந்து வேற்றிடம் போவ தென்பது மிகவும் கடினமே. அவ்வளவு இன்பம் பயக்கும் இயற்கைக் காட்சிகள் விளங்குகின்றன. இருந்தாலும், சிவபெருமான் வேறு ஊர் களிலும் எழுந்தருளியிருக்கும் திருக்கோவில்களைக் கும்பிட்டு நல்வாழ்வு பெறும் பொருட்டு அவரைப் பணிந்து விடைபெற்றுச் செல்வோம்.

## 4. இலத்தூர்—மதுநாதப் பெருமான்

புளியறையிலிருந்து புறப்பட்டுச் செங்கோட்டையை அடைந்து ுடகிழக்கே நான்கு மைல் தூரத்திலிருக்கும் இலத்தூரை அடை ுவாம். அனுமனுற்றங்கரையிலே மதுநாதப் பெருமான் தாமே முளைத்தெழுந்த சிவலிங்கத் திருமேனியுடன் காட்சியருள்கின்றுர். அவருக்கு வடபுறம் அம்மை அறம்வளர்த்தநாயகி கிழக்கு முகமாகத் தனிக் கோவிலில் எழுந்தருளியிருக்கின்றுள். இத் திருக்கோவில் பந்தண அரச குடும்பத்தாரால் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பெற்றது என்ப. கருவறை மேல் உள்ள விமானம் பல அருமைச் சிற்ப வேலைப் பாட்டுடன் கூடியது.

பெருமான் தோன்றிய புளியமரம் இருபத்தைந்தடி அகலமான அடி மரத்துடன் இன்றும் விளங்குகின்றது. கோவில் முகப்புத் தூணில் அகத்திய முனிவர் சிவபூசை பண்ணும் கோலம் செதுக்கப் பெற்றுள்ளது. கோவிலுக்கு முன்பு ஓர் அருமையான தெப்பக்குளம் இருக்கிறது. அகத்திய முனிவர் மணலால் சிவலிங்கம் அமைத்துப் புளிய மரத்தடியிலிருந்து பூசை செய்துகொண்டிருக்கும்போது மரத்தின் மேலிருந்து தேன் சிவலிங்கத்தின் மேல் சொட்டுச் சொட்டாகச் சொட்டிக்கொண்டிருந்தது. அது கண்ட முனிவர் "தேன் (மது) நாதரே" எனப் பெருமானை அழைத்து இன்புற்றுர்.

அது முதல் பெருமான் தேன்நாதர், மதுநாதர் எனப் பெயர் பெறுவாராயினர். கொடி மரம் இல்லை. தைப்பூசத்தில் தொடங்கி இங்கே திருமணவிழா நடைபெறுகிறது.

அனுமனுற்றங்கரையிலிருக்கும் இவ்வூர் இலவஞ்சோலையாக இருந்தது; அதனுல் என்றும், அதில் எழுந்த ஊர் இலவத்தூர் என்று பெயர் பெற்றது; அது மருவி இலத்தூர் என இன்று வழங்குகிறது என்பர் அறிந்தோர். இவ்வூர் நயினுரகரத்துப் புகைவண்டி நிலையத்தி லிருந்து தென் மேற்கே மூன்று மைல். இதனைப் புலவர் இலவை யம்பதி என வழங்குகின்றனர். இவ்வூரில் ஒரு சிறு தேர் ஓடுகிறது. அது அழகு நாய்ச்சியார் அம்மன் என்ற காளி கோவிலைச் சேர்ந்தது.

## 5. கிளாங்காடு—சமதக்கினீசுவரர்

இலத்தூரிலிருந்து கிழக்கே ஆய்க்குடி ஆறு மைல்; அங்கிருந்து வடக்கே ஒரு மைலில் கிளக்ங்காடு இருக்கிறது; நயினுரகரம் சென்று கிளாங்காட்டை அடைவது நான்கு மைல் உள்ள குறுக்குப் பாதை-நயினுரகரப்புகைவண்டி நிலையத்திலிருந்து இவ்வூர் கிழக்கே ஒரு மைல்.

கிளா என்பது களா மரம்; களாக்காட்டில் தோன்றிய ஊர் களக்காடு. இது நான்குநேரிக்கு மேற்கே இருக்கிறது. அதனின் வேறு பிரித்தறிவதற்காகக் களாக்காட்டில் தோன்றிய இவ்வூர் கிளாங் காடு என்று அழைக்கப்பெறுகிறது.

சமதக்கினீசுவரர் சுயம்புலிங்கப் பெருமான். கிழக்கு நோக்கி யிருக்கும் அவர் திருமுன்பு அம்மை நல்லமங்காள் தேவி தெற்கு நோக்கி எழுந்தருளியிருக்கின்முள். சமதக்கினி முனிவர் பூசித்த சுயம்புலிங்கப்பெருமான் சமதக்கினீசுரர். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இது நிகழ்ந்தது. இத் திருக்கோவிலைக் குறுநில மன்னர் சங்குசேர்வைகாரர் என்பவர் கட்டினுர். குறுநில மன்னர் கொடுத்த நஞ்சை நிலங்கள் இக் கோவிலுக்கு ஒ[illegible] நூற்றெழுபத்தைந்து ஏக்கர் உண்டு. அதனுல் இது செமீந்தார் கோவில் என்று அழைக்கப் படுகிறது.

செமீந்தார் குறுநில மன்னர். பங்குனி உத்தரத்தில் பத்தாந் திருநாளாக ஆராட்டுச் செய்யப்பெறும் பெருவிழா இங்கே நடக்கிறது. ஐப்பசியில் திருமணவிழா ஐந்து நாள் நடைபெற்று வருகிறது. தேர் மண்டபங்கள் இரண்டிருக்கின்றன. அவைகளின் அடியில் நின்றிருந்த இரண்டு தேர்களும் அழிந்து போயின.

பல ஆண்டுகளுக்கு முன்பு நவாபு ஒருவர் குதிரை மேல் வந்து கொண்டிருந்தார். இங்கே வந்தபோது சிவலிங்கப்பெருமான் மேல் குதிரைக்கால் அடிபட்டு இரத்தம் வடியத் தொடங்கிற்று. நவாபு கீழே இறங்கிச் சிவலிங்கப்பெருமானைக் கண்டு பெருமானுக்கு ஒரு மண்டபம் கட்டிப் பூசனைக்குத் திட்டமும் செய்தார் என்ப. இருபது ஆண்டு களுக்கு முன்பு பெண் ஒருத்தி தன் ஊமைச்சிறுமியுடன் இங்கே வந்து நாற்பது நாள் தவமிருந்தாள்; ஊமைப்பெண் பேசிவிட்டாள். அதனால் மகிழ்ந்த அப் பெண்மணி பெருமானுக்குச் சிறு இடபவாக னம் ஒன்று செய்து திருக்கோவிலுக்கு வழங்கி இருக்கிறாள். அது இன்றும் இருக்கிறது.

இவ்வூரின் வடகிழக்கே நல்லமங்காள், கங்கைக்கு வாய்த்த அம் மன் என்ற பெயர்களுடன் இரேணுகாதேவி காளியம்மையாகக் கோவில் கொண்டிருக்கிறாள். இரேணுகாதேவி சமதக்கினி முனிவ ருடைய மனைவி. அவ்வம்மை இவ்வூரருகே வரும் கருப்பையாற்றிற் சென்று முழுகித் தன் கற்புத்திறனால் உண்டாகும் புதுக்குடத்தில் நாடோறும் முனிவர் பூசனைக்குத் தண்ணீர் கொண்டுவருவது வழக் கம். ஒரு நாள் கார்த்தவீரியார்ச்சுனன் விண்ணிற் செல்வதைத் தண்ணீரிற் கண்டு அவ்வம்மை மயங்கினாள்; அதனால் அன்று குடம் வாராதாயிற்று. அதனால் கற்புநிலை தவறியவளாக அவ்வம்மையைக் கருதி அவளை வெட்டிவிடும்படி தம் மூன்று மக்களுக்கும் சமதக் கினி முனிவர் கட்டளையிட்டார். மூத்தவர் இருவர் மறுத்துவிட்டனர்; இளையவன் பரசுராமன் தன் தந்தையிடம் ஒரு வரம் கேட்டுப்பெற்றுத் தாயை வெட்டி வீழ்த்திவிட்டு, மடிந்த தன் தாயை எழுப்பித் தரு மாறு தந்தையை வேண்டினான். அதனால் உயிர்பெற்றெழுந்த இரேணுகாதேவியைக் காளியாக்கி அவ்வூர்க் காவலாகி யிருக்கச் சம தக்கினி முனிவர் கட்டளையிட்டார். இது ஊர் கூறும் வரலாறு.

இனி, கிளாங்காட்டுக்குத் தெற்கே ஒரு மைல் தூரத்திலுள்ள ஆய்க்குடி சென்று இளமுருகப் பெருமானைக் கும்பிடுவோம்.

## 6. ஆய்க்குடி—முத்துக்குமாரசாமி

ஆய் என்ற வள்ளல் அரசாண்ட நாடு ஆய் நாடு, ஊர் ஆய்குடி. ஆய்குடி இன்று ஆய்க்குடி என வழங்குகின்றது. கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய ஆயைப் பாடிய புலவர் கள் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார், உமட்டூர் கிழார்

மகனார் பரங்கொற்றனார், உறையூர் எணிச்சேரி முடமோசியார், காரிக் கண்ணனார், குட்டுவன் கீரனார், துறையூர் ஓடைகிழார், பரணர், பெருஞ்சித்திரனார் ஆகிய எண்மர்; இவனைப்பற்றிய பாடல்கள் அகநானூறு, புறநானூறு, சிறுபாணாற்றுப் படை, நற்றிணை ஆகிய சங்க நூல்களில் உள. இவனுக்கு அவைக்களப் புலவராக உடனாக இருந்து பாராட்டியவர் உறையூர் எணிச்சேரி முடமோசியார் என்பவர். ஆய் அண்டிரன் எனவும் படுவான் ஆய். பல இடங்களிலும் சென்று கொள்ளையடித்துவந்த கொங்கரை இவன் முறியடித்து மேற்குக் கடற்கரை வரை ஓட்டிவிட்டான். இவனுக்கு ஒரு நாகம் நீலநிற நல்லாடையினைத் தந்தது; அதனை இவன் ஆலமர் நீலகண்டனுக்கு நல்கினான் என்று கூறுகிறது சிறுபாணாற்றுப்படை (96-99). ஆய் அமைத்த குடியாகிய ஆய்குடியில் மிகப் பழையதொரு சிவன்கோவில் இருக்கிறது; அதில் பெருமான் பெயர் காளகண்டேசுவரர் (நீலகண்டர்) எனவும், அம்மை பெயர் சுந்தரநாயகி எனவும் வழங்கப் பெறுவன. இதில் கொடி மரம், பலி பீடம், திருவிழா விக்கிரகங்கள் யாவும் இருப்பதை நோக்கின் ஆய் வழிபட்ட நீலகண்டப் பிரான் திருக்கோவில் இதுவே என்பது நிலைபெறும். இத் திருக்கோவிலில் பூசனை சிறப்புற நடைபெறுதல் வேண்டும். இத் திருக்கோவிலுக்குப் பொருட்கொடை இப்போது ஆய்குடியில் மிகமிகச் சிறப்பாக விளங்கும் இளமுருகப் (பாலசுப்பிரமணியப்) பெருமான் திருக்கோவிற் கணக்கில் முதல் இடத்திற் குறிக்கப்பெற்று வருகிறது.

அருகிலுள்ள மல்லிபுரம் என்ற குளத்தில் மேட்டை வெட்டி நஞ்சையாக்கியபோது மண்ணுக்குள் மறைந்துகிடந்த ஒரு கற்சிலை கிடைத்தது. அது பேரழகுடைய இளமுருகப் பெருமானின் சிலை. பெருமான் மயில்மேல் இருக்கிறார்; நான்கு கைகள்; வலது கையில் வச்சிராயுதமும், இடது கையில் சத்திவேலும் உள்ளன; மற்றொரு வலது கை அடியவர்க்கு அபயம் அருள்கின்றது; மற்றொரு இடது கை திருவடியைக் காட்டி வரம் அருள்கின்றது. இந்த இளமுருகனாகிய முத்துக்குமரன் கருவறையில் அரசு, வேம்பு, கரிவேப்பிலை, மாதுளை, மாவிலிங்கு ஆகிய ஐந்து தருக்களுக்கு அடியில் எழுந்தருளியிருக்கின்றான். இப்பெருமானுக்கு வலதுபுறம் ஆதித்தன், அம்பிகை, திருமால், பிள்ளையார், மகேசுவரர் ஆகிய ஐந்து மூர்த்திகளும் இடதுபுறம் தேவநாயகரும் அமர்ந்திருக்கின்றனர். இளமுருகனுடைய கற்சிலைத் திருமேனியைப் போலவே எழுந்தருள் மூர்த்தியின் திருமேனி பேரழகுடன் திகழ்கின்றது.

இத் திருக் கோவில் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றியது என்ப. ஐப்பசி மாதம் கந்தர் சட்டி விழா மிகவும் எடுப்பாக நடைபெற்று வருகிறது. ஒவ்வொரு வெள்ளிக் கிழமை, செவ்வாய்க் கிழமைகளிலும், கார்த்திகைகளிலும் பல ஊர்களிலுமிருந்து மக்கள் கூட்டம் கூட்டமாக வந்திருந்து இளமுருகப்பெருமானைக் கும்பிட்டுப் பிள்ளைவரம் முதலிய பெருவரங்களெல்லாம் பெற்றுச் செல்கின்றனர். திரு நீறு இங்கே அரசிலையில் வழங்கப் பெறுகிறது; திருச் செந் தூரிலோ பன்னீர் இலையில் வழங்கப் பெறுகின்றது இங்கே ஒப்பு நோக்கத்தக்கது.

இத் திருக் கோவிலுக்கு அருணகிரி நாதர் வந்து வழிபட்டுத் திருப்புகழ் பாடியிருக்கிறார். இவ்வளவு புகழும் பெற்ற இத் திருக் கோவிலில் படிப் பாயாச வழிபாடு நாடோறும் நடைபெறுகின்றது. அருமையான பாயசம் வைத்து முத்துக் குமரனுக்குப் படைத்து கோவிலின் வடபுறமாக ஓடி வருகிற அனுமனுற்றுப் படித்துறையில் குழந்தைகளுக்கு வழங்கப்பெறுகிறது ; அக்குழந்தைகளோடு இள முருகனும் ஒருவனாக வந்து நின்று குழந்தைகள் பாயசம் பருகு வதைக் கண்டு மகிழ்கின்றான் என்பது ஊரவர் வழக்கு. இனி, முத்துக்குமரனை வணங்கி வழிபட்டு விடைபெற்றுச் சாம்பவர் வட கரைக்குப் போவோம்.

## 7. சாம்பவர் வடகரை—திரு மூலநாதர்.

ஆய் குடிக்குக் கிழக்கே ஒரு மைலில் இருப்பது கம்புளி என்ற சிற்றூர். அதிலிருந்து கிழக்கே இரண்டுமைல் சென்றால் சாம்பவர் வடகரையைச் சேருவோம். அங்கே அனுமனுற்றின் மேற்குக் கரையில் இருப்பது திருமூல நாதர் திருக்கோவில். பெருமான் கோவிலுக்குத் தென்புறம் அம்மை மதுரவாணி, கனிவாய் மொழியாள், திருக் கோவில் இருக்கிறது.

இது ஆதியில் வில்வவனமாக இருந்தது. அதில் தாமாக முளைத் தெழுந்த பெருமான் சுயம்புலிங்கமாகிய திருமூலநாதர். இவ்வில்வ வனத்தில் தவம் செய்திருந்தார் விரூபாட்சர் என்ற முனிவர். அவர் பெருமானைக் காட்டக் கண்ட திருநெல்வேலிப் பாண்டிய மன்னர் ஒருவர் இத் திருக்கோவிலைக் கட்டி நற்பேறு பெற்றார். இக்கோவில் சதுரமாக அமைந்திருக்கிறது. திருமண விழாவும் ஐப்பசி மாதத்தில் ஐந்து நாள் நடை பெறுகிறது. இங்கே பூசனை மகுடாகமப்படி நடக்கிறது.

திரு மூலநாதர் பிரமகத்தி முதலிய கொடுமைகளையெல்லாம் நீக்கி ஆட் கொள்ளும் பெருமையுடையவர், சதயம் திருநாள் என்ற சேர மன்னன் பிரமகத்தி துரத்திவர இங்கே ஓடி வந்து திருக் கோவிலில் நுழைந்தான்; பிரமகத்தி வாசலில் நின்று விட்டது. நெஞ்சம் நெக்குருகி நின்ற மன்னவனை நோக்கிப் பெருமான் நீ அம்மை கோவிலுக்கு இடை வழி வழியாகச் சென்று அங்கிருந்து தலைவாசல் வழியே போய் விடு என்று அருள் புரிந்து அந்தப் பிரமகத்திக்கும் தம் திருமுன்பு தலைவாசலில் தெற்கே பார்க்க இருந்து வழிபடும் திருவருளையும் புரிந்து ஆதரித்தருளினார். பிரம கத்தி "சதயன் தம்பிரான்" என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

இனி, இவ்வூருக்குச் சாம்பவர் வடகரை என்று பெயர் வந்த வரலாறு கூறுவோம். இராமாயண காலத்தில் சீதாப்பிராட்டியைத் தேடிக் கொண்டு அனுமானும் சாம்பவன் என்ற கரடித் தலைவனும் இங்கே வந்தார்கள். இவ்விடத்தில் அகத்திய முனிவரும் வந்து சேர்ந்தார். சாம்பவன்-சிவபெருமான். சிவபெருமானின் இப்பெயர் படைத்த கரடித் தலைவர் அகத்திய முனிவரைப் போலவே பெரிய சிவபூசைக்காரர். அகத்தியனாரும் சாம்பவரும் அங்கே சிவபூசை செய்ய விரும்பி அனுமனை நோக்கித் தண்ணீர் கொண்டுவர வேண் டினர். அனுமான் மேற்கு மலையிற் சென்று வாலால் அடித்துத் தண்ணீரை வரவழைத்தான்; அத் தண்ணீர் ஆறாக ஓடி வந்தது; அனுமன் வரவழைத்த ஆறு அது ஆதலின் அனுமன் ஆறு என்று பெயர் பெற்றது.

அனுமனாறு வருவதற்குத் தாமதமாகி விட்டபடியால் அகத்தியனார் தம்யோக தண்டத்தை ஊன்றினார், அதிலிருந்து வந்த ஊற்றுத்தண் ணீரைக் கொண்டு இருவரும் சிவபூசை செய்தனர். பூசை முடியும் போது அனுமனாறு ஓடி வந்து இருவருக்கும் இடையே பாய்ந்தது ; அதனால் சாம்பவர் வடகரையிலும் அகத்தியர் தென்கரையிலும் ஆயினார். அப்போது அகத்தியர் "சாம்பவர் வடகரையோ" என்று சாம்ப வரை நோக்கிக் கேட்டார். அதிலிருந்து சாம்பவர் வடகரை என்ற பெயர் அவ்வூருக்கு வந்தது. அனுமனாற்றின் வடகரையில் இன்றும் சாம் பவர் பூசை செய்த இடம் இருக்கிறது. ஆற்றின் தென் கரையில் அகத்தியரும் அவர் பூசை செய்த இலிங்கமாகிய சிவபெருமானும் இருக்கின்றனர். அகத்தியர் ஆக்கிய ஊற்று தீர்த்தமாக இன்றும் அருவியாய் விழுகின்றது: இரண்டோ ராண்டுகளுக் கிடையில் இங்கே

அகத்திய அருவியில் முழுகி அகத்தியலிங்கத்தை நாடோறும் வழி பட்டதன் பயனாக ஒருவருக்கு வெண்குட்டம் நீங்கி நல்லுடல் பெற்றார் என்று தக்கார் கூறுப.

திரு மூலநாதர் திருக்கோவிலுக்குத் தென்புறம் கோவில் கொண் டிருக்கிறார் பவளக்கொத்து ஐயனார். ஐயனார் தாம் சாத்தனார்; அரிகரபுத்திரரும் அவரே என்று கூறுகிறோம். குளத்துப் புழையில் ஐயனார் குழந்தையாகக் கோவில் கொண்டிருக்கிறார். அவர் ஆரியங் காவில் புலியாசனத்தில் புலிப்பால் கறக்கும் தோற்றத்திலும் அச் சங்கோவிலில் பூரணை புட்கலை என்ற இரண்டு சத்திகளுடனும், சபரி மலையில் மனைவியரைப் பிரிந்து காட்டில் நிட்டை கூடும் தோற்றத் திலும் காட்சியருள்கிறார். சபரிமலைக்கு வடமேற்கே காந்த மலையில் அவர் சோதியாகி இறைவனுடன் கலந்து விட்டார். இங்ஙனம் நூல்கள் கூறுகின்றன. அச்சன்கோவில் என்பது பண்புளிக்கு மேற்கே மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. இங்கே தான் அனுமனாறு தோன்று கின்றது.

சாம்பவர் வடகரைக்குத் தென்மேற்கே இரண்டு மைல் தூரத்தில் விந்தன் கோட்டை என ஓர் ஊர் இருக்கிறது. கோட்டை அழிந்து விட்டது. இதனருகே பஞ்சபாண்டவர் பாறை எனப் பெயரிய ஒரு சிறு பாறையில் குகையில் பஞ்சபாண்டவர்கள் வந்து தங்கியிருந் தார்கள். ஐந்து பேருக்கும் தலையணை வகுத்துக் குகைப் பாறையில் பாயல் போலச் செதுக்கியிருக்கிறார்கள். இங்கே ஒரு சிறு சிவன் கோவிலும் இருக்கிறது.

இதுவரை நெல்லை மாவட்டக் கோவில்களைச் சென்று வழிபட்டு இன்புற்றோம். இனி ஏனைய மாவட்டங்களுக்கும் சென்று வழிபட்டு உய்வோம்.

திருச்சிற்றம்பலம்

# திருநெல்வேலி மாவட்டம்

கேரளம்

இராமநாதபுரம்

சங்கரன்கோவில்

கோவிற்பட்டி

தென்காசி

திருநெல்வேலி

சீவைகுண்டம்

அம்பாசமுத்திரம்

திருச்செந்தூர்

நான்குநேரி

கன்னியாகுமரி

மன்னார் குடாக் கடல்

சீவில்லிபுத்தூர் →
விருதுநகர் →
கரிவலம்வந்தநல்லூர்
புளியன்குடி
சங்கரன்கோவில்
கழுகுமலை
விருதுநகர் →
மதுரை →
முத்தலாபுரம்
வைப்பாறு
கோவிற்பட்டி
எட்டையாபுரம்
விளாத்திகுளம்
கடையநல்லூர்
திருமலை
செங்கோட்டை
புளியறை
செங்கோட்டை
சாம்பவர்வடகரை
தென்காசி
இலஞ்சி
குற்றாலம்
திருவனந்தபுரம் →
கடம்பூர்
கயத்தாறு
குறுக்குச்சாலை
ஓட்டப்பிடாரம்
மணியாச்சி
கங்கைகொண்டான்
தூத்துக்குடி
கடையம்
பாபநாசம்
அம்பாசமுத்திரம்
கல்லிடைக்குறிச்சி
பாளையங்கோட்டை
திருநெல்வேலி
சீவைகுண்டம்
கொற்கை
ஆழ்வார்திருநகரி
காயல்பட்டினம்
ஆறுமுகநேரி
திருச்செந்தூர்
நான்குநேரி
திருக்குறுங்குடி
வள்ளியூர்
குலசேகரன்பட்டினம்
பணகுடி
திசையன்விளை
இராதாபுரம்
திருவனந்தபுரம்




| | |
|---|---|
| இந்தியநாட்டுப் பெருஞ்சாலை | |
| சாலைகள் | |
| புகைவண்டிச் சாலைகள் | |
| சிவன் கோவில் | |
| முருகன் கோவில் | |
| பெருமாள் கோவில் | |
| வட்டங்களின் எல்லை | |

